# கௌதம புத்தர்

வரலாறு

திரு உலகநாதன்





பாரி நிலையம்
59. பிராட்வே · சென்னை-1.

Life and Teachings
of

# GAUTAMA BUDDHA

(in Tamil)

By

**A. L. NATARAJAN**

with an introduction

**Dr. E. NANDISVARA NAYAKE THERO**
Chief Sanga Nayake of South India
&
Director : **Maha Bodhi Society**
Egmore, Madras-8.

P A A R I   N I L A Y A M
59, BROADWAY,   MADRAS-1

# கௌதம புத்தர்

வரலாறு



சென்னை எழும்பூர் மகாபோதி சொசட்டியின்
நெறியாளரும் தென்னிந்திய பௌத்த சங்கத்தின்
தலைவருமான
டாக்டர் ஈ. நந்தீஸ்வர நாயக தேரோ
அவர்கள் அணிந்துரையுடன்




பாரி நிலையம்
59, பிராட்வே · சென்னை-1.



சென்னை எழும்பூர் மகாபோதி சொசட்டியின்
நெறியாளரும் தென்னிந்திய பௌத்த சங்கத்தின்
தலைவருமான

**டாக்டர் ஈ. நந்தீஸ்வர நாயக தேரோ**

அவர்கள் வழங்கியுள்ள

# அணிந்துரை

**கா**லங் கடந்து நிற்கும் குறிக்கோளும், இனம், நிலம் மொழி ஆகியவற்றைக் கடந்த மக்கள்நல நோக்கும் கொண்டது பௌத்த நெறி (தருமம்); அது தமிழர்களின் வாழ்க்கை நெறியாக இருந்துள்ளது என்பதற்கு வரலாற்றுச் சான்றுகளும் இலக்கியச் சான்றுகளும் பல உண்டு. தமிழகத்துக் கிராமங்கள் தோறும் கண்டெடுக்கப்பட்ட - சிதைந்த, சிதைத்த நிலையில் இன்னும் காணக் கூடிய - பெருமான் புத்தரின் திரு உருவச் சிலைகளும் இதர பௌத்தச் சின்னங்களும் தொல் பொருள் துறையினரின் ஆய்வுகளும் இவ்வுண்மைக்கு அரண் சேர்ப்பனவாக உள்ளன.

என்றும் நிலைத்து நின்று பௌத்த கொள்கையைப் பரப்பும் பயனுடைய இலக்கியமான '**மணிமேகலை**' தமிழ் மொழி பெற்றுள்ள அரிய பௌத்தக் கருவூலமாகும். இம்மணிமேகலை நூல், பௌத்த நெறியை அடியொற்றி, அந்த நெறியின் மேம்பாட்டை, வாழ்க்கை முறையின் உயர்வை விளக்கும் அரிய பெரிய நூலாகும். ஒரு மொழியின் ஒப்பற்ற இலக்கியமாகப் போற்றப்படும் இலக்கியம் ஒன்றில் பேசப்படும் கருத்துக்கள், அந்த இலக்கியம் தோன்றுவதற்கு முன்பே சமுதாய வாழ்வில் மக்களிடத்தில் எத்துணைச் செல்வாக்குப் பெற்றி

ருந்தன என்பதற்குத் தக்க ஒரு சான்றாகும். எனவே, தமிழகத்திற்கும் தமிழ் மொழிக்கும் பௌத்த நெறி உடன்பாடான ஒன்றே யாகும். பெருமான் புத்தரின் காலத்தில் வைசாலியில் வாழ்ந்த கணிகை அம்பாபாலியின் துறவு பௌத்த நெறியின் ஆற்றலுக்கு எடுத்துக் காட்டு என்றால், கணிகையர் குலத்து உதித்த மணிமேகலையின் துறவு, பௌத்த நெறிக்குப் பெருமை சேர்ப்பதாகும்.

இத்துணைச் சிறப்போடும் மக்களிடையே செல்வாக்குடனும் தமிழகத்தில் விளங்கிய பௌத்தம் இன்று வரலாற்று, இலக்கியச் சான்றுகளால் மட்டுமே அறிய முடியும் ஒன்றாக மாறிவிட்டது என்பதை மறுப்பதற்கில்லை. ஆற்றல் மிக்க அறிவு நெறியாக, உலக உயிர்க் குலத்தின் துயர்துடைத்து, துன்பம் போக்கிய தூய நெறியாக, மனித இன அமைதியைக் கட்டிக் காத்த அருள் நெறியாக விளங்கிய பௌத்த நெறியின் சீர்குலைப்பு - தனிமனித வாழ்வின் சீர்குலைவுக்கும் சமூகக் கூட்டு வாழ்வின் சீர்குலைவுக்கும் வழி வகுத்துவிட்டது எனலாம்.

இந்நிலையில், **கௌதம புத்தர் வரலாறு** என்னும் இந்த நூல், பௌத்த நெறியின் மேன்மை, சிறப்பு, தூய்மை, எளிமை ஆகியன பற்றி மீண்டும் நினைத்துச் சிந்திக்கும் வகையில், திரு. **அ. லெ நடராஜன்** அவர்களால் எழுதப்பட்டுள்ளது. இந்த நூலில், பெருமான் **கௌதம புத்தரின் வரலாறு, பௌத்த தருமம், பௌத்த சங்கம்** ஆகியன பற்றி நன்கு விளக்கப்பட்டுள்ளது. இவ்வகையில் இதற்கு முன்பே ஒருசில நூல்கள் தமிழில் வெளிவந்திருப்பினும் - அவைகளினின்று இந்நூல் வேறுபட்டிருப்பது இதன் தனித்தன்மையாகும். எளிதில் விளக்கவோ, புரிந்துகொள்ளவோ, பின்பற்றவோ முடியாத கோட்பாடுகள்தான் ஒருசில மதங்களுக்குள்ள பெருமை என்னும் நிலைக்கு முற்றிலும் மாறுபட்ட பௌத்த நெறி, மக்கள் எளிதில் விளங்கிக்கொண்டு பின்பற்ற இயலும் வாழ்க்கை நெறியாகும் என்னும் உண்மையை, ஆசிரியர் அ. லெ. நடராஜன் இந்த நூலில் சிறப்பாகவும் நன்கும் விளக்கியுள்ளார்.

கௌதம புத்தர் வரலாறு என்னும் பகுதியில், பெருமான் புத்தரின் பிறப்பு முதல் - அவர் பிறவாப் பெருநிலை (மகாபரி நிர்வாணம்) எய்திய இறுதி நிலைவரை சொல்லப்பட்டுள்ளது. பெருமானின் வாழ்க்கையில் தொடர்பு கொண்ட மன்னர்கள், இல்லறத்தார், துறவறத்தார் போன்ற பல திறப்பட்டவர்கள்பற்றி, நிகழ்ச்சிகள்பற்றி விவரிக்கப்பட்டு, அவ்வப்போது பெருமான் அருளிய அறிவுரைகள் சுட்டிக் காட்டப்பட்டுள்ளன. நிகழ்ச்சிகளைத் தொடர்புபடுத்தி, பெருமானின் அறிவுரைகளைத் தக்கபடி இணைத்திருப்பது நல்ல தெளிவைக் கற்பிக்கும் வகையில் உள்ளது.

**பௌத்த தருமம்** என்னும் பிரிவில் பெருமான் புத்தரின் கோட்பாடுகள் விளக்கப்பட்டுள்ளன. பிற சமயங்களின் கோட்பாடுகளையும் ஒப்பு நோக்கி, பௌத்த நெறியின் சிறப்பை விளக்கியிருப்பது அருமையாக அமைந்துள்ளது. '**யான் எனது**' என்னும் செருக்கை அறுத்து, ஆரா இயற்கை ஆவாவை நீக்கி, பேதமை அகற்றி, தீயவை அஞ்சி, எண்ணத் தூய்மையுடன் வினைத் தூய்மையையும் மேற்கொண்டு, மூத்த அறிவுடையார் தொடர்பில் இணைந்து வாழ ஒருவனை ஊக்குவிப்பதே பௌத்த மாகும். **பிணி, மூப்பு, சாக்காடு** ஆகிய துன்பங்களிலிருந்து மனிதன் விடுபட்டு, பேரின்பப் பெரு நிலையை எய்தப் பெருமான் புத்தர் கண்ட வாழ்க்கை நெறியாகும். பௌத்த தருமம் என்ற பகுப்பிலும் நூல் முழுதும் இக்கருத்து நன்கு எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.

**பௌத்த சங்கம்** என்ற பிரிவில் பௌத்த தருமங்களைப் போற்றி, பாதுகாத்து, உலகில் பரப்ப ஏற்படுத்தப்பட்ட அமைப்பினைப்பற்றிச் சொல்லப்படுகிறது. சாதி, இன வேற்றுமை இன்றி, தகுதி மிக்க சான்றோர்கள் ஏற்றுக் கொண்ட சங்கம், உலகில் நன்னெறிகளைப் பரப்ப அமைப்பு முறையில் செயலாற்றிய முதன்மைச் சிறப்பைக் கொண்டது என நூலாசிரியர் சுட்டுவது உண்மையே யாகும்.

தனிமனித வாழ்வில் ஏற்படும் சிறப்பே சமூகக் கூட்டு வாழ்வின் மேன்மைக்கு அடிப்படையாகும். இதைத் தொடர்ந்து நாடு, உலகம் என்ற அளவிலும் தனிமனிதனின்

நல்ல, தீய செயல்கள் விளைவுகளைச் சமைக்கின்றன. எனவே, உலகின் நல்ல விளைவுகளுக்குப் பௌத்தம் தோன்றாத் துணையாக இருக்க முடியும். திரு. அ. லெ. நடராஜன் அவர்களின் **கௌதம புத்தர்** என்னும் இந்நூல் பௌத்தம் பற்றி அறிய விழையும் தமிழ் மொழியினர்க்கு ஏற்ற வழிகாட்டியாக விளங்கும்; இதில் ஐயமில்லை. ஆசிரியரின் முயற்சி போற்றிப் பாராட்ட வேண்டிய ஒன்றாகும்.

சென்னை
*4—1—76*

**நந்தீஸ்வர நாயக தேரோ**

T.N Olaganathan

# முன்னுரை

பழம் பெருமை வாய்ந்த நம் இந்திய நாட்டில் தோன்றிய பழைய சமயங்களுள் பௌத்த சமயமும் ஒன்று. இந்தச் சமயம் தோன்றி இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளுக்கு மேல் ஆகின்றது.

பௌத்த சமயத்தைச் சார்ந்தோர் நம் நாட்டில் அரிதாய் இருந்தபோதிலும், உலகின் பல்வேறு நாடுகளிலும், நமது அண்டை நாடுகளான இலங்கை, பர்மா, தாய்லாந்து ஆகியவற்றிலும் கோடிக்கணக்கான மக்கள் அந்தச் சமயத்தை ஆர்வத்துடன் பின்பற்றி, அதன் மூலம் ஆறுதல் பெற்று வாழ்கிறார்கள். பிறந்த நாட்டைவிட்டே நாங்கள் பௌத்த சமயத்தைத் துரத்திவிட்டோம் என்று பெருமையுடன் பிறர் கூறிக்கொண்டபோதிலும், பிற நாடுகளில் நிலவும் பௌத்த சமயத்தை அவர்களால் அழிக்க முடியவில்லை; துரத்தவும் முடியவில்லை.

இது எதைக் காட்டுகிறது? மானுட சமுதாயத்துக்குத் தேவைப்படும் அடிப்படைத் தத்துவங்கள் பல பௌத்த சமயத்தில் இடம் பெற்று இருப்பதால்தான் அதை இதுவரை யாராலும் அழிக்க முடியவில்லை.

பௌத்த சமயத்துக்குப் பின்னர் கிறித்தவ சமயமும் இஸ்லாமிய சமயமும் அரசியல் ஆதிக்கத்துடன் உலகம் முழுதும் பரவின; அவற்றாலும் பௌத்த சமயத்தை அழிக்க முடியவில்லை.

இதன் மூலம் நாம் தெரிந்துகொள்ளும் உண்மை என்ன? பிற சமயங்களின் தாக்குதல்களை எல்லாம் சமாளித்து, தன் உள் வலிமை மூலம் தன்னைப் பாதுகாத்துக்கொள்ளும் ஆற்றலும் திறனும் பௌத்த சமயத்துக்கு இருக்கிறது என்பதாகும்.

ஆகவே வலிமை வாய்ந்த பௌத்த சமயத்தைப் பற்றியும் அதை உபதேசித்துப் பரப்பிய கௌதம புத்தரைப் பற்றியும் எனக்குத் தெரிந்த வகையில் சுருக்கமாக இந்த நூலில் நான் எழுதி இருக்கிறேன். அடிப்படைக் கோட்பாடுகளுக்கு அதிக முக்கியத்துவம் கொடுத்து இந்த நூலை எழுதி இருக்கிறேன்.

நான் எழுதி இதுவரை வெளிவந்திருக்கும் சமயப் பெரியவர்களின் வரலாற்று நூல்களுள் இது ஏழாவது நூல் ஆகும். மற்ற ஆறு நூல்கள் வருமாறு :

(1) நபிகள் நாயகம் வரலாறு
(2) இயேசுநாதர் வரலாறு
(3) மகாவீரர் வரலாறு
(4) குரு நானக் தேவர் வரலாறு
(5) சுவாமி விவேகானந்தர் வரலாறு
(6) வள்ளலார் வாழ்வும் வாக்கும்

இந்த ஆறு நூல்களுக்குப் பின்னர் ஏழாவது நூலாக இந்த நூல் வெளிவருகிறது.

மனித சமுதாயம் நல்வாழ்வு வாழ்வதற்கு, கடவுள் நம்பிக்கை முக்கியமா? அல்லது ஒழுக்கம் முக்கியமா?

இந்த இரண்டினுள் ஒழுக்கத்துக்கே பௌத்த சமயம் அதிக முக்கியத்துவம் கொடுக்கிறது எனலாம்.

சுமார் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர், பௌத்த சமயம் தமிழ் நாட்டில் பரவி இருந்தது; பரவி இருந்ததோடு மட்டு மல்லாமல் செல்வாக்குடனும் திகழ்ந்தது.

சைவ வைணவ சமயங்களின் எழுச்சிக்குப் பின்னர், பௌத்த சமயம் தமிழ் நாட்டிலிருந்து மறைந்து போயிற்று. அதன் பிறகு சமயப் பூசல்கள் தமிழ் நாட்டில் மலிந்து விட்டன. அதன் விளைவாக, தமிழ்நாடும் இந்தியாவின் ஏனைய

பகுதிகளும் முதலில் முஸ்லிம்களுக்கும், பின்னர் கிறிஸ்தவர்களுக்கும் அடிமையாயிற்று.

புத்தர் பெருமானுடைய வாழ்க்கை தியாகம் நிறைந்த வாழ்க்கை. அன்பையும் அறிவையும் அடிப்படையாகக் கொண்ட வாழ்க்கை. அந்த வாழ்க்கையை அறிந்து கொள்வதால் நாம் பெரிதும் பயனடையலாம் என்ற கருத்தில் தான், **கௌதம புத்தர்** வரலாற்றை எழுதியுள்ளேன். வாசக அன்பர்கள் உரிய பலனை அடைவார்கள் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு.

புத்தர் பெருமானைப் பற்றியும் பௌத்த சமயத்தைப் பற்றியும், தமது கருத்துக்களை, சுவாமி விவேகானந்தர் அழுத்தம் திருத்தமாகக் கூறியுள்ளார். அவற்றில் சில முக்கிய கருத்துக்களை முன் இணைப்பாகத் தந்திருக்கிறேன். வாசக அன்பர்கள் முதலில் அவற்றைப் படித்துப் பார்த்து விட்டுப் பிறகு புத்தகத்தைப் படிப்பது பயனுடையதாய் இருக்கும்.

பாரி நிலைய உரிமையாளர் திரு. **க. அ. செல்லப்பன்** அவர்கள் இந்த நூலை வெளியிட்டதற்கு எனது இதயபூர்வமான நன்றி உரியது.

இந்த நூலை எழுதுவதற்குப் பல ஆங்கில நூல்களும் தமிழ் நூல்களும் பயன்பட்டன. அவற்றை இயற்றிய ஆசிரியர்களுக்கு எனது இதயபூர்வமான நன்றியும் வணக்கமும் உரியன.

அவரவர் தாய்மொழி மூலமே மக்களிடையே மத போதனைகள் செய்ய வேண்டும் என்பதை முதன் முதலாக வலியுறுத்திச் சொன்னவர் புத்தர் பெருமான்.

இந்த நூலுக்கு அணிந்துரை தந்திருக்கும் டாக்டர் **ஈ. நந்தீஸ்வர நாயக தேரோ** அவர்கள் சிங்கள நாட்டைச் சேர்ந்த பௌத்த பிக்கு ஆவர்; சென்னை எழும்பூர் மகா போதி சொசட்டியின் நெறியாளராகவும், தென் இந்திய பௌத்த சங்கத்தின் தலைவராகவும் அவர்கள் இருக்கிறார்கள். தமிழை நன்கு கற்ற அவர்கள் தமிழ் மொழியிலேயே இந்த நூலுக்கு அணிந்துரை தந்திருப்பது அவர்

களுக்குத் தமிழ் மொழிமீதுள்ள விருப்பத்தைக் காட்டு கிறது. தமக்குள்ள எவ்வளவோ அலுவல்களுக்கு இடை யில் **கௌதம புத்தர் வரலாறு** என்னும் இந்த நூலை ஆழ்ந்து படித்து, அணிந்துரை வழங்கிய அவர்களுக்கு எனது இதய பூர்வமான நன்றியும் வணக்கமும் உரியன.

7-3-வது தெரு,
பாரதி நகர்,
சென்னை-17.

**அ. லெ. நடராஜன்**

கௌதம புத்தரையும்
அவருடைய போதனைகளையும் குறித்து,

# சுவாமி விவேகானந்தர்

(1) பௌத்த சமயத்தின் செல்வாக்குக்கு உட்படாத நாகரிகம் எதுவும் உலகில் இல்லை. 8-92

(2) புத்தருடைய போதனைகளுள் கடவுள்பற்றிய பேச்சு இல்லை. ஆன்மாபற்றிய பேச்சு இல்லை. கருமம் செய்வது குறித்து மட்டுமே உள்ளது. 8-99

(3) வெளிப்பார்வைக்குப் பௌத்த மதம் இந்தியாவை விட்டுப் போய்விட்டதாகத் தோன்றினாலும் உண்மையில் அது இந்தியாவை விட்டு நீங்கவே இல்லை. 8-102

(4) புத்தரைக் கடவுள் அவதாரம் என்று இந்தியா வழிபடுகிறது. 1-21

(5) ஒரு மதத்திலிருந்து மற்றொரு மதத்துக்கு மனிதன் மாறலாம் என்னும் கருத்தை முதன் முதல் தெரிவித்தவர் புத்தர் பெருமான். 1-22

(6) ஏழை எளிய மக்களுக்கு அவரவர் மொழியிலேயே மத போதனை செய்ய வேண்டும் என்று புத்தர் பெருமான் வலியுறுத்தினார். 1-22

(7) ஒழுக்கத்தை அதிகம் வலியுறுத்தி உபதேசம் செய்தவர்களுள் புத்தர் பெருமானுக்கு இணையான ஒருவரை இது வரை உலகம் காணவில்லை. அவருக்கு அடுத்த நிலையில் இருப்பவர் இயேசுநாதர். 7-20

(8) முழுமையான ஒழுக்க நெறிகளை உலகுக்கு வகுத்துக் கொடுத்த முதல் மனிதர் புத்தரே. 7-39

(9) யாரும் உங்களுக்கு உதவ முடியாது, உங்களுக்கு நீங்களே உதவி செய்துகொள்ளுங்கள், உங்கள் ஈடேற்

---

Complete works of Swami Vivekannada என்னும் ஆங்கில நூல் தொகுப்பிலிருந்து திரட்டியவை.

றத்தை நீங்களே தேடிக்கொள்ள வேண்டும் என்று புத்தர் பெருமான் போதித்தார். 4-132

(10) ஞானத்தாலும் இறை பக்தியாலும் தவத்தாலும் ஒருவர் அடையும் பூரண நிலையை, இவை இல்லாமல் புத்தர் பெருமான் அடைந்திருக்கிறார். 4-132

(11) அறியாமையும் சாதிப் பிரிவுகளுமே துன்பம் அனைத்துக்கும் காரணம் என்று புத்தர் கூறுகிறார். 8-27

(12) பௌத்த மத ஆட்சிக் காலத்தில் வசிஷ்டரும் விசுவாமித்திரரும் சமூகத் தலைவர்களாக விளங்கவில்லை. சந்திரகுப்தர், தரும அசோகர் போன்ற பேரரசர்களே சமூகத் தலைவர்களாக விளங்கினர். பௌத்த சமயம் நிலை பெற்ற காலத்தில் ஆட்சி செய்த பேரரசர்கள் இந்தியா முழுவதையும் ஒரு குடைக்கீழ் ஆண்டு பெரும் புகழ் பெற்ற வர்கள்; அவர்களுக்கு நிகரான பேரரசர்கள் பிறகு தோன்றவே இல்லை. அவர்கள் ஆட்சி செய்த காலத்தில் இந்தியாவின் புகழ் உச்ச நிலையை எட்டியது. 4-376

(13) துன்புறும் உலகுக்கு உதவுவதே பெரும் பணி என்று கூறி, அதற்கு முதலிடம் கொடுத்து, மதத்தின் இதர நடைமுறைகளை ஒதுக்கிவிட்டார் புத்தர் பெருமான். 4-229

(14) வேள்வியில் விலங்குகள் பலியிடப்படுவதைத் தடுக்க, தமது உயிரையும் கொடுக்க முன்வந்த ஒரே மனிதர் புத்தர். ஒரு முறை ஓர் அரசனிடம், ''ஆட்டுக் குட்டியைப் பலியிடுவது மேலுலகை அடைய உனக்கு உதவி புரியும் என்றால், மனிதனைப் பலியிடுவது, சிறப்பாகத் துணை புரியும். ஆகவே என்னைப் பலியிடு'' என்று இயம்பியவர் புத்தர் பெருமான். 4-132

(15) மேன்மையான சமாதி நிலைகள் முதலான எந்த அம்சங்கள் புத்தருடைய சமயநெறிக்கு மகத்துவத்தை நல்கு கின்றனவோ அவை யாவும் அநேகமாக வேதங்களில் உள்ளன. வேதங்களில் இல்லாதவை புத்தருடைய விலாச புத்தியும் பரந்த இதயமும் ஆகும். புத்தருடைய புத்திக்கும்

இதயத்துக்கும் ஈடானவை உலக சரித்திரத்தில் அவருக்குப் பின் உண்டாகவில்லை. 6-194

(16) பரம்பரை பரம்பரையாகச் சம்ஸ்கிருத மொழி மூலமே சமய போதனைகள் இந்தியாவில் கற்பிக்கப்பட்டன. அந்த மொழி மூலம் சமயக் கல்வி கற்பிப்பதைப் புத்தர் புறக்கணித்துவிட்டார். ஏனெனில் சம்ஸ்கிருத மொழி மூலம் சமயக் கல்வி கற்பித்தால் அந்த மொழியிலுள்ள மூட நம்பிக்கைகளும் தம்மைப் பின்பற்றுவோருக்கு ஏற்படக் கூடும். ஆகவே அதற்கு வாய்ப்புத் தரப்படாது தடுக்க வேண்டும் என்று அவர் கருதினர். 8-100

(17) புத்தரைக் கடவுள் அவதாரமாக நாம் வணங்கு கிறேம். உலகம் இதுவரை கண்டிராத அளவில் ஒழுக்க நெறிகளைத் துணிவோடும் பெருமையோடும் புத்தர் பெரு மான் பிரச்சாரம் செய்தார். மகானுன அவர் கர்மயோகி யாக விளங்கினர். தமது உபதேசங்களை மீண்டும் நடை முறைப்படுத்திக் காட்ட, கிருஷ்ண பகவானே அவதரித்தார் என்று சொல்லும்படி திகழ்ந்தது புத்தர் பகவானுடைய வாழ்க்கை. 8-262

(18) பௌத்த சமயத்தின் உண்மையான சாரமும் ஹிந்து சமயமும் வேறுபட்டவை அல்ல என்பதைப் பெரிய தத்துவ ஞானியான சங்கராசாரியார் எடுத்துக் காட்டி யுள்ளார். 3-265

(19) புத்தருக்குப் பின்புதான் சந்நியாச ஆசிரமத்தின் சிறப்பு இந்தியா முழுதும் பிரச்சார மூலம் பரவி இருக்கலாம் என்று தோன்றுகிறது. புலன் இன்பங்களைத் துறந்து துறவு வாழ்வு வாழ்வதே சமயவாழ்வின் உயர்ந்த இலட்சியம் என்ற கருத்து இடம் பெறலாயிற்று. பௌத்த சமயம் போதித்த துறவுக் கொள்கையை இந்து சமயம் தனதாக்கிக்கொண் டது. புத்தர் பெருமானுக்கு இணையான துறவி உலகத்திலே பிறக்கவில்லை. 6-462

(20) பௌத்த சமயம் தோன்றுவதற்கு முன்பே சந்நி யாச ஆசிரமம் இந்தியாவில் இருந்தது. ஆயினும் அதுவே வாழ்க்கையின் இறுதி லட்சியம் என்பதைப் பொதுவாக

மக்கள் அறியவில்லை. அதற்குத் தேவைப்படும், உறுதிப் பாடு, ஊக்கம் ஆன்மிக உணர்வு ஆகியவை அவர்களிடம் இருக்கவில்லை. **6-462**

(21) இப்போது இந்தியாவில் இருக்கும் மடங்களில் பெரும்பாலானவை முன்பு பௌத்த மடங்களாகஇருந்தவை. ஹிந்துக்கள் அவற்றை வசப்படுத்தி, தங்கள் நெறிகளுக்கு இயைய அமைத்துக்கொண்டார்கள். உண்மையைச் சொல்லு மிடத்து, புத்தர் பெருமானிடமிருந்தே சந்நியாச ஆசிரமம் தோன்றிற்று எனலாம் **6-463**

(22) பெரும்பாலான புராணங்களும் மனு ஸ்மிருதி போன்றனவும் மகா பாரதத்தின் பெரும் பாகமும் சமீப காலத்தில் தோன்றியவை. பகவான் புத்தர் இவற்றுக்கு எல்லாம் முற்பட்டவர். **6-463**

(23) சில துறைகளில் பௌத்த சமயம் மேன்மை வாய்ந்த ஒரு சமயம். வேதாந்தத்தோடு சேர்த்து அதைக் குழப்பக் கூடாது. **1-349**

(24) புத்தர் பெருமானின் போதனைகளால் நாட்டில் ஞானம் பரவியது. அத்துடன் கண்ணியமும் பண்பாடும் சேர்ந்து பரவவில்லை. வரக் கூடிய எதிர்ப்புகளைச் சமாளிக்கக் கூடிய ஆற்றல் பண்பாட்டுக்குத்தான் உண்டு, வெறும் அற வுரைகள் மட்டும் வலிமை பெற்றவை ஆகா. வெறும் அறி வுரைகளை மட்.டும் கூறுவது அதிகப் பலனை அளிக்காது. ரத்தத்திலே அது கலந்திருக்க வேண்டும். **3-291**

(25) அற்புதமான தார்மீக வலிமை புத்த சமயத்துக்கு இருந்தபோதிலும் உருவ வழிபாட்டைத் தீவிரமாகக் கடைப் பிடித்து, முன்பு நிலைபெற்றுவிட்ட நம்பிக்கைகளை அது கடுமையாக எதிர்த்தது. 'இது கூடாது இது கூடாது' என்பதிலேயே அது தன் சக்தியைச் செலவழித்தது. இவற் றின் விளைவாகத்தான் பிறந்த நாட்டிலேயே அது மறைய நேர்ந்தது. **4-272**

T. N. Alaganathan.,

# பொருளடக்கம்

## (1) கௌதம புத்தர்



## (2) போதிசத்துவர்

## (3) மத்திம மார்க்கம்



## (4) அறநெறிப் பிரச்சாரம்



## (5) இருபது ஆண்டுகள்

## 6. ஆதரவும் எதிர்ப்பும்



## 7. சீடர் குழாம்



## 8. வீடுபேறு

## 2. பௌத்த தருமம்



## 3. பௌத்த சங்கம்





# கௌதம புத்தர்

வரலாறு



புத்தம் சரணம் கச்சாமி
(புத்தரைச் சரண் அடைகிறேன்)

T.N. Olaganathan

# கௌதம புத்தர்

## வரலாறு

---

## சித்தார்த்தன்

### I

உலகத்தில் உயிர்கள் நாள்தோறும் பிறக்கின்றன, வாழ்கின்றன, இறக்கின்றன. கர்மபந்த முடைய எந்த உயிரும் இந்த மூன்று நிலைகளிலிருந்தும் தப்புவது மில்லை; தப்பவும் முடியாது. **(கர்ம நியாமம்)**

அரசனுயினும் சரி, ஆண்டியாயினும் சரி, பண்டிதனு யினும் சரி, பாமரனுயினும் சரி, அனைவருக்கும் நிச்சயமாக இந்த மூன்று நிலைகளும் உண்டு.

மனிதனுக்கு மட்டும் அல்ல; மற்ற உயிர்களுக்கும் இந்த உண்மை பொருந்தும். மரம், செடி, கொடி, புல், பூண்டு முதலியனவும் உலகில் தோன்றுகின்றன; வாழ்கின்றன; பிறகு மனிதனைப் போலவே அவையும் மறைந்துபோகின்றன. **(பீஜ நியாமம்)**

ஆடு, மாடு, நாய், நரி, சிங்கம், புலி, கரடி, யானை முதலிய விலங்குகளுக்கும், கோழி, குருவி, கொக்கு, குயில், மயில், பருந்து, கருடன், கிளி முதலிய பறவைகளுக்கும் இந்த மூன்று நிலைகளும் உண்டு.

ஆகவே, இந்த மண்ணுலகில் வாழும் எந்த உயிரும் இந்த மூன்று நிலைகளிலிருந்து தப்புவது இல்லை. தப்பவும் முடியாது என்னும் உண்மையை நாம் கண்கூடாகக் காண்கிருேம்.

பிறப்பு, வாழ்வு, சாவு ஆகிய இந்த மூன்றும் ஏதோ ஒரு நாள் மட்டும் நிகழ்ந்து, அத்துடன் நின்று போகவில்லை. நாள்தோறும் தவருமல் இந்த மூன்றும் நிகழ்ந்த வண்ணம் இருக்கின்றன.

## II

இவை மட்டும் அன்றி, இன்னும் ஓர் இயல்பும் உயிர்களிடத்தில் இருப்பதை நாம் பார்க்கிறோம். ''இன்பமாக வாழ வேண்டும், இன்பமாக வாழ வேண்டும், எப்பொழுதும் வாழ வேண்டும்'' என்னும் ஆசையால் உந்தப்பட்டு, அதற்கான முயற்சியில் ஒவ்வொரு உயிரும் அல்லும் பகலும் ஈடுபடுவதை நாம் பார்க்கிறோம். மெய், வாய், கண், மூக்கு, செவி, மனம் இந்த ஆறும் இன்பம் பயக்கும் பொருள்களைத் தேடிச் செல்வதை நாம் காண்கிறோம்.

வாய் ருசியான உணவை விரும்புகிறது; கண் இனிய காட்சிகளைக் காண ஆசைப்படுகிறது; மூக்கு, நறுமணத்தை நுகர விரும்புகிறது; காது நல்ல இசையையும், நயமான சொற்களையும், தம்மைப் புகழ்ந்து பிறர் பேசுவதையும் கேட்கப் பிரியப்படுகிறது; உடல், காம இன்பத்தை விழைகிறது. விரும்புவதை எல்லாம் பெற்று ஆனந்தமடைய மனம் ஏங்கித் தவிக்கிறது.

## III

இப்படி இன்பத்தில் நாட்டம் கொண்டு, உயிர்கள் அலைந்து திரியும்போது, இன்பத்தை மட்டுமா அவை அடைகின்றன; அனுபவிக்கின்றன? இல்லை, இல்லை. துன்பத்தையும் அவை அனுபவிக்க நேருகின்றன.

நரை, திரை, மூப்பு, நோய், சாக்காடு முதலியன உடலைச் சாடித் துன்புறுத்துகின்றன; கோபம், பொறாமை, ஏக்கம், கவலை, வறுமை, அகந்தை, தற்பெருமை முதலியன மனத்தைச் சாடித் துன்புறுத்துகின்றன.

இன்பத்தைத் தேடி மனிதன் அங்கும் இங்கும் அலைந்து திரிந்தபோதிலும், முடிவில் அவன் அடையும் பயன் துன்பந்தான்; சாவுதான்.

## IV

இன்பத்தைத் தேடி அலையும் உயிர்கள் முடிவில் நிலையான இன்பத்தை அடைவதற்கு ஏதாவது வழிகள் உண்டா? இல்லையா? அவை துன்பத்தையே அடையக் காரணம் என்ன?

இவைபற்றி, இரண்டாயிரத்து ஐநூறு ஆண்டுகளுக்கு முன்பு, நமது இந்திய நாட்டில் பிறந்த பெரியவர் ஒருவர் சிந்திக்கத் தொடங்கினர். அப்போது, தாம் வாழும் அரண்மனை வாழ்வும், தம் மனைவி மக்களும் தமது சிந்தனைக்கு இடையூருய் இருப்பதை அவர் கண்டார்.

ஆகவே, அவர் அரச வாழ்வைத் துறந்தார்; மனைவி மக்களைத் துறந்தார்; காட்டுக்குச் சென்று தவமும் தியான மும் செய்து சிந்திக்கத் தொடங்கினர்.

தாம் செய்த சிந்தனையின் பயனுய், அரிய சில முடிவுகளைக் கண்டு, மனத் தெளிவை — அதாவது ஞானத்தை — அவர் அடைந்தார்.

பிறகு தாம் அடைந்த அனுபவ ஞானத்தை மக்களி டையே பரப்ப அவர் விரும்பினர். ''யாம் பெற்ற இன்பம் பெறுக இவ் வையகம்'' என்னும் உயர் நோக்கோடு, தாம் கண்ட உண்மை நெறிகளை மக்களிடையே பரப்ப அவர் ஏற் பாடு செய்தார்.

அவர் பரப்பிய, பரப்ப ஏற்பாடு செய்த போதனைகளைப் பௌத்த சமயம் என்றும், முதன் முதலாக அந்தப் போதனை களைச் செய்த பெரியவரைப் புத்தர் பெருமான் என்றும் உலக மக்கள் போற்றிக் கொண்டாடுகிருர்கள்.

ஏறக் குறைய முப்பது நாடுகளைச் சேர்ந்த மக்கள், பௌத்த சமயத்தைப் பின்பற்றுகிருர்கள். உலக மக்கள் தொகையில், ஐந்தில் ஒரு பகுதியினர் பௌத்த சமயத்தை ஏற்றுக்கொண்டு, வாழ்க்கை நடத்துகிருர்கள். இலங்கை, பர்மா, தாய்லாந்து, வியட்நாம், கொரியா, ஜப்பான், திபெத்து, கம்போடியா, சீனம் ஆகிய நாடுகளில் வாழ்பவர் களுள் பெரும்பாலோர் பௌத்த சமயத்தைச் சார்ந்தோர் ஆவர்.

புத்தர் யார்? தெய்வ அருள் பெற்ற தீர்க்கதரிசியா? அல்லது சிந்தனையாளரா? அல்லது வெறும் போதகர் மட்டும் தானு?

பௌத்த சமயத்தில் கடவுளுக்கோ கடவுளின் அரு ளுக்கோ இடம் இல்லை. ஒவ்வொரு உயிரும் தன் சொந்த

முயற்சியாலேதான் மேன்மை யடைய வேண்டும். வழியை மட்டும்தான் பெரியோராய் இருப்போர் காட்ட முடியுமே யல்லாது, ஒருவரை மற்று ஒருவர் உய்விப்பதோ அல்லது ஒரு வரை மற்ருெருவர் மேலான கதியைப் பெறச் செய்வதோ இயலாத காரியம் என்று பௌத்த சமயமும், ஜைன சமயமும் போதனை செய்கின்றன.

ஆகவே, பௌத்தர்கள் புத்தர் பெருமானைச் சிறந்த வழி காட்டியாக, சிறந்த சிந்தனையாளராக, சிறந்த போதகராக மட்டும் கருதிப் போற்றுகிருர்கள்.

பௌத்த சமயமும், ஜைன சமயமும் உலகுக்கு வழங்கிய உத்தம நெறிகளில், தனது சொந்த முயற்சி யாலேயே ஒவ்வொரு உயிரும் மேன்மை யடைய வேண்டும், கடைத்தேற வேண்டும் என்பதும் ஒன்று.

இந்த நெறியைப் புத்தர் பெருமான் எவ்வாறு கண்டறிந் தார்? அதை எவ்வாறு அவர் போதனை செய்தார்?

இவற்றை எல்லாம் பற்றி, இனி வரும் அத்தியாயங் களில் நாம் கவனிக்கலாம்.

## மூதாதையர்

உலகுக்கு ஒரு பெரியவரை ஒரு குலம் வழங்கி இருக் கிறது என்ருல், அந்தக் குலம் பற்றிய வரலாற்றைத் தெரிந்துகொள்ள வாசகர்கள் விரும்புவது இயல்பு.

ஆகவே, புத்தர் பெருமானின் மூதாதையர்-தாய் வழியி னர், தந்தை வழியினர் - யாவர் என்பதை முதலில் நாம் தெரிந்துகொள்ளலாம்.

பெரும் புகழ் படைத்த பெரியோரின் மூதாதையர் வர லாறு பெரும்பாலும் புராணக் கதைகளாக இருக்கும். இருப் பினும் அவற்றை முதலில் தெரிந்துகொண்டால்தான், பின் நிகழ்ச்சிகளை நாம் சரியாகப் புரிந்துகொள்ள முடியும்.

புத்தர் பெருமானின் தந்தை சாக்கிய குலத்தில் பிறந் தவர்; தாய் கோலிய குலத்தில் பிறந்தவள். சாக்கியரின் தலைநகர் கபிலவாஸ்து.

இந்த மூன்று பெயர்களைப்பற்றிய விளக்கம் புராணக் கதைகளிலிருந்து நமக்குக் கிடைக்கிறது. அது வருமாறு.

ஆதி காலத்தில் சூரிய குலத்தில் தோன்றிய இட்சவாகு என்னும் அரசன் கோசல நாட்டை ஆண்டு வந்தான். இந்த அரசனுக்கு ஐந்து மனைவியர் இருந்தார்கள். இவர்களில் மூத்தவள் நான்கு புதல்வர்களையும் ஐந்து புதல்வியரையும் பெற்ற பின்னர் இறந்து போனாள். பிறகு அந்த அரசன் இளம் பெண் ஒருத்தியைத் திருமணம் செய்துகொண்டான். அவளைப் பட்டத்து அரசியாகவும் ஆக்கினான்.

இவளுக்கு ஒரு மகன் பிறந்தான். குழந்தை பிறந்த ஐந்தாம் நாள் அன்று, அதை நன்றாக அலங்கரித்து, அரச னிடம் காட்டினாள் குழந்தையைப் பெற்ற தாய்.

குழந்தையைப் பார்த்ததும், அரசன் இட்சவாகு மட் டற்ற மகிழ்ச்சி அடைந்தான். அவன் தன் பிரிய மனைவியை நோக்கி, ''பெண்ணே! உனக்கு விருப்பமான வரம் ஒன்றை நீ கேட்கலாம்'' என்று சொன்னான்.

தன் புதல்வனுக்கு முடிசூட்ட வேண்டும் என்பதை அவள் வரமாகக் கேட்டாள்.

இப்படித் தன் இளைய மனைவி கேட்டதும் அரசன் இட்ச வாகு ஆத்திரமடைந்தான். ''கேடுகெட்ட பெண்ணே! என் மற்ற புதல்வர்களை நீ அழிக்கப் பார்க்கிறாயே! நீ நாசமாய்ப் போக!'' என்று அவளை அரசன் ஏசினான்.

''அரசே! வரம் தருவதாக வாக்களித்துவிட்டு, அதை நிறைவேற்ற நீர் தயங்குவது உம் தகுதிக்கு அடுக்காது'' என்று அரசி கடிந்து உரைத்தாள்.

நயந்தும், கடிந்து உரைத்தும், தன் கருத்துக்கு இணங் கும்படி அரசனை இளைய மனைவி செய்துவிட்டாள்.

ஆகவே, அரசன் தன் நான்கு புதல்வர்களையும் அழைத்து, ''புதல்வர்களே! தன் புதல்வனுக்கு அரசுரிமை வேண்டும் என்று உங்கள் சிற்றன்னை பிடிவாதமாய் இருக்கிறாள். ஆகவே, தேவையான படைகளையும், தேர், குதிரை, யானை முதலியவற்றையும் அழைத்துக்கொண்டு நீங்கள் புறப்

படுங்கள். நான் இறந்த பின்னர் திரும்பி வந்து இந்த நாட்டை ஆளுங்கள்'' என்று சொன்னான்.

தந்தையின் கட்டளைப்படி இளவரசர்கள் நால்வரும் புறப்பட்டார்கள். அவர்களுக்கு உதவி செய்யும் பொருட்டு எட்டு மந்திரிகளை உடன் அனுப்பி வைத்தான் அரசன் இட்சவாகு.

தங்கள் தந்தையுடன் இருக்கப் பிரியப்படாமல் அவனுடைய புதல்வியர் ஐவரும் தங்கள் சகோதரர்களுடன் புறப்பட்டுச் சென்றார்கள். வழியில் இருக்கும் நாடுகளைப் பிடிப்பதில் நாட்டமின்றி, இமயமலையின் அடிவாரத்தை இளவரசர்கள் அணுகினார்கள். ''நாவலம் தீவில் இடத்துக்குப் பஞ்சம் இல்லை. காடு கெடுத்து நாடாக்குவோம்'' என்ற எண்ணத்துடன் அவர்கள் சென்றார்கள்.

இமயமலை அடிவாரத்தில் கபிலர் என்னும் ரிஷி ஒருவர் குடிசை கட்டிக்கொண்டு வசித்து வந்தார்.

எலிகளை விரட்டி வந்த பூனைகள், மானைத் துரத்தி வந்த புலிகள், குறிப்பிட்ட ஒரு இடத்தை அடைந்ததும், மானைப் பிடிக்க முடியாமல் புலியும், எலியைப் பிடிக்க முடியாமல் பூனையும் தவிப்பதைக் கபிலர் பார்த்தார். அது மட்டுமல்லாமல், பூனையை எலியும், புலியை மானும் எதிர்ப்பதையும் அவர் கவனித்தார். ஆகவே, அந்த இடமே நற்காரியங்களைச் செய்வதற்கு ஏற்ற இடம் எனக் கருதி, தமது ஆசிரமத்தைக் கபிலர் அங்கு அமைத்துக்கொண்டு வாழ்ந்தார்.

இது சமயம் தகுந்த இடத்தைத் தேடிக்கொண்டு நகர நிர்மாணம் செய்ய இளவரசர்கள் வந்திருப்பதைக் கபில முனிவர் கவனித்தார். ஆகவே, அவர்களிடம், ''அதோ குடிசை இருக்கும் பகுதியில் ஒரு நகரத்தை நிர்மாணியுங்கள். நாவலம் தீவத்திலே அது தலையாய நகரமாய்த் திகழும்'' என்று சொன்னார்.

''பெரியவரே! தங்களுக்கு உரிய இடமாயிற்றே அது? தங்களைப் போகச் சொல்லிவிட்டு, நாங்கள் நகரத்தை அங்கு நிர்மாணிக்க முயல்வது முறையற்ற செயலாகாதா?'' என்று இளவரசர்கள் சொன்னார்கள்.

அதற்குக் கபில முனிவர், "இளவரசர்களே! மலை அடிவாரத்தில் எனக்கு ஒரு குடிசையை அமைத்துவிட்டு, பிறகு இப்பொழுது எனது குடிசை இருக்கும் இடத்தில் நகரத்தை நிர்மாணியுங்கள். அந்த நகருக்குக் கபிலவாஸ்து என்று பெயர் சூட்டுங்கள்" என்று கூறினார்.

முனிவரின் கட்டளைப்படி காரியங்களைச் செய்து, நகரத்தை நிர்மாணித்துக்கொண்டு இளவரசர்கள் அங்கு வாழ்ந்து வந்தார்கள்.

இளவரசர்களுக்கு வயதாகி வந்தது. திருமணம் செய்து கொள்வதுபற்றி, தங்கள் அமைச்சர்களுடன் அவர்கள் கலந்து யோசனை செய்தார்கள். "அரச குலத்தில் பிறந்த பெண்கள் யாரும் இந்தப் பகுதியில் இல்லை. வேறு பெண்களைத் திருமணம் செய்துகொண்டு, குலத்தின் மேன்மையைக் குறைத்துக்கொள்ளக் கூடாது. ஆகவே, எங்களுடன் பிறந்த சகோதரிகளையே நாங்கள் திருமணம் செய்துகொள்கிறோம்" என்று சொன்னார்கள்.

அமைச்சர்களும் தங்கள் ஒப்புதலைத் தெரிவித்தார்கள்.

ஆகவே, மூத்த பெண்ணைக் குலத் தலைவியாக ஆக்கி விட்டு, இளவரசர்கள் நால்வரும் தங்கள் சகோதரிகளையே திருமணம் செய்துகொண்டார்கள். அவர்கள் அனைவருக்கும் குழந்தைகள் பிறந்தன.

அரசன் இட்சவாகு தன் புதல்வர்கள் எப்படி இருக்கிறார்கள் என்று தமது பரிவாரத்தினரை விசாரித்தான்.

அதற்கு அவர்கள், "அரசே! இமயமலை அடிவாரத்தில் இருக்கும் தாமரைக் குளக்கரைகளிலுள்ள சாகை மரத் தோப்பில் தங்கள் புதல்வர்கள் வாழ்கிறார்கள். தகுந்த அரச குலப் பெண்கள் கிடைக்காத காரணத்தால், தங்கள் சகோதரிகளையே திருமணம் செய்துகொண்டு அவர்கள் வாழ்கிறார்கள்" என்று தெரிவித்தார்கள்.

இந்தப் பதிலைக் கேட்டதும் அரசன் இட்சவாகு பூரித்துப் போனான். "உண்மையில் இளவரசர்கள், சாக்கியர்கள்தான் திறமையானவர்கள்தான்" என்று சொன்னான்.

அன்று முதல் சாக்கியர்கள் என்னும் பெயரை இளவரசர்கள் பெற்ருர்கள்.

சாக்கியர்களின் நாடு, காசி நகரத்துக்கு வடக்கே சுமார் நூறு கல் தொலைவில், இமயமலை அடிவாரத்தில் இருந்தது. சாக்கியர்கள் குடியேறுவதற்கு முன்பு அந்தப் பகுதி பண்டையக் கோசல நாட்டின் வட பகுதியாய் இருந்தது. இப்பொழுது அந்தப் பிரதேசம் நேபாள நாடாக இருக்கிறது.

சாக்கியர்கள் இவ்வாறு குடியேறி வசித்து வந்த சமயம், கோசல நாட்டைச் சேர்ந்த அரசன் ஒருவன் தொழுநோயால் பீடிக்கப்பட்டுப் பெரிதும் வருந்தினன். மாதர்கள் அவனைப் பார்த்தாலே முகத்தை வேறு பக்கம் திருப்பிக்கொண்டனர். இதனல் மனம் நொந்து வாடிய அந்த அரசன், நாட்டையும் ஆட்சிப் பொறுப்பையும் மூத்த புதல்வனிடம் ஒப்படைத்து விட்டுக் காட்டுக்குப் போய்விட்டான். இந்த அரசன் காட்டில் கோல மர நிழலில் தங்கி இருந்தபோது, தொழு நோய் அகன்று, பண்டைய உடல் நலத்தை அவன் பெற்ருன்; உடம்பு முன்னைப்போல் பொன்னிறத்தில் பிரகாசித்தது.

அரசன் இட்சவாகுவின் புதல்வியர் ஐவருள் மூத்தவள் பெயர் பேயா; சாக்கிய இளவரசர்களுக்குத் தலைவியாய் விளங்கிய அவள் தொழுநோயால் பீடிக்கப்பட்டு வருந்தினள். எனவே நாட்டைத் துறந்து காட்டுக்குப் போனள்.

தொழுநோயால் பீடிக்கப்பட்ட கோசல நாட்டு அரசன் எந்தக் காட்டுக்கு வந்திருந்தானே, அதே காட்டுக்குப் பேயாவும் போனள்.

கோசல நாட்டு அரசன் பெயர் கோலியன். இந்த அரசன் பேயாவைப் பார்த்து, அவள் காட்டுக்கு வந்திருப்பதற்குக் காரணம் கேட்டான்.

''தொழுநோயால் நொந்து வாடுகிறேன். அதன் பொருட்டுத்தான் காட்டுக்கு வந்தேன்'' என்று பேயா பதில் சொன்னள்.

இதைக் கேட்டதும் கோலிய அரசன் அவளைக் கோல மரத்துக்கு அழைத்துப் போனன். நிழல் பட்டதும் தொழு நோய் அகன்று, பேயா உடல் நலம் பெற்ருள்.

இதன் பின்னர் இருவரும் கணவனும் மனைவியும் ஆனார்கள்; ரோகிணி நதியின் மற்றொரு கரையில் ஒரு நாட்டை அமைத்துக்கொண்டு அவர்கள் வாழ்ந்து வந்தார்கள். இவர்களுக்குக் குழந்தை குட்டிகள் நிறையப் பிறந்தனர். இவர்களின் வம்சத்தில் பிறந்தவர்களைக் கோலியர்கள் என அழைத்தார்கள்.

சாக்கியர்களும் கோலியர்களும் கொள்வினை கொடுப்பினை செய்துகொண்டு வாழ்ந்தார்கள்.

இந்த இரு மரபுகளிலும் எத்தனையோ அரசர்கள் தோன்றி, வாழையடி வாழையாக அரசாண்டார்கள்.

சாக்கிய மரபில் ஜெயசேனன் என்று ஒரு அரசன் இருந்தான். இவனுக்குச் சிம்மஹனு என்று ஒரு புதல்வன் இருந்தான். சிம்மஹனுவினுடைய புதல்வர்களில் சுத்தோதனன் என்பவன் ஒருவன்.

கபிலவாஸ்துவைத் தலைநகராகக் கொண்டு, சாக்கியர்களின் அரசைச் சுத்தோதனன் பரிபாலித்து வந்தான்.

இவர்தான் புத்தர் பெருமானின் தந்தை ஆவர். இந்தக் குலத்தில் பிறந்தவர்களைக் கௌதம கோத்திரத்தினர் என்றும் சொல்லுவது உண்டு. சாக்கியர்கள் தங்களை ஏன் கௌதம கோத்திரத்தினர் என அழைத்துக்கொண்டார்கள் என்பதற்குரிய சரியான காரணம் தெரியவில்லை.

கோலிய வமிசத்தில், தேவதாகன் என்று ஒரு அரசன் இருந்தான். இவனுக்கு அஞ்சனன் என்று ஒரு மகன் இருந்தான். அவனுக்குத் தண்டபாணி, சுப்பிரபுத்தன் என்று இரு புதல்வர்களும், மாயா, பிரஜாபதி என்று இரு புதல்வியரும் பிறந்தனர்.

சாக்கிய அரசன் சுத்தோதன மன்னன், கோலிய அரசன் அஞ்சனன் புதல்வியர் இருவ்ரையும் திருமணம் செய்துகொண்டான்.

இருவரில் மூத்தவள் மாயா தேவி. இவள்தான் புத்தர் பெருமானின் தாய் ஆவாள். இளையவள் பெயர் பிரஜாபதி; இவள் புத்தரை வளர்த்தவள்.

# பெற்றோர்

புத்தரின் தாயான மாயா தேவி, முற்பிறவி ஒன்றில், ஒரு அந்தணருக்கு மகளாய்ப் பிறந்து இருந்தாள். தன் புதல்வியிடம் அந்த அந்தணருக்குப் பிரியம் அதிகம். ஒரு முறை தம் புதல்விக்குச் சிறந்த நறுமண மலர்கள் சிலவற்றை அந்த அந்தணர் பிரியத்துடன் கொடுத்தார்.

தன் தந்தை தந்த நறுமலர்களை, அந்தப் பெண் அப்போது புத்தராய் இருந்தவரின் பொன்னடிகளில் வைத்து வணங்கினாள்.

இதனால் அக மகிழ்ந்த அந்தப் புத்தர், மலர்வைத்து வணங்கிய பெண்ணைப் பார்த்து, ''பெண்ணே! இனி எடுக்க இருக்கும் பிறவியில், புத்தர் ஒருவரைப் பெறும் பேறு உனக்குக் கிட்டும்'' என்று வாழ்த்தினார்.

அந்த அந்தணப் பெண்தான் தமது மறு பிறப்பில், கோலிய நாட்டு மன்னன் அஞ்சனன் என்பவனுக்கு மகளாய்ப் பிறந்து, மாயா தேவி என்னும் பெயருடன் விளங்கினாள்.

இது சமயம் சாக்கிய இளவரசன் சுத்தோதனனுக்கு வயது பதினெட்டு நடந்துகொண்டிருந்தது. இதைக் கவனித்த சுத்தோதனனின் தந்தை தன் புதல்வனுக்குத் திருமணத்தை முடிக்கத் தீர்மானித்தார். இதன் பொருட்டு, சோதிடக் கலையில் வல்ல எட்டு அந்தணர்களைப் பெண் பார்த்து வருமாறு பக்கத்திலுள்ள நாடுகளுக்கு அனுப்பினார்.

அந்த எட்டு அந்தணர்களும் பல்வேறு நாடுகளுக்குச் சென்றார்கள். இளவரசன் சுத்தோதனனுக்கு ஏற்ற பெண் எந்த நாட்டிலும் கிடைக்கவில்லை.

பல நாடுகளுக்கும் சென்ற அவர்கள் கடைசியாகக் கோலிய நாட்டின் தலைநகர் தேவதாகாவை அணுகினார்கள். அந்த நகரை அணுகியதுமே, பல நல்நிமித்தங்களை அவர்கள் கண்டார்கள். தங்கள் இளவரசனுக்குத் தகுந்த இளவரசி இந்த நகரில் கிடைப்பாள் என்ற நம்பிக்கையும் மகிழ்ச்சியும் அவர்களுக்கு உண்டாயின.

இது சமயம் இளவரசி மாயா, நகருக்கு அணித்தே இருக்கும் பூந்தோட்டத்துக்குத் தன் தோழியரையும் அழைத்துக் கொண்டு உல்லாசமாகப் பொழுதுபோக்க வந்திருந்தாள்.

அழகுமிக்க அந்தப் பூந்தோட்டத்தில் படிகம் போன்ற நீரோடை ஒன்று சலசலத்து ஓடிக்கொண்டிருந்தது. நறுமண மலர்கள் பல நிறங்களில் கண்களுக்கு விருந்தாய் அமைந்தன. பறவைகள் அங்கும் இங்கும் இனிய குரலில் பாடிக்கொண்டிருந்தன.

பெண் தேட வந்திருந்த அந்தணர்கள் தற்செயலாய் இந்தப் பூந்தோட்டத்துக்கு வந்தார்கள். அங்கே இளவரசி ஒருத்தி, தாரகைகளுக்கு இடையே பிரகாசிக்கும் சந்திரனை நிகர்த்து, பேரழகியாகத் திகழ்வதை அவர்கள் கண்டார்கள். இவள்தான் தங்கள் இளவரசன் சுத்தோதனனுக்கு ஏற்ற இளவரசி என்று அவர்கள் முடிவு செய்தார்கள்.

தங்கள் முடிவை இளவரசியிடம் தெரிவித்து, அவளுடைய உளப்பாங்கை, அந்தணர்களுக்குத் தலைவனாய் வந்திருப்பவன் தெரிந்துகொள்ள விரும்பினான். தான் வந்திருக்கும் கருத்தை இளவரசியிடம் தெரிவித்து, அவளுடைய கருத்தை அறிய முயன்றான்.

அதற்கு இளவரசி மாயா, ''அந்தண சிலரே! பெற்றோரின் பாதுகாப்பில் இருப்பவள் நான்; அவர்கள் விருப்பம் எதுவோ அதன்படி நடக்க வேண்டியவள் நான்'' என்று நயமாகச் சொன்னாள்.

இளவரசியின் பதிலைக் கேட்டு அந்தணர்கள் திருப்தி அடைந்தார்கள். ஆகவே, தாமதியாது அரண்மனைக்கு விரைந்து, அரசன் அஞ்சனனிடம் தாங்கள் வந்திருக்கும் நோக்கத்தைத் தெரிவித்தார்கள்.

அந்தணர்கள் சொன்னதைக் கேட்டு, அரசன் அஞ்சனன் அளவற்ற மகிழ்ச்சி அடைந்தான். தன் புதல்வி மாயா தேவியை, இளவரசன் சுத்தோதனனுக்குத் திருமணம் செய்துதர இசைந்தான்.

தனது இசைவைத் தெரிவித்து, அரசன் சிம்மஹனுவுக்குச் செய்தி அனுப்பினான்; இளவரசனுக்கும் சிம்மஹனுவுக்கும்

தகுந்த வெகுமதிகளையும் தூதர்கள் மூலம் அனுப்பி வைத்தான்.

தூதர்கள் கபிலவாஸ்து நகரை அடைந்து மன்னனைச் சந்தித்து, வெகுமதிகளைக் கொடுத்து விவரத்தைச் சொன்னார்கள்.

அரசன் மகிழ்ச்சி அடைந்தான். இளவரசன் சுத்தோதனனைப் பரிவாரத்துடன் அழைத்துக்கொண்டு, தேவதாகா நகருக்குப் புறப்பட்டான்.

இவர்களை வரவேற்று உபசரிக்கும் பொருட்டு, நகருக்கு வெளியே உள்ள ஒரு பெரிய மாந்தோப்பில் கோலிய நாட்டு அரசன் பிரமாதமாக ஏற்பாடுகள் செய்திருந்தான். திருமணத்தை நடந்துவதற்கு, மாபெரும் அழகிய மண்டபம் ஒன்றை நிர்மாணித்து இருந்தான்.

மணமகனையும் அவனுடன் வந்திருக்கும் அனைவரையும் கோலியநாட்டு அரசன் மகிழ்ச்சியுடன் வரவேற்று உபசரித்தான்.

முகூர்த்த நேரம் வந்தது. மணமகன் சுத்தோதனனை அழைத்துக் கொண்டு, புரோகிதருடனும் பரிவாரத்தினருடனும், திருமண மண்டபத்துக்கு அரசன் சிம்மஹனு விரைந்தான்.

இது சமயம் தன் புதல்வி மாயாவை அழைத்துக் கொண்டு, அவள் தாய் மண மண்டபத்துக்கு வந்தாள்.

இன்னிசைகள் முழங்கின. இளவரசி மாயாவின் வலக் கையை, இளவரசன் பற்றிக்கொண்டான். அந்தணர்களும், பெரியோர்களும், அரசர்களும் மற்றவர்களும் மணமக்களுக்கு ஆசி சொன்னார்கள்; புதுமணத் தம்பதிகளுக்கு ஏராளமான வெகுமதிகளையும் வழங்கினார்கள்.

திருமணம் சிறப்பாக நடைபெற்ற பின்னர், தன் மகனையும், மருமகளையும் அழைத்துக்கொண்டு கபிலவாஸ்து நகரம் திரும்பினான் அரசன் சிம்மஹனு.

சிறிது காலத்துக்குப் பின்னர், மாயா தேவியின் தங்கை, பிரஜாபதி என்பவளையும் சுத்தோதனன் திருமணம் செய்து கொண்டான்.

சுத்தோதனனின் தங்கை அமிதா என்பவளை அவன் மைத்துனன் சுப்பிரபுத்தன் திருமணம் செய்துகொண்டான்.

அமிதாவுக்கும் சுப்பிரபுத்தனுக்கும் பிறந்த பெண் யசோதராவை, சித்தார்த்தர் (புத்தர்) பிற்காலத்தில் திருமணம் செய்துகொண்டார்.

---

# தேவலோக நிகழ்ச்சி

சுத்தோதன மன்னனும் அவனுடைய மனைவியரும் கபிலவாஸ்துவில் வாழ்ந்து வந்தார்கள். தமது கடமைகளைச் செம்மையாக நிறைவேற்றி வந்தபோதிலும், சுத்தோதனன் உள்ளத்தில் ஒரு கவலை குடிகொண்டிருந்தது. குழந்தையில்லாக் குறை அவன் உள்ளத்தைப் பெரிதும் வாட்டிவந்தது.

இது சமயம் தேவலோகத்தில் பரபரப்பான ஒரு நிகழ்ச்சி நடந்தது. அதை அறிவதற்கு முன்பு புத்த சமயத்தின் அடிப்படைக் கோட்பாடு ஒன்றை நாம் நினைவில் பதிய வைத்துக்கொள்வது நலம்.

எந்த ஒரு ஜீவனும் ஒரு பிறவியில் மட்டும் மேலான கதியை - அதாவது நிர்வாணத்தை - அடைய முடியாது. பிறவிதோறும் நற்செயல்களைச் செய்து செய்து, தீயவற்றை விலக்கிக்கொண்டே வர வேண்டும்; விருப்பு வெறுப்புகளைக் கடந்து ஒழுகும் மனநிலை யாருக்கும் எளிதில் வராது. பல பிறவிகள் எடுத்துத் தன்னைப் பக்குவப்படுத்திக்கொண்ட பின்னரே, மேலான நிலையை எந்த ஜீவனும் அடைய முடியும். புத்த நிலையை அடைந்த மேலான ஜீவனால் மட்டுமே, மற்ற உயிர்களுக்குப் போதனை செய்ய முடியும்; வழிகாட்ட முடியும்.

இந்த நினைவோடு, தேவலோக நிகழ்ச்சியை இனிக் கவனிக்கலாம்.

பௌத்த சமய சம்பிரதாயப்படி, தேவலோகம் ஆறு நிலைகளைக் கொண்டது. அவற்றில் நான்காவது நிலையிலுள்ள தேவலோகத்துக்குத் துஷித லோகம் என்று பெயர்.

அந்தத் தேவலோகத்தில், சுமேதர் என்று ஒரு ரிஷி இருந்தார். தேவலோகவாசியாய் இருந்தபோதிலும், ஒழுக்கப் பண்புகளில் அவர் மேம்பட்டு விளங்கினர். அன்பிலும் ஆற்றலிலும் உறுதியிலும் அவர் சிறந்து விளங்கினர்.

இது சமயம் தேவர் ஒருவர் பூலோகத்தில் பிறந்து, புத்தராக விளங்கப் போகிறுர் என்னும் பரபரப்பான செய்தி தேவலோகத்தில் எங்கும் பரவிற்று. புத்தர் ஆகும் பேறு யாருக்குக் கிட்டப் போகிறது என்பதை அறியத் தேவர்கள் பெரிதும் ஆவலாய் இருந்தார்கள். சுமேதரைக் கேட்டால் தெரியவரும் என்று கருத்துடன் தேவர்கள் அவரிடம் போனுர்கள்.

அந்தப் பேறு சுமேதருக்குக் கிட்டி இருக்கிறது என்பதை அறிந்து தேவர்கள் அக மகிழ்ந்தார்கள். "அண்ணலே! தங்களுக்குப் புத்த நிலை அடையும் பேறு கிட்டி இருப்பது குறித்து உம்மை நாங்கள் வாழ்த்துகிறேம். பல பிறவிகளில் நீர் செய்த நல்வினைகளின் நற்பயன் இது. மேலான அனுபவ அறிவைப் பெற்றுள்ள நீர் அந்தணர்களுக்கும் தேவர்களுக்கும் மானுடர்களுக்கும் வழி காட்டும் தகுதியைப் பெற்று விளங்குகிறீர். உலகம் மோசமான நிலையில் சென்று கொண்டிருக்கிறது; எங்கும் இருள் சூழ்ந்திருக்கிறது. ஆசைப் பேய்களுக்கு மக்கள் அடிமைகள் ஆகிவிட்டார்கள். அன்பு எனும் ஊற்று வற்றி வறண்டு போய்விட்டது. அதனுல், பூசலும், பிணக்கும், வெறுப்பும், பகைமையும் நாளுக்கு நாள் பூலோகத்தில் அதிகமாகி வருகின்றன. தாங்கள் சென்று, இவற்றை எல்லாம் போக்கி, வழி காட்டுங்கள். இதற்குத் தகுந்த நேரமும் வந்துவிட்டது" என்று சொன்னுர்கள்.

தேவர்கள் இவ்வாறு வேண்டியதற்கு, சுமேத முனிவர் உடனே பதில் சொல்லவில்லை. புத்தர் தோன்ற வேண்டிய காலம், இடம், தாய் தந்தையர், குலம் இவை புத்தர் பிறப்பதற்கு ஏற்றபடி சரியாய் அமைந்திருக்கின்றனவா என்பதை அவர் கவனித்தார்.

பல இலட்சம் ஆண்டுகளுக்கு ஒரு முறைதான் புத்தர்

ஒருவர் தோன்றக் கூடும் என்பது பௌத்தர்களின் நம்பிக்கை. அந்தக் காலம் கடந்துவிட்டதைச் சுமேதர் தெரிந்துகொண்டார். இந்தியாவிலுள்ள சாக்கியர்களின் நாடான கபில வாஸ்துவைத் தமது நாடாகத் தேர்ந்தெடுத்தார். வணிகர் குலமும் சூத்திர குலமும் தாம் பிறப்பதற்குத் தகுதியற்ற குலம் ஆகும் என்று அவர் நினைத்தார். பிராமண குலம் முன்பு சிறப்புற்று இருந்தது; இப்பொழுது அதன் நிலை தாழ்ந்துவிட்டது. ஆகவே, அதில் பிறப்பதையும் சுமேதர் ஒதுக்கிவிட்டார். அரச குலமே தாம் பிறப்பதற்கு ஏற்ற குலம் என்ற முடிவுக்கு வந்தார். சுத்தோதனரையும் மாயா தேவியையும் தம் தாய் தந்தையராகத் தேர்ந்து எடுத்துக் கொண்டார்.

பிறகு இந்த விவரங்களைத் தேவர்களுக்குச் சுமேதர் அறிவித்தார்.

இவ்வாறு தேவர்களுக்கு அறிவித்துவிட்டு, சுமேதர் துஷித லோகத்திலிருந்து தேவர்களுடன் புறப்பட்டு, வனப்பு மிகுந்த ஒரு பூஞ்சோலையை அடைந்தார். அங்கு சிறிது நேரம் தாமதித்துவிட்டு, பூலோகத்துக்கு அவர் புறப்பட்டார். சிறிது நேரத்தில் மாயாதேவியின் கருப்பையில் அவர் புகுந்துகொண்டார்.

இது சமயம் தேவலோகத்தில் வசித்த யசோதையும், பூலோகத்துக்கு வந்து, சுப்பிரபுத்தரின் மனைவி அமிதாவின் கருப்பையில் புகுந்துகொண்டாள்.

---

## தாய் கண்ட கனவு

சுமார் இரண்டாயிரத்து ஐநூறு ஆண்டுகளுக்கு முன்னர்- அதாவது கி.மு. 624ம் ஆண்டு ஆகஸ்டு மாதத் தொடக்கத்தில் - கபிலவாஸ்து நகரவாசிகள் ஒரு திருநாளைக் கோலாகலமாகக் கொண்டாடினார்கள். அரசி மாயா தேவி அந்த விழாவில் கலந்துகொண்டு சிறப்பித்தாள். பௌர்ணமிக்கு முதல் நாள் அன்று அதிகாலையில் எழுந்து, நறுமண நீரில் நீராடினாள். சிறப்பான உடுப்புகளை அணிந்துகொண்டு,

ஏழை எளியவர்களுக்குத் தானம் வழங்கினுள். பிறகு செய்ய வேண்டிய சமயக் கடமைகளைச் செய்து முடித்துவிட்டு, வழக்கப்படி உணவு உட்கொண்டாள்.

இதன் பின்பு, படுக்கை அறைக்குச் சென்று, படுக்கை மீது படுத்தவள் அயர்ந்து தூங்கிவிட்டாள். அப்போது மாயா தேவி ஒரு கனவு கண்டாள்.

* * *

தேவலோகத்து இளவரசர்கள் நால்வர் வந்து, கட்டிலோடு மாயாதேவியை இமயமலைக்குத் தூக்கிப்போய் அற்புதமான ஒரு இடத்தில் வைத்தார்கள். அங்கு இருக்கும் மரங்கள் பிரமாண்டமாயும் பசுமையாயும் அடர்ந்தும் இருந்தன. தேவலோகத்து அரசியர் நால்வர் மாயாதேவியிடம் வந்து, படுக்கையில் சாய்ந்து இருக்கும் அவளைத் தேவலோகத்து ஏரி ஒன்றுக்கு அழைத்துப்போய் நீராட்டி வைத்தார்கள். தேவலோகத்து மலர்களைப் படுக்கைமீது விரித்தார்கள். அங்கே உச்சியில் உயரமான அரண்மனை ஒன்று இருந்தது. அந்த அரண்மனைக்கு எதிரே பெரிய குகை ஒன்று இருந்தது. அந்தக் குகைக்குள் இருந்த தேவலோகத்துப் படுக்கை ஒன்றுக்கு மாயா தேவியை அழைத்துப் போய் அதில் உட்கார வைத்தார்கள். மனோரம்மியமான அந்தச் சூழ்நிலையில் மாயா தேவி ஓய்வு எடுத்துக்கொண்டாள். மாயா தேவி இருந்த இடத்துக்கு எதிரே, போதிசத்துவர் வெள்ளை யானை உருவில் இருந்தார். அந்த யானை குன்றைவிட்டு இறங்கி, மாயாதேவி படுத்திருக்கும் இடத்துக்குப் போயிற்று. தன் துதிக்கையில் வெண்தாமரை மாலை ஒன்று அந்த யானை வைத்திருந்தது. அது மாயாதேவியை அணுகி, அவளது விலாப் பக்கத்து வழியாக, வயிற்றினுள் புகுந்து மறைந்து கொண்டது.

* * *

பொழுது புலர்ந்ததும் மாயாதேவி துயில் எழுந்தாள். தான் இரவில் கண்ட கனவை, தன் கணவன் சுத்தோதனனிடம் தெரிவித்தாள்.

உடனே சுத்தோதன மன்னன், அறுபத்து நான்கு அந்தணர்களைத் தருவித்து, தக்கபடி உபசரித்தான். பிறகு தன் மனைவி கண்ட கனவை அவர்களிடம் விவரமாகச் சொல்லி, பலன் சொல்லும்படி கேட்டான்.

அந்தணர்கள் கனவின் பலனைச் சொன்னார்கள். ''அரசே! மகிழ்ச்சியாய் இருங்கள். அரசியாருக்கு ஆண் மகவு ஒன்று பிறக்கப் போகிறது. அந்தக் குழந்தை அரசனாக இருக்க விரும்பின், உலகம் முழுவதையும் தன்வசப்படுத்தி ஆட்சி செய்யும்; துறவியாக விரும்பின், மேலான புத்த நிலையை அடையும்'' என்று கூறினார்கள்.

போதிசத்துவர் தம் அன்னையின் கருப்பையில் புகுந்த போது உலகில் பல அற்புதங்கள் நிகழ்ந்தன.

உலகம் ஒளி வெள்ளத்தால் பிரகாசித்தது. குருடர்கள் பார்வை பெற்றனர்; ஊமையர் வாய்திறந்து பேசினர்; செவிடர்களுக்குக் காதுகள் நன்றாய்க் கேட்டன. கூனர்கள் நேரான உடலைப் பெற்றார்கள்; முடவர்கள் நிமிர்ந்து நடந்தார்கள். தம்மைப் பிணித்திருக்கும் தளைகள் தாமாகவே கழன்றுகொள்வதைக் கைதிகள் கண்டார்கள். விலங்குகளும் பறவைகளும் ஆனந்தமடைந்தன. குதிரைகள் மகிழ்ச்சியுடன் கனைத்தன; யானைகள் உற்சாகத்துடன் பிளிறின. நீரும் நிலமும் உரிய காலத்தில் பலன்களைக் கொடுத்தன. தேவலோகத்திலிருந்து பூமாரி பெய்தது. தேவர்கள் தங்கள் இன்னிசைகளை முழக்கி, தங்களுக்கு இருக்கும் ஆனந்தத்தை வெளிப்படுத்திக்கொண்டார்கள். நறுமணத்தைப் பரப்பிக் கொண்டு, காற்று இனிதாக வீசிற்று.

மாயாதேவியின் கருவுக்கு ஊனம் எதுவும் நேராதபடி தேவர்கள் பாதுகாத்தனர்.

உடம்பில் சோர்வோ களைப்போ ஏற்படாது, மாயாதேவி தெம்புடனும் மகிழ்ச்சியுடனும் இருந்தாள்.



## போதிசத்துவர் பிறந்தார்

கருவுற்றிருந்த மாயா தேவி, பேறு காலம் நெருங்கி விட்டதை அறிந்தாள். ஆகவே, தன் கணவனிடம், ''அரசே! பேறுகாலம் நெருங்கிவிட்டது. என் பெற்ருேரின் நாட்டுக்குச் செல்ல விரும்புகிறேன்'' என்று சொன்னுள்.

அரசி இவ்வாறு தெரிவித்ததும், சுத்தோதன மன்னன் அதற்கு ஏற்பாடு செய்தான்.

தேவதாக நகருக்கும் கபிலவாஸ்து நகருக்கும் இடையில் இருக்கும் சாலையை மேடு பள்ளங்கள் இல்லாதவாறு சீர் படுத்திச் செப்பனிடச் செய்தான். சாலையின் இரு மருங்கிலும் வாழை மரங்களை நட்டு, அழகுபடுத்தினுர்கள். குறிப்பிட்ட இடைவெளிதோறும், குளிர்ந்த நல்ல தண்ணீரைப் பானை களில் வைத்திருந்தார்கள்.

பரிவாரத்தினர் புடை சூழ்ந்து வர, தங்கப் பல்லக்கில் ஏறிக்கொண்டு, அரசி மாயாதேவி தேவதாக நகருக்குப் புறப் பட்டாள். உயரமான சால மரங்கள் வழிநெடுகிலும் ஏராள மாக இருந்தன. பல்லக்கு அருகே வந்ததும், ஒவ்வொரு சால மரத்திலும் அதன் கிளைகளிலும் ஐந்து ஐந்து தாமரை மலர்கள் தோன்றின. மரங்களில் இருக்கும் பறவைகள், கீதமிசைத்து இனிய குரலில் பாடின. மண்ணுலகிலும் விண் ணுலகிலும் அமைதியும் திருப்தியும் ஆனந்தமும் நிலவின.

சால மரங்களின் அற்புதமான இந்தத் தோற்றத்தைக் கண்டதும், அருகே சென்று ஒரு மரத்தைக் கண்டு களிக்க அரசி மாயாதேவி விரும்பினுள்.

அதன்படி சிப்பந்திகள் ஒரு சால மரத்து அருகே பல்லக்கை நிறுத்தி, அரசியை இறங்கிக்கொள்ளச் செய் தார்கள். அவர்கள் போட்ட ஆசனத்தில் மாயா தேவி அமர்ந்தாள்.

இன்னும் அருகே சென்று, மரத்தைப் பார்க்க மாயாதேவி விரும்பினுள்.

இதை அறிந்த அவள் தங்கை பிரஜாபதியும் இதர பெண் சிப்பந்திகளும் உதவி செய்து, மாயாதேவியை அவள் காட்டிய சால மரத்து அருகே அழைத்துப் போனுர்கள்.

மாயாதேவி நின்றபடி தனது இடது கையால், அந்த மரத்தின் ஒரு கிளையைப் பற்றிக்கொள்ளப் போனுள். என்ன ஆச்சரியம்! அவள் கருத்தை அறிந்துகொண்டதுபோல், மரத்திலிருக்கும் கிளைகள் அனைத்தும் வளைந்து அரசி அருகே வந்தன. அவற்றில் ஒரு கிளையை ஒடித்து அரசி மாயாதேவி தன் கையில் வைத்துக்கொண்டாள்.

உடனே மெல்லிய பூங்காற்று வீசிற்று; பக்கத்தில் அரசியைச் சுற்றிலும் திரைகள் உண்டாயின; மரக்கிளையை அரசி தன் கையில் வைத்துக்கொண்டபோது, எவ்வித வருத்தமு மின்றி, அரசிக்கு ஆண்மகவு ஒன்று பிறந்தது.

அந்தக் குழந்தையை நான்கு தேவர்கள் தங்கப் பாத்திரம் ஒன்றில் ஏந்தி வாங்கிக்கொண்டார்கள். ''அரசி யாரே! மகிழ்ச்சி யடையுங்கள். ரத்தினத்துக்கு நிகரான புதல்வர் ஒருவர் தங்கள் கருவிலிருந்து உதித்து இருக்கிறுர்'' என்று சொன்னுர்கள்.

இந்தக் குழந்தை வைகாசி மாதம் சுத்த பூர்ணிமை யன்று பிறந்தது. கி. மு. 623-ம் ஆண்டு மே மாதத்தில் பிறந்த இந்தக் குழந்தையே பிற்காலத்தில் அறம் உரைக்கும் புத்தர் பெருமான் ஆயிற்று.

போதிசத்துவர்* பிறந்த வருடம் சம்பந்தமாக அபிப்பிராய பேதம் நிலவுகிறது. ஆயினும் அவர் பிறந்த ஆண்டை கி. மு. 623 என்று பெரும்பாலான ஆராய்ச்சியாளர்கள் ஒப்புக்கொண்டு இருக்கிறுர்கள். மற்றும் சிலர் கி. மு. 563 ல் பிறந்தார் என்று கூறுகின்றனர். பௌர்ணமி யன்று பிறந்தார் என்பதையும் ஒப்புக்கொண்டிருக்கிறுர்கள். ஆனுல், புத்தர் பிறந்த கிழமையையும் நேரத்தையும் வரையறை செய்ய, இதுவரை சரித்திர சம்பந்தமான சான்று எதுவும் கிடைக்கவில்லை.

புத்தர் பிறந்த இடம் லும்பினித் தோட்டம் என்பதை எல்லோரும் ஏற்றுக்கொண்டிருக்கிறுர்கள். அந்த இடம்

---

* போதிசத்துவர் : புத்தர் என்னும் பதவியை அடைய அருகதையுள்ள ஆத்மா,

எது என்பது திட்டமாகத் தெரியாமல் இருந்தது. நேபாளில் ரும்மின்தே என்னும் இடத்தில், அசோகனுடைய கல் தூண் ஒன்று இருக்கிறது. அதில் ''இந்த இடம் புத்தர் பெருமான் பிறந்த இடம்'' என்னும் வாசகம் இருக்கிறது. அதனால் புத்தர் பிறந்த இடம் அதுதான் என்பதைத் தயக்கமின்றி அனைவரும் ஒப்புக்கொள்கிறார்கள்.

சிலர் போதிசத்துவர் பிறந்த தினம் வெள்ளிக்கிழமை என்றும் விசாக நட்சத்திரம் என்றும் கூறுகின்றனர்.

போதிசத்துவர் பிறந்த அன்று, போதி மரம், ராகுலனின் தாயார், நான்கு பொற் கலசங்கள், யானை, கந்தகன் என்னும் குதிரை, மந்திரி மகன் அனைவரும் பூவுலகில் போதிசத்துவர் தோன்றிய காலத்தில் தோன்றியதாகப் பௌத்த நூல்கள் கூறுகின்றன.

---

## அசித முனிவர்

**போதிசத்துவரின்** குழந்தை மேனியில், மற்ற மானுடக் குழந்தைகளிடம் காண்பதைப் போன்று, ரத்தம், சவ்வு முதலிய அசுத்தம் எதுவும் படிந்து இருக்கவில்லை. மேனி சொக்கத் தங்கம்போல் பரிசுத்தமாய் இருந்தது. மற்ற மானுடக் குழந்தைகளைப் போன்று, ஒன்பது மாதம் பத்து நாட்களில் பிறக்காமல், பத்து மாதம் பரிபூரணமாக நிறைந்தவுடன் பிறந்தது என்பது இந்தக் குழந்தைக்குக் கூறப்படும் சிறப்புகளில் ஒன்று.

பிறந்ததும் குழந்தையைத் தேவர்கள் தங்கப் பாத்திரத்தில் ஏந்தி வாங்கிக்கொண்டார்கள் அல்லவா? குழந்தை அவர்களிடமிருந்து விடுவித்துக்கொண்டு, எழுந்து நின்று, முதலில் கீழ்த் திசையை நோக்கிற்று. தேவர்கள் மகிழ்ச்சி அடைந்து பூமாரி பொழிந்தார்கள்.

போதிசத்துவர் இதன் பின்னர் மற்ற மூன்று திசைகளையும் நோக்கினார். பிறகு ஆகாயத்தையும் பூமியையும் பார்த்தார். பிறகு வடதிசைப் பக்கமாக ஏழடிகள் நடந்தார். ''இதுவே எனது கடைசிப் பிறப்பு'' என்று சொன்னார்.

மாயா தேவி கருவுற்றபோது, முப்பத்து இரண்டு அதிச யங்கள் நிகழ்ந்ததாகக் கூறுவார்கள். அதேபோல, போதி சத்துவர் பிறந்தபோதும், முப்பத்து இரண்டு அதிசயங்கள் நிகழ்ந்தனவாம்.

கபிலவாஸ்து வாசிகளைப் போலவே, தேவதாக நகரத்து வாசிகளும் தங்கள் அரசரின் புதல்விக்கு ஆண் குழந்தை பிறந்து இருப்பது குறித்து பெருமகிழ்ச்சி கொண்டார்கள். பிறந்த குழந்தையை எடுத்துக்கொண்டு எல்லாரும் கபில வாஸ்து நகருக்குப் புறப்பட்டார்கள். சுத்தோதன மன்ன னுடைய அரண்மனையை அடைந்தார்கள்.

இது சமயம் அசிதர் என்னும் முனிவர் ஒருவர் அரண் மனைக்கு வந்தார். வந்தவர் தாம் வந்திருப்பதை அரசன் சுத்தோதனனுக்குத் தெரிவிக்கும்படி வாயில்காப்போனிடம் சொன்னார்.

உடனே வாயில்காப்போன் உள்ளே சென்று, ''அரசர் பெருமானே! வயது முதிர்ந்த முனிவர் ஒருவர் தங்களைக் காண வந்திருக்கிறார்'' என்து சொன்னான்.

முனிவர் அமர ஆசனம் ஒன்றைப் போடச் சொல்லிய பின்னர், முனிவரைத் தன்பால் அழைத்து வரச் செய்தான் சுத்தோதனன்.

முனிவர் வந்ததும் அவரை ஆசனத்தில் அமரும்படி அரசன் வேண்டிக்கொண்டான்.

அதன்படி ஆசனத்தில் அமர்ந்த அசித முனிவர் அரசனி டம், ''அரசே! உமக்கு ஒரு ஆண் குழந்தை பிறந்திருப்பது குறித்துத் தேவர்கள் என்னிடம் தெரிவித்தனர். அந்தக் குழந்தையைத் தரிசிக்கும் பொருட்டு வந்தேன்'' என்று சொன்னார்.

அரசன் சுத்தோதனன் குழந்தையை எடுத்து வந்து முனிவரிடம் காட்டும்படி சொன்னான்.

சிப்பந்திகள் போதிசத்துவரை எடுத்து வந்து முனிவரின் பாதங்களில் வைக்கப் போனார்கள்.

முனிவர் அசிதர் அப்படிச் செய்யக் கூடாது என்று தடுத்துவிட்டு, கைகூப்பிக்கொண்டே ஆசனத்தை விட்டு

எழுந்தார். குழந்தையை மூன்று முறை வலம் வந்து வணங்கிய பின்னர் அரசனை நோக்கி, ''அரசே! அரசனாய் இருக்க விரும்பின் இந்தக் குழந்தை அகில முழுவதையும் தமது ஆளுகையின் கீழ்க் கொணர்வார். அப்படியின்றி, துறவியாக விரும்பின் ஈடு இணையற்ற துறவியாகி, உலகம் கடைத்தேற உபதேசம் செய்வார்'' என்று சொல்லிவிட்டு, விம்மி விம்மி அழுதார்.

முனிவர் அழுவதைப் பார்த்ததும் அரசனும் மற்றவர்களும் திடுக்கிட்டார்கள். ''குழந்தைக்கு ஏதோ ஆபத்து நேரக் கூடும். அதனால்தான் முனிவர் கண்கலங்குகிறார்'' என்று நினைத்தார்கள்.

ஆகவே அரசன் முனிவரை நோக்கி, ''முனிவர் பிரானே! எதற்காக நீங்கள் இப்படிக் கண்கலங்குகிறீர்கள்? குழந்தைக்கு ஏதாவது தீங்கு நேருமா?'' என்று கவலையுடன் கேட்டான்.

''அரசே! எனக்கு வயதாகிவிட்டது. இந்தக் குழந்தை போதனை செய்யப் போகும் ஒப்பற்ற அறங்களைக் கேட்கும் வாய்ப்பு இல்லாது, என் வாழ்நாள் முடியப் போகிறதே, அதற்காகத்தான் வருந்துகிறேன்'' என்று முனிவர் பதில் சொன்னார்.

இதன் பின்னர் ஞான திருஷ்டியால் பின் விளைவுகள் பற்றி, முனிவர் சிந்தித்துப் பார்த்தார். 'தம் உற்றார் உறவினரில் யாருக்காவது, புத்தர் கூறும் உபதேசங்களைச் செவி மடுக்கும் பேறு கிடைக்குமா?' என்று கவனித்தார்.

தம் சகோதரி புதல்வன் நாலகனுக்கு இந்தப் பேறு கிட்டக் கூடும் என்பதைத் தெரிந்துகொண்டார். ஆகவே, தன் சகோதரி புதல்வனிடம் சென்று, ''அன்பார்ந்த நாலகனே! இன்னும் முப்பத்து ஐந்து ஆண்டுகளுக்குப் பின்னர், சுத்தோதன மன்னரின் புதல்வர் புத்தர் என்னும் பெரும் பேற்றை அடைவார். அவர் உரைக்கும் அறங்களைக் கேட்பதற்கு உன்னை நீ தகுதிப்படுத்திக்கொள்க; அதன் பொருட்டு, இப்பொழுதே நீ துறவறத்தை மேற்கொள்க'' என்று சொன்னார்.

வாழையடி வாழையாகச் செல்வத்திலும் அறிவிலும் சிறந்த குடும்பத்தில் பிறந்த நாலகன், தன் தாய் மாமன் கூறியதைக் கேட்ட உடனே துறவறத்தை மேற்கொண் டான். போதிசத்துவர் இருக்கும் திசையை நோக்கி, ஐந்து முறை வணக்கம் செய்துவிட்டு, இமய மலைக்குத் தவம் செய்யப் போய்விட்டான்.

## சித்தார்த்தன்

பிறந்த அன்றே குழந்தையையும் தாய் மாயாதேவியை யும், லும்பினித் தோட்டத்திலிருந்து கபிலவாஸ்து நகருக்கு அழைத்து வந்துவிட்டார்கள் என்று தோன்றுகிறது. ஏனெனில், முனிவர் அசிதர், கபிலவாஸ்துவிலுள்ள அரண் மனையில்தான் போதிசத்துவரைத் தரிசித்தார் என்று தெரி கிறது. ஆகவே கபிலவாஸ்து நகர் லும்பினித் தோட்டத்தி லிருந்து அதிக தொலைவில் இருந்திருக்க முடியாது என்று தோன்றுகிறது.

போதிசத்துவர் பிறந்த ஐந்தாவது நாளன்று, குழந் தையை நறுமண நீரால் நீராட்டி, அதற்குப் பெயர்சூட்ட ஏற்பாடு செய்தார்கள்.

அதன் பொருட்டு அரண்மனைக்கு நூற்று எட்டு அந் தணர்கள் வந்திருந்தார்கள். இவர்களுள் எட்டுப் பேர் சோதிடக் கலையில் வல்லவர்கள். மாயா தேவி கனவுகண்டு கருவுற்ற நாளன்று, உரிய பலனைச் சொன்னவர்கள். இவர்களுள் ஏழு அந்தணர்கள் போதிசத்துவரின் உடலில் இருக்கும் அடையாளங்களைக் கொண்டு இந்தக் குழந்தையின் வாழ்க்கை, மிக மிகச் சிறப்பாய் இருக்கும். இரண்டு போக்குகளில் ஏதாவது ஒரு போக்கை இந்தக் குழந்தை மேற்கொள்ளும். இந்தக் குழந்தையின் நாட்டம் அரசிய லில் திரும்புமாயின் மாபெரும் சக்கரவர்த்தியாய்த் திகழும்; இல்லையேல் துறவறத்தை மேற்கொண்டு, சிறந்த துறவி யாய்த் திகழும்'' என்று சொன்னார்கள்.

ஆனால் எட்டாவது சோதிடரோ, ''இந்தக் குழந்தை மாபெரும் துறவியாவார்; ஒருபோதும் அரசியலில் இவருக்கு நாட்டம் இராது'' என்று அழுத்தமாகச் சொன்னார். இவர் பெயர் கௌந்தஞ்ஞர்.

''முதியவன், நோயாளி, பிணம், துறவி இந்த நான்கையும் காண நேர்ந்தால், அதன் பயனாய்க் குழந்தை துறவறத்தை மேற்கொள்ளும்'' என்று இவர் சொன்னார்.

குழந்தைக்குச் சித்தார்த்தன் என்று பெயர் சூட்டினார்கள்.

இதன் பின்பு அரசன் தந்த வெகுமதிகளைப் பெற்றுக் கொண்டு அந்தணர்கள் திரும்பிவிட்டார்கள்.

போதிசத்துவர் பிறந்த ஏழாம் நாள் அன்று மாயாதேவி இறந்து போனாள். இறப்பதற்கு முன்னர் தன் தங்கை பிரஜாபதியிடம், ''தங்கையே! பிற்காலத்தில் புத்தராக விளங்க இருக்கும் குழந்தையைப் பெற்ற தாய் மீண்டும் குழந்தையைப் பெறுவது வழக்கம் இல்லை. எனது உயிர் பிரியப் போகிறது. குழந்தையைப் பேணி வளர்ப்பது உன் பொறுப்பு'' என்று சொல்லி, போதிசத்துவரைப் பிரஜாபதியிடம் ஒப்படைத்தாள்.

பிறகு மாயா தேவியின் உயிர் பிரிந்து சொர்க்க லோகம் போய்விட்டது. போதிசத்துவரைப் பெற்றதனால், உடல் நொந்தோ மனம் நொந்தோ மாயா தேவி இறக்கவில்லை. தனது வாழ்நாள் முடிந்துவிட்டதால் அவள் இறந்து போனாள்.

இதன் பின்பு மன்னன் சுத்தோதனன், பிரஜாபதியைப் பட்டமகிஷி யாக்கினான். போதிசத்துவரைச் சிறப்புடன் வளர்க்க வேண்டிய ஏற்பாடு செய்தான்.

பெற்ற தாயைப் போல, பிரஜாபதி தேவியும் போதிசத்துவரை அன்புடன் பேணி வளர்த்தாள்.

தன் புதல்வன் பேரரசனாகத் திகழ்வது தனக்குப் பெருமை என்னும் கருத்து உந்த, சுத்தோதனன் போதிசத்துவரை வளர்த்து வந்தான்.



# வாலிபப் பருவம்

தம் புதல்வன் சித்தார்த்தன் மாபெரும் சக்கரவர்த்தியாய்த் திகழ வேண்டும் என்று சுத்தோதன மன்னன் பெரிதும் ஆசைப்பட்டான். நான்கு காட்சிகளைக் காண நேர்ந்தால், தம் புதல்வன் துறவறத்தை மேற்கொள்ளக் கூடும் என்று சோதிடர்கள் கூறியது, சுத்தோதனன் நினைவுக்கு வந்தது. ஆகவே, தன் புதல்வன் சித்தார்த்தன் கண்களுக்கு இந்த நான்கு காட்சிகளும் ஏற்படாது இருக்க அந்த மன்னன் ஏற்பாடு செய்தான். அரண்மனைக்குள் அபசகுனம் எதுவும் நேராதபடி கண்காணித்துக்கொண்டான். அங்கவீனம் இல்லாத அழகிய கன்னியர்களும், வாலிபர்களும் நிறையப் பேர் சித்தார்த்தனுக்கு மலர்ந்த முகத்துடன் உதவி செய்ய அரண்மனையில் எப்பொழுதும் தயாராய் இருந்தார்கள்.

ஆண்டுதோறும் உழவுப் பெருநாள் என்று ஒரு விழாவைச் சாக்கியர்கள் விமரிசையாகக் கொண்டாடுவது வழக்கம். அன்று அரசனும் பிரமுகர்களும் ஏரில் எருதுகளைப் பூட்டி, இன்னிசை முழங்க, நிலத்தை உழத் தொடங்குவார்கள்.

இந்த விழாவைக் காண நகர மாந்தர்கள் திரளாகக் கூடுவார்கள். உழவு விழாவைக் கண்டுகளிக்கும் பொருட்டு, சித்தார்த்தனை அழைத்துக்கொண்டு, அரண்மனைப் பணிப் பெண்கள் வயல்புறத்துக்கு வந்திருந்தார்கள்.

அங்கே பெரிய நாவல் மரம் ஒன்று இருந்தது இலைகள் மிகுதியாக அடர்ந்தும், பசுமையாயும் அந்த மரம் பார்க்க வெகு அழகாய் இருந்தது. அந்த மரத்தின் நிழலில் குழந்தை சித்தார்த்தனை வைத்துக்கொண்டு பணிப் பெண்கள் உட்கார்ந்து இருந்தார்கள்.

அரசன் சுத்தோதனன் கலப்பையைப் பிடித்து நிலத்தை உழுது, உழவு விழாவைத் தொடங்கி'வைத்தான். அவனைத் தொடர்ந்து சாக்கியப் பிரமுகர் எண்ணூறு பேரும் உழ ஆரம்பித்தார்கள்.

இந்தக் காட்சியைக் கண்டுகளிக்க வந்திருந்த மக்கள், ஆரவாரம் செய்து தங்கள் மகிழ்ச்சியை வெளியிட்டார்கள்.

ஆரவாரமும் ஆர்வமும் மிகுந்திருப்பதைக் கவனித்த பணிப் பெண்கள் தாங்கள் காவலுக்கு இருப்பதை மறந்து, குழந்தை சித்தார்த்தனை நாவல் மர நிழலில் கிடத்திவிட்டு வேடிக்கை பார்க்கப் போய்விட்டார்கள்.

நேரம் போவது தெரியாமல், பணிப் பெண்கள் விழா நிகழ்ச்சிகளை பார்த்துக்கொண்டு இருந்தார்கள். சூரியன் மெல்ல மெல்ல வழக்கப்படி திசைமாறிக்கொண்டிருந்தான். அதனால் மரங்களின் நிழல் திசை மாறிக்கொண்டிருந்தது.

இதனால் இளவரசன் சித்தார்த்தன்மீது வெய்யில் பட்டிருக்கும் என, பணிப் பெண்கள் பயந்தார்கள். ஆகவே, பதறியடித்துக்கொண்டு சித்தார்த்தன் படுத்திருக்கும் கட்டிலை நாடி வந்தார்கள்.

என்ன ஆச்சரியம்! சித்தார்த்தன்மீது வெய்யில் விழவில்லை. சூரியன் திசை மாறியும் நாவல் மரத்தின் நிழல் திசை மாறுமல் இருப்பது குறித்து பணிப் பெண்கள் அளவற்ற ஆச்சரியம் அடைந்தார்கள். ஓடிச் சென்று, இந்த அதிசயத்தை அரசன் சுத்தோதனனிடம் தெரிவித்தார்கள்.

அரசன் சுத்தோதனன் வந்து பார்த்தான். அவனுக்கும் ஆச்சரியம் தாங்க முடியவில்லை.

இப்படிச் செல்லமாகவும் செழிப்பாகவும் வளர்ந்த சித்தார்த்தன் வாலிபப் பருவத்தை அடைந்தான். அவனுக்கு வயது பதினறு ஆயிற்று.

---

## திருமணம்

தம் புதல்வன் சித்தார்த்தன் உலக வாழ்க்கையில் அழுந்தி, பெரிய சக்கரவர்த்தியாக விளங்க வேண்டும் என்று சுத்தோதனன் விரும்பினன். ஆகவே தன் புதல்வன், சுக போகத்தில் வாழும் பொருட்டு, மூன்று அரண்மனைகளைச் சுத்தோதனன் கட்டச் செய்தான். கோடை காலத்தைக்

கழிக்க ஒரு அரண்மனையும், மாரிக் காலத்தைக் கழிக்க ஒரு அரண்மனையும், குளிர் காலத்தைக் கழிக்க ஒரு அரண்மனையும் நிர்மாணித்து, அந்தந்தப் பருவத்தில், அதற்குரிய அரண்மனையில் சித்தார்த்தனை வசிக்கச் செய்தான். ஒவ்வொரு அரண்மனையை அடுத்தும் ஒவ்வொரு தாமரைக் குளம் இருந்தது. ஒரு குளத்தில் நீலத் தாமரைகள் பூத்திருந்தன; மற்றொரு குளத்தில் செந்தாமரைகள் மலர்ந்திருந்தன; மூன்றாவது குளத்தில் வெண்தாமரை மலர்கள் பூத்திருந்தன. வாலிபர்களின் மனதைக் கவரத்தக்க வசதிகள் என்ன என்ன தேவையோ அவை அனைத்தும் ஒவ்வொரு அரண்மனையிலும் சித்தமாய் இருந்தன.

தன் சகோதரி மகள் யசோதையைச் சித்தார்த்தனுக்கு, சுத்தோதன மன்னன் திருமணம் செய்து வைத்தான். திருமணம் நடைபெற்றபொழுது சித்தார்த்தனுக்கு வயது பத்தொன்பது. யசோதைக்கும் வயது பத்தொன்பது.

புதுமண மக்கள் நிறைவுடனும் அன்புடனும் வாழ, என்ன என்ன தேவையோ, அவை அனைத்தையும் சுத்தோதன மன்னன் அரண்மனைக்குள் செய்து கொடுத்தான். இளம் பெண்களும் வாலிபர்களும் ஆயிரக்கணக்கில் அரண்மனைக்குள் இருந்தார்கள். ஆடலும் பாடலும் அடிக்கடி அரண்மனைக்குள் நிகழ்ந்தன. எங்கு பார்த்தாலும் இனிய காட்சிகளே தென்பட்டன. பிணி, மூப்பு, சாக்காடு முதலிய தீய காட்சிகளுக்கு அங்கு இடம் இல்லை.

இத்தகைய சுமுகமான ஒரு சூழ்நிலையில், யசோதையும் சித்தார்த்தனும் பொழுது போக்கினார்கள்.

அரச பீடத்தில் அமர்ந்து ஆட்சி செலுத்த வேண்டிய இளவரசன் சித்தார்த்தன் இப்படி இன்ப நுகர்ச்சியில் காலம் கழிப்பது, சாக்கிய குலப் பிரமுகர்களுக்கும் உற்றார் உறவினருக்கும் பிடிக்கவில்லை. தங்களின் இந்த எண்ணத்தை அரசன் சுத்தோதனனிடம் தெரிவிக்கவும் அவர்கள் தயங்கவில்லை. ''அரசே! இளவரசர்களுக்கு உரிய வாள் வித்தை, வில் வித்தை, முதலியவற்றில் நாட்டம் செலுத்தாமல் அரண்மனைக்குள் பெண்களுக்கு மத்தியிலே இளவரசர்

சித்தார்த்தர் காலம் கழிப்பது சிறப்பன்று. தாங்களும் அதற்கு இடம் கொடுப்பது முறையன்று. இளவரசர் இப்படிக் காலத்தைப் போக்கினுல், குடிமக்களைப் பாது காக்கும் திறமையும் அனுபவமும் அவருக்கு எப்படி ஏற்பட முடியும்? அரசன் பாதுகாப்பு இல்லாத நாட்டில், குடிமக்கள் வாழ்க்கை பாழாகிவிடுமே? இது தங்களுக்குத் தெரியாத விஷயம் அல்லவே?'' என்று எடுத்துக்காட்டினுர்கள்.

உறவினர்களும் பிரமுகர்களும் இவ்வாறு குறைபட்டுக் கொள்வதை, தன் புதல்வன் சித்தார்த்தனுக்கு, சுத்தோதன மன்னன் தெரிவித்தான்.

இவ்வாறு தெரிவித்த தந்தையிடம், ''அரசே! இன்னும் ஒரு வார காலத்தில், கலைகளில் வல்லவனுய் இருப்பதை நான் மக்களுக்குச் செய்து காட்டுவேன் என்று நாட்டு மக்களுக்கு முரசறைந்து அறிவிக்கச் செய்யுங்கள்'' என்று சித்தார்த்தன் பதில் சொன்னுன்.

அரசன் அவ்வாறே செய்தான்.

குறிப்பிட்ட நாளன்று உற்ருர் உறவினரும் மற்றை யோரும், இளவரசனின் திறமைகளைக் காணத் திரண்டு வந்திருந்தார்கள்.

இளவரசன் சித்தார்த்தன் வாள் வித்தை, வில் வித்தை ஆகிய கலைகளில் தனக்குள்ள திறமையையும் ஆற்றலையும் செய்து காட்டினுன்.

மக்கள் ஆரவாரம் செய்து, இளவரசனின் திறமையைப் பாராட்டினுர்கள். இளவரசன் தங்களைப் பாதுகாப்பான் என்ற நம்பிக்கை ஏற்பட்டு, அக மகிழ்ந்தார்கள்.

---

## நான்கு தோற்றங்கள்

இப்படிப் பத்து ஆண்டுகளை, யாதொரு கவலையும் இன்றி, சித்தார்த்தன் சுகபோகத்தில் கழித்தான்.

அரண்மனைக்குள் சுகபோகமாக வாழ்ந்தபோதிலும், ஒரு இடத்திலேயே இருப்பதும், பார்த்த பழகிய முகங்

களையே பார்த்துக்கொண்டிருப்பதும், சித்தார்த்தனுக்கு ஏதோ ஒரு மாதிரியாக இருந்தது. ஆகவே, வெளியுலகைக் காணச் சித்தார்த்தன் பிரியப்பட்டான். தனது விருப்பத்தைத் தன் தந்தை சுத்தோதன மன்னரிடம் தெரிவித்துக் கொண்டான்.

சுத்தோதன மன்னனும் சம்மதித்து, அதற்கான ஏற்பாடுகளைச் செய்தான். நான்கு குதிரைகள் பூட்டின தேரைக் கொணருமாறு சொன்னான். வீதிகளில் தோரணங்களையும் கொடிகளையும் கட்ட உத்தரவிட்டான். பிணியுற்றோரும் முதியோரும் இளவரசனைக் காணக் கூடாது என்றும், எங்கும் இனிய காட்சிகளே தென்பட வேண்டும் என்றும் கட்டளையிட்டான்.

சந்தகன் என்னும் தேர்ப்பாகன், நான்கு குதிரைகளைப் பூட்டி, தேரைக் கொண்டுவந்து நிறுத்தினான். தேரில் ஏறிக் கொண்டு, சித்தார்த்தன் நகரத்தைக் காணும் பொருட்டுப் புறப்பட்டான்.

வீதிதோறும் மக்கள் திரண்டு நின்று, மலர்ந்த முகத்துடன் இளவரசன் சித்தார்த்தனை வரவேற்றார்கள். எங்கு பார்த்தாலும் கண்ணுக்கு இனிய காட்சிகளே தென்பட்டன. ''உலகம் பார்க்கக் கவர்ச்சிகரமாய்த்தான் இருக்கிறது. மக்கள் என்னைப் போலவே மகிழ்ச்சியுடன் வாழ்கிறார்கள்'' என்று எண்ணி உவகையுடன் காட்சிகளைக் கண்ணுற்றபடி சென்றான். அப்போது திடும் என ஓர் உருவம் சித்தார்த்தன் முன்னே தோன்றிற்று. நலிந்து மெலிந்த இத்தகைய உருவம் ஒன்றை இதற்கு முன்பு சித்தார்த்தன் பார்த்தது கிடையாது. ஆகவே, அந்த உருவத்தைப் பார்த்ததும் சித்தார்த்தன் வியப்பு மேலிட்டுப் போனான். இது மனித உருவம்தானா? அல்லது வேறு எதுவுமா? தோற்றம் மனிதனைப் போல் அல்லவா இருக்கிறது!'' என்று நினைத்தான். பிறகு அந்த உருவத்தைப் பற்றித் தெரிந்துகொள்ள விரும்பி, தேர்ப்பாகனிடம் ''சந்தகா! இதோ வருகிறதே இது என்ன உருவம்? கையில் தடியைப் பிடித்துக்கொண்டு தள்ளாடித் தள்ளாடி நடக்கிறது. தலையில் மயிர் அனைத்தும் வெளுப்

பாய் இருக்கின்றன. கண்கள் இடுங்கிப்போய்க் குழிவிழுந்து இருக்கின்றன. உடம்பின் தோல் சுருங்கி இருக்கிறது. வாயில் பற்களைக் காணோம். இப்படி ஓர் உருவத்தை இதற்கு முன்னர் நான் பார்த்தது இல்லை. இது என்ன உருவம்? சொல்'' என்று கேட்டான்.

இதற்குச் சந்தகன் ''இளவரசே! இது மனித உருவம் தான்!'' என்று பதில் சொன்னான்.

உடனே சித்தார்த்தன் ''இது மனித உருவமாயின், நம்மைப்போல் இல்லாமல் வேறு விதமாய் இருக்கிறதே ஏன்?'' என்று கேட்டான்.

''இளவரசே! வயது அதிகமாகிவிட்டால், எந்த மனிதரும் இந்த இழி நிலையை அடையாமல் தீராது'' என்று பதில் சொன்னான் சந்தகன்.

''இது உண்மையா? வயது அதிகமாகிவிட்டால், எனக்கும் இந்த இழிநிலை ஏற்படுமா?'' என்று வியப்பும் திகைப்பும் ஒருங்கே தொனிக்க, சித்தார்த்தன் கேட்டான்.

''ஆம்'' என்று பதில் சொன்னான் சந்தகன்.

''சந்தகா! பார்த்தது போதும். தேரை அரண்மனைக்குத் திருப்பு'' என்று சொன்னான் சித்தார்த்தன்.

அதன்படி சந்தகன் தேரை அரண்மனைக்குத் திருப்பினான்.

இதுவரை கவலை என்பதையே அறியாதிருந்த சித்தார்த்தன் உள்ளத்தில் அன்றுமுதல் கவலை தோன்றலாயிற்று.

முதியவன் ஒருவனைக் கண்டு தன் புதல்வன் கவலைக்கு ஆளாகி இருக்கிறான் என்பது தெரிந்து, அதை அகற்றுவதற்கு அரசன் சுத்தோதனன் முயன்றான். அழகிலும் நடிப்பிலும் பேச்சிலும் சிறந்த பெண்களை அனுப்பி, ஆடலாலும் பாடலாலும், சித்தார்த்தனனின் கவலையை அகற்ற முயன்றான்.

அது எதிர்பார்த்த பலனைக் கொடுக்கவில்லை. இளவரசன் மீண்டும் வெளியே சென்று உலகத்தை உள்ளது உள்ளபடி காண விரும்பினான்.

ஆகவே மீண்டும் சந்தகனை அழைத்துக்கொண்டு, தேரில் ஏறி உலகத்தைக் காணச் சித்தார்த்தன் புறப்பட்டான்.

அப்பொழுது நோயாளி ஒருவனைச் சித்தார்த்தன் வழியில் பார்த்தான்.

அந்த நோயாளி நடக்க முடியாமல் ஒரு இடத்தில் அயர்ந்து உட்கார்ந்துவிட்டான். நோயின் சின்னங்கள் பார்க்க வெறுப்பூட்டின.

இதைக் கவனித்த சித்தார்த்தன் சந்தகனிடம், ''இது என்ன உருவம்? இந்த உருவத்துக்கு உடம்பு எல்லாம் ஏதோ ஒரு மாதிரி இருக்கிறதே ஏன்?'' என்று விசாரித்தான்.

''இளவரசே! இதுவும் மனித உருவம்தான். நோயால் பீடிக்கப்பட்டு இந்த மனிதன் இப்படி அவதிப்படுகிறான்'' என்று பதில் சொன்னான் சந்தகன்.

''சந்தகா! எல்லா மனிதரையும் நோய் பீடிப்பது உண்டா?'' என்று கேட்டான் சித்தார்த்தன்.

''ஆம். இளவரசே! நோயின் பீடிப்பிலிருந்து எந்த மனிதனும் தப்ப முடியாது'' என்று பதில் சொன்னான் சந்தகன்.

''என்னையும் நோய் பீடிக்குமா?'' என்று வினவினான் சித்தார்த்தன்.

''அரசனாயினும் சரி, ஆண்டியாயினும் சரி, பண்டிதனாயினும் சரி, பாமரனாயினும் சரி, நோய்க்கு இலக்காகாமல் இருப்பது சாத்தியம் அன்று'' என்று சொன்னான் சந்தகன்.

''பார்த்தது போதும்; அரண்மனைக்குத் தேரைத் திருப்பு'' என்று கூறினான் சித்தார்த்தன்.

அதன்படி சந்தகன் தேரைத் திருப்பினான்.

இப்பொழுது இளவரசன் முகத்தில் கவலையின் சாயல் மேலும் அதிகமாயிற்று.

பிறகு இளவரசன் சித்தார்த்தன் மூன்றும் முறையாக வெளியுலகக் காட்சியைக் காணச் சென்றபோது, பிணம் ஒன்றைப் பாடையில் வைத்துத் தூக்கி வருவதையும், கூடவே சிலர் அழுதுகொண்டு வருவதையும் பார்த்தான்.

உடனே அவன் தேர்ப்பாகனை நோக்கி, ''சந்தகா! எதையோ தூக்கிச் செல்கிறார்களே அது என்ன? பார்த்தால் மனிதனைப் போலவே இருக்கிறது. பக்கத்திலே சிலர் அழுது கொண்டு வருகிறார்களே ஏன்?'' என்று வினவினான்.

''இளவரசே! இறந்துபோன மனிதனை சுடலையில் எரிக்கும் பொருட்டுத் தூக்கிச் செல்கிறார்கள்'' என்று சந்தகன் பதில் சொன்னான்.

''இறப்பு என்பது எல்லாருக்கும் ஏற்படுமா?'' என்று வினவினான் சித்தார்த்தன்.

''ஆம். இளவரசே! எந்த உயிரும் சாவிலிருந்து தப்ப முடியாது'' என்று பதில் சொன்னான் சந்தகன்.

இந்தப் பதிலைக் கேட்டதும் சித்தார்த்தன் உள்ளத்தில் அதிர்ச்சியும் கவலையும் அதிகமாயின; ''என்ன உலகம் இது! எல்லாம் மாயை! நிலையற்றவை!'' என்று தனக்குத் தானே அவன் சொல்லிக்கொண்டான்.

இளவரசனின் உள்ளம் சஞ்சலத்தில் ஆழ்ந்திருப்பதைக் கவனித்த சந்தகன், தேரை அரண்மனைக்குத் திருப்பிக் கொண்டு போய்விட்டான்.

நான்காம் முறையாகச் சித்தார்த்தனும் சந்தகனும் ஒரு தோட்டத்துக்குச் சென்றார்கள். அப்போது தேவர்கள் துறவி ஒருவரை எதிர்ப்படச் செய்து, சித்தார்த்தனின் உள்ளத்தில் துறவு உணர்ச்சி ஏற்படச் செய்தார்கள்.

துறவியைப் பார்த்ததும், ''சந்தகா! இவர் யார்?'' என்று வினவினான் சித்தார்த்தன்.

''இளவரசே! இவர் ஒரு துறவி. உலகில் அனைத்தும் நிலையற்றவை என்பதை அறிந்து, துறவறத்தை மேற்கொண்டு இருப்பவர்'' என்று பதில் சொன்னான் சந்தகன்.

சந்தகன் சொன்ன பதில், துறவறத்தை மேற்கொள்வது நலம் என்னும் ஒரு எண்ணத்தை இளவரசன் சித்தார்த்தன் உள்ளத்தில் ஏற்படச் செய்தது.

இந்த எண்ணத்துடன் சித்தார்த்தன் ஒரு பூஞ்சோலையை அடைந்தான்.



## கவலைக்குக் காரணம்

**து**றவறத்தில் மனம் செலுத்தியவனாய், சித்தார்த்தன் ஒரு பூஞ்சோலையை அடைந்தான். சோலையில் இருந்த

ஒரு குளத்தில் நீராடிவிட்டு வந்து, ஆடையை அணிந்து கொள்ள விரும்பி, உயரமான ஒரு பீடத்தில் அமர்ந்தான். சிப்பந்திகள் அவனைச் சூழ்ந்து நின்றார்கள். உத்தரனை எதிர்பார்த்து, ஆடைகளை எடுத்துக் கொடுப்பதற்குக் காத்து நின்றார்கள்.

சித்தார்த்தன் துறவறத்தை மேற்கொள்ளப் போகிறான் என்பதை அறிந்த இந்திரன், சிறந்த ஆடைகளால் சித்தார்த்தனை அலங்கரிக்கும்படி, விஸ்வகர்மாவைப் பூஞ்சோலைக்கு அனுப்பி வைத்தான்.

பணியாள் வடிவில் வந்த விஸ்வகர்மன், தேவர்களின் உடைகளைக் கொண்டு சித்தார்த்தனை அலங்கரித்தான். இசைவாணர்கள் ஒருவருடன் ஒருவர் போட்டியிட்டுக் கொண்டு, இசைக் கருவிகளை முழக்கினார்கள். வந்திகள் சித்தார்த்தனின் புகழைப் பாடினார்கள்.

சித்தார்த்தன் தேரில் ஏறிக்கொண்டு புறப்பட்டான். மக்கள் ஆரவாரத்துடன் தேரைப் பின்தொடர்ந்து சென்றார்கள்.

இது சமயம் பணியாள் ஒருவன் ஓடிவந்து, ''இளவரசே! யாசோதரா தேவிக்கு ஆண் மகவு பிறந்திருக்கிறது'' என்னும் செய்தியை அறிவித்தான்.

இந்தச் செய்தியைக் கேட்டுச் சித்தார்த்தன் மகிழ்ச்சி அடையவில்லை. ''இந்தப் பிணிப்பிலிருந்தும் நான் விடுபட்டாகவேண்டும்'' என்று சித்தார்த்தன் பதில் சொன்னான்.

பிறந்த ஆண் குழந்தைக்கு ராகுலன் என்று பெயர் வைத்தார்கள்.

சித்தார்த்தன் தேரில் ஏறிக்கொண்டு, கபிலவாஸ்து நகருக்குள் பிரவேசித்தான். மக்கள் பெருத்த ஆரவாரம் செய்து அவனைப் பின்தொடர்ந்து சென்றார்கள்.

இது சமயம் கிஸா கோதமி என்னும் சாக்கிய குலப் பெண் ஒருத்தி, சித்தார்த்தன் ஆரவாரத்துடன் ஊர்வலம் வருவதை உப்பரிகையில் இருந்தபடி கவனித்தாள். சித்தார்த்தனின் வடிவழகையும் தோற்றப் பொலிவையும் கண்டு அவள் சொக்கிப் போனாள். ''உண்மையில் தாயும்

பேறு பெற்றவள்; தந்தையும் பேறு பெற்றவன்; மனைவியும் பேறு பெற்றவள்; கணவனும் பேறு பெற்றவன்'' என்று உற்சாகத்துடன் அவள் சொன்னாள்.

''பேறு பெற்றோர்'' என்று கிஸா கோதமி சொன்ன சொற்கள் சித்தார்த்தனின் உள்ளத்தில் ஓர் உண்மையை உணர்த்திற்று.

''ஆம். காமம் என்னும் நெருப்பை அவித்தோர் பேறு பெற்றோர்; வெறுப்பையும் மயக்கத்தையும் அவித்தோர் பேறு பெற்றோர்; கிஸா கோதமியின் சொற்களில் சிறந்த போதனையை உள்ளடங்கி இருக்கிறது. ஆகவே, துக்கமே இல்லாத நிர்வாண நிலையை அடைய முயல்வது அவசிய மாகும்' என்று ஒரு முடிவுக்கு வந்தான் சித்தார்த்தன்.

தனக்கு இந்தப் போதனையைத் தக்க சமயத்தில் நினைவு படுத்திய கோதமிக்கு ஒரு வெகுமதியை அளிக்கச் சித்தார்த் தன் விரும்பினான். தனது கழுத்தை அலங்கரித்த விலை யுயர்ந்த முத்துமாலை ஒன்றைக் கழற்றி, கிஸா கோதமிக்கு அனுப்பி வைத்தான்.

தன்மீது பிரியம்கொண்டு இளவரசர் தமக்கு வெகுமதி அனுப்பி இருக்கிறார் என்று கிஸா கோதமி தவறாக எண்ணிக் கொண்டாள்.

சித்தார்த்தனோ தமது உள்ளத்தில் பலவிதமான சிந் தனைகள் ஊடாட, அரண்மனையை அடைந்து, ஓய்வு எடுத்துக்கொள்ளும் பொருட்டு, தனது அந்தப்புரத்துக்குள் போனான்.

உள்ளே சென்று படுக்கைமீது சாய்ந்துகொண்டான்.

தேவமடந்தையரை நிகர்த்த இளம் பெண்கள் இசைக் கருவிகளை மீட்டி ஆடினார்கள்; பாடினார்கள்.

சித்தார்த்தனோ எதிலும் ஈடுபாடு இன்றி, முகத்தில் கவலை படிந்தவாறு படுக்கையில் படுத்து இருந்தான்.

இதைக் கவனித்த யசோதரை, ''நாதா! ஏதோ ஒரு மாதிரி இருக்கிறீர்களே ஏன்?'' என்று கேட்டாள்.

''எங்கு பார்த்தாலும் நிலையாமையின் ஆற்றல் மிகுந்து நிற்கிறது. பிணி, மூப்பு, சாக்காடு என்னும் மூன்றும் உயிர்

களைப் பாதிப்பதை எங்கும் நான் காண்கிறேன். அதனால் வாழ்க்கையில் ஆர்வம் குறைந்து, எனக்குக் கவலை ஏற்பட்டு இருக்கிறது'' என்று பதில் சொன்னான்.

இதன் பின்னர் சித்தார்த்தன் படுக்கையிலேயே அயர்ந்து தூங்கிவிட்டான்.

# பெருந் துறவு

பஞ்சணையில் படுத்திருந்த சித்தார்த்தன் தூக்கம் வராமல் நள்ளிரவில் விழித்துக்கொண்டான். எழுந்து படுக்கை மீது உட்கார்ந்துகொண்டு சுற்றும் முற்றும் பார்த்தான். ஆடலும் பாடலும் நிகழ்த்திய அழகிய பெண்கள் இசைக் கருவிகளை அருகிலேயே வைத்துவிட்டு அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தார்கள். மத்தளத்தை வாசித்தவள், மத்தளத்தின் இரு பக்கங்களிலும் விரல்களைப் படியவைத்தவாறே, மத்தளத்தின்மீது சாய்ந்துகொண்டு தூங்கினாள். வீணையை மீட்டியவள் வீணையைத் தம் பக்கத்தில் வைத்துக்கொண்டு குறட்டைவிட்டுத் தூங்கினாள்.

நறுமணத் தைலம் கொண்ட விளக்கு, சுற்றும் முற்றும் ஒளியைப் பரப்பிக்கொண்டிருந்தது.

பெண்கள் தூங்கும் இந்த அலங்கோலக் காட்சி, சித்தார்த்தனின் உள்ளத்தில் பெரிதும் வெறுப்பை உண்டாக்கிற்று; நாற்ற மெடுக்கும் பிணங்களுக்கு இடையிலும், நெருப்புப்பற்றி எரியும் வீட்டுக்குள்ளும் அகப்பட்டுக் கொண்டதைப் போன்று, அவன் அவதிப்பட்டான். துறவறத்தை மேற்கொள்ள வேண்டும் என்னும் ஆர்வத்துடன் அவன் இருந்தான். ''இப்பொழுதே, இந்தக் கணமே, இவை அனைத்தையும் துறந்துவிட்டு, தனி இடத்துக்குப் போய்விட வேண்டும்'' என்று நினைத்து, எழுந்து தனது அறையைவிட்டு வெளியே வந்தான்.

அப்போது யாரோ ஒருவர் கவனிப்பதை அறிந்து, ''யார் அங்கே நிற்பது?'' என்று கேட்டான்.

''உங்கள் ஊழியன் சந்தகன்'' என்று பதில் வந்தது.

உடனே சித்தார்த்தன் அவனிடம், ''சந்தகா! உலக பந்தத்தில் சிக்கித் தவியாமல், அமைதியை நாடித் தனியிடம் செல்ல நான் விரும்புகிறேன். லாயத்துக்குச் சென்று, விரைந்து செல்லும் குதிரை ஒன்றைக் கொண்டு வா'' என்று உத்தரவிட்டான்.

தாமதியாது அந்தக் காரியத்தைச் சந்தகன் செய்தான். லாயத்துக்குச் சென்று கந்திகம் என்னும் குதிரையை அழைத்து வந்தான்.

அந்தக் குதிரை நேர்த்தியான குதிரை; கடிய வேகத்தில் செல்லும் ஆற்றல் பெற்ற குதிரை. அதன் கனைப்பு ஊர் முழுவதும் எதிரொலிக்கும். ஆனால், தேவர்கள் அதன் கனைப்பு பிறர் காதில் விழாதபடி செய்துவிட்டார்கள்.

குதிரை தயாரானதும் சித்தார்த்தன் புறப்படத் தயாரானான். ஆயினும் புறப்படுவதற்கு முன்னர் தன் மைந்தன் ராகுலனைப் பார்த்துவிட்டுப் போக எண்ணி, தன் மனைவி யசோதரையின் அறைப் பக்கம் சென்றான்.

கதவைத் திறந்து பார்த்தபோது, குழந்தை ராகுலனை அருகே படுக்க வைத்துக்கொண்டு, தன் மனைவி தூங்குவதைச் சித்தார்த்தன் கவனித்தான். ''குழந்தையை நான் தொடுவேனாயின் யசோதரை விழித்துக் கொள்வாள். அதனால் நான் புறப்படுவது தடைப்படலாம். நான் புத்த நிலையை அடைந்த பின்னர், ராகுலனைப் பார்க்கலாம்'' என்று எண்ணினான்.

ஆகவே தாமதியாது கதவை மெதுவாகச் சாத்திக் கொண்டு சித்தார்த்தன் வெளியே வந்தான்.

குதிரை தயாராய் நின்றது. சித்தார்த்தன் அருகே சென்று ''கந்திகனே! எனது விருப்பத்தை நீ செய்து முடிக்க வேண்டும். புத்த நிலையை அடைந்து மனிதர்களையும் தேவர்களையும் நான் கடைத்தேற்ற எண்ணியுள்ளேன்; அமைதியான நிர்வாண நிலைக்கு அவர்களை அழைத்துச் செல்ல விரும்புகிறேன்'' என்று சொல்லிவிட்டு, குதிரைமீது ஏறிக்கொண்டான்.

அற்புதமான அந்த வெள்ளைக் குதிரை அங்கிருந்து

கிளம்பிற்று; அதனுடைய குளம்படி யோசையும் கனைப்பும் பிறருக்குக் கேளாதபடி தேவர்கள் செய்துவிட்டார்கள்.

கோட்டையின் வாயிலை அடைந்ததும், எந்தப் பக்கம் போவது என்பது பற்றிய நினைப்பில் சிறிது நேரம் நின்றான். கோட்டை வாயிலைத் திறக்க ஆயிரம் பேருக்குக் குறையாமல் வேண்டும். அதற்கு என் செய்வது என நினைத்துக்கொண்டிருந்த சமயத்தில், தேவர்கள் அந்தக் காரியத்தை எளிதில் செய்து, கதவுகளைத் திறந்துவிட்டார்கள்.

கோட்டை வாயிலைக் கடந்து குதிரை சென்றது; சந்தகனும் சித்தார்த்தனுடன் கூடச் சென்றான்.

இது சமயம் சித்தார்த்தனுக்கு வயது இருபத்து ஒன்பது; தனக்குப் புதல்வன் பிறந்த ஏழாம் நாளன்று, சித்தார்த்தன் துறவை மேற்கொண்டான். அன்று சுத்த பூர்ணமி என்றும் வெள்ளிக்கிழமை என்றும் கூறுகிறார்கள். சித்தார்த்தன் மேற்கொண்ட இந்தத் துறவை, **பெருந் துறவு** அதாவது மகாபிநிஷ்கிரமணம் என்று பௌத்த நூலோர் குறிப்பிடுவர்.

கோட்டை வாயிலைக் கடந்து, குதிரை சிறிது தூரம் சென்றதும், மாரன் என்னும் ஆசைப்பேய் சித்தார்த்தனைப் பின்தொடர்ந்து வந்து, ''இளவரசே! நீர் துறவறத்தை மேற்கொள்ளாது இருப்பின், இன்னும் ஏழே நாட்களில், உம்மை அகில உலகத்துக்கும் மாபெரும் சக்கரவர்த்தியாக ஆக்குகிறேன்'' என்று ஆசை காட்டினான்.

இப்படி ஆசை காட்டிய மாரனை ''நீ யார்?'' என்று வினவினான் சித்தார்த்தன்.

''நான் மாரன் என்னும் தேவன்'' என்று பதில் சொல்லிற்று ஆசைப் பேய்.

அதற்குச் சித்தார்த்தன், ''மாரனே! மண்ணுலகில் மாபெரும் மன்னனாக விளங்குவதை நான் விரும்பவில்லை. மக்கள் அனைவரும் பேரின்பத்தில் திளைக்கும் வழியைக் காணும் புத்த நிலையை அடைய நான் விரும்புகிறேன்'' என்று பதில் சொன்னான்.

இவ்வாறு சொல்லிவிட்டுச் சித்தார்த்தன் புறப்பட்டுச் சென்றான்,

மாரனும் அவனை நிழல்போலப் பின்தொடர்ந்தான்; தருணம் வாய்க்கும்போது, தன் கருத்துக்கு இணங்கச் செய்துவிடலாம் என்ற எண்ணம் மாரனுக்கு இருந்தது.

தான் விட்டுச்செல்ல விருக்கும் கபிலவாஸ்து நகரை ஒரு முறை திரும்பிப் பார்த்துவிட்டு, சித்தார்த்தன் புறப்பட்டுச் சென்றான். அப்போது உலகம் சுழல்வதுபோல் ஒரு மயக்க நிலை அவனுக்கு ஏற்பட்டது.

தேவர்களும் நாகர்களும் பெருமகிழ்ச்சி கொண்டார்கள். ஆயிரக்கணக்கான தேவர்கள், சித்தார்த்தனின் முன்னும் பின்னும் நடந்து பெருமையுடன் அழைத்துச் சென்றார்கள்.

மலர்களின் நறுமணம் எங்கும் கமழ்ந்தது; தென்றல் சுகமாக வீசிற்று; முப்பது யோஜனைகள் கடந்து, கோலிய நாட்டில் இருக்கும் அநோம நதிக்கரையை, சூரியன் உதயமாவதற்கு முன்னர் சித்தார்த்தன் அடைந்தான். நதிக்கரையை அடைந்ததும், ஒரே தாவில் குதிரை அதன் மறுகரையை அடைந்தது.

அந்த இடத்தை அடைந்ததும், சித்தார்த்தன் குதிரையிலிருந்து இறங்கிக்கொண்டான். தமது ஆபரணங்களை எல்லாம் கழற்றிச் சந்தகனிடம் கொடுத்தான். "சந்தகா! குதிரையையும் அழைத்துக்கொண்டு நீ கபிலாஸ்துவுக்குத் திரும்பு. இந்த ஆபரணங்களை அரசரிடம் கொடுத்துவிடு. நான் துறவியாகிவிட்டதை அரசருக்குத் தெரிவி" என்று கூறினான்.

சந்தகனுக்குத் துயரம் தாங்க முடியவில்லை. "இளவரசே! நானும் துறவறத்தை மேற்கொள்கிறேன்" என்று சொன்னான்.

"நீ துறவறத்தை மேற்கொள்வது இப்பொழுது பொருத்தமன்று" என்று சொல்லி, சித்தார்த்தன் தடுத்துவிட்டான்.

பிறகு வாளை உருவி, தனது தலையிலிருக்கும் மயிர்களையும் தாடி மயிரையும் ஒரு அங்குல நீளத்துக்கு மட்டும் விட்டுவிட்டு, மீதம் இருப்பதைத் துண்டித்து, ஆகாயத்தில் வீசினான். "நான் புத்த நிலையை அடைவது திண்ணமாயின்,

இந்த மயிர்கள் ஆகாயத்திலேயே இருக்கட்டும்; இல்லாது போனால் பூமியில் விழட்டும்'' என்று சொன்னான்.

மயிர்கள் பூமியில் விழாமல் ஆகாயத்திலேயே தொங்கிக் கொண்டிருந்தன. அதை அறிந்த இந்திரன் ஒரு பொற் பாத்திரத்தைக் கொணர்ந்து அவற்றைச் சேகரித்து அதற்குள் வைத்துக்கொண்டு தேவலோகம் திரும்பினான்.

சித்தார்த்தனின் தலையில் அதுமுதல் ஒரு அங்குல நீள மயிர்கள் இருந்தன. அவை பிறகு வளரவும் இல்லை. குறையவும் இல்லை.

இது சமயம் தமது உடம்பில் இருக்கும் ஆடம்பரமான உடைகள் துறவறத்துக்குப் பொருந்தி வராதே என்று சித்தார்த்தன் நினைத்தான்.

அப்போது கடிகாரன் என்னும் பிரம்மதேவர் துறவறத்துக்கு உரிய பாத்திரம், உடை முதலியவற்றுடன் அங்கு ஒரு எளிய வேடனைப் போல் தோன்றினார்.

சித்தார்த்தன் தம்மீது கிடந்த ஆடம்பரமான உடைகளைக் களைந்துவிட்டு, வேடன் கொண்டிருந்த துவராடையை அணிந்துகொண்டான். பிச்சைப் பாத்திரத்தையும் கையில் வாங்கிக்கொண்டான். பிறகு சந்தகனை நோக்கி, ''சந்தகா! நீ திரும்பி நடந்தவற்றை அரசரிடம் தெரிவி: குதிரையை அழைத்துச் செல்'' என்று கூறினான்.

உடனே சந்தகன் சித்தார்த்தனை அடிபணிந்து மூன்று முறை வணங்கி, மூன்று முறை வலம் வந்து விடை பெற்றுக் கொண்டு புறப்பட்டான்.

கந்திகம் என்னும் குதிரை பிரிய மனமின்றி, அந்த இடத்திலேயே இறந்துவிட்டது.

சந்தகனோ துயரம் தாங்காமல் முத்து முத்தாய்க் கண்ணீரை உகுத்துக்கொண்டே, கபிலவாஸ்துவுக்குத் திரும்பினான்.

# கௌதம புத்தர்

## வரலாறு

### போதிசத்துவர்

துறவறத்தைத் தழுவி, புத்தர் நிலையை அடைய முயலும் ஒருவரை, போதிசத்துவர் என அழைப்பது பௌத்த சமய சம்பிரதாயம். துறவறத்தைத் தழுவி, சித்தார்த்தன் இப்பொழுது போதிசத்துவர் நிலையில் இருப்ப தால் இனி அவரைப் போதிசத்துவர் எனலாம். துறவறத்தை மேற்கொண்ட பின் அவர் மள்ளர்களின் நாட்டில், அனுப் பியா என்னும் இடத்தில் ஒரு மாந்தோப்பில் ஏழு நாட்கள் தங்கினர். புறத் தொடர்புகள் எதுவும் இன்றி, தனித்து அமைதியான சூழ்நிலையில் ஏழு நாட்களை அவர் கழித்தார்.

அதன் பின்னர் அங்கிருந்து, மகத நாட்டின் தலைநகரான ராஜக்கிருகத்துக்கு அவர் போனர்,

அவருடைய கையில் பிச்சைப் பாத்திரம் இருந்தது. உயர்ந்த இலட்சியம் ஒன்றை நாடுபவர் என்பதை அவ ருடைய முகம் காட்டிற்று. மேனியில் கிடந்த உடை பிச்சைக் காரனுக்கு உரியதாய் காணப்படினும், அவருடைய மேனி யின் தோற்றமும் சாயலும் நடையும் அவர் அரச குமாரன் என்பதை அறிவித்தன. கண்களில் கருணையும் பெருமிதமும் துலங்கின. இளமை மிடுக்குள்ள தேகத்தில் காணப்பட்ட துறவறச் சின்னங்கள், உயர்ந்த இலட்சியத்தை நாடிச் செல்பவர் என்பதை அறிவித்தன.

கம்பீரமும் கருணையும் கலந்த பெருமிதமான தோற்ற முடைய இந்த மனிதரைப் பார்த்த ராஜக்கிருக மாந்தர்கள் வியப்பு மேலிட்டு நின்றர்கள். அவசர அவசரமாகப் போகி

றவர்கள்கூட, சற்று தயங்கி நின்று, போதிசத்துவரைப் பார்க்காமல் அப்பால் போகவில்லை.

கிழக்கு வாயில் வழியாக ராஜக் கிருக நகருக்குள் நுழைந்த போதிச்சத்துவர், பிச்சைப் பாத்திரத்தைக் கையில் ஏந்திக்கொண்டு, மெல்ல மெல்ல வீதியில் நடந்து போனார்.

போதிசத்துவரின் பாவனமான தோற்றத்தைக் கண்ட மக்கள், உள்ளத்தில் உவகை பொங்க, விரைந்து வந்து அவர் கையில் வைத்திருக்கும் பாத்திரத்தில் பிச்சை போட்டார்கள். ''பெருமைமிக்க இந்த முனிவர் நம் இல்லத்துக்குப் பிச்சை யேற்க வந்திருப்பது நாம் செய்த பாக்கியம்!'' என்று மக்கள் தங்களிடையே பேசிக்கொண்டார்கள்.

போதிசத்துவரைப்பற்றி, நகர மக்கள் பரபரப்புடன் பலவாறு பேசிக்கொண்டார்கள். ஆயினும் வந்திருப்பவர் தேவரா, நாகரா, மனிதரா, வேறு யாருமா என்பதை யாராலும் தெரிந்துகொள்ள முடியவில்லை.

ஆகவே, தங்கள் அரசன் பிம்பசாரனிடம் சென்று, ''அரசே! யாரோ ஒரு மனிதர் பிச்சைப் பாத்திரத்துடன் தெருக்களில் சஞ்சரிக்கிறார். அவர் எத்தகையவர் என்பது யாருக்கும் தெரியவில்லை'' என்று சொல்லி, தங்களுக்கு இருக்கும் மனக்கலக்கத்தை மன்னனிடம் தெரிவித்தார்கள்.

ஆகவே உப்பரிகையில் நின்று பிம்பசார மன்னன் வீதியைக் கவனித்தான்.

கம்பீரமான தோற்றமுள்ள வாலிபத் துறவி ஒருவர் பிச்சைப் பாத்திரத்துடன் தனித்து நடந்து வீதியில் வந்து கொண்டிருப்பதையும் பணிவும் பண்பும் அவருடைய தோற்றத்தில் மிளிர்வதையும், பிம்பசார மன்னன் கண்டான்.

பிறகு தனது அதிகாரிகளிடம், ''உங்களில் சிலர், நம் நகருக்குப் புதிதாக வந்திருக்கும் மனிதரைக் கண்காணியுங்கள். பூதமாய் இருப்பின் விரைவில் மறைந்துகொள்வான்; தேவனாய் இருப்பின் ஆகாயத்துக்குப் போய் விடுவான்; நாகனாய் இருப்பின் பாதாளம் போவான்; மனிதனாய் இருப்பின் இந்த உலகிலேயே நடமாடுவான். ஆகவே, வந்தி

ருப்பவன் எத்தகைய மனிதன் என்பதை முதலில் நீங்கள் தெரிந்து வாருங்கள்'' என்று கட்டளையிட்டான்.

தான் வைத்திருக்கும் பாத்திரத்தில் போதிய அளவு சோறு காய்கறிகள் கிடைத்ததும், போதிசத்துவர் திரும்பி ஞர். எந்த வாயில் வழியாக நகருக்குள் நுழைந்தாரோ அதே வாயில் மூலம் நகரைவிட்டு வெளிப்போந்து, அருகே இருக்கும் ஒரு குன்றை அடைந்து அதன் அடிவாரத்தில் அமர்ந்து உணவை உண்ணத் தொடங்கினுர். முதல் கவளம் எடுத்து வைத்ததுமே அந்த உணவைப் போதிசத்துவரால் சாப்பிட முடியவில்லை. வாய் குமட்டிற்று; வெறுப்படைந்து போதிசத்துவர் அதை வெளியே துப்பினுர். அறுசுவை உண்டியை உண்டு உண்டு பழகிப் போயிருந்த அவருக்கு, சாதாரணமான எளிய உணவைச் சாப்பிடுவது முதலில் வெகு சிரமமாய் இருந்தது. பாத்திரத்தினுள் இருக்கும் உணவைக் காணவே அவர் மனம் பெரிதும் கூசிற்று.

ஆயினும் பிறகு மனத்தை அவர் திடப்படுத்திக்கொண்டார். சுவை உணர்ச்சியைக் கட்டுப்படுத்த முடியாமல் தனக்கு ஏற்பட்ட தவிப்பைக் குறித்துத் தன்னைத் தானே கடிந்துகொண்டார். ''பிச்சைக்கார உடையை அணிந்திருக்கும் நான், அதற்கு ஏற்ற உணவை அருந்துவதுதானே முறை'' என்று சொல்லிவிட்டு, பிறகு பாத்திரத்தில் இருக்கும் உணவை அள்ளி உண்ணத் தொடங்கினுர்.

அன்றுமுதல் வெறுப்போ விருப்போ கொள்ளாது, கிடைத்த உணவை அவர் உண்டு வந்தார்.

பிம்பசார மன்னனுடைய சிப்பந்திகள் இவற்றை எல்லாம் கூர்ந்து கவனித்தார்கள்.

பிறகு தங்கள் அரசனிடம் திரும்பி, தாங்கள் நேரில் பார்த்தவற்றை அரசனிடம் விவரமாகத் தெரிவித்தார்கள்.

விவரம் தெரிய வந்ததும் பிம்பசார மன்னன் தனது தேரைத் தயார் செய்யச் சொன்னுன்.

பிறகு பிரமுகர் சிலரையும் தன்னுடன் அழைத்துக் கொண்டு, போதிசத்துவர் இருக்கும் இடத்துக்குப் புறப்பட்டுப் போனுன்.

## பிம்பசாரன்

போதிசத்துவர் ஒரு இடத்தில் அமர்ந்து இருப்பதைச் சிறிது தூரத்திலேயே பிம்பசார மன்னன் கவனித்தான்.

ஆகவே தேரைவிட்டு இறங்கிக்கொண்டு, பிரமுகர்களுடன் சேர்ந்து போதிசத்துவர் இருக்கும் இடத்தை அணுகித் தகுந்த ஒரு ஆசனத்தில் அமர்ந்தான்.

பிறகு போதிசத்துவரைக் கூர்ந்துகவனித்தான். பார்க்கப் பார்க்க மன்னன் உள்ளத்தில் உவகையும் வியப்பும் மேலோங்கின; உணர்ச்சி வயப்பட்டுப் போயிருந்த அவனால் சிறிது நேரம் பேச முடியவில்லை. பிறகு மனத்தை ஒருவாறு நிதானப்படுத்திக்கொண்டு, போதிசத்துவரை நோக்கி, ''மதிப்புக்குரிய முனிவரே! தோற்றத்தையும் சாயலையும் பார்த்தால், சிறப்பான அரச குலத்தில் தாங்கள் பிறந்தவர்கள் என்று தெரிகிறது. வாழ்க்கையை நுகர வேண்டிய வாலிபப் பருவத்தினரான தாங்கள், எந்த நாட்டைச் சேர்ந்தவர்கள்? எந்த அரச குலத்தில் பிறந்தவர்கள்? இவற்றை நான் தெரிந்துகொள்ளலாமா?'' என்று பணிவுடன் கேட்டான்.

தன் குலமும் பெயரும் அரசனுக்குத் தெரியவில்லை என்பதை அறிந்த போதிசத்துவர் அவற்றைப்பற்றி அவனுக்குச் சொல்லிவிட்டு, ''அரசே! அரச குலத்தில் பிறந்தவனாய் இருந்தும், அரச பதவியில் நாட்டமில்லாது துறவறத்தை நான் மேற்கொண்டு இருக்கிறேன். ஆசை, அபிமானம் போன்றவற்றை எனது உள்ளத்திலிருந்து நான் களைந்து எறிந்துவிட்டேன்'' என்று பதில் சொன்னார்.

''ஆம். இவற்றைப்பற்றி நானும் கேள்விப்பட்டதுண்டு. புத்த நிலையை அடையத் தாங்கள் முயல்வதையும் நான் அறிந்தேன். புத்த நிலையைத் தாங்கள் அடைந்ததும் முதன் முதலாக எங்கள் நாட்டுக்கு எழுந்தருளி, எனக்கும் எனது குடிமக்களுக்கும் தாங்கள் அறவுரை நிகழ்த்த வேண்டும்'' என்று உவகையோடு வேண்டினான் பிம்பசார மன்னன்.

பிம்பசார மன்னனின் இந்த விருப்பத்துக்குப் போதிசத்துவர் இசைத்தார்.

இதன் பின்னர் அரசன் அரண்மனை திரும்பினான்; போதிசத்துவர் தமது யாத்திரையைத் தொடர்ந்தார்.

## வழி என்ன?

உலகத்தில் மாறுபட்ட இரு நிலைகள் எப்பொழுதும் நிலவுவதைக் காண்கிறோம். இருள் இருக்கிறது. அதைப் போல அதற்கு மாறுபட்ட ஒளியும் இருக்கிறது. இதே போல, சூடு குளிர்ச்சி, அன்பு வெறுப்பு, கோபம் பொறுமை, பயம் வீரம், சோம்பல் முயற்சி, சத்தியம் அசத்தியம் முதலிய இரு வேறு தன்மைகள் நிலவுகின்றன.

இவற்றைப் போலவே துன்பமும் இன்பமும் உலகில் நிலையாய் இருக்கின்றன. துன்பத்தை அகற்றிவிட்டு எப்படி நிலையான இன்பத்தை அடைவது?

நிலையான இன்பம் எது என்பதையும், அதை அடைவதற் குரிய வழி எது என்பதையும் அறியும் பொருட்டே அரண்மனை வாழ்வைத் துறந்து போதிசத்துவர் புறப் பட்டார்.

பொன்னும் பொருளும் மனைவியும் மக்களும் இன்பத் துக்குக் காரணம் அல்ல என்பதை அறிந்தே அவற்றை உதறிவிட்டு, போதிசத்துவர் துறவறத்தைத் தழுவினார்.

மகத நாட்டின் தலைநகரான ராஜக் கிருகத்துக்குப் பக்கத் திலே, விந்திய மலையைச் சார்ந்த ஐந்து குன்றுகள் இருந்தன. நகரக்குச் சிறிது தூரத்திலும் அமைதியான இயற்கைச் சூழ் நிலையிலும் இருந்ததால், இந்தக் குன்றுகளில், முனிவர்கள் பலர் தங்கித் தவம் செய்துகொண்டிருந்தார்கள்.

இவர்களில் ஆளாரா காலாமன் என்பவர் பெரும் புகழுடன் விளங்கினார். உலகத்தில் இருக்கும் துயரங்களுக்கு உரிய காரணத்தையும், பரிகாரத்தையும் ஆளாரா காலாம னிடம் கேட்டுத் தெரிந்துகொள்ளலாம் என்ற கருத்துடன் போதிசத்துவர் அவரிடம் போனார். அவருக்குச் சீடராகி, அவர் செய்யும் போதனைகளைச் செவிமடுத்தார்.

'நான்' என்பதுதான் ஆத்மா என்றும் கர்மங்கள் அனைத்தையும் நடத்துவது ஆத்மாதான் என்றும் ஆளாரா காலாமன் கூறினர். ஐம்பொறிகளின் துணைகொண்டு ஆத்மா உலகத்தைத் தெரிந்துகொள்கிறது. ஆத்மாவை உள்ளது உள்ளபடி அறிவதே ஞானம். இந்த ஞானத்தை அடைவதற்குத் தனித்து இருந்து தியானம் செய்வது அவசியம் ஆகும். தியானத்தின் பயனாய், ஆத்மா விடுதலை அடைந்து பேரானந்தத்தில் திளைப்பதற்குரிய வழி வகைகள் புலப்படும். அந்த வழிகளைப் பின்பற்றினல், ஆத்மா விடுதலை அடையும்'' என்று அவர் சொன்னர்.

இந்த உபதேசம் போதிசத்துவருக்குத் திருப்தி அளிக்க வில்லை. ''மக்கள் துயரில் சிக்குண்டு தவிப்பதற்கு, நான் என்னும் அகந்தைதான் காரணமா?'' என்று போதிசத்துவர் கேட்டார்.

''நெருப்பு வேறு, சூடு வேறு என்று நாம் கருதுகிறேம். உண்மையில் சூடும் நெருப்பும் பிரிக்க முடியாதபடி பிணைந்து இருப்பவை. அதைப் போலவே நான் என்னும் அகந்தையும் ஆத்மாவும் நெருங்கிய தொடர்புடவை. நான் என்னும் அகந்தை அகல வேண்டுமாயின், தவம் புரிவது மிக மிக அவசியம்'' என்று ஆளாரா காலாமன் விளக்கினர்.

போதிசத்துவருக்கு இந்தப் பதில் அவ்வளவு திருப்தி அளிக்கவில்லை. 'நான்' என்பதுதான் ஆத்மா என்பதை அவருடைய உள்ளம் ஏற்கவில்லை.

ஆகவே, போதிசத்துவர், உத்தகன் என்னும் முனிவரை அணுகினர்.

அவர் தனக்குத் தெரிந்தவற்றை, போதிசத்துவருக்கு உபதேசம் செய்தார். ''எந்த ஒரு பொருளுக்கும் பல தன்மைகள் உண்டு. ஒரு தன்மையை மட்டும் எடுத்துக் கொண்டு, அதைப்பற்றி ஒரு முடிவுக்கு வருதல் கூடாது. உதாரணமாகக் கங்கை நதியை எடுத்துக்கொள்வோம். கங்கை என்பது மணலா? அல்லது அதிலுள்ள நீரா? இல்லை என்றால், அதன் இரு கரைகளும் கங்கையா? எதையும் தனித் தனியாகப் பார்த்தால் கங்கை என்று என ஒன்று இருப்ப

தாகச் சொல்ல முடியாது. ஆயினும், இந்த அம்சங்கள் அனைத்தும் கங்கையில் இருக்கின்றன. அதைப் போலவே நான் என்னும் அகந்தைக்கும் பல தன்மைகள் உண்டு'' என்று சொன்னார்.

இந்த விளக்கம் போதிசத்துவருக்குப் பிடிக்கவில்லை. ''பல தன்மைகள் சேர்ந்துதான் கங்கை உருவாகிறது என்று கொள்வோமானால், தனித்த முறையில் கங்கை என ஒன்று கிடையாது என்பது உறுதிப்படுகிறது. அதைப் போலவே, 'நான்' என்பதும் பகுதி பகுதியாகத்தான் செயல்படுகிறது. ஆகவே ஆத்மா என ஒன்று இருக்க முடியாதல்லவா?'' என்று கேட்டார் போதிசத்துவர்.

அதற்கு உத்தகன் ''ஆத்மா என ஒன்று இல்லையாயின், கர்மம் என்பது உலகில் நடைபெற முடியாது. நம்மைச் சுற்றிலும் காணப்படும் வேறுபாடுகள் அனைத்துக்கும், காமம் தான் மூல காரணம். செல்வம், உடல்நலம், குணங்கள், ஆற்றல் இவை சம்பந்தமாக மக்களிடையே ஏற்றத் தாழ்வுகள் காணப்படுவதற்குக் காரணம், கர்மமே. கர்மம் இல்லையேல் உலகில் எதுவும் இல்லை'' என்று சொன்னார்.

ஆத்மா என ஒன்று இருப்பதைப் போதிசத்துவர் ஏற்க வில்லை. ஆயினும் கர்மம் என ஒன்று இருப்பதையும், மக்களிடையே காணப்படும் வேறுபாடுகளுக்குக் காரணம் அதுவே என்பதையும் போதிசத்துவர் புரிந்துகொண்டார்.

கர்மம் என ஒன்று இருப்பதைப் போதிசத்துவர் ஒப்பிய போதிலும், நற்கர்மம் எது? தீய கர்மம் எது? என்பதில் அவர் வேறுபட்டு நின்றார்.

உயிர்களைப் பலியிட்டு, வேள்விகள் செய்வது நற்கர்மம் என்று அவர்கள் சொன்னார்கள்.

இதைப் போதிசத்துவர் ஏற்கவில்லை.

'தடபுடலாக வேள்விகள் செய்வதும், திரும்பத் திரும்பப் பிரார்த்தனை செய்வதும், மந்திரங்களை ஜெபிப்பதும் ஒருவனை மேன்மைப்படுத்தா. ஆகவே, வேறு துறைகளில் கவனம் செலுத்தி, மக்களின் துயர்களைப் போக்க வழி காண வேண்டும்'' என்ற முடிவுக்கு வந்தார் போதிசத்துவர்.

இந்த எண்ணத்துடன் போதிசத்துவர் உருவேலாக் காட்டுக்குப் போய்ச் சேர்ந்தார்.

## கடும் தவம்

உருவேலாக் காட்டை அடைந்த போதிசத்துவர் அங்கே ஐந்து துறவிகள் தவம் புரிந்துகொண்டிருப்பதைக் கண்டார்.

அந்த ஐந்து துறவியரும், பொறி புலன்களைக் கட்டுப் படுத்தி, அடக்க ஒடுக்கத்தோடு ஈடுபாடுடன் தவத்தில் ஈடுபட்டு இருப்பதைப் போதிசத்துவர் கவனித்தார். ஆகவே, அவரும் அவர்களைப் போலவே தவம் செய்வதில் முனைந்தார்.

உள்ளத்தையும் உடலையும் கட்டுப்படுத்தி, கடும் தவம் புரியத் தொடங்கினர்.

நாள்தோறும் உண்ணும் உணவின் அளவைக் குறைத்துக் கொண்டே வந்து, கடைசியாக, ஒரு தானிய அளவு மட்டும் உட்கொண்டு தவம் செய்தார்.

உணவு உண்ணாது தவம் செய்த காரணத்தால் போதிசத்துவரின் உடல் பலம் குன்றியும் மெலிந்தும் போயிற்று. கடும் தவம் புரியும் போதிசத்துவருடைய புகழ் எங்கும் பரவிற்று. அதனால் அவரைத் தரிசிக்கும் பொருட்டும், அவருடைய ஆசியைப் பெறும் பொருட்டும் மக்கள் திரள் திரளாக வந்தார்கள்.

உடலை வருத்திக் கடும் தவம் புரிந்தும்கூட, எதிர்பார்த்த பலன் போதிசத்துவருக்குக் கிட்டவில்லை. உடலை வருத்துவதனால், ஆசைகள் அடங்காது இருப்பதையும்,ஞானப் பேறு கிட்டாது இருப்பதையும் போதிசத்துவர் தெரிந்து கொண்டார்.

ஆறு ஆண்டுகள் தொடர்ந்து கடும் தவம் இயற்றியதன் விளைவாக, போதிசத்துவரின் உடல் மெலிந்து போயிற்று.

உடலை வருத்துவது பயன்படாது என்பதைத் தெரிந்து கொண்ட போதிசத்துவர் எழுந்து நீராட விரும்பினர்.

ஆகவே அவர் புறப்பட்டுச் சென்று நிரஞ்சனை நதியில் நீராடினார். நீராடி முடித்த பின் கரையேற முயன்றபோது, அவரால் முடியவில்லை. பலவீனத்தின் பயனாய்த் தவித்த அவர், பக்கத்தில் தென்பட்ட ஒரு மரத்தின் கிளையைப் பற்றிக்கொண்டு, ஆற்றிலிருந்து கரைக்கு வந்தார்.

வந்தவர் தமது ஆசிரமத்தை நோக்கிச் சென்றார். அப்போது நடக்க முடியாது தள்ளாடி அவர் கரையில் விழுந்துவிட்டார்.

இதைக் கவனித்த ஐந்து தவசிகளும் போதிசத்துவர் இறந்துவிட்டதாகக் கருதினார்கள்.

ஆகவே அவர்கள் புறப்பட்டுச் சென்று சுத்தோதன மன்னனைச் சந்தித்து ''அரசே! தங்கள் புதல்வர் தவம் இயற்றியதன் பயனாய், பசி தாங்காது இறந்து போனார்'' என்று கூறினார்கள்.

அவர்கள் கூறியதைச் சுத்தோதன மன்னன் நம்பவில்லை. ''என் புதல்வன் புத்தநிலையை அடையக் கூடும் என்று அசித முனிவர் சொன்னார். ஆகவே உங்கள் கூற்றை நான் நம்ப முடியாது'' என்று சுத்தோதன மன்னன் பதில் சொன்னான்.

முனிவர்கள் திரும்ப வந்தபோது, போதிசத்துவர் மயக்கம் அகன்று எழுந்து நடந்துகொண்டிருப்பதைக் கண்டு ஆச்சரியம் அடைந்தார்கள்.

ஆகவே அவர்கள் மீண்டும் சுத்தோதனனிடம் திரும்பி, ''அரசே! தாங்கள் புதல்வர் இறக்கவில்லை. உயிருடன் இருக்கிறார்'' என்று சொன்னார்கள்.

அதற்கு அரசன் சுத்தோதனன், ''புத்த நிலையை அடையாமல், என் புதல்வனுக்கு இறப்பு இல்லை என்பதை நான் நன்கு அறிவேன்'' என்று உறுதியுடன் பதில் சொன்னான்.

## சுஜாதா

**போ**திசத்துவர் தவம் செய்துகொண்டிருந்த உருவேலாக் காட்டை அடுத்து, சேனானி என்று ஒரு சிறு கிராமம் இருந்தது.

அந்தக் கிராமத்தில் சேனன் என்று பணக்காரப் பண்ணைக்காரன் ஒருவன் இருந்தான்.

அவனுக்குச் சுஜாதா என்னும் பெயரில் புதல்வி ஒருத்தி இருந்தாள். மங்கைப் பருவத்தை அடைந்த பின், அவள், ''நான் தகுந்த கணவனை மணக்கவும் அந்தத் திருமணத்தின் பயனாய் எங்களுக்குப் பிறக்கும் முதல் குழந்தை ஆண் குழந்தையாய்ப் பிறக்கவும் வேண்டும். அப்படி நேர்ந்தால், இந்த ஆல மரத்தின் அடியில், ஆண்டுதோறும் நான் தவறாது நிறையத் தான தருமங்கள் செய்வேன்'' என்று வேண்டுதல் செய்துகொண்டாள்.

சுஜாதாவின் இரு விருப்பங்களும் நிறைவேறினபடியால், தான் செய்துகொண்ட நேர்த்திக் கடனை நிறைவேற்றச் சுஜாதா எண்ணம் கொண்டாள். ஆகவே, பின்வரும் ஏற்பாட்டை முதலில் அவள் செய்தாள்.

செழிப்பான ஓர் இடத்தில் அவளுக்கு ஆயிரம் பசுக்கள் இருந்தன. இனிய செடி கொடிகளைத் தின்று வளர்ந்த அந்த ஆயிரம் பசுக்களின் பாலை, அவள் ஐந்நூறு பசுக்களுக்கு உணவாகக் கொடுத்தாள். பிறகு அந்த ஐந்நூறு பசுக்களில் பால் கறந்து, அந்தப் பாலை இருநூற்றைம்பது பசுக்களுக்குக் கொடுத்தாள். இப்படிப் பசுக்களின் எண்ணிக்கையைப் படிப்படியாகக் குறைத்துக்கொண்டே வந்து, கடைசியாக, பதினாறு பசுக்களுக்கு மட்டும் பாலைக் கொடுத்தாள். அதன் பின்னர் பதினாறு பசுக்களின் பாலைக் கறந்து எட்டுப் பசுக்களுக்குக் கொடுத்தாள். அந்தப் பாலின் தரமும் மணமும் குணமும் சுவையும் வருணனைக்கு மிஞ்சியவை எனலாம்.

தான் செய்துகொண்டிருக்கும் நேர்த்திக்கடனை நிறைவேற்ற வேண்டிய தினத்தன்று, அதிகாலையில் எழுந்து சுஜாதா நீராடினாள். பிறகு சிறந்த பாலைக் கொடுத்துத் தாம் வளர்த்த எட்டுப் பசுக்களில் பாலைக் கறப்பதற்காக அவள் சென்றாள்.

அப்போது அந்த எட்டுப் பசுக்களின் கன்றுகள், தத்தம் தாய்ப் பசுவிடம் செல்லாமல் விலகி நின்றுகொண்டன; பாத்திரத்தைப் பசுக்களிடம் எடுத்துச் சென்றபோது, பசுக்

களின் மடிகளிலிருந்து பால் தானே சுரந்து, பால் பாத்திரம் நிறைந்துவிட்டது.

இந்த எட்டுப் பாத்திரங்களிலும் நிறைந்த பாலை எடுத்து, ஒரு பெரிய பாத்திரத்தில்விட்டு, சுஜாதா காய்ச்சத் தொடங்கினாள்.

பால் கொதிக்கத் தொடங்கிற்று; நன்கு கொதித்த போதிலும், பால் பொங்கி, பாத்திரத்தின்மீது வழிய வில்லை. நெருப்பு சீராக எரிந்துகொண் டிருந்ததால், அடுப்பிலிருந்து புகையே கிளம்பவில்லை.

இந்தப் பாலை நன்றாகவும் கெட்டியாகவும் காய்ச்சி முடித்த சமயம் தேவர்கள் அந்தப் பாலில் தேவலோகத்துத் தேனை சொரிந்தார்கள். பாலுக்கு நறுமணத்தையும் ஊட்டினார்கள்.

இவற்றை எல்லாம் கவனித்த சுஜாதா பெரிதும் ஆச்சரியம் அடைந்தாள். தனது பணிப்பெண் சௌமனாவை அழைத்து, தான் கண்ட அதிசயங்களை அவளிடம் கூறினாள்.

பிறகு தான் நேர்த்திக் கடன் செலுத்த நினைத்திருந்த ஆல மரத்தை அணுகி அந்த இடத்தைத் துப்புரவு செய்யச் சொன்னாள்.

எஜமானியின் கட்டளைப்படி, சௌமனா ஆலமரத்துக்குச் சென்றாள்.

அன்று இரவு போதிசத்துவர் பல கனவுகள் கண்டார். புத்த நிலையை அடையப் போகும் தருணம் நெருங்கிவிட்டது என்பதை அந்த ஐந்து கனவுகளும் அவருக்கு அறிவிப்பனவாய் இருந்தன.

ஆகவே போதிசத்துவர் கை, கால், முகம் முதலியவற்றை அலம்பிச் சுத்தம் செய்துகொண்டு, பொழுது புலர்வதை எதிர்பார்த்துக் காத்து இருந்தார்.

பொழுது புலர்ந்ததும் எழுந்து சென்று, ஆல மரத்தடியில் அமர்ந்து இருந்தார். அவருடைய மேனி காந்தியோடும் வசீகரத்துடனும் துலங்கிற்று.

இது சமயம் சுஜாதா அனுப்பிய சௌமனா ஆல மரத்தடிக்கு வந்தாள். அங்கே தேவருக்கு நிகரான ஒருவர்

வந்து மரத்தடியில் வீற்றிருப்பதைப் பார்த்து அதிசயித்தாள் தம் எஜமானி சுஜாதாவின் காணிக்கையை ஏற்றுக்கொள்ள மரத்தின் அருதேவதையே வந்திருப்பதாகக் கருதி மகிழ்ச்சி அடைந்தாள்.

தாமதியாது ஓடோடிவந்து தன் எஜமானி சுஜாதாவிடம் தான் ஆலமரத்தடியில் கண்டதைச் சொன்னுள். ''தேவி! தாங்கள் செலுத்தப்போகும் காணிக்கையை நேரில் பெற்றுக் கொள்ளும் பொருட்டுத் தேவதை ஒருவர் மரத்தின் அடியில் வந்து காத்து இருக்கிருர்'' என்று உற்சாகத்துடன் கூறினுள்.

தன் பணிப்பெண் கூறியதைக் கேட்டதும் சுஜாதா பெரு மகிழ்ச்சி கொண்டாள். ''மகிழ்ச்சி தரும் இந்தச் செய்தியைச் சொன்ன உனக்கு விடுதலை வழங்குகிறேன்'' என்று கூறி, விடுதலை வழங்கியதுடன் அவளுக்கு வெகுமதியும் வழங்கினுள்.

பிறகு ஒரு தங்கப் பாத்திரத்தை எடுத்துவரச் செய்து, பயபக்தியுடன் தான் தயார் செய்த பாயசத்தை அதில் எடுத்துக்கொண்டு, ஆலமரத்தை நாடிச் சுஜாதா புறப்பட்டாள்.

ஆர்வத்துடனும் மகிழ்ச்சியுடனும் சென்ற அவள் ஆல மரத்தை அடைந்தாள். அங்கே இருக்கும் போதிசத்துவரைத் தேவதையாகக் கருதி, தான் கொணர்ந்திருந்த பாற்பாயசத்தை அவருக்கு வழங்க அவள் முன்வந்தாள்.

பாற்பாயசம் இருக்கும் தங்கப் பாத்திரத்தைத் தரைமீது வைத்துவிட்டு, நறுமண நீரை எடுத்து, போதிசத்துவரிடம் நீட்டி, ''பெருமானே! தங்கள் திருக்கரத்தை அலம்பிக் கொள்ளுங்கள்'' என்று வேண்டினுள்.

இது சமயம் தம் கையில் போதிசத்துவர் வைத்திருந்த ஒடு வலக்கையிலிருந்து மறைந்துவிட்டது.

ஆகவே சுஜாதாவின் விருப்பப்படி, போதிசத்துவர், தமது வலக்கையை அவள் கொடுத்த நறுமண நீரால் கழுவிக்கொண்டார்.

இதன் பின்னர் சுஜாதா மலர்ந்த வதனத்துடன், தங்கப்

பாத்திரத்தில் இருக்கும் பாயசத்தைப் போதிசத்துவரிடம் நீட்டி, ''பெருமானே! நான் தரும் இந்தப் பாயசத்தைத் தாங்கள் அங்கீகரித்து அருளவேண்டும்'' என்று வேண்டினுள்.

சுஜாதா தந்த தங்கப் பாத்திரத்தை, பாயசத்துடன் போதிசத்துவர் ஏற்றுக்கொண்டார்.

இதனுல் மகிழ்ச்சியடைந்த சுஜாதா மீண்டும் போதி சத்துவரை வணங்கிவிட்டு, மகிழ்ச்சியுடனும் மன நிறைவுடனும் தனது இல்லம் திரும்பினுள்.

## மாரன்

சுஜாதா சென்ற பின்பு போதிசத்துவர் ஆலமரத்தை விட்டு எழுந்தார்; பாயசப் பாத்திரத்தைத் தமது கையில் வைத்துக்கொண்டே, நிரஞ்சனை நதியை நாடிச் சென்ருர்.

நதியின் கரையில் பாத்திரத்தை வைத்துவிட்டு, போதி சத்துவர் அந்த ஆற்றில் இறங்கி நீராடினுர். பிறகு மஞ்சள் நிற ஆடையை எடுத்து அணிந்துகொண்டு, பாயசப் பாத்திரத்தைத் தமது கையில் எடுத்துக்கொண்டு அங்கிருந்து புறப்பட்டார்.

அவருடைய மேனியும் முகமும் பிரகாசமாய் இருந்தன.

புறப்பட்டுச் சென்ற அவர், போதி மரத்தை - அரச மரத்தை - அடைந்து, கிழக்குத் திசையை நோக்கி அமர்ந்தார்.

பிறகு பாத்திரத்தில் இருக்கும் பாயசத்தை வாய் நிறைய நாற்பத்து ஒன்பது முறைகள் அருந்தினுர். அதன் பின்னர் நாற்பத்து ஒன்பது நாட்களைப் போதி மரத்தடியிலேயே, போதிசத்துவர் கழித்தார்.

இந்த நாற்பத்து ஒன்பது நாட்களிலும் வேறு உணவோ பானமோ அவர் அருந்தவில்லை. இடைவிடாது நாற்பத்து ஒன்பது நாட்களையும், ஆழ்ந்த தியானத்தில் அவர் கழித்தார்.

நாற்பத்து ஒன்பது நாட்களும் தியானத்தில் இருந்த சமயம், சுஜாதா தந்த தங்கப் பாத்திரத்தைக் கையில்

வைத்துக்கொண்டே இருந்த அவர் கடைசி நாள் அன்று, ''இன்று தினம் நான் புத்த நிலையை அடைவது திண்ண மாயின் இந்தத் தங்கப் பாத்திரம் ஆற்றில் எதிர் நீந்தி வேகமாகச் செல்லக் கடவது'' என நினைத்தார்.

இந்த நினைப்பு வந்ததும், போதிசத்துவர் அந்தத் தங்கப் பாத்திரத்தை ஆற்றில் போட்டார்.

உடனே அந்தத் தங்கப் பாத்திரம் மிதந்து ஆற்றின் நடுவே போயிற்று; அதன் பின்னர் அங்கிருந்து எதிர் நீந்தி வெகு வேகமாகச் செல்லத் தொடங்கிற்று.

பிறகு போதிசத்துவர் அரச மரத்தை நாடித் திரும்பிய போது, தலைமீது புதிய புல்கட்டு ஒன்றைச் சுமந்துகொண்டு ஒரு வாலிபன் வருவதை அவர் பார்த்தார்.

வந்த வாலிபன், போதிசத்துவருக்குப் புல் தேவைப்படும் என நினைத்து, தான் கொணர்ந்திருக்கும் புல்லில் எட்டுக் கைபிடி அளவு எடுத்துப் போதிசத்துவரிடம் கொடுத்தான்.

வாலிபன் தந்த புல்லை, போதிசத்துவர் விருப்புடன் ஏற்றுக்கொண்டார்.

பின்னர் அரச மரத்தை அடைந்து, அதன் கிழக்குப் பக்கத்தில் நின்று மேற்குத் திக்கை நோக்கினர். அப்போது அவருடைய உள்ளத்தில் அமைதி நிலவிற்று.

ஆகவே அந்த இடத்தை ஏற்றதொரு இடமாகக் கருதி, தாம் கொணர்ந்திருந்த புல்லை, போதிசத்துவர் அந்த இடத்தில் பரப்பினர்.

பிறகு அந்தப் புல்லின்மீது, கிழக்குத் திசையை நோக்கியவாறு அமர்ந்தார். 'புத்த நிலையை அடையாமல் இந்த இடத்தைவிட்டு நகருவது இல்லை' என்ற உறுதிப்பாட்டுடன் அரச மரத்தின்கீழ் சப்பணம் போட்டுப் போதிசத்துவர் உட்கார்ந்தார்.

இப்படிப் போதிசத்துவர் உறுதியுடன் உட்கார்ந்திருந்த சமயம், மாரன் என்னும் தீயவன் போதிசத்துவரின் உறுதிப் பாட்டைக் கலைக்க முயன்றன். 'இவருடைய விருப்பம் கைகூடுமாயின், எனது பதவியும் பவிசும் போய்விடும். ஆகவே, எப்படியாவது, எந்த வகையிலாவது இவருடைய

விருப்பம் நிறைவேருதபடி தடுக்க வேண்டும்' என்று அவன் கருதினுன்.

ஆகவே, தனது படை பரிவாரங்களை எல்லாம் அழைத்து வந்து, போதிசத்துவரை மாரன்* தாக்கத் தொடங்கினுன்.

மாரனின் ஆரவாரத்தைக் கண்டு, அருகில் இருந்த முனிவர்கள் பயந்து ஓடிவிட்டார்கள்.

போதி சத்துவரோ உறுதி குலேயாமல் இருந்த இடத்தி லேயே இருந்தார்.

புயல் காற்ருக உருக்கொண்டு, மாரன் போதிசத்து வரைத் தாக்கினுன். அவன் தாக்கும்போது, மலேகள் கிடு கிடுத்து நடுங்கின; பெரிய பெரிய விருட்சங்கள் வேரோடும் தூரோடும் பெயர்ந்துகொண்டு ஆகாயத்தில் பறந்தன.

போதிசத்துவரோ கோரப் புயலின் கொடுமையைப் பொருட்படுத்தாது, அசைவற்று அமைதியாக இருந்தார். 'கோரமான இந்தப் புயலே, பிறர் உதவியின்றியே என்னுல் சமாளிக்க முடியும். நான் கடைப்பிடித்து ஒழுகும் பத்து அறப் பண்புகளுக்கு, இந்தக் கொடிய புயலேச் சமாளிக்கும் ஆற்றல் உண்டு' என்று கருதி, அமைதியுடன் இருந்தார்.

புயல் உருவில் வந்த மாரன் தனது வலிமை முழுவதை யும் காட்டியும்கூட, தோல்வியடைந்தான். ஆகவே, வேறு உருவத்தில் வந்து போதிசத்துவரை அவன் தாக்க முயன்ருன்.

பேய் மழையாகப் பெய்து, போதிசத்துவரை மாரன் அசைக்க முயன்ருன்.

மழை சோவென்று கொட்டியதையும் பொருட்படுத்தா மல், அரச மரத்தின் அடியில் போதிசத்துவர் அமைதியுடன் வீற்றிருந்தார்.

இரண்டாவது முயற்சியிலும் தோல்வியடைந்த மாரன். நெருப்பாக மாறி, போதிசத்துவரைத் தாக்கலானுன்.

மாரன் உண்டாக்கிய நெருப்புப் பிழம்புகளும் பொறி களும் போதிசத்துவரைச் சூழ்ந்துகொண்டன.

---

* மாரன் : ஆசைப் பேய்களுக்கு மூலதாரமாக விளங்கும் அவாவை, மாரன் என்று கூறுவது பௌத்த சமய மரபு.

ஆயினும் அவற்ருல் போதிசத்துவரை ஒன்றும் செய்ய முடியவில்லை. நெருப்புப் பிழம்புகளும் பொறிகளும் நறு மணமுள்ள மலர்களாக மாறி, போதிசத்துவரின் பொன்னடி களில் விழ்ந்தன.

இவ்வாறு பல்வேறு விதங்களில் முயன்றும், மாரனுல் போதிசத்துவரின் உறுதிப்பாட்டைக் குலைக்க முடியவில்லை.

அந்தி மாலை வரும்வரை, மாரன் தமது திறமைகளை எல்லாம் பயன்படுத்தி, போதிசத்துவரை வெல்ல முயன்ருன்.

அவனுல் முடியவில்லை. ஆகவே, தனது தோல்வியை ஒப்புக்கொண்டு, மாரன் போதிசத்துவரை வணங்கி விடை பெற்றுக்கொண்டு போய்விட்டான்.

அவனுடைய படையினரும் பயந்து அப்பால் விலகிப் போய்விட்டார்கள்.

## போதி ஞானம்

மாரனும் அவனுடைய படையினரும் தோல்வியுற்ற நேரம் மாலை நேரம். அவர்கள் திரும்பிய பின்னர், போதிசத் துவர், மீண்டும் தியானத்தில் ஆழ்ந்தார்.

அவருடைய வெற்றியைக் கொண்டாடுவதற்கு அறிகுறி யாக, போதி மரத்தின் கிளைகள் வளைந்து பணிவுடன் போதி சத்துவரை வணங்கின.

அந்தி மயங்கி இருள் எங்கும் பரவத் தொடங்கிற்று. போதிசத்துவரோ இருந்த இடத்தைவிட்டுப் பெயராது, உலகின் பல்வேறு இயல்புகள் பற்றி ஆழ்ந்து சிந்திக்கத் தொடங்கினர்.

இந்த உலகத்தில் சகல உயிர்களும் இன்பத்தோடு வாழ ஏங்குகின்றன; ஆயினும் துன்பத்தில் சிக்குண்டு அவை தவிக் கின்றன. இதற்குக் காரணம் என்ன?

இதைப்பற்றிப் போதிசத்துவர் ஆழ்ந்து சிந்திக்கச் சிந்திக்க, அவர் உள்ளத்தில் அடியில் வரும் உண்மை புலப்படலாயிற்று:

பிறவி எடுத்து எடுத்து வாழ்க்கையில் உழல்வதால்தான் துன்பங்கள் ஏற்படுகின்றன. அப்படியாயின் பிறவி ஏற்படா

மல் தடுத்தா லல்லது துன்பங்களைப் போக்க முடியாது. துன்பத்தை அறவே துடைக்க வேண்டுமாயின், பிறவி என்பது நேராதபடி தடுக்க வேண்டும் என்னும் உண்மையைப் போதிசத்துவர் கண்டறிந்தார்.

பிறவி நேராமல் எவ்வாறு தடுப்பது? இதுபற்றிப் போதிசத்துவர் பிறகு ஆழ்ந்து சிந்திக்கலானார்.

பிறவிக்குக் காரணமாய் இருப்பது அவா என்பதை அவர் தெரிந்துகொண்டார்.

அவா என்பது தொடர்பினால் உண்டாகிறது; தொடர்பு பொறி புலன்களாலும் மனத்தாலும் ஏற்படுகின்றன.

ஆசையால் உந்தப்பட்டு, அதன் பயனாய் அறியாமையில் மூழ்கி, உண்மை நிலையை உள்ளது உள்ளபடி அறிய முடியாமல் பொறி புலன்கள் அவதிப்படுகின்றன. ஆகவே, அறியாமையே துன்பத்தின் பிறப்பிடம் என்பதை ஐயம் திரிபுக்கு இடம் இன்றி, போதிசத்துவர் நன்கு தெரிந்து கொண்டார்.

துன்பங்களுக்குக் காரணம் அறியாமையாயின், அறியாமையை எவ்வாறு அகற்றுவது?

எட்டுவித சீலங்களைக் கடைபிடித்து ஒழுகுவதன் மூலம் அறியாமையை அகற்ற முடியும். அந்த எட்டு வித சீலங்கள் வருமாறு:

**(1) நற்காட்சி**
**(2) நல்லெண்ணம்**
**(3) நல்வார்த்தை**
**(4) நற்செய்கை**
**(5) நல்வாழ்க்கை**
**(6) நன்முயற்சி**
**(7) நல்லவற்றைக் கடைப்பிடித்தல்**
**(8) நல்லோர் உறவு.**

எட்டுவிதமான சீலங்களை ஒருவன் கடைப்பிடித்து ஒழுகி வந்தால் அறியாமை அகன்று, அறிவு விளக்கம் - அதாவது ஞானம் - உண்டாகும். ஞானத்தின் பயனாய், துன்பங்களிலிருந்து விடுபட்டு, நிரந்தரமான பேரின்பத்தை ஒருவன்

பெற முடியும் என்னும் பேருண்மையைப் போதிசத்துவர் அறிந்தார்; உணர்ந்தார். போதி மரத்தை அடைந்து அறிவு விளக்கம் பெற்றதனுல், இதுவரை கௌதம போதி சத்துவராக இருந்த அவர் அன்று முதல் கௌதம புத்தர் ஆனுர்.

கௌதமர், புத்தர் நிலையை அடைந்தபோது அவருக்கு வயது முப்பத்து ஐந்து. கி.மு. 568ம் ஆண்டு, வைகாசி மாதம் ஆறும் தேதி, புதன்கிழமை, மதிநிறைந்த நன்னுளில், இரவு நேரத்தில், போதிசத்துவர் பூரண ஞானத்தைப் பெற்று - அதாவது போதி ஞானத்தை - பெற்று, புத்தராக ஆனுர்.

புத்தர் வைகாசி மாதம் முழுமதி நிறைந்த நன்னுளில் பிறந்தார்; முப்பத்தைந்து ஆண்டுகளுக்குப் பின்னர், வைகாசி மாதம் முழுமதி நிறைந்த் நன்னுளன்று, போதி ஞானம் பெற்ருர்; அதன் பின்னர், தமது எண்பதாவது வய தில், கி.மு. 543ம் ஆண்டு, வைகாசி மாதம் முழுமதி நிறைந்த நன்னுளில் செவ்வாய்க் கிழமையன்று, புத்தர் பெருமான், மகா பரிநிர்வாணத்தை அடைந்தார்.

ஆகவே உலகிலுள்ள பௌத்தர்கள் அனைவருக்கும் வைகாசி - பௌர்ணமி நாள் முக்கியமான பல சிறப்புகள் வாய்ந்த நன்னுள் ஆகும். அந்த நன்னுளை உலகில் இருக்கும் பௌத்தர்கள் அனைவரும் வெகு விமரிசையாகக் கொண்டாடு கிருர்கள். ஆகவே அந்த நாள் உலக முக்கியத்துவம் பெற்று விட்ட ஒரு நாளாக விளங்குகிறது.*

போதிஞானம் என்ருல் தனது சொந்த முயற்சியால் அடைந்த சுயபோத ஞானம் என்று பொருள். பிறருடைய

*புத்தர் பிறந்த ஆண்டு எது என்பதில் கருத்து வேற்றுமை நிலவுகிறது. சிங்கள நூல்கள் புத்தர் கி.மு. 623ல் பிறந்ததாகக் கூறுகின்றன. பேராசிரியர் இலட்சுமி நரசு போன்றவர்கள் கி.மு. 563ல் புத்தர் பிறந்ததாக எழுதியுள்ளனர்,

உதவியும் வழிகாட்டுதலும் இன்றி, சொந்த ஊக்கத்தினுலும் முயற்சியாலும் புத்தர் பெருமான் ஞானத்தை அடைந்தார்.

ஒவ்வொரு உயிரும் தன் சொந்த முயற்சியாலேயே மேன்மையடைய வேண்டும் என்பதைச் சுட்டுவதற்காகவே போதிஞானம் என்னும் வார்த்தையைப் பௌத்த நூல்கள் பயன்படுத்துகின்றன.

உத்தமமான இந்த ஞானப்பேற்றைப் புத்தர் அடைந்த அன்று, உலகத்தில் பல அற்புதங்கள் நிகழ்ந்தன. எங்கு பார்த்தாலும் நறுமண மலர்கள் பூத்துக் குலுங்கின. உலகம் முழுதும் ஒளி வெள்ளத்தால் பிரகாசித்தது; ஆறு களில் நீர் நிறைய ஓடிற்று; மரங்கள் பசுமையாகக் காட்சி அளித்தன.

## நடு வழி

பௌத்த மதத்தின் சிறப்பையும் புத்தர் பெருமான் போதனை செய்த கோட்பாடுகளின் சிறப்பையும் ஒருவன் உள்ளது உள்ளபடி தெரிந்துகொள்ள வேண்டுமாயின், அப் போது இந்தியாவில் - முக்கியமாக கிழக்கு இந்தியா, மேற்கு இந்தியா, மத்திய இந்தியாவில் - நிலவின மற்ற மதங்களின் கோட்பாடுகளை முதலில் தெரிந்துகொள்வது அவசியமாகும்.

அப்போது வடமேற்கு இந்தியாவிலும், வடகிழக்கு இந்தியாவிலும், முக்கியமாக இரு மதங்களைப் பின்பற்றி ஒழுகும் மக்கள் வாழ்ந்தார்கள்.

வடமேற்கு இந்தியாவில் வேதங்களையும் அவற்றில் சொல்லப்படும் வேள்விமுறைகளையும் பின்பற்றி ஒழுகும் பிராமணர்கள் வாழ்ந்தார்கள். இவர்கள் சாதிவேற்றுமை களைத் தீவிரமாக ஆதரித்ததோடு, பலிகொடுத்து வேள்விகள் செய்வதையும் ஆதரித்தார்கள்.

பிற உயிர்களைப் பலியிட்டு வேள்வி செய்வதனுல், தான் செய்த பாவங்களை ஒருவனுல் போக்கிக்கொள்ள முடியும் என்றும், அதனுல் ஒருவன் மேலான கதியை அடையலாம் என்றும் அவர்கள் சொன்னுர்கள்.

மற்ளுெரு சாரார் ஜெயின மதத்தைச் சார்ந்தவர்கள். அவர்கள் தீவிரமாக அஹிம்ஸையைக் கடைப்பிடித்து ஒழுகிய தோடு, கடுமையான தவ வாழ்வை மேற்கொண்டு ஒழுகி ஞர்கள். மேனியை அழுக்குப் படிந்ததாக வைத்துக்கொண்டு அம்மணக்கோலத்துடன் சஞ்சரித்தார்கள்.

புத்தர் பெருமானுடைய போதிஞானம் இந்த இரு சார ருடைய தீவிரப் போக்குகளை ஏற்க மறுத்தது.

ஒருவன் செய்த பாவங்களுக்குக் கழுவாயாக, பிறிது ஓர் உயிரைக் கொன்று வேள்வி செய்வது அறமாகாது என்று புத்தர் பெருமான் கருதினுர். இது மட்டு மல்லாமல், வைதிக மதத்தார் ஏற்றிப் போற்றும் ஏற்றத் தாழ்வுள்ள சாதி வித்தியாசங்களையும் அவர் ஏற்க மறுத்தார்.

ஜைனர்களின் தீவிரமான தவ வாழ்வும், அவர்களின் அம்மணக் கோலமும், அழுக்குப் படிந்த மேனியும் புத்தர் பெருமானின் உள்ளத்துக்கு உவப்பாய் இல்லை. உண்ணு நோன்பு இருந்து ஜைனத் துறவிகள் சல்லேகனை என்னும் பெயரில் உயிர் துறப்பதையும் கருணையுள்ளம் படைத்த புத்தர் பெருமான் ஒப்பவில்லை. பிற உயிர்களைத் துன்புறுத்து வது, கொல்வது அறமல்ல வென்ருல், தன்னுயிரைத் துன் புறுத்துவதும், நோன்பிருந்து உயிரை விடுவதும் அறமாகாது என்று புத்தர் பெருமான் கருதினுர்.

தீவிரப் போக்குள்ள இந்த இரு வித நடைமுறைப் போக்குகளையும் புத்தர் பெருமான் ஒதுக்கிவிட்டார்.

நடுத்தரமான ஒரு வழியைப் பின்பற்றுவதே நன்மை பயக்கும் என்று புத்தர் பெருமான் கருதினுர்.

இந்த நடுத்தர நடைமுறையையே, தாம் போதிக்க விருக்கும் அறநெறிகளுக்கு அடித்தளமாக அவர் அமைத்துக் கொண்டார்.

உடலையும் உள்ளத்தையும் அபரிதமான சுகபோகங்களில் அழுந்தச் செய்வது தீமை பயக்கும் என்று புத்தர் பெருமான் முடிவுக்கு வந்தார். தடபுடலாக வேள்விகள் இயற்றி, புலால் உண்பதும், சுரா பானம் அருந்துவதும் விபரீத பலன் களை விளைவித்தன. பிராமணர்களும் அரசர்களும் ஒருவ

ருக்கு ஒருவர் உடந்தையாய் இருந்துகொண்டு, தங்கள் ஆதிக்கத்தையும் புகழையும் நிலைநாட்டிக்கொண்டார்கள். யாகங்கள் செய்வதனுல் பிராமணர்களுக்குத் தட்சிணைகள் நிறையக் கிடைத்தன. அதனுல் அவர்களின் வாழ்க்கை வளமானதோடு, அரசர்களிடையே, அவர்களுக்கு மதிப்பும் மரியாதையும் ஏற்பட்டன.

வேள்விகள் செய்த அரசனுக்கு, புகழ் அதிகரித்தது. அதனுல் தங்கள் பதவியை நிலைநாட்டிக்கொள்ளவும் அரசர்களுக்கு வாய்ப்புகள் உண்டாயின.

இதனுல் ஏழை எளியவர்கள் நலன் அடையவில்லை.

ஆகவே, பெரும்பாலான மக்களுக்கு நலம் பயக்காத, பெரும்பாலான மக்கள் பங்குபெற முடியாத ஒரு நடைமுறை அறநெறியாகாது என்று புத்தர் பெருமான் கருதினுர்.

இதனுல் புத்தர் பெருமான் வேள்வியை ஒரு அறநெறியாக அங்கீகரிக்கவில்லை,

இது மட்டு மல்லாமல், வேள்வியில் உயிர்ப் பலி முக்கியமான ஒரு அங்கம் வகிப்பதால், வேள்வியை - பிற உயிர்களுக்குத் தீமை பயக்கும் ஒரு சடங்கை - புத்தர் பெருமான் அறநெறி என்று கொள்ளவில்லை.

மூன்ருவதாக, வேள்வி என்பது பிராமணர்கள் மட்டும் செய்யக் கூடிய ஒரு சடங்காக இருப்பதால், சாதிக்கு ஒரு முக்கியத்துவம் சமூக அமைப்பில் ஏற்பட ஒரு வாய்ப்பு உண்டாகிறது.

இந்த மூன்று காரணங்களுக்காகத்தான்- பதவிப் பகட்டு, உயிர்ப் பலி, சாதிக்கு மதிப்பு - வேத வேள்வியைப் புத்தர் பெருமான் ஒரு அறநெறியாக அங்கீகரிக்கவில்லை.

மற்ருெரு சாரார் பிற உயிர்களை வதம் செய்யாவிட்டாலும், தம் உயிரையும் உடலையும் வாட்டி வதைத்துத் துன்புறுத்திக்கொண்டார்கள்.

கடும் தவம் செய்து உடலை வாட்டி வதைப்பது எவ்வித நற்பயனையும் நல்காது என்பதைச் சுய அனுபவத்தின் மூலம் புத்தர் பெருமான் கண்டறிந்தார். அதனுல்தான் கடும் தவம் செய்வதையும் ஒரு அறநெறியாகக் கொள்ளாமல் ஒதுக்கி

விட்டு, பௌத்த மதத்துக்கே சிறப்பைத் தருவதான ஒரு நடுவழியைப் புத்தர் பெருமான் மேற்கொண்டார்.

பௌத்த சமயத்தில் புலன் அடக்கத்துக்கும் தியானத் துக்கும் இடம் உண்டு. ஆனால் உடலை வாட்டி வதைத்துத் துன்புறுத்தும் தவ வாழ்வுக்கு இடமில்லை.

பௌத்த சமயத்தில் வெறிக்கோ வெறுப்புக்கோ இடம் கிடையாது. எதையும் ஆற அமரச் சுயமாக, நிதானமாகச் சிந்தித்து, அறியும் தூய அறிவையே ஞானம் என்கிறார்கள்; அந்த அறிவினால் அடையும் ஆனந்தத்தையே நிர்வாணம் - அல்லது மோட்சம் - என்கிறார்கள்.

அதனால்தான் புத்தர் போதனை செய்த மார்க்கத்துக்கு நடு வழி - அல்லது மத்திய மார்க்கம் - என்று பெயர்.

# மூன்று பெண்கள்

அரச மரத்தின்கீழ் தியானத்தில் இருந்தபோது, வைகாசி பௌர்ணமி யன்று, போதிசத்துவருக்குச் சம்போதி ஞானம் ஏற்பட்டு, புத்தர் ஆனார்.

புத்தர் ஆன பின்னரும் மேலும் தொடர்ந்து ஏழு நாட்கள் அதே இடத்தில் புத்தர் பெருமான் தியானத்தில் ஆழ்ந்து இருந்தார். ஆயினும் இப்போது உடலையோ மனத்தையோ வாட்டி வதைக்க வேண்டிய அவசியம் புத்தர் பெருமானுக்கு நேரவில்லை.

அமைதியோடும் முகப்பொலிவோடும் புத்தர் பெருமான் தியானத்தில் ஆழ்ந்து இருந்தார். அப்போது உலகத்தின் நிலையும் மக்களின் மனப்போக்கும் உள்ளங்கை நெல்லிக் கனி போல, துலக்கமாக அவருக்குத் தெரிந்தன. ஆசை என்னும் வலைக்குள் மாட்டிக்கொண்டு, பிறவிப் பெருங் கடலுக்குள் வீழ்ந்து வீழ்ந்து மக்கள் தத்தளித்துத் தடுமாறித் தவிப்பதையும், அதனின்று கரையேற வழி தெரியாமல் பேதமையில் மூழ்கி, மாந்தார்கள் அவதிப்படுவதையும் புத்தர் பெருமான் கண்டார்.

ஆகவே, தாம் அடைந்த அனுபவ ஞானத்தால், இந்த மக்களை எவ்வாறு கரையேற்றுவது என்பதுபற்றி அவர் சிந்திக்கலானார்.

இது சமயம் மாரன் வந்து மீண்டும் அவரைத் தாக்கத் தொடங்கினான்.

இப்பொழுதும் புத்தர் பெருமானிடம் தோற்றுப் போன அவன் அதிக முகவாட்டத்துடன் இருந்தான்.

இதைக் கவனித்த அவனுடைய புதல்வியர் மூவர் மாரனை அணுகி ''தந்தையே! தாங்கள் வாட்டமுற்று இருக்கக் காரணம் என்ன?'' என்று கேட்டார்கள்.

''புதல்வியரே! வலிமை முழுவதையும் பிரயோகித்தும் கூட, புத்தர் பெருமானை என்னால் வெற்றிகொள்ள முடியவில்லை. அதனால்தான் வாட்டமுற்று இருக்கிறேன்'' என்று மாரன் பதில் சொன்னான்.

இதைக் கேட்டதும் பெண்கள் மூவரும் கலகல வென்று நகைத்தார்கள் ''தந்தையே! தாங்கள் இதற்காகக் கவலைப் பட வேண்டாம். நாங்கள் மூவரும் சென்று எங்கள் திறமைகளைக் காட்டி, புத்தரைத் தோற்கடிக்கிறோம்'' என்று கூறி விட்டு, பெருமிதத்துடன் புத்தர் பெருமானிடம் சென்று தங்கள் திறமைகளைக் காட்டத் தொடங்கினார்கள்.

பெருமானை நோக்கி, ''முனிவர் பிரானே! உமக்குப் பணிவிடைகள் புரியும் பொருட்டு நாங்கள் மூவரும் வந்திருக்கிறோம்'' என்று அந்தப் பெண்கள் மூவரும் சொன்னார்கள்.

புத்தர் பெருமான் அவர்களைப் பார்க்காமலும் அவர்கள் கூற்றைக் காதில் வாங்கிக்கொள்ளாமலும் தியானத்தில் ஆழ்ந்து இருந்தார்.

பெண்கள் மூவரும் முனைந்து நின்று பெருமானுக்குப் பணிவிடைகள் புரிந்தார்கள்; அவருக்கு அணித்தே பரபரப்புடன் திரிந்தார்கள்.

இதைக் கவனித்த புத்தர் பெருமான் அவர்களை நோக்கி, ''எதற்காக நீங்கள் இங்கே வந்திருக்கிறீர்கள்? ஆசைகளை அடக்கிக் கட்டுப்படுத்தவும் அறவே ஒழிக்கவும் இயலாதவர்களிடம் வேண்டுமானால் உங்கள் கைவரிசைகளைக் காட்டி

நீங்கள் வெற்றி பெற முடியும். ஆனால், நானோ அவா, பேதைமை ஆகியவற்றிலிருந்து விடுபட்டவன். புத்த நிலையை அடைந்து இருப்பவன்; எந்த வழியில் முயன்றாலும் என்னை உங்களால் வெற்றிகொள்ள முடியாது'' என்று சொன்னார்.

இப்படிப் புத்தர் பெருமான் சொன்னதும் மாரன் புதல்வியர் மூவரும் மருண்டு போனார்கள். தங்கள் தந்தை தங்களுக்கு முன்னெச்சரிக்கையாக அறிவுறுத்தியதை நினைவு படுத்திக்கொண்டு, திரும்பிவிட்டார்கள்.

இதன் பின்னர், புத்தர் இருந்த போதி மரத்து அருகே, பிராமணன் ஒருவன் கூச்சலிட்டுக்கொண்டு வந்தான். உயர்ந்த சாதியில் பிறந்தவன் என்னும் அகந்தையுடன், புத்தர் பெருமானோடு அவன் வாதம் செய்யத்தொடங்கினான்.

பெருமான் கூறிய அறங்களைச் செவிமடுத்த பின்னர், அவன் அவரை நோக்கி, ''கௌதமரே! உம்மிடம் இரண்டு கேள்விகள் கேட்க நான் பிரியப்படுகிறேன். அந்தணன் என்னும் பெயர் எவ்வாறு ஏற்பட்டது? எந்த எந்தக் கடமைகளை நிறைவேற்றினால் ஒருவன் உண்மையான அந்தணனாக விளங்கலாம்?'' என்று கேட்டான்.

இந்த இரு கேள்விகளுக்கும் புத்தர் பெருமான் பதில் சொன்னார்.

''எவன் ஆசைகளை அடக்கிக் கட்டுப்படுத்தி, பேத புத்தியையும் காமக் கலக்கத்தையும் விட்டொழித்து, பரிபூரண நிலையை அடைய முயன்றுகொண் டிருக்கிறானோ அவனே உண்மையான அந்தணன் ஆவான்.

''மற்றும் சிலர் தங்களை அந்தணன் என்று சொல்லிக் கொள்வார்கள். தாங்கள் உயர்ந்த சாதியினர் என்று மமதையுடன் நடந்துகொள்வார்கள். பரபரப்புடன் நடப்பார்கள்; கூச்சலிட்டுப் பேசுவார்கள். ஆசைகளைக் கட்டுப்படுத்த முயலாமல் அலைவார்கள். சாதியாலும் பிறப்பாலும் பிராமணர்கள் என்று தங்களை இவர்கள் சொல்லிக்கொள் வார்கள்.

''உண்மையான அந்தணன் முரட்டுத்தனமாகப் பேசவும் மாட்டான்; காரியங்களைச் செய்யவும் மாட்டான். ஆசை

களைக் கட்டுப்படுத்தி அடக்கத்துடன் நடப்பான். தகுதிக் குறைவான எந்தச் செயலையும் புரிய மாட்டான். தியானமும் பிரார்த்தனையும் செய்வதில் காலத்தைச் செலவிடுவான். அவனிடம் சந்தேகமோ, தடுமாற்றமோ, அகந்தையோ இருக்காது. இத்தகைய ஒருவனைத்தான் உண்மையான அந்தணன் என்று சொல்லலாம்'' என்று பதில் சொன்னார்.

இந்தப் பதிலைக் கேட்டதும், அந்தப் பிராமணன் திருப்தி அடைந்தான்.

எழுந்து புத்தர் பெருமானை வலம்வந்து வணங்கி அவரிடம் விடைபெற்றுக்கொண்டு போய்விட்டான்.

பிராமணன் போன பின்னர், புத்தர் பெருமான் மீண்டும் தியானத்தில் ஆழ்ந்தார்.

## முதல் பௌத்தர்கள்

**போ**தி மரத்தின் வடக்கு, தெற்கு, மேற்கு, கிழக்கு ஆகிய நான்கு திசைகளிலும், இருந்து பெருமான் தியானம் செய்தார். ஒவ்வொரு திசையிலும் ஏழு நாட்களைத் தியானத்தில் அவர் கழித்தார்.

இப்படி மொத்தம் நாற்பத்து ஒன்பது நாட்களைப் புத்தர் பெருமான் தியானத்தில் கழித்தார். போதி ஞானம் கிட்டிய பின்னர், மேலும் தொடர்ந்து மூன்று வாரங்களைத் தியானத்தில் செலவிட்டார்.

அதனால்தான் சுஜாதா அளித்த உணவுக்குப் பின்னர், இருபத்து ஒராவது நாளில் போதி ஞானம் பெற்றார் என்று சிலரும், நாற்பத்து ஒன்பதாவது நாளில் போதி ஞானம் பெற்றார் என்று சிலரும் எழுதி இருக்கிறார்கள்.

சுஜாதா கொடுத்த பாற்பாயசம் போதுமானதாய் இருந்தது.

இதன் பின்னர் புத்தருக்குப் பசி உண்டாயிற்று.

இது சமயம் இரண்டு வைசியர்கள் ஐநூறு வண்டிகளில் சரக்குகளை ஏற்றிக்கொண்டு புத்தர் போதி ஞானம் அடைந்த காட்டு வழியாக வந்துகொண்டிருந்தார்கள்.

வழியில் சிறந்த துறவி ஒருவர் தியானத்தில் ஆழ்ந்து இருப்பதைப் பார்த்தார்கள். அவர்கள் விருப்புடன் தேனும் உணவும் கொடுத்தார்கள். உணவை அங்கீகரித்து உண்ண வேண்டும் என்று பணிவோடு வேண்டி வணங்கினுர்கள்.

அவர்கள் இருவரும் தந்த உணவைப் புத்தர் பெருமான் விருப்புடன் ஏற்றுக்கொண்டார்.

வியாபாரிகள் இருவரும் தரும் இந்த உணவை ஏற்றுக் கொள்ளப் புத்தரிடம் பாத்திரம் எதுவும் இல்லை.

இதை அறிந்ததும் நீலக் கல்லில் செதுக்கி எடுத்த பாத்திரம் நான்கை எடுத்து வந்து, நான்கு தேவர்கள் புத்தரிடம் கொடுத்தார்கள்.

நான்கு தேவர்களின் மனம் சஞ்சலமடையக் கூடாது என்ற கருத்தில் நான்கு பாத்திரங்களையும் வாங்கி, புத்தர் ஒன்று சேர்த்தார்.

உடனே அந்த நான்கு பாத்திரங்களும் ஒரு பாத்திரமாக ஆகிவிட்டன.

அந்தப் பாத்திரத்தில், வைசியர்கள் இருவரும் தரும் உணவைப் புத்தர் பெருமான் ஏற்றுக்கொண்டார்.

இதன் பின்னர் அந்த வணிகர்கள் இருவரும் புத்தரிடம், ‘‘பெருமானே! எங்களைத் தங்களின் பக்தர்களாகத் தாங்கள் அங்கீகரித்து அருள வேண்டும். வாழ்நாள் முழுவதும் தங்கள் போதனைகளைப் பின்பற்றி நடக்க நாங்கள் சித்தமாய் இருக்கிறோம்’’ என்று வேண்டினுர்கள்.

புத்தரும் சம்மதித்து, அந்த வணிகர்கள் இருவரையும் தாம் போதிக்க இருக்கும் மதத்தைப் பின்பற்றுவோராக அங்கீகரித்துக்கொண்டார். இவர்களுள் ஒருவன் பெயர் திரிபுஷன்; மற்றொருவன் பெயர் பல்லிகன்.

இந்த இருவரும் பௌத்த சமயத்தைத் தழுவிய முதல் இல்லறத்தோர் ஆவர்.

இந்த இருவரும், பௌத்த சமய மணிகள் மூன்றனுள் முதல் இரு மணிகளைக் கூறிப் பௌத்த சமயத்தைத் தழுவினோர் ஆவர்.

கீழ்வரும் மூன்று வாக்கியங்களும் பௌத்த சமயத்தில்

மும்மணிகள் என்று சொல்லப்படும். பௌத்த சமயத்தைத் தழுவுவோரும் சரி, பின்பற்றுவோரும் சரி, இந்த மூன்று மகா வாக்கியங்களைச் சொல்லுவது அவசியம்:

(1) **புத்தம் சரணம் கச்சாமி**

(2) **தம்மம் சரணம் கச்சாமி**

(3) **சங்கம் சரணம் கச்சாமி**

இந்த மூன்று மணிகளுள், சங்கம் இனிமேல்தான் அமைய இருப்பதால், மற்ற இரு மணிகளையும் மொழிந்து, வணிகர் இருவரும் பௌத்த சமயத்தைத் தழுவினார்கள். இதை **முத்திற மணியை மும்மையின் வணங்கி** என்று தமிழ் நூல் மணிமேகலை கூறும்.

இதன் பின்னர், புத்தர் பெருமானை வணங்கி விடை பெற்றுக்கொண்டு, அவர்கள் தம் ஊர் திரும்பினார்கள்.

---

## பிரம்மாவின் வேண்டுகோள்

போதிஞானத்தை மக்களிடையே எவ்வாறு பரப்புவது என்பதுபற்றிய சிந்தனையில் புத்தர் ஆழ்ந்தார்.

"சொந்த முயற்சியாலும் தியானத்தாலும் நான் போதி ஞானத்தை இப்போது அடைந்திருக்கிறேன். ஆழ்ந்த இந்தப் போதி ஞானத்தை மக்களிடையே பரப்பினால் அதை அவர்கள் புரிந்துகொண்டு பின்பற்றுவார்களா? மக்களோ பந்த பாசங்களில் கட்டுண்டு, அறியாமையில் மூழ்கி அவதிப் படுகிறார்கள். காரணம் என்பது என்ன? காரியம் என்பது என்ன? காரணத்துக்கும் காரியத்துக்கும் உள்ள தொடர்பு என்ன? இவற்றைப்பற்றி எல்லாம் சொன்னால் அவர்களால் புரிந்துகொள்ள முடியுமா? புரோகிதன் ஒருவனின் உதவியில் லாமலே ஒருவனால் மேலான கதியை அடைய முடியும் என்று சொன்னால் அதை அவர்கள் நம்புவார்களா? உலகத்தின்மீது கொண்டுள்ள ஆசா பாசங்களை விட்டொழித்து, ஆனந்த மயமான நிர்வாணப் பேற்றை அடைய முன்வந்து முயல்வார் களா? அறிஞர்களைத் தவிர்த்து, மற்றவர்களால் நான் செய்

யும் போதனைகளையும் புரிந்துகொள்ள முடியாதே? என்று பலவாறு சிந்தித்தார்.

இது சமயம் பிரம்மா வானிலிருந்து பூலோகத்துக்கு வந்து பெருமானை அணுகி, ''பெருமானே! தாங்கள் கண்ட இந்தப் போதனைகளை மனிதகுலம் மேன்மையடையும் பொருட்டு, பரப்புவது அவசியமாகும். அறிஞர்கள் சிலராவது அவற்ருல் பயன் அடையட்டும். இல்லையேல் அவர்களும் உங்கள் போதனைகளை அறிய முடியாது போகும். அதனுல் நீங்கள் பெற்ற போதி ஞானத்தை, மன்பதை தெரிந்துகொள்ளும் வாய்ப்பை இழந்துவிடும்'' என்று நினைவுபடுத்திஞர்.

பிரம்ம தேவன் இவ்வாறு வேண்டியதும், அவருடைய விருப்பத்துக்குப் புத்தர் பெருமான் இசைத்தார். ''ஆம். நான் கண்டறிந்த உண்மைகளைப் பற்றின்றி வாழும் மக்க ளிடையே பரப்பாவிடில், அதை அவர்கள் அறிய முடியாது போக நேரும். அதனுல் அவை மறைந்து மன்பதைக்குப் பயன்படாது போகும்'' என்ற முடிவுக்கு வந்தார்.

புத்தர் பெருமானின் மனநிலை தெரிய வந்ததும், மகிழ்ச்சி அடைந்து பிரம்ம தேவர் தமது உலகம் திரும்பினுர்.

இதன் பின்னர், தாம் கண்டறிந்த அறங்களை முதலில் யாருக்குப் போதிப்பது? என்பதுபற்றிப் புத்தர் பெருமான் சிந்தித்தார்.

''பரிசுத்தமானவராயும், ஆசா பாசங்களால் அலையாத வராயும், கூறுவதை எளிதில் கிரகித்துக்கொள்பவராயும், இருப்பது நல்லது'' என்று புத்தர் பெருமான் நினைத்தார்.

அப்போது ஆளாரா காலாம முனிவரைப் பற்றிய நினைப்பு வந்து, ''தமது அறநெறிகளை முதலில் ஆளாரா காலாமன் என்பவருக்குப் போதிக்க நினைக்கிறேன். நான் கூறும் அறநெறிகளை அவர் புரிந்துகொள்வார்'' என்று கருதினுர்.

உடனே அருகில் இருந்த தேவன் ஒருவன் ''பெருமானே! ஆளாரா காலாமன் இறந்து ஏழு நாட்கள் ஆகின்றன'' என்று கூறினுன்.

இதன் பின்னர் ''அப்படியானுல், உத்தகருக்கு உப

தேசிக்கலாம்'' என்று புத்தர் பெருமான் கருதினர்.

அவர் முன் தினம் இறந்துபோனர் என்பது புத்தர் பெருமானுக்குத் தெரியவந்தது.

ஆகவே தம்முடன் கூட இருந்து தவம் செய்த ஐந்து தவசியருக்கு உபதேசிக்கலாம் என்று புத்தர் பெருமான் நினைத்தார்.

அப்போது அவர்கள் ''இப்பொழுது எங்கே இருக்கிறார்களோ?'' என்று யோசித்தார்.

காசிக்குப் பக்கத்தில் இருக்கும் இசிபதனத்தில், மான்கள் திரியும் சோலையில் அவர்கள் இருப்பதாகத் தமது தெய்வீக உணர்வால் தெரிந்துகொண்டார்.

ஆகவே சிறிது காலம்வரை உருவேலா வனத்தில் இருந்து விட்டு, காசியை நோக்கிப் புறப்பட்டார் புத்தர் பெருமான்.

புத்த கயைக்கும் போதி மரத்துக்கும் இடைவெளியில் சென்றுகொண் டிருந்தபோது, ஆசீவகத் துறவி ஒருவரைப் புத்தர் பெருமான் சந்தித்தார்.

அந்த ஆசீவகத் துறவி, புத்தர் பெருமானுக்கு முதலில் முகமன் கூறிவிட்டு ''நண்பரே! உமது மேனியும் நடையுடை பாவனைகளும் உயர்ந்தவனவாய் இருக்கின்றன. துறவறத்தை மேற்கொண்டு இருக்கும் நீர் எந்த ஆச்சாரியரைப் பின்பற்றுகிறீர்? எந்தக் கோட்பாடுகளை நீர் அங்கீகரித்து ஒழுகுகிறீர்?'' என்று கேட்டார்.

''நண்பரே! எந்த ஆச்சாரியரையும் நான் பின்பற்றவில்லை. நானே கண்டுபிடித்த அறநெறிகளை உபதேசிக்கும் பொருட்டு நான் வாரணசிக்குச் செல்கிறேன். நான் போதிக்க இருக்கும் அறநெறிகள் மகத்தானவை. நிர்வாண மோட்சத்தை அளிக்கவல்லவை'' என்று பதில் சொன்னர்.

இதைக் கேட்டதும் உபாகன் என்னும் ஆசீவகத் துறவி ''நண்பரே! உமது கோட்பாடுகள் அபரிதமான வெற்றியைப் பெறும்'' என்று கூறினர். பிறகு வேறு ஒரு வழியில் அவர் போய்விட்டார்.

இதன் பின்னர் பிரயாணம் செய்து செய்து, பெருமான் வாரணசியை அடைந்தார்.

# கௌதம புத்தர்

## வரலாறு

## மத்திம மார்க்கம்

உ பாகன் என்னும் ஆசீவகத் துறவி வேறு வழியில் பிரிந்து சென்ற பின்பு, பல்வேறு இடங்களுக்குச் சென்ற புத்தர் பெருமான் கடைசியாக வாரணசியை அடைந்தார்.

இசிபதனம் என்னும் மான் வனத்தில், தவசிகள் ஐவரும் இருப்பதாக அறிந்து, புத்தர் பெருமான் அங்கே போனார்.

புத்தர் பெருமான் தங்களை நாடி வருவதை அந்த ஐந்து தாபதர்களும் பார்த்துவிட்டனர். உடனே அவர்கள் தங்களுக்குள் ''நண்பர்களே! சிரமணர் கௌதமர் நம்மை நாடி வருகிறார். தவம் செய்வதை உதறித் தள்ளிய அவரை, அதனால் உறுதி குன்றிய அவரை, நாம் உபசரிக்கவும் கூடாது; எழுந்து மரியாதை செய்யவும் கூடாது'' என்று பேசிக் கொண்டார்கள்.

ஆயினும் தாங்கள் கொண்ட முடிவுப்படி அந்தத் தாபதர்களால் நடக்க முடியவில்லை.

புத்தர்பெருமான் அருகே வந்ததும் அந்த ஐவரும் எழுந்து நின்று புத்தர் பெருமானை வணங்கி வரவேற்றார்கள். ஆசனம் கொடுத்து முறைப்படி உபசரித்தார்கள். ''நண்பர் கௌதமரே! உமக்கு நல்லரவு'' என்று கூறினார்கள்.

உடனே பெருமான் அவர்களிடம் ''தவசிகளே! பெயரைச் சொல்லியோ நண்பன் என்றோ என்னை அழைக்காதீர்கள். நான் பெற்று இருக்கும் மேலான ஞானத்தைப் உங்களுக்கு உபதேசிக்கும் பொருட்டு வந்திருக்கிறேன். அந்த அறநெறிகளைக் கடைப்பிடித்து ஒழுகினால், மேலான கதியை அடையலாம்'' என்று சொன்னார்,

புத்தர் இவ்வாறு சொன்னதும் அந்த ஐந்து தாபதர்களும் அவர் சொன்னதை நம்ப மறுத்தனர்.

ஆனால் புத்தரோ, அவர்களுக்கு நம்பிக்கை பிறக்கும் விதமாக, தாம் அடைந்திருக்கும் போதி ஞானத்தைப்பற்றி, உறுதியோடும் ஊக்கத்தோடும் சொல்ல முனைந்தார்.

அவர் அடைந்த போதி ஞானம் பிறர் உதவியினாலோ அல்லது பிறர் செய்த போதனைகளின் பயனாகவோ ஏற்பட்ட ஒரு ஞானம் அன்று. சொந்த முயற்சியாலும் சுய அனுபவத்தாலும் ஏற்பட்ட ஞானம் அது; அதனால்தான் தாம் கண்டு அறிந்த உண்மைகளை உறுதியோடும் நம்பிக்கையோடும் பிரச்சாரம் செய்யப் புத்தர் பெருமான் முனைந்தார்.

மனிதன் ஆனந்தமாக வாழ்ந்து, பேரானந்தத்தில் திளைக்க வேண்டுமாயின், அது பதவியாலும் பணத்தாலும், அதிகாரத்தாலும், போக போக்கியங்களை அனுபவிப்பதாலும் கிட்டாது என்பதை, சொந்த அனுபவத்தால் புத்தர் பெருமான் கண்டறிந்தார்.

அரச குமாரனாய்ப் பிறந்து, அரச குமாரனாய் வளர்ந்து, அரச குமாரனாய் வாழ்ந்த அவருக்கு, அந்த அரச வாழ்க்கை ஆனந்தத்தைக் கொடுக்கவில்லை. சுற்றுச் சூழலில் வறுமையும் பிணியும் அறியாமையும் அகந்தையும் ஆசையும் சூழ்ந்திருக்கும்பொழுது, தாம் மட்டும் இன்பத்தின் நடுவே வாழ்வது, உண்மையான இன்பம் ஆகாது; ஆகவும் முடியாது என்று புத்தருடைய கருணை உள்ளம் கருதிற்று.

அதனால்தான் பொன்னும் பொருளும் பெண்ணும் உண்மையில் இன்பம் பயப்பவை அன்று என்பதைக் கண்டு புத்தர் பெருமான் துறவற வாழ்வை மேற்கொண்டார்; சுகபோக வாழ்க்கையை உதறித் தள்ளி அரண்மனையை விட்டுப் புறப்பட்டார்.

அவர் காலத்தில், துறவறத்தை மேற்கொள்வதனால் மட்டும் பேரின்பம் கிட்டாது; கடும் தவம் செய்து உடலை வருத்தினால் மட்டுமே ஒருவன் வீடு பேற்றை அடையலாம் என்னும் ஒரு கருத்து மக்களிடையே நிலவிற்று.

ஆகவே, அந்தத் துறையில் கவனம் செலுத்தி, புத்தர் பெருமான் ஆறு ஆண்டுகள் கடும் தவம் புரிந்தார். அதனல் உடல் பலவீனம் அடைந்ததைத் தவிர்த்து, வேறு பலன் கிட்டவில்லை.

இதை அறிந்ததும், அரண்மனை வாழ்வை உதறித் தள்ளியதைப் போலவே, கடுமையான தவ வாழ்வையும் புத்தர் பெருமான் உதறித் தள்ளினர்.

இந்த இரு அனுபவங்களையும் கொண்டு, சுகபோகத்தில் அழுந்திக் கிடப்பதும் தக்க பலனைத் தராது; கடும் தவம் புரிவதும் தக்க பலனைத் தராது என்று அவர் ஒரு முடிவுக்கு வந்தார்.

தீவிரமான இந்த இரு போக்குகளையும் புத்தர் பெருமான் ஒதுக்கிவிட்டார். ஆசைப் பேய்க்கு அடிமையாகாமலும், உடலையும் உள்ளத்தையும் துன்புறுத்தி வாட்டி வதைக்காமலும் ஆனந்த நிலையை ஒவ்வொரு ஜீவனும் சுய முயற்சியால் அடையக் கூடிய ஒரு வழியைப் புத்தர் பெருமான் கண்டறிந்தார். அந்த வழிக்கு **மத்திம மார்க்கம்** என்று பெயர்.

பௌத்த மதத் தத்துவங்கள் அனைத்தும், இந்த மத்திம மார்க்கத்தை அடிப்படையாகக் கொண்டு விளங்குகின்றன.

இந்த ஐந்து தாபதர்களுக்கும் தாம் கண்டறிந்த நடு வழியைத்தான் புத்தர் பெருமான் முதலில் உபதேசித்தார்.

புத்தர் பெருமான் முதன் முதலாகச் செய்த உபதேசத்தை இனிக் கவனிக்கலாம்.

---

## முதற் போதனை

தாபதர்கள் ஐவரும் புத்தர் பெருமானின் போதனையைக் கேட்கச் சம்மதித்ததும், தாம் கண்ட அறநெறிகளைப் புத்தர் பெருமான் அடியில் வருமாறு அவர்களுக்கு விவரித்தார்.

''தாபதர்களே! நிர்வாணப் பேற்றை அடைய விரும்புபவர்கள் தீவிரமான இரு வழிகளைப் பின்பற்றலாகாது.

''அந்த இரு வழிகளும் யாவை?

''ஒன்று ஆசை வயப்பட்டு, சுகபோகத்தில் அழுந்திக் கிடப்பது. இது தரமில்லாத வழி; சாதாரணமான வழி; பயனற்ற வழி; கண்ணியக் குறைவான வழி.

''மற்றொன்று. உடலை வாட்டி வதைத்து அவதிப்படும் தவ வழி. இந்த வழியும் துன்பமயமான வழி; பயனில்லாத வழி.

''தீவிரமான இந்த இரு வழிகளையும் ஒதுக்கிவிட்டு, ததாகதர்* நடு வழி ஒன்றைக் கண்டுபிடித்து இருக்கிறார். அந்த வழியில் ஒருவன் செல்லுவானாயின், ஞானம் பெற்று அமைதியான முறையில் நிர்வாணப் பேற்றை அவன் அடையலாம்; அடைய முடியும்.

''எது எதைக் கடைப்பிடித்தால், ஒருவனுக்கு அறிவு விளக்கம் உண்டாகும்?

''எட்டுவித சீலங்களால், ஒருவன் அறிவு விளக்கத்தைப் பெற முடியும். அவை யாவன:

1 **நற்காட்சி**
2 **நல்லெண்ணம்**
3 **நல்வார்த்தை**
4 **நற்செய்கை**
5 **நல்வாழ்க்கை**
6 **நன் முயற்சி**
7 **நல்லவற்றைக் கடைப்பிடித்தல்**
8 **நல்லோர் உறவு**

''இவை எட்டும் நடுவழியின் உறுப்புக்கள் ஆகும்.

''இந்த எட்டுச் சீலங்களும், துன்பத்தைத் துடைத்து, பேரின்பத்தைக் கொடுக்கும் வாயில்களும் ஆகும்.

''பேரின்ப நிலையை அடைய விரும்பும் ஒருவன் முதலில், நான்கு பேருண்மைகளை அறிவது அவசியம் ஆகும். இந்த நான்கு பேருண்மைகளை அடித்தளமாகக்கொண்டே உண்மை யான உலகியலை நாம் உள்ளது உள்ளபடி அறிய முடியும். அந்த அடிப்படைப் பேருண்மைகள் வருமாறு:

* ததாகதர் : உண்மையான ஞானத்தைப் பெற்றவர்.

**(1) துக்கம்**

**(2) துக்க காரணம்**

**(3) துக்க நிவர்த்தி**

**(4) துக்க நிவர்த்திக்கு உரிய வழிகள்**

*1*

இவற்றில் துக்கம் என்பது என்ன?

''பிறப்பது துக்கம்; மூப்படைவது துக்கம்; இறப்பது துக்கம். நோய்வாய்ப்படுவது துக்கம்; விருப்பமில்லாதவற்றுடன் சேர்ந்திருப்பது துக்கம்; பிரியமானவர்களை விட்டுப் பிரிவது துக்கம்; கவலை, ஏக்கம், ஏமாற்றம் அனைத்தும் துக்கம். ஐம்பொறிகளின் கூட்டுறவினால் ஏற்படும் விளைவுகள் அனைத்தும் துக்கம் தருவன.

*2*

''இதுவரை துக்கம் என்பதைப்பற்றிக் கூறினேன்.

''இனி, துக்கத்துக்குக் காரணங்கள் யாவை என்பது பற்றிக் கூறுகிறேன்:

''தாபதர்களே! அவாதான் துக்கத்துக்குக் காரணம் ஆகும். அவாவினால் பிறப்பு ஏற்படுகிறது. பிறப்பினால் துக்கம் ஏற்படுகிறது.

*3*

''அப்படியாயின், இவ்வாறு ஏற்படும் துக்கத்தை நிவர்த்தி செய்துகொள்வது எப்பது?

''அவாவை அடியோடு தொலைத்துவிட்டால், பிறகு பிறவி ஏற்படாது; அதன் பயனால் துக்கமும் இல்லாது போகும்.

*4*

''அவாவை அடியோடு தொலைக்க வேண்டுமாயின், முன்பு கூறிய எட்டு வித சீலங்களைக் கடைப்பிடித்து ஒழுக வேண்டும்.

''இந்த வாய்மைகளே நான் அடைந்த போதி ஞானம் ஆகும்.

''இந்த ஞானத்தை அடைந்த எனக்கு இனி மறு பிறவி இல்லை.''

ஐந்து தவசிகளுக்கும் தாம் அடைந்த அனுபவஞானத்தை — அதாவது சம்போதி ஞானத்தை — புத்தர் பெருமான் இவ்வாறு சொல்லி முடித்தார்.



## சங்கம்

புத்தர் பெருமான் செய்த இந்த உபதேசத்தை, மான் வனத்தில் இருக்கும் ஐந்து தாபதர்களும் ஆர்வத்துடன் செவி மடுத்துக் கேட்டார்கள்.

அவர்கள் ஐவரும் புத்தர் பெருமான் செய்த அறவுரை களைச் செவிமடுத்து அறிவு விளக்கம் பெற்றனர்.

கௌண்டினியர், வப்பர், பாஷ்பர், மகாநாமர், அசுவ ஜித் என்னும் இந்த ஐந்து தாபதர்களுமே, புத்தர் பெருமான் செய்த அறநெறியை முதன் முதலாகச் செவிமடுக்கும் பேறு பெற்றவர்கள்.

இவர்களில் கௌண்டினியர் என்பவர் வயது முதிர்ந் தவர்; பிராமண குலத்தைச் சேர்ந்தவர். பிறர் சொல்லு வதை எளிதில் கிரகித்துக்கொள்ளும் ஆற்றல் பெற்றவர்.

புத்தர் பெருமான் செய்த அறவுரைகளைச் செவிமடுத்த இவர், அவற்றில் பொதிந்து இருக்கும் உயர் கருத்துக்களை எளிதில் புரிந்துகொண்டார்.

ஆகவே அவர் புத்தரிடம், ''பெருமானே! என்னைத் தங்கள் சீடனுக அங்கீகரித்து அருள வேண்டும்'' என்று வேண்டினுர்.

பெருமானும் சம்மதித்து, கௌண்டினியரைத் தம் சீடனுக அங்கீகரித்துக்கொண்டார்.

புத்தம் சரணம் கச்சாமி, தம்மம் சரணம் கச்சாமி என்று சொல்லி, புத்தரையும் தருமத்தையும் சரண் அடைந்து, கௌண்டினியர் பௌத்த பிக்குவாக ஆனுர்.

கௌண்டினியரைப் பின்பற்றி மற்ற நான்கு தாபதர் களும் பௌத்த பிக்குகள் ஆயினர்.

இந்த ஐந்து பிக்குகளையும் கொண்டுதான், மும்மணி களில் கடைசி மணியான சங்கம் என்பது உருவாயிற்று.

''பிக்குகளே! வாருங்கள். நான் உங்களுக்குப் போதித்த அறநெறிகளை உலக முழுதும் நல்ல முறையில் பரப்புங்கள். அறநெறிகளைக் கடைப்பிடித்து ஒழுகி, துயரங்களைத் துடைத்துக்கொள்ளுங்கள்'' என்று கட்டளையிட்டார் பெருமான்.

மேலும் தொடர்ந்து, புத்தர் பெருமான் சங்கத்தின் சிறப்புப்பற்றி அடியில் வருமாறு அவர்களுக்கு விவரித்தார்.

''பிக்குகளே! உண்மையைக் கடைப்பிடித்து ஒழுக ஒருவன் உறுதிபூண்டிருந்தபோதிலும் தனித்து இருந்தால், தவறி, பழைய வழிகளுக்கே அவன் மீண்டும் திரும்பிவிடக் கூடும். ஆகவே, ஒருவருக்கு ஒருவர் உதவி செய்துகொண்டு சேர்ந்து இருங்கள்; ஒருவரோடு ஒருவர் ஒத்துழைத்து, முயற்சியைப் பலமுடையதாக, பயனுடையதாக ஆக்கிக் கொள்ளுங்கள்:

''உடன் பிறந்த சகோதரர்களைப்போல, சேர்ந்து வாழுங்கள்; அன்பிலும், தூய்மையிலும், உண்மையை நாடும் ஆர்வத்திலும், ஒரு மனதாக நடந்துகொள்ளுங்கள்'' என்று புத்தர் பெருமான் அவர்களுக்குப் போதனை செய்தார்.

புத்தம் சரணம் கச்சாமி; தம்மம் சரணம் கச்சாமி; சங்கம் சரணம் கச்சாமி என்பதில், சங்கம் மூன்றுவதாக வருகிறது. இந்த மும்மணிகளையும் வணங்காமல்,எந்த நற்காரியத்தையும் பௌத்தர்கள் தொடங்குவது வழக்கம் இல்லை.

''தருமங்களை அறிவது மட்டும் போதாது. மக்கள் அனைவருக்கும் தெரியும்படி, அவற்றை மக்களிடையே பிரச்சாரம் செய்வது அவசியத்திலும் அவசியம். அதற்காகவே சங்கம் என்பதை அமைத்திருக்கிறோம்'' என்றார் பெருமான்.

''பிக்குகளே! போதனை செய்து பரப்புவதன் மூலமே தருமமும் வினயமும் பிரகாசம் அடைகின்றன. மூடி வைத்தால் அவை சோபிதம் அடையமாட்டா. ஆயினும் மகத்தான இந்த உண்மைகளைத் தகுதியற்றவர்களிடம் நீங்கள் பரப்ப முயல வேண்டாம். தகுதியற்றோர் முதலில் தருமத்தை அங்கீகரிக்க மாட்டார்கள். அத்துடன் நிற்காது, மானக்கேடான முறையில் தருமத்தை அவர்கள் எள்ளி நகையாடவும் தொடங்குவார்கள்.

''எனவே பிக்குகளே! பல நாடுகளுக்கும் புறப்பட்டுச் சென்று, உங்களுக்கு நான் போதித்த தருமத்தைத் தகுதியுள்ளவர்களிடம் பரப்புங்கள்'' என்று உபதேசித்தார் புத்தர் பெருமான்.

---

## யசன்

பௌத்த சமயத்தார் போற்றும் நெறிகளிலே, தர்ம சக்கரப் பிரவர்த்தனம் என்பதும் ஒன்று. அறநெறிகளைத் தக்கவர்களிடையே பரப்பவேண்டும் என்பது இதன் பொருள்.

தாம் பெற்ற அனுபவ ஞானத்தைப் புத்தர் பெருமான், முதன் முதலாக ஐந்து தவசியர்களுக்கு உபதேசித்தார். தாம் கூறும் அறநெறிகள், துறவறத்தாருக்கு மட்டும் பயன்பட்டுவிட்டால் போதா; இல்லறத்தாரும் இந்த அறநெறிகளைக் கடைபிடித்து மேன்மையடைய வேண்டும் என்று புத்தர் பெருமான் கருதினார். ஆடவரும் பெண்டிரும், இளையோரும் முதியோரும் கடைப்பிடிப்பதற்கு ஏற்றவை இந்த அறநெறிகள் என்று கருதினார் புத்தர் பெருமான்.

இது சமயம் காசி நகரில், பெரும் பணக்கார வணிகன் ஒருவன் இருந்தான். அவனுக்கு யசன் என்னும் பெயரில் அருமந்த மகன் ஒருவன் இருந்தான்.

எவ்வளவு செல்லமாகவும் வசதியாகவும் வளர்க்க முடியுமோ, அவ்வாறு தன் புதல்வன் யசனை அந்த வணிகன் வளர்த்தான்.

தன் புதல்வன் சுகபோகமாக வாழ்வதற்கு என்றே, அந்த வணிகன் மூன்று மாளிகைகளைக் கட்டிக் கொடுத்து இருந்தான். ஒவ்வொரு மாளிகை முன்பும் அழகிய செயற்கைக் குளம் ஒன்று இருந்தது. ஒன்றில் நீலத் தாமரைகள் பூத்திருக்கும். மற்றொன்றில் சிவப்புத் தாமரைகள் பூத்திருக்கும். மூன்றாவது குளத்தில் வெண்தாமரைகள் பூத்திருக்கும்.

ஒரு சமயம் யசன், மழைக் காலத்துக்கு உரிய மாளிகையில் வசித்துக்கொண்டிருந்தான். அப்போது ஒரு நாள் இரவு

அந்த மாளிகையில் ஆடலும் பாடலும் நிகழ்ந்துகொண்டிருந்தன.

தமது மஞ்சத்தில் படுத்து ஆடல் பாடல்களை அவன் ரசித்துக்கொண்டு இருந்தான். அன்று தினம் வழக்கத்துக்கு மாருக, நடனக்காரிகள் சிறிது முன்னதாகவே தங்கள் ஆட்டத்தை நிறுத்திக்கொண்டு தூங்கத் தொடங்கினுர்கள். அதை யடுத்து, வாத்தியக்காரிகளும் தத்தம் வாத்தியத்தை அப்படி அப்படியே வைத்துவிட்டு, தூங்கினுர்கள்.

எண்ணெய் விளக்கு எரிந்துகொண்டிருந்தது. பொழுது புலர்வதற்கு இன்னும் கொஞ்ச நேரமே பாக்கி இருந்தது.

இது சமயம் வழக்கத்துக்கு மாருக முன்னதாகவே யசன் விழித்துக்கொண்டான். பணக்காரனுக்கு மகனுய்ப் பிறந்து இருந்தும், உள்ளத்தில் யசனுக்கு அமைதி இல்லை.

விழித்துக்கொண்ட யசன் சுற்றும் முற்றும் பார்த்தான். நடனக்காரிகளும் பாடகிகளும் வாத்தியக்காரிகளும் ஆங்காங்கே அலங்கோலமாகப் படுத்துக் கிடந்தார்கள்.

ஒருத்தி குரட்டை விட்டுக்கொண்டுத் தூங்கினுள்; மற்றொருத்தி ஆடைகள் கலைந்து கிடக்க, அவலட்சணமாகத் தூங்கினுள். இன்னொருத்தி, வாயைத் திறந்து, பல்லைக் காட்டியவாறு அயர்ந்து தூங்கினுள். அவளுடைய வாய் இடுக்கில் கொடுவாய் வழிந்து கொண்டிருந்தது. பார்த்தவர்களின் உள்ளத்தை, பகல் நேரத்தில் பற்றி ஈர்க்கும் வனப்பையுடைய இந்தப் பெண்கள், இரவு நேரத்தில் இப்படி அலங்கோலமாகப் படுத்துக் கிடப்பது, பார்ப்பவர்களின் உள்ளத்தில் வெறுப்பை உண்டாக்கிற்று.

அலங்கோலமான இந்தக் காட்சியைக் கண்டதும் யசன் வெறுப்படைந்தான். அங்கு சிறிது நேரம்கூட நிற்க அவன் பிரியப்படவில்லை. ஆகவே, முலாம் பூசப்பட்ட அழகிய இரு நடையன்களைத் தம் கால்களில் மாட்டிக் கொண்டு, யசன், இரவு நேரத்தில் மாளிகையை விட்டுப் புறப்பட்டான்.

மாளிகையின் கதவுகள் தாமே திறந்துகொண்டன. யசன் வெளியே வந்தான். ''இந்த இரவு நேரத்தில் எங்கே போவது?'' என, ஒன்றும் அறியாது யசன் திகைத்து நின்ருன்.

இசிபதனத்தில் இருக்கும் மான்சோலையை நாடி யசனின் கால்கள் தாமாகவே செல்லத் தொடங்கின.

இது சமயம் புத்தர் பெருமான் அதிகாலையில் துயில் எழுந்து, உலவியவாறு, தூய காற்றைச் சுவாசித்துக்கொண் டிருந்தார்.

அப்போது தூரத்தில் யாரோ ஒரு வாலிபன் வருவதை அவர் பார்த்தார். தாமதியாது உள்ளே சென்று, தமது ஆசனத்தில் புத்தர் பெருமான் அமர்ந்துகொண்டார்.

யசனே தமது உடல்மீது கிடக்கும் பளபளக்கும் பகட்டான ஆடைகளைக் களைந்து தரைமீது வீசி எறிந்தான். சிறிது தூரம் சென்றதும், கால்களில் போட்டிருந்த நடையன் களையும் உதறி எறிந்தான்.

இப்பொழுதுதான் யசனுடைய உள்ளத்தில் அமைதி உண்டாயிற்று. பழைய சட்டையை உதறி எறிந்துவிட்ட பாம்பைப்போல், அவனுடைய மேனியில் ஒருவித புது மெருகு உண்டாயிற்று.

உள்ளே சென்ற யசன் புத்தர் பெருமானை மூன்று முறைகள் வணங்கிவிட்டு, பக்கத்திலே அமர்ந்து திரும்பிப் பார்த்தான்.

அப்போது அவன் கழற்றி எறிந்த உடைகளும் செருப்பு களும் பளபளப்பதை யசன் கவனித்தான்.

அவன் உள்ளக்கிடையை, புத்தர் பெருமான் புரிந்து கொண்டார். ஆகவே, அவர் யசனை நோக்கி, ''வாலிபனே! ஆடை அணிகலன்களால், ஒருவன் தன்னை அலங்கரித்துக் கொண்டிருந்த போதிலும் அவன் புலன்களுக்கு அடிமையாகி விடுவது இல்லை; வெளி வேடம் முக்கிய மன்று; உள்ளே இருக்கும் மனதுதான் முக்கியம். ஒரு மனிதன் பிச்சைக் காரனுக்கு உரிய கந்தைகளை அணிந்துகொண்டு, தனித்த இடங்களில் வாழ்ந்து வரலாம்; இருப்பினும் அவனுடைய உள்ளம் ஆயிரம் ஆயிரம் எண்ணங்களில் தோய்ந்து அவதிப் பட்டுக்கொண்டிருக்கலாம். அனைத்தையும் சமமாக நோக்கும் மனப்பக்குவம்தான்-ஓட்டையும் பொன்னையும் ஒக்கநோக்கும் மனப்பக்குவம்தான் — அவசியம். அந்த நிலை ஒருவனுக்கு

ஏற்பட்டுவிட்டால், இந்த உலகில் வாழ்ந்துகொண்டே, உலகமீது எவ்வித பாசமும் பிணிப்பும் இன்றி, ஒருவனுல் வாழ முடியும்'' என்று கூறிஞர்.

இவ்வாறு சொல்லிவிட்டு, எழுந்து தம்முடன் வருமாறு, புத்தர் பெருமான் யசனே அழைத்தார்.

உடனே அவனும் எழுந்து புத்தர் பெருமானேப் பின் தொடர்ந்தான். அப்போது அவனுக்கு வயது இருபது இருக்கும்.

மான் வனத்தைவிட்டு, பக்கத்தில் இருக்கும் ஒரு மாஞ்சோலேக்கு, யசனேப் புத்தர் பெருமான் அழைத்துப் போனுர்.

அங்கே அவருடைய முந்திய சீடர்கள் ஐவரும் இருந் தார்கள்; யசனுக்குப் போதி தருமத்தை உபதேசம் செய்து தமது ஆருவது சீடனுகப் புத்தர் பெருமான் அங்கீகரித்துக் கொண்டார்.

வழக்கம்போல், அதிகாலேயில் தன் மகன் யசன் தன்னேக் காண வராதிருப்பதை அறிந்து யசனுடைய தாய் கவலே யுற்ருள். ஆகவே எழுந்து, தன் புதல்வன் படுத்து உறங்கும் அறைக்குச் சென்று, யசனேப் பார்த்தாள். காணவில்லே.

தன் செல்வ மகன் காணுமற் போய்விட்டதை அறிந்து, யசன் தாய் பதறிப் போனுள். தாமதியாது தன் கணவ னிடம் சென்று, விவரத்தைத் தெரிவித்து, தன் புதல்வனேத் தேடுவதற்கு ஏற்பாடு செய்தாள்.

எதிர்பாராத இந்தச் செய்தியைக் கேட்டு, யசனுடைய தந்தையும் ஆச்சரியம் அடைந்தான் தாமதியாது குதிரை களில் ஏறிச் சென்று, தன் புதல்வனே நான்கு திக்குகளிலும் தேடுமாறு தன் சிப்பந்திகளுக்கு உத்தரவிட்டான்.

தானும் மாளிகையைவிட்டுப் புறப்பட்டான். மான் வனத்தில் ஒரு வேளே தன் புதல்வன் யசனேச் சந்தித்தாலும் சந்திக்கக் கூடும் என்னும் கருத்தில் அவனும் மான் வனத்தை நோக்கிப் போனுன்.

சிறிது தூரம் சென்றதுமே, தன் புதல்வனின் அடிச் சுவடுகள் தென்படுவதை அவன் கண்டான்.

அந்தச் சுவடுகளைத் தொடர்ந்து சென்று, வணிகன் மான் வனத்தை அடைந்தான்.

அப்போது யசனும் பிறரும், பகவான் செய்யும் போதனைகளை ஆழ்ந்து கேட்டுக்கொண்டிருந்தார்கள்.

இது சமயம் யசனை, அவனுடைய தந்தை தேடி வருவதைப் புத்தர் பெருமான் பார்த்துவிட்டார் ''யசன் தந்தை இங்கு வந்து அமரும்போது, பக்கத்திலே அமர்ந்துள்ள தன் புதல்வன் யசனைப் பார்க்காத ஒரு நிலையை உண்டுபண்ணி, யசன் தந்தையைத் திருத்த முயன்றால் என்ன?'' என்று அவர் நினைத்தார்.

இந்த நினைப்புப்படியே அந்த அற்புதத்தையும் பகவான் நிகழ்த்தினார்.

யசன் தந்தை பகவானை அணுகினான். முறைப்படி வணங்கிவிட்டு, ''பகவானே! என் புதல்வன் யசன் இங்கு வந்தானா?'' என்று கேட்டான்.

அப்போது பகவான் அவனிடம் ''இல்லறத்தைக் கடைப் பிடிப்பவரே! உட்கார்ந்து, நடந்து வந்த களைப்பை முதலில் போக்கிக்கொள்ளும். பிறகு உம் புதல்வன் யசன் இருப்பதை நீர் காணலாம்'' என்று சொன்னார்.

''அப்படியா! மிக்க மகிழ்ச்சி!'' என்று சொல்லி, பகவானை வணங்கிய பின்னர், பகவானுக்கு அண்மையில் யசன் தந்தை உட்கார்ந்தான்.

அவனுக்கு முதலில் பகவான் தருமத்தை உபதேசித்தார்.

புத்தர் பெருமான் பகர்ந்த அறவுரைகளைச் செவிமடுத்த யசன் தந்தை புளகாங்கிதம் அடைந்தான்.

''பெருமானே! தாங்கள் செய்யும் அறவுரைகள் மிகவும் மேன்மையானவை. தாங்கள் செய்யும் உபதேசங்கள் சரிந்து கீழே கிடக்கும் கோப்பை ஒன்றை நேரே நிமிர்த்தி வைப்பவன் செய்கைபோல் இருக்கின்றன. குருடனுக்கு ஒளியைப்போலவும், வழிதவறிச் சென்றவனுக்கு, நேரிய வழியைக் காட்டும் கைகாட்டிபோலவும், இருளின் நடுவே பிரகாசிக்கும் சுடரைப்போலவும், நேரிய உள்ளமுடைய ஒருவன் காணும் உண்மையைப்போலவும் அவை இருக்

கின்றன. இத்தகைய போதனைகளைக் கடைப்பிடித்து ஒழுக எனக்கு அருள்பாலிக்க வேண்டும்'' என்று சொல்லி, தம்மையும் சீடனாக அங்கீகரிக்குமாறு வேண்டினான்.

புத்தர் பெருமானும் சம்மதித்து, யசன் தந்தையை, தம் சீடனாக அங்கீகரித்துக்கொண்டார்.

மும்மணிகளைக் கூறி, யசன் தந்தை பௌத்த தருமத்தைத் ஏற்று, பௌத்தன் ஆனான்.

முதன் முதலாக, மும்மணிகளைக் கூறி, பௌத்த சங்கத்தில் சேர்ந்த இல்லறத்தான் இவன்.

தன் தந்தைக்குப் பெருமான் செய்த உபதேசங்களையெல்லாம் யசன் ஆர்வத்துடன் கேட்டுக்கொண்டு இருந்தான்; பற்றுகளை விட்டொழித்து, துறவற வாழ்வை மேற்கொள்ள, யசன் விருப்போடு இருப்பதைப் பெருமான் தெரிந்துகொண்டார்.

ஆகவே தமது சக்தியால், யசனை, அவன் தந்தைக்குப் புலனாகுமாறு பெருமான் செய்தார்.

காணாமல் போயிருந்த தன் புதல்வனைப் பார்த்ததும், யசன் தந்தை பரவசமடைந்தான். பிறகு யசனை நோக்கி, ''குழந்தாய்! உன்னைப் பிரிந்த உன் தாய், கண்ணீரை ஆறாகப் பெருக்கி அழுதுகொண்டிருக்கிறாள். உயிர் பிரிந்தவள் போல உணர்வற்றுக் கிடக்கிறாள். வீட்டுக்குத் திரும்பி, அவளுக்கு உணர்வு ஏற்படச் செய்'' என்று அழைத்தான்.

தன் தந்தை அழைத்ததும், யசன் பெருமான் முகத்தை நோக்கினான்.

அப்போது அவர் யசன் தந்தையைப் பார்த்து, ''மீண்டும் உம் புதல்வன், உலக வாழ்வுக்குத் திரும்புவதை நீர் விரும்புகிறீரா?'' என்று கேட்டார்.

''வேண்டாம் பெருமானே! தங்களுடனேயே இருப்பதற்கு யசன் பிரியப்பட்டால், அதன்படி அவன் இருந்து வரட்டும்'' என்று யசன் தந்தை பதில் சொன்னான்.

பிறகு மீண்டும் பெருமானிடம், ''பெருமானே! தாங்கள் என் புதல்வனையும் சீடர் குழாத்தையும் அழைத்துக்கொண்டு,

எனது இல்லம் வந்து அமுது செய்து அருள வேண்டும்'' என்று பிரார்த்தித்தான்.

சம்மதம் என்பதற்கு அறிகுறியாக, பகவான் மௌன மாய் இருந்தார்.

யசன் தந்தையும் மகிழ்ச்சி அடைந்து, விடை பெற்றுக் கொண்டு தமது இல்லம் திரும்பினன்.

இதன் பின்னர் யசன் பௌத்த சங்கத்தில் சேர்ந்து, துறவறத்தை மேற்கொண்டான்.

இதுவரை துறவறத்தை மேற்கொண்ட பிக்குகள் எழுவர் ஆவர்.

* * *

ஐந்து பேர் துறவறத்தை மேற்கொண்ட பின்பு, ஆறுவதாகத் துறவறத்தை மேற்கொண்டது, யசனு அல்லது அவன் தந்தையா என்பதில் கருத்து வேற்றுமை நிலவுகிறது.

சிலர் யசன்தான் ஆறுவது சீடன் என்று குறிப்பிட்டு இருக்கிறுர்கள்; சிலர் அவனை ஏழாவது சீடனுகக் குறிப்பிட்டு எழுதி உள்ளார்கள்.

## சீடர்கள்

தாம் சம்மதித்தபடி மறு தினம் காலையில், பிச்சை ஏற்கும் பொருட்டு, வணிகனுடைய இல்லத்துக்கு, புத்தர் பெருமான் புறப்பட்டார். உடம்பின்மீது மஞ்சள் நிற ஆடையை எடுத்துப் போட்டுக்கொண்டும், கையில் திரு வோட்டை எடுத்துக்கொண்டும் அவர் போனுர்.

யசனும் அவருடன் சென்றுன்.

வணிகன் இல்லத்தை அடைந்ததும், தமக்கு என அமைக்கப்பட்டு இருக்கும் ஆசனத்துக்குச் சென்று அதன்மீது பெருமான் அமர்ந்தார்.

பிறகு யசனுடைய அன்னையும் அவனுடைய பூர்வாசிர மத்து மனைவியும் வந்து, முறைப்படி புத்தர் பெருமானை வணங்கிவிட்டு, அருகே அமர்ந்தார்கள்.

புத்தர் பெருமான் அந்தப் பெண்மணிகள் இருவருக்கும் பௌத்த தருமங்களை உபதேசித்தார்.

பெண்மணிகள் இருவரும் மும்மணிகளைச் சரண் அடைந்து, பௌத்தர்கள் ஆயினர்.

இந்தப் பெண்மணிகள் இருவரும், உலக வாழ்வைத் துறந்து, துறவற வாழ்வை மேற்கொண்டனரா அல்லது, சீடர்களாக மட்டும் ஆயினரா என்பதில் அபிப்பிராய பேதம் நிலவுகிறது.

துறவறத்தைப் பௌத்த சமயம் பாராட்டிப் போற்றுகிறது; ஆயினும் கடுமையான துறவறத்தைப் பௌத்த சமயம் அங்கீகரிக்கவில்லை. சமய வாழ்விலும் துறவற வாழ்விலும் பெண்பாலருக்கும் பங்கு இருக்க வேண்டும் என்பதைப் புத்தர் பெருமான் அங்கீகரித்து இருப்பதாகத் தெரிகிறது.

* * *

யசனுக்கு நான்கு தோழர்கள் இருந்தார்கள். அவர்கள் நால்வரும் செல்வக் குடும்பத்தில் பிறந்தவர்கள்; யசனையும் அவனுடைய அறிவு, திறமை ஆகியவற்றையும் பெரிதும் மதிப்பவர்கள். யசன் முண்டனம் செய்துகொண்டு துவராடையுடுத்து, துறவியாகிவிட்டதை அறிந்து அவர்கள் ஆச்சரியம் அடைந்தார்கள்.

பிறகு யசனை அணுகி, முறைப்படி வணங்கிய பின்னர், பக்கத்திலே அடக்கத்துடன் அமர்ந்தார்கள்.

அவர்களை யசன் பகவானிடம் அழைத்துச் சென்றான். ''பகவானே! இவர்கள் நால்வரும் பூர்வ ஆசிரமத்தில் எனக்கு அருமைத் தோழர்களாய் இருந்தவர்கள். இவர்களுக்கும் பௌத்த தருமத்தைப் போதித்து, சீடர்களாக அங்கீகரித்து அருள வேண்டும்'' என்று வேண்டினான்.

பெருமானும் மனமுவந்து, அந்த நான்கு வாலிபர்களுக்கும் பௌத்த தருமங்களைப் போதனை செய்தார்.

வாலிபர்களும் பந்த பாசங்களை விட்டொழித்துத் துறவறத்தை மேற்கொண்டு, பௌத்த பிக்குகள் ஆயினர்,

இவர்கள் நால்வரையும் சேர்த்து, பெருமானுக்கு இப்பொழுது பதினொரு சீடர்கள் இருந்தனர்.

இதன் பின்னர், யசனுடைய நண்பர்கள் மேலும் ஐம்பது வாலிபர்கள், பௌத்த மதத்தைத் தழுவி, பிக்குகள் ஆயினர்.

இவர்களும் மற்றவர்களைப் போலவே பணக்காரக் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள். இவர்கள் ஐம்பது பேரையும் சேர்த்து, புத்தர் பெருமானுக்கு மொத்தம் அறுபத்து ஓர் சீடர்கள் இருந்தனர்.

இந்த அறுபத்து ஓர் சீடர்களையும் புத்தர் பெருமான் ஒரு நாள் தம்பால் அழைத்து அடியில் வருமாறு போதனை செய்தார்:

"பிக்குகளே! தேவர்களையும் மானுடர்களையும் பாதிக்கின்ற ஐம்புலன்களையும் கட்டுப்படுத்தி நான் வெற்றி பெற்றுள்ளேன். அந்த வழியை உங்களுக்கும் நான் போதித்து இருக்கிறேன். மேன்மையான இந்த உபதேசங்களை, உலக மக்களுக்கு அறிவிப்பது நமது கடமை ஆகும். ஆகவே, நீங்கள் புறப்பட்டுச் சென்று இந்த உபதேசங்களைப் பல்வேறு பகுதிகளிலும் பரப்புங்கள். இரண்டு பேர் சேர்ந்து ஒரு பகுதிக்குச் செல்ல வேண்டாம். ஒவ்வொருவரும் தனித் தனியே ஒவ்வொரு பகுதிக்குச் செல்லுங்கள். பற்றுகளை விட்டொழித்து, இந்த மார்க்கத்துக்கு மானுடர்கள் உடனடியாக வந்து சேர மாட்டார்கள். படிப்படியாகப் போதனை செய்து அவர்களைத் திருத்துங்கள். நான் உருவேலாப் பகுதிக்குப் போகிறேன்" என்று கூறினார்.

நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் வந்து, மக்கள், புத்தர் பெருமானைத் தரிசித்தார்கள். அவர் செய்யும் உபதேசங்களைக் கேட்டார்கள். பெருமானுடைய கைகளினாலே தீட்சை பெற்று, துறவிகள் ஆவதற்குப் பெரும்பாலோர் ஆசைப்பட்டார்கள்.

ஆயினும் அனைவருக்கும் தாமே நேரில் தீட்சை கொடுப்பது, பெருமானுக்கு அதிகத் தொல்லைகள் விளைவிப்பதாய் இருந்தது. அதனால், மற்றவர்களுக்குத் தீட்சை கொடுத்து,

துறவிகள் ஆக்கும் கடமையை, தம் சீடர்களுக்குப் பெருமான் வழங்கினார்.

இதன் பின்னர் புத்தர் பெருமான் உருவேலா வனத்தை நோக்கிச் சென்றார்.

வழியில் ஒரு சோலை வந்தது. அங்கே ஒரு மர நிழலில் தங்கி, பெருமான் சிறிது சிரம பரிகாரம் செய்துகொண்டார்.

அப்போது அந்தச் சோலையில், உல்லாசமாகப் பொழுது போக்கும் பொருட்டு, கண்ணியமான குடும்பத்தைச் சேர்ந்த முப்பது வாலிபர்கள் தத்தம் மனைவியை அழைத்துக்கொண்டு, அங்கு வந்திருந்தார்கள். அவர்களில் ஒருவனுக்கு மனைவி இல்லாதபடியால், விலைமகள் ஒருத்தியை அவன் அழைத்து வந்திருந்தான். இவர்கள் அனைவரும் மெய்ம்மறந்து உல்லாச மாகப் பொழுதுபோக்கிக்கொண்டிருக்கும் சமயத்தில் அவர் கள் வைத்திருந்த விலையுயர்ந்த பொருள்களை அபகரித்துக் கொண்டு விலைமகள் ஓடிவிட்டாள்.

விவரம் தெரிய வந்ததும் வாலிபர்கள் அந்த விலைமகளைத் தேடிக்கொண்டு புறப்பட்டார்கள். வழியில் மர நிழலில் அமர்ந்திருக்கும் புத்தர் பெருமானை நோக்கி, ''பெரியவரே! இந்த வழியாக யாராவது பெண் ஒருத்தி போனதை நீங்கள் பார்த்தீர்களா?'' என்று கேட்டார்கள்.

அப்போது பெருமான் அவர்களிடம், ''வாலிபர்களே! பெண்ணைத் தேடிப் பின்னே செல்வது நல்லது என்று கருது கிறீர்களா? அல்லது உங்களையே நீங்கள் யார் என்று தேடுவது நல்லதா? இந்த இரண்டில் எது நல்லது?'' என்று கேட்டார்.

''நம்மை நாமே தேடித் தெரிந்துகொள்வதுதான் நன்மை யானது'' என்று வாலிபர்கள் பதில் சொன்னார்கள்.

''அப்படியானால் அருகே அமர்ந்து நான் கூறுவதைக் கேளுங்கள்'' என்று பெருமான் சொன்னார்.

அதன்படி அந்த முப்பது வாலிபர்களும் பெருமான் பக்கத்தில் அமர்ந்தார்கள்.

பெருமான் அவர்களுக்குப் பௌத்த சமய தருமங்களை உபதேசித்தார்.

மும்மணிகளைக் கூறி, முப்பது வாலிபர்களும் துறவறத்தை மேற்கொண்டார்கள்

அதன் பின்னர், புத்தர் பெருமான் அங்கிருந்து புறப்பட்டு, உருவேலா வனம் போய்ச் சேர்ந்தார்.

## மூன்று கசியபர்கள்

**கௌ**தம புத்தர் உருவேலா வனத்தை அடைந்தார். அப்போது அங்கே பிரபலம் வாய்ந்த மூன்று ஜடாதரர்கள் இருந்தார்கள் மூவரும் அக்கினியை வழிபடுபவர்கள். உடன் பிறந்த சகோதரர்கள்; உருவேலா கசியபர், நதி கசியபர், கயை கசியபர் என்னும் பெயர்களுடன் அந்த மூவரும் பிரசித்தமாய் விளங்கினுர்கள்.

அனைவரிலும் மூத்தவர் உருவேலா வனத்தில் வசித்து வந்தபடியால், அவருக்கு உருவேலா கசியபர் என்று பெயர். இவருக்கு ஐநூறு சீடர்கள் இருந்தார்கள். அக்கினி வழிபாடு செய்துகொண்டும். மறைகளை ஓதிக்கொண்டும், இவர் வைதீக தருமத்தைக் கடைப்பிடித்து வந்தார்.

இரண்டாவது முனிவர் நிரஞ்சனை நதிக்குப் பக்கத்தில் வசித்தார். அதனுல் இவருக்கு நதி கசியபர் என்று பெயர். இவருக்கு முந்நூறு சீடர்கள் இருந்தார்கள்; இவரும் வைதீக தருமத்தைப் பின்பற்றி அக்கினி வழிபாடு செய்து வந்தார்.

மூன்ருவது முனிவர் கயை என்னும் ஊருக்குப் பக்கத்தில் வசித்து வந்தபடியால், அவருக்குக் கயை கசியபர் என்று பெயர். இவருக்கு இரு நூறு சீடர்கள் இருந்தார்கள். இவரும் வைதீக மரபுப்படி அக்கினி வழிபாடு செய்து வந்தார்.

உருவேலா ஆசிரமத்தை அடைந்த கௌதம புத்தர் உருவேலா கசியபரை அணுகி, ''முனிவரே! நீர் அக்கினி வழிபாடும் செய்யும் அறையில் இரவுப் பொழுதைக் கழிக்க விரும்புகிறேன். அதற்கு நீர் அனுமதிக்க வேண்டும்'' என்று சொன்னுர்.

அதற்கு உருவேலா கசியபர், ''பெரியீர்! எனது அக்கினி வழிபாடு நடைபெறும் அறையில் இரவுப் பொழுதை நீர் கழிப்பதில் எனக்கு எவ்வித ஆட்சேபனையும் இல்லை. ஆயினும் அங்கே தங்குவதில் பெரிய ஆபத்து ஒன்று இருக்கிறது. கொடிய விஷமுள்ள பாம்பு ஒன்று, இரவு நேரத்தில் அங்கு தங்குவோரைத் தாக்கிக் கொன்றுவிடுகிறது. அதனால்தான் யோசிக்கிறேன். இருட்டிவிட்டால், எவ்வளவு புனிதமானவர்களாய் இருப்பினும் சரியே, அக்கினி வழிபாடு நடைபெறும் அறைக்குப் போகத் துணிய மாட்டார்கள்'' என்று கூறினார்.

''அதைப்பற்றிய சிந்தனை உங்களுக்கு வேண்டாம். இரவு மட்டும் தங்க நீங்கள் இடம் தந்தால் போதும்'' என்று புத்தர் சொன்னார்.

''தங்குவது உங்கள் பொறுப்பு. பிறகு எனக்குப் பழி நேரக் கூடாது என்பதற்காகத்தான் சொல்லுகிறேன்'' என்று கசியபர் பதில் சொல்லி அனுமதி கொடுத்தார்.

கசியபருக்கு நன்றி தெரிவித்துவிட்டு, அக்கினி வழிபாட்டு அறைக்குள் புத்தர் பெருமான் போனார். சென்றதும் சப்பணம் போட்டுத் தியானத்தில் அமர்ந்தார்.

இரவு நடு சாமத்தில் அக்கினிக் கடவுள் பாம்பு வடிவத்தில் வந்து, நெருப்பையும் புகையையும் கக்கி, புத்தரைத் தாக்கத் தொடங்கினான்.

அவனுடைய கோபம் என்னும் நெருப்பையும் ஆத்திரம் என்னும் புகையையும் தமது அன்பாலும் நல்லெண்ணத்தாலும் புத்தர் பெருமான் அவிக்க முயன்றார்.

கசியபரோ தூங்க முடியாமல், புத்தர் இருக்கும் அறைக்குள் என்ன நடக்கிறது என்பதைக் கவனித்தார். அறை முழுதும் ஒரே பிரகாசமாய் இருந்தது. புத்தரின் திருமுகம் அதிக சோபையுடன் துலங்குவதைக் கவனித்த கசியபர், ''இப்பொழுது இங்கு வந்திருக்கும் துறவியின் முகம் மிகுந்த பேரெழிலுடன் திகழ்கிறது. நெருப்புக் கடவுள் இவருக்குப் பெரும் தீங்கு விளைவிக்காமல் இருக்க மாட்டானே!'' என்று யோசித்தார்.

பொழுது புலர்ந்ததும் புத்தர் பெருமான் நலத்துடன் இருப்பதைக் கண்டு அந்தக் கசியபர் பெரிதும் ஆச்சரியம் அடைந்தார். எவ்விதமான தீங்கையும் அக்கினிக் கடவுள் அவருக்கு இழைக்க முடியாமல் இருப்பதை அறிந்து வியப்பில் மூழ்கினூர்.

கசியபர் என்ன மனநிலையில் இருக்கிறூர் என்பதைப் புத்தர் பெருமான் புரிந்துகொண்டார். ''அன்பாலும் நல்லெண்ணத்தாலும், அக்கினிக் கடவுளின் கோபமும் ஆத்திரமும் தணிந்துவிட்டன'' என்று கூறிவிட்டுத் தமது பிச்சைப் பாத்திரத்தை அவரிடம் காட்டினூர் பெருமான்.

அந்தப் பாத்திரத்தினுள் ஒரு பாம்பு சுருண்டு அமைதியாகப் படுத்துக் கிடப்பதை, உருவேலா கசியபர் பார்த்தார்.

பார்த்த கசியபர் மிகவும் அதிசயித்தார். இருப்பினும் கசியபரின் உள்ளத்திலிருக்கும் அகந்தை மட்டும் அவரைவிட்டு அகலவில்லை. ''இங்கு வந்திருக்கும் இந்த மனிதர் மந்திர தந்திரங்களில் சிறந்து விளங்குகிறூர். அச்சம் என்பது இவரிடம் ஒரு துளியும் இல்லை. இருப்பினும் என்னைப்போலப் புனிதராக இவரைக் கருத முடியாது'' என்று நினைத்தார்.

இரண்டாவது இரவும் அக்கினி வழிபாட்டு அறையில் புத்தர் பெருமான் தங்கினூர். இப்போதும் அக்கினிக் கடவுளின் கோபமும் ஆத்திரமும் பெருமானின் அன்பினூலும் நல்லெண்ணத்தினூலும் அவிந்து போயின.

அன்று இரவு தேவர்கள் கூட்டமாக வந்து பெருமானைத் தரிசித்தார்கள். அவர் இருந்த அறை பேரொளியால் பிரகாசித்தது.

மறு தினம் கசியபர் புத்தர் பெருமானை நோக்கி ''இரவு நீர் இருந்த அறை பேரொளியால் பிரகாசித்ததே! காரணம் என்ன?'' என்று வினவினூர்.

''எனது போதனைகளைக் கேட்கும் பொருட்டு, தேவர்கள் வந்திருந்தார்கள்'' என்று, உருவேலா கசியபருக்குப் பெருமான் பதில் சொன்னூர்.

''இவருடைய உபதேசங்களைத் தேவர்கள் வந்து செவிமடுத்தபோதிலும், என்னைப்போல் புனிதமுடையவராக

இவர் ஆக முடியாது'' என்று கசியப முனிவர் தம்முள்ளேயே நினைத்துக்கொண்டார்.

ஆயினும் புறத்தில் பேசும்போது வேறு விதமாகப் பேசினார். ''புனிதசீலர் என்று தாங்கள் கருதும் பெரியவர்களுக்குக் கிராமவாசிகள் நிறைய உணவுப் பண்டங்கள் கொணர்ந்து தருவார்கள். நான் தங்களுக்கு உணவு தருகிறேன். நீங்கள் இங்கேயே இருங்கள்'' என்று சொன்னார்.

சம்மதித்து, பெருமான் இரவு தங்கினார்.

மறு தினம் பெரிய வேள்வி ஒன்று நடத்துவதற்கான ஏற்பாட்டில், கசியபர் ஈடுபட்டு இருந்தார். அங்க நாட்டிலிருந்தும் மகத நாட்டிலிருந்தும் மக்கள் நிறைய உணவுப் பண்டங்களை எடுத்து வந்தார்கள்.

உடனே கசியபர் வேறு விதமாக எண்ணத் தொடங்கினார்: ''வேள்வி நடக்கும்போது, அங்கே புத்தரும் பிரசன்னமாகி இருந்தால், மக்களின் உள்ளங்களைத் தமது மந்திர பலத்தால் புத்தர் கவர்ந்துவிடுவார். அதனால் பொது மக்களிடையே எனது புகழ் குன்றிவிடும்'' என்று நினைத்தார்.

கசியபருடைய மனநிலையை புத்தர் தெரிந்துகொண்டார். ஆகவே அவர் கசியபரை நோக்கி, ''சகோதரரே! நானை ஏரிக்குப் பக்கத்தில் அமர்ந்து தியானம் செய்ய விரும்புகிறேன். அங்கேயே உணவு அருந்தவும் பிரியப்படுகிறேன்'' என்று சொன்னார்.

புத்தர் இவ்வாறு சொன்னதும் கசியபர் பெரிதும் மகிழ்ச்சி அடைந்தார். ''ஆம்; ஆம். தாங்கள் சொல்வது பொருத்தமானதே!'' என்று மனப்பாரம் பெரிதும் நீங்கியவர் போல் ஆர்வத்துடன் சொன்னார். ஆயினும் தம் மனதிற்குள்ளேயே ''இவர் எவ்வளவு நல்ல மனிதராய் இருக்கிறார். மற்றவர்களின் போக்கை அறிந்து இங்கிதமாக நடந்து கொள்கிறார். இருப்பினும் என்னைக் காட்டிலும் இவர் புனிதராய் இருக்க முடியாது'' என்று தனக்குத் தானே கசியபர் சொல்லிக்கொண்டார்.

பெருமானே விடைபெற்றுக்கொண்டு, உத்தர குரு

பகுதிக்குப் போய்விட்டார்; அங்கு பிச்சை வாங்கிக்கொண்டு, ஏரிக்கரைக்குத் திரும்பி, ஒரு மர நிழலில் அமர்ந்து உணவு அருந்தினார். அதன் பின்னர் ஓய்வாக ஏரிக்கரையில் அமர்ந்து இருந்தார்.

மறு தினம் புத்தர் இருக்கும் இடத்துக்குக் கசியபர் சென்றார். அங்கு அவரைச் சந்தித்து ''சிரமணரே! நேற்று ஏன் தாங்கள் சாப்பிட வரவில்லை. உங்களை எதிர்பார்த்து, நாங்கள் உணவை வைத்துக்கொண்டு காத்திருந்தோமே?'' என்று சொன்னார்.

இப்படி உருவேலா கசியர் கூறியதும் புத்தர் அவரிடம் ''வேள்விக்குச் சிரமணர் வராதிருந்தால் நலமாய் இருக்குமே என்று நீர் எண்ணவில்லையா?'' என்று கேட்டார்.

''நமது உள்ளக்கிடையை இந்தச் சிரமணர் எளிதில் தெரிந்துகொள்கிறார். மந்திர சக்தியிலும் ஆற்றலிலும் இவர் சிறந்து விளங்குகிறார். இருப்பினும் என்னைப்போல் புனிதராக இவரைக் கருத முடியாது'' என்று தனக்குத் தானே உருவேலா கசியபர் சொல்லிக்கொண்டார்.

பிறகு அவர் அளித்த உணவைப் பெருமான் சாப்பிட்டார்; சோலையிலேயே தொடர்ந்து தங்கினார்.

இப்படி பல அற்புதங்களைப் புத்தர் பெருமான் உருவேலா வனத்தில் செய்து காட்டினார்.

உருவேலாவில் புத்தர் இருந்த சமயம் ஒரு நாள் பலத்த மழை பெய்யத் தொடங்கிற்று. இடைவிடாது மழை பொழிந்த காரணத்தால், புத்தரைச் சூழ்ந்து வெள்ளம் பெருக்கு எடுக்கலாயிற்று.

அதைப் பார்த்ததும் உருவேலா கசியபர் பதறிப்போனார். தாமதியாது கிராமத்துக்கு ஓடி, ஒரு சிறு படகைக் கொணர்ந்து அதில் ஏறிக்கொள்ளச் செய்து, புத்தரை அவர் காப்பாற்றினார். அன்பின் பெருக்கினால், கசியபர் செய்த இந்தச் செயலை நினைந்து, பெருமான் மகிழ்ச்சி அடைந்தார்; ''உள்ளம் பக்குவப்பட்டுவிட்டது. இனி உபதேசம் செய்யலாம்'' என்ற முடிவுக்கு வந்தார்.

ஆகவே புத்தர் பெருமான் கசியப முனிவரைப் பார்த்து

''கசியபரே! உமக்கு நிகரான புனிதத்தன்மையை நான் இன்னும் பெறவில்லை என்று நீர் பல வாரங்களாக நினைத்து வருகிறீர்; உண்மையைச் சொல்லும். நீர் பூரண ஞானத்தைப் பெற்றுவிட்டீரா? உள்ளத்தி லிருக்கும் பயத்தைப் போக்கி விட்டீரா?'' என்று கேட்டார்.

புத்தர் பெருமான் இவ்வாறு நேரடியாகக் கேட்டதும், கசியபர் சிறிது தயங்கினார். பெருமான் காட்டிய அன்பும் பரிவும் அவர் உள்ளத்தை பெரிதும் உருக்கிவிட்டன. ஆகவே, மரியாதையுடன் வணங்கிவிட்டு ''அண்ணலே! பூரண ஞானத்தை இன்னும் நான் பெறவில்லை. இன்னமும் எனது உள்ளத்தில் அச்சம் இருக்கிறது. தங்களைக் காட்டிலும் நான் புனிதமானவன் அல்லன்'' என்று ஒப்புக்கொண்டார்.

இதன் பின்னர் தமது யாகசாலைக்குள் நுழைந்து அங்கு இருக்கும் வேள்விப் பாத்திரங்களை எல்லாம் எடுத்து ஆற்றில் வீசி எறிந்தார் கசியபர்.

பிறகு பெருமானிடம் திரும்பி, ''அண்ணலே! பயம் அகலவும் அந்தரங்க உணர்வுகளை அறியவும் எனக்கு உபதேசம் செய்யுங்கள்'' என்று வேண்டி, பெருமானின் பொன்னடிகளில் வீழ்ந்து வணங்கினார்.

வேள்விப் பாத்திரங்கள் ஆற்றில் மிதந்து வருவதைக் கவனித்த கசியபரின் சிடர்கள் தங்கள் குருவுக்கு ஏதோ ஆபத்து நேர்ந்திருக்கிறது என்று அஞ்சினர். ஆகவே தாமதியாது வேள்விச்சாலைக்கு விரைந்தனர்.

அங்கே தங்கள் குரு உருவேலா கசியபர் புத்தரின் பொன்னடிகளின் அருகே அமர்ந்து அவர் செய்யும் உபதேசங் களைச் செவிமடுத்துக் கேட்டுக்கொண்டிருப்பதைக் கவனித் தனர். ஆகவே தாங்களும் அருகே அமர்ந்து, புத்தர் புரியும் உபதேசங்களைக் கேட்கத் தொடங்கினர்.

புத்தர் பெருமான் அடியில் வருமாறு அவர்களுக்கு உபதேசம் செய்தார்:

''எந்த அக்கினி பூதத்துக்கு நீங்கள் பயப்படுகிறீர் களோ அந்த அக்கினி பூதம் உங்களுக்குள்ளேயே இருக் கிறது. ஆசைப் பேய், அகந்தைப் பேய், பெருமைப் பேய்

ஆகிய பேய்கள் உங்கள் இதயங்களிலேயே வாசம் செய்கின்றன. காமம் என்னும் பேய் எரிந்துகொண்டே இருக்கும். பொறிகளுக்குப் புறப்பொருள்களுடன் தொடர்பு ஏற்படும்போதும், எண்ணங்கள், எண்ணங்களின் தொடர்புள்ள பொருள்களைச் சிந்திக்கும்போதும், ஆசையும் காமமும் உற்பத்தியாகி, எரியத் தொடங்குகின்றன. புகழ் மணக்கும் சொற்களைக் கேட்கக் காது விரும்புகிறது. கேட்டவுடன் தன்னைப்பற்றிய பெருமை உணர்வு ஏற்படுகிறது; பிறகு பெருமை உணர்வு குன்றிவிட்டால் என் செய்வது என்னும் அச்சம் ஏற்படுகிறது. இந்த ஆசைகளை அடக்கிக் கட்டுப்படுத்துவதுதான் உண்மையான வேள்வியாகும்; அடக்கம் என்னும் பண்பே ஓம குண்டம் ஆகும்'' என்று சொன்னார்.

இதன் பின்னர், உருவேலா கசியபரும் அவருடைய ஐந்நூறு சீடர்களும் முண்டனம் செய்துகொண்டு, சீவர ஆடை உடுத்து, பௌத்த பிக்குகள் ஆயினர்.

அதன் பின்னர், நதி கசியபரும் கயை கசியபரும் தத்தம் சீடர்களுடன், புத்தர் பெருமான் கூறும் அறவுரைகளைச் செவிமடுத்து, பௌத்த பிக்குகள் ஆயினர்.

இந்த மூன்று முனிவர்களையும் அவர்களின் ஆயிரம் சீடர்களையும் அழைத்துக்கொண்டு, புத்தர் பெருமான் ராஜகிருக நகருக்குப் புறப்பட்டார்.

---

## வேணு வனம்

அரண்மனை வாழ்வைத் துறந்து, புத்தர் வெளிக்கிளம்பியபோது, முதலில் ராஜகிருக நகருக்குச் சென்றார். அப்போது பிம்பசார மன்னன் அவரைத் தரிசித்து, அவர் போதி ஞானம் பெற்றதும், மகத நாட்டுக்கு வந்து உபதேசம் செய்ய வேண்டும் என்று வேண்டினன்.

பெருமானும் வருவதாக ஒப்புக்கொண்டு, அங்கிருந்து போய்விட்டார்.

ஆகவே இப்பொழுது, புத்தர் பெருமான் ஆயிரம் சீடர்களையும் மூன்று கசியபர்களையும் அழைத்துக்கொண்டு மகத நாட்டுக்குப் போனார்.

மகத நாட்டின் தலைநகரான ராஜகிருக நகருக்கு ஆறு கல் தொலைவில், சுபாதித்தர் கோயில் இருந்தது. நகரத்தைச் சுற்றிலும் சிறு சிறு குன்றுகள் இருந்தன. அவற்றில் கழுகு மலை என்பது முக்கியமானது. அந்த மலையில் தவசியரும் முனிவர்களும் தாங்கள் யாத்திரை செய்யும் காலத்தில் வந்து தங்குவது வழக்கம்; அதேபோல, பெருமானும் வந்து, கழுகு மலையில் தங்கினார்.

தம் சீடர்களுடன் புத்தர் பெருமான் தம் நாட்டுக்கு வந்திருப்பதை அறிந்து, மகத நாட்டு மன்னன் மகிழ்ச்சி அடைந்தான்.

ஆகவே பிராமணர்களையும் பரிவாரத்தினரையும் அழைத்துக்கொண்டு புத்தர் பெருமானைத் தரிசிக்கும் பொருட்டு அவன் கிளம்பினான்.

சீடர்கள் புடை சூழ அமர்ந்திருக்கும் புத்தர் பெருமானைப் பார்த்ததும், தரையில் வீழ்ந்து வணங்கிய பின்னர் எழுந்து, மரியாதையுடன் சிறிது தூரத்தில் ஒதுங்கி நின்றான் பிம்பசார மன்னன்.

அதன் பின்னர் அவனுடன் வந்த மற்றவர்களும் வணங்கிவிட்டு, எழுந்து மரியாதையுடன் நின்றனர்.

சிலர் புத்தருடன் உரையாடினர்; சிலர் நினைவில் இருத்திக்கொள்ள வேண்டிய அனேக வார்த்தைகளை அவரிடமிருந்து அவர்கள் செவிமடுத்தனர்; சிலர் கைகுவித்து வணங்கியவாறு மரியாதையுடன் நின்றுகொண்டிருந்தனர்; சிலர் புத்தரின் மூதாதையரின் பெருமைகளைப்பற்றிப் பேசிக்கொண்டு இருந்தனர். மற்றும் சிலர் மரியாதையுடன் மௌனமாக இருந்தனர்.

வந்தவர்கள், புகழ் படைத்த மூன்று கசியபர்களும் புத்தருடன் வந்திருப்பதை அறிந்து அதிக ஆச்சரியம் அடைந்தனர். புத்தர், கசியபர்களுக்குச் சீடர் ஆகி இருக்கிறாரா? அல்லது, கசியபர் மூவரும் புத்தருக்குச் சீடர் ஆகி

விட்டாரா என்பது விளங்காது அவர்கள் திகைப்புற்று நின்றனர்.

இதைக் கவனித்த புத்தர், உருவேலா கசியபரை நோக்கி ''கசியபரே! நான் கேட்கும் இந்தக் கேள்விக்கு நீர் பதில் சொல்ல வேண்டும். முன்பு நீர் பல ரிஷிகளுக்கு ஆசிரியராய் இருந்தவர். கடுமையான நோன்பையும், வேள்விகள் செய்வதையும் நீர் விட்டுவிட உமக்குத் தூண்டு கோலாய் இருந்தவை எவை?'' என்று கேட்டார்.

அதற்குக் கசியபர் ''பெருமானே! நான் இயற்றிய வேள்விகளும் செய்த தவங்களும், புலன்களுக்கு உட்பட்ட புற உலகத்தோடு தொடர்பு உடையவை; புலன்களோடு தொடர்புள்ள எதற்கும் தற்பெருமையும் ஆணவமும் இருக்கும். ஆணவமும் தற்பெருமையும் இருக்கும் இடத்தில், எப்பொழுதும் துன்பத்தின் சுவடு இருக்கும். அதனுல் தான் வேள்விகள் செய்வதையும் கடும் தவம் செய்வதையும் நான் விட்டொழித்தேன்'' என்று பதில் சொன்னுர்.

அப்போது புத்தர் பெருமான் அவரை நோக்கி, ''இவற்றில் எல்லாம் உமது மனம் இன்பத்தைக் காணு விடில், வேறு எந்தத் தெய்வங்களிடத்தும் மனிதர்களிடத்தும் உமது மனம் இன்பதைக் காண்கிறது?'' என்று கேட்டார்.

'நான்' 'எனது' என்னும் அகந்தைகளை ஒருவன் களைந்துவிட்டால், ஒருவனுக்கு மன அமைதி என்னும் நிர்வாணப் பேறு கிட்டுகிறது. இப்படி ஏற்படும் அமைதிக்கு அழிவே கிடையாது. அதனுல்தான் மாறுவதும் அழிவது மான வேள்விகள் செய்வதையும் கடும் தவம் புரிவதை யும் நான் விட்டுவிட்டேன்'' என்று சொன்னுர்.

பிறகு, உருவேலா கசியபர் எழுந்து புத்தர் பெருமானின் பொன்னடிகளை வணங்கிக்கொண்டே ''இவர் என்னுடைய குரு; நான் இவருக்குச் சீடன்'' என்று கூறினுர்.

இதன் பின்னர் அங்கு கூடி இருந்தோர் அனைவருக்கும் அறநெறிகளையும் உண்மை நெறிகளையும்பற்றி உபதேசம் செய்தார் பெருமான்

அரசன் பிம்பசாரனும் அவனைச் சார்ந்தோரும் மனத் தெளிவு பெற்று, பௌத்த மதத்தைத் தழுவினர்.

அப்போது பிம்பசாரன் புத்தரிடம், ''பெருமானே! எனது வாலிபப் பருவத்தில் எனக்கு ஐந்து விருப்பங்கள் இருந்தன. அந்த ஐந்தும் முழுதும் நிறைவேற வேண்டும் என்று நான் ஆசைப்பட்டேன்:

(1) நான் பலம் மிகுந்த அரசனாய் விளங்க வேண்டும்.
(2) புனிதம் வாய்ந்த புத்தர் எனது நாட்டுக்கு வர வேண்டும்.
(3) அவரை நான் வரவேற்று வணங்க வேண்டும்.
(4) புத்தர் தருமத்தை எனக்கு உபதேசிக்க வேண்டும்.
(5) அவர் போதிக்கும் தருமத்தை நான் புரிந்துகொள்ள வேண்டும்.

''மேற்கூறிய எனது ஐந்து விருப்பங்களும் இப்பொழுது நிறைவேறிவிட்டன; தாங்கள் நாளை எனது அரண்மனைக்கு. சீடர்களுடன் எழுந்தருளி, அமுது செய்ய வேண்டும்'' என்று விண்ணப்பித்துக்கொண்டான்.

அவனுடைய விருப்பத்துக்குப் பெருமான் இசைந்தார்.

இதன் பின்னர் பிம்பசார மன்னன் புத்தர் பெருமானை வணங்கி விடைபெற்றுக்கொண்டு, பரிவாரங்களுடன் தனது அரண்மனை திரும்பினான்.

மறு தினம் காலையில், சாப்பிடத்தக்க உணவு வகைகளை எல்லாம் சித்தம் செய்து வைத்துக்கொண்டு, பிம்பசார மன்னன் புத்தர் பெருமானுக்குச் செய்தி அனுப்பினான்.

புத்தர் பெருமான் காலையில் தம் சீடர்களை அழைத்துக் கொண்டும், திருவோட்டைக் கையில் எடுத்துக்கொண்டும் ராஜகிருக நகருக்குப் புறப்பட்டார்.

அரண்மனைக்குப் புத்தர் பெருமான் வந்து சேர்ந்ததும், தகுந்த மரியாதைகளுடன் பிம்பசார மன்னன் அவரை அரண்மனைக்குள் அழைத்துப் போனான். அவருக்கும் அவருடைய சீடர்களுக்கும் என ஒதுக்கி இருக்கும் இடத்தில் அவர்களை அமரச் செய்து கௌரவப்படுத்தினான்.

புத்தரும் அவருடைய சீடர்களும் பிம்பசாரனுடைய அரண்மனையில் உணவு உண்டார்கள். பிறகு பிச்சைப் பாத்திரங்களையும் கைகால்களையும் அலம்பிவிட்டு, ஓய்வுடன் இருந்தார்கள்.

இது சமயம் பிம்பசார மன்னன், தகுதியான ஒன்றை, புத்தருக்குத் தானம் செய்ய விரும்பினான். ''புத்தர் பெருமானும் அவருடைய சீடர்களும் தங்க, தகுந்த இடம் ஒன்றைத் தானமாக வழங்கினால் என்ன? அந்த இடம் நகருக்கு வெகு தொலைவில் இல்லாமலும் பக்கத்தில் இல்லாமலும் இருப்பது நல்லது. அப்படி இருந்தால்தான் மக்கள் புத்தர் பெருமானிடம் வந்து போவதற்கு எளிதாய் இருக்கும். அத்தகைய இடம் பகல் நேரத்தில் சந்தடியும் கூட்டமும் குறைவுள்ளதாக இருக்கும். மறைவாகவும் ஓய்வுடன் இருப்பதற்கு ஏற்றதாகவும் அந்த இடம் இருப்பது நல்லது'' என்று கருதினான்.

இந்த நினைப்பு வந்ததும், தனக்குச் சொந்தமான வேணு வனத்தை, (மூங்கில் சோலையைப்) புத்தர் பெருமானுக்கும் அவருடைய சீடர்களுக்கும் தானமாக வழங்க முடிவு செய்தான் பிம்பசார மன்னன்.

பிறகு ஒரு தங்கப் பாத்திரத்தில் இருக்கும் நீரைக் கொண்டு, தாரைவார்த்து, வேணு வனத்தை, புத்தர் பெருமானுக்கும் அவருடைய சீடர்களுக்கும் தானம் செய்தான் பிம்பசார மன்னன்.

பிம்பசார மன்னன் வழங்கிய வேணு வனத்தை, பெருமான் ஏற்றுக்கொண்டார்.

பிறகு பிம்பசார மன்னனுக்கு உபதேசம் செய்துவிட்டு, ஆசனத்திலிருந்து எழுந்து, சீடர்களையும் அழைத்துக் கொண்டு, அவர் புறப்பட்டுப் போனார்.

வேணு வனத்தை அடைந்த அவர் அதைப் பிக்குகள் அனைவருக்கும் உரிய ஒரு பொது இடமாக - அதாவது பௌத்த மடமாக - இயங்க ஏற்பாடு செய்தார்.

# இரு முக்கிய சீடர்கள்

இது சமயம் ராஜகிருகத்தில் சஞ்சயன் என்று ஒரு முனிவர் இருந்தார். அவருக்கு நூற்றுக் கணக்கில் சீடர்கள் இருந்தார்கள். அவர்களில் சாரிபுத்திரன், மொக்கலானன் என்ற இரு சீடர்கள் முக்கியமானவர்கள்.

இவர்கள் இருவரும் பிராமண குலத்தில் பிறந்தவர்கள்; இணைபிரியாத நண்பர்கள்; ஞானத்தில் அதிக நாட்ட முடையவர்கள்; இவர்கள் இருவரும் காலத்தைப்பற்றியும் இடத்தைப்பற்றியும், நிலையாமைபற்றியும் அடிக்கடி உரை யாடிக்கொண்டிருப்பார்கள்.

ஒரு நாள் இவர்கள் இருவரும் நகருக்குத் தென்புறத்தே இருக்கும் ஒரு குன்றின்மீது ஏறி, ராஜகிருக நகரத்தையும் அதற்கு அப்பால் இருக்கும் சமவெளியையும் கவனித்தார்கள்.

நகரத் தெருக்களிலும், சமவெளியில் இருக்கும் பசுமை யான நெல்வயல்களிலும், நூற்றுக்கணக்கான மாந்தர்கள் பரபரப்புடன் அங்கும் இங்கும் வந்து போய்க்கொண்டிருப் பதைக் கவனித்தார்கள். அப்போது அவர்கள் உள்ளத்தில் ''இன்னும் நூறு ஆண்டுக் காலத்தில் இவர்கள் அனைவரும் சாவின் பிடிப்பில் சிக்கி, அதற்குப் பலியாகிவிடுவார்களே!'' என்று நினைத்தார்கள்.

இந்தத் துன்ப நினைப்பு அவர்கள் இருவரின் உள்ளங்களை அழுத்தவே, நெடுநேரம்வரை ஒன்றும் பேசாமல் இருவரும் நடந்து சென்றார்கள். ''சாவும் அழிவும் உலகத்தின் தவிர்க்க முடியாத நியதிகள் ஆயின், அவற்றுக்கு எதிர் நியதிகளான சாவாமை, அழியாமை என்னும் நிரந்தரமான இரு நிலைகளும் இருக்கவே செய்யும்'' என்று அவர்களுள் ஒருவன் கூறினான்.

''ஆம். அந்த எதிர்மறையான இரு நிலைகளும் இருக்கத் தான் வேண்டும். ஆகவே சாவாமை என்னும் நிலையை அடைய நாம் முயல வேண்டும்'' என்று மற்றவன் பதில் சொன்னான்.

''ஆம், ஆம் உண்மைதான். அந்த நிலைமைக்கு உரிய வழியை எவன் முதலில் காண்கிருனே, அவன் மற்றவனுக்கு அந்த வழியைச் சொல்ல வேண்டும்'' என்று இருவரும் முடிவு செய்துகொண்டார்கள்.

பிறகு இருவரும் முதலில் தங்கள் குரு சஞ்சயனிடம் சென்ருர்கள். சாவிலிருந்து தப்புவதற்குரிய வழியைத் தங்களுக்குக் காட்ட வேண்டும் என்று வேண்டினுர்கள்.

தனக்குத் தெரிந்தவை அனைத்தையும் அவர்கள் இருவருக்கும் தான் கற்பித்துவிட்டதாகவும் சாவாமைக்கு உரிய வழி தனக்குத் தெரியாது என்றும் சஞ்சயன் பதில் சொன்னுர்.

இந்த நிலையில் சாரிபுத்திரன் பிச்சைவாங்கும் பொருட்டு ஒரு நாள் நகருக்குள் சென்ருர்.

அதே சமயத்தில் அசாஜி என்பவரும் பிச்சை வாங்கும் பொருட்டு நகருக்கு வந்திருந்தார். அவர் அடக்கத்துடன் குனிந்து நடந்து சென்ருர். அவர் உள்ளத்தில் அமைதி நிலவுகிறது என்பதை அவருடைய முகம் காட்டிற்று. இது மட்டு மல்லாமல் அவருடைய முகத்தில் ஒருவித பெருமிதமும் பிரகாசித்தது.

இதைச் சாரிபுத்திரன் கவனித்தார். தானும் மொக்கலானனும் நாடிக்கொண்டிருக்கும் அமைதி, இந்தப் பிக்குவிடம் இருப்பதை அவர் அறிந்தார். ஆகவே அவரைச் சாரிபுத்திரன் பின்தொடர்ந்தார்.

போதிய அளவு பிச்சை கிடைத்ததும் அசாஜி திரும்பினுர். பிறகு ஒதுக்குப் புறமான ஒரு இடத்தில் அமர்ந்து அதை உண்டு கைகளை அலம்பிக்கொண்டார்.

அப்போது, சிறிது தூரத்திலிருந்து கவனித்துக்கொண்டிருந்த சாரிபுத்திரன் அவரை அணுகி, ''நண்பரே! உங்கள் முகம் பெருமிதத்துடன் துலங்குகிறது. உங்களுடைய குரு யார்? உங்களுக்கு அவர் என்ன போதிக்கிருர்?'' என்று கேட்டார்.

இப்படி அவர் வினவியதும் அசாஜியின் உள்ளத்தில் உவகையும் கௌரவமும் மேலோங்கின. அவர் சாரிபுத்திர

னிடம். ''என் குருநாதரின் பெயர் கௌதம புத்தர். பெருமை மிகுந்த புத்தரைப்பற்றி நீங்கள் கேள்விப்பட்டது இல்லையா?'' என்று களிப்புடன் கேட்டார்.

''அண்மையில் ராஜகிருகத்துக்கு வந்திருக்கிறுரே அவரைப்பற்றியா? அவருடைய கொள்கைகள் என்ன? எந்தக் கொள்கைகளை அவர் உங்களுக்கு உபதேசிக்கிறுர்?'' என்று சார்புத்திரன் கேட்டார்.

அசாஜி பதில் சொல்ல முயன்ருர். ஆனல், தான் பெற்ற அனுபவத்தைச் சரியானபடி விளக்கிச் சொல்ல, அவருக்குச் சொற்கள் அகப்படவில்லை. ஆகையால் அவர் ''நான் புதிதாகச் சேர்ந்தவன்; குரு கூறுவதை உண்மை என்று நான் உணர்கிறேன். ஆயினும் அந்த அனுபவத்தைப் பிறருக்கு விளக்கி முழுதும் புரியும்படி சொல்லும் ஆற்றல் எனக்கு இல்லை'' என்று அடக்கமாகப் பதில் சொன்னுர்.

புத்தரைச் சந்தித்தால் தமது விருப்பம் நிறைவேறக் கூடும் என்று சாரிபுத்திரன் நினைத்தார்.

அதே சமயம் அசாஜி அவரிடம் ''தாங்கள் வந்து எனது குருநாதரைச் சந்தியுங்கள்'' என்று கூறினுர்.

''என் நண்பன் மொக்கலானனையும் அழைத்துக் கொண்டு, நான் வந்து புத்தர் பெருமானைச் சந்திக்கிறேன்'' என்று சாரிபுத்திரன் பதில் சொன்னுர்.

புத்தர் பெருமான் தங்கி இருக்கும் இடத்தைச் சாரிபுத்திரனுக்கு அறிவித்துவிட்டு, அசாஜி போய்விட்டார்.

சாரிபுத்திரன் தன் நண்பன் மொக்கலானனைச் சந்தித்து. தான் அசாஜியைச் சந்தித்ததையும் புத்தர் பெருமான் தங்கி இருக்கும் இடத்தையும் அறிவித்தார்.

பிறகு இருவரும் தங்கள் குரு சஞ்சயனைச் சந்தித்து, விவரத்தைத் தெரிவித்து விடைபெற்றுக்கொண்டு, புத்தர் பெருமானைச் சந்திக்கும் பொருட்டுப் புறப்பட்டுப் போயினர்.

புத்தர் பெருமானைச் சந்தித்து, அவருடன் உரையாடி, அவர்கள் இருவரும் பௌத்த பிக்குகள் ஆயினர்.

பௌத்த சமயத்தார் புத்தருக்கு அடுத்த படியாக, இந்த இருவரையும் பெரிதும் கொண்டாடுகிறுர்கள். ''என்

சீடர்களுள் இந்த இரு சீடர்களும் முதன்மையான ஸ்தானத்தைப் பெறுவார்கள்'' என்று இவர்கள் இருவரையும்பற்றி, புத்தர் பெருமான் கூறி இருக்கிறார்.

## ஆரம்ப எதிர்ப்புகள்

எந்த ஒரு நல்ல இயக்கத்துக்கும் சரி, சீர்திருத்த இயக்கத்துக்கும் சரி, புது இயக்கத்துக்கும் சரி, ஆரம்பத்தில் கட்டாயம் எதிர்ப்புகள் தோன்றவே செய்யும். எதிர்ப்புகளைச் சமாளிக்கும் தகுதியும் ஆற்றலும் அந்த இயக்கத்துக்கு இருக்குமாயின், அது நாளடைவில் விரிந்து பரவும்.

அரசியல் இயக்கமாயினும் சரி, சீர்திருத்த இயக்கமாயினும் சரி, அல்லது மத இயக்கமாயினும் சரி, ஆரம்பத்தில் அதை எதிர்த்து,அதிலுள்ள நன்மை தீமைகளை அலசி ஆராயாமல், எந்த ஒரு இயக்கத்தையும் மக்கள் ஏற்க மாட்டார்கள்.

தொடக்கத்தில், கிறிஸ்து சமயம், இஸ்லாமிய சமயம் போன்ற இயக்கங்களுக்கு எதிர்ப்புகள் இருந்ததைச் சரித்திரத்தில் நாம் படிக்கிறோம். அதைப் போலவே, பௌத்த சமய இயக்கத்துக்கும் எதிர்ப்புகள் உண்டாயின.

ஆரம்பத்தில் புத்தர் பெருமானை எதிர்த்தவன் மாரன். தாங்கள் செல்லும் வழியில் மக்களைச் செல்லவிடாது, ஆசை காட்டி மயக்கி, மக்களைத் தீய பாதைகளில் திருப்பிவிடும் சக்தியை மாரன் என்று குறிப்பிடுவது பௌத்த சமய மரபு. மாரனுடைய எதிர்ப்புகளை எல்லாம் சமாளித்து, புத்தர் பெருமான் வெற்றி பெற்றார்.

இதனால் அவருக்கு ஆதரவு கிடைக்கத் தொடங்கிற்று. முன்பு அவருக்கு ஆதரவு கொடுக்கக் கூடாது என்று உறுதியுடன் பேசிய ஐந்து பிக்குகளுமே புத்தருக்கு ஆதரவு கொடுத்துச் சீடர்கள் ஆயினர். எதிர்ப்பாளர்களே, பிறகு ஆதரவாளர்களாக மாறிவிட்டார்கள்; நாளுக்கு நாள் சீடர் குழாம் பெருகியதால், அரசனுடைய ஆதரவும் பௌத்த சங்கத்துக்குக் கிட்டிற்று.

எந்த இயக்கமும் விரிவடைந்து பரவும்போது, உள் பூசல்களும் பிணக்குகளும் தோன்றுவது இயல்பு.

சாரிபுத்திரரும் மொக்கலானரும் பௌத்த சங்கத்தில் சேர்ந்ததும், சிறு பிணக்கு ஒன்று ஆரம்பத்தில் தோன்றலாயிற்று. ''புதிதாக இப்பொழுது சங்கத்தில் சேர்ந்திருக்கும் பிக்குகள் இருவரும் தமக்கு அடுத்த ஸ்தானத்தைப் பெறும் தகுதியுள்ளவர்கள்'' என்று கூறி, தமக்கு இடத்திலும் வலத்திலும் அவர்கள் இருவரையும் புத்தர் பெருமான் வைத்துக்கொண்டார்.

புதிதாகச் சேர்ந்திருக்கும் பிக்குகள் இருவருக்கும் புத்தர் பெருமான் உயர் பதவிகள் வழங்கி இருப்பது குறித்து, மற்ற பிக்குகள் முணுமுணுக்கத் தொடங்கினர்.

பொறுமையினால் பிக்குகள் முணுமுணுப்பது புத்தர் பெருமான் காதுகளுக்கும் எட்டிற்று. ஆகவே, பிக்குகளைத் தம்பால் அழைத்து, ''அன்புள்ள பிக்குகளே! சலுகை காட்ட வேண்டும் என்ற கருத்து எனக்கு இல்லை. தகுதி காரணமாகவே அவர்கள் இருவரும் உயர் பதவியைப் பெற்று இருக்கின்றனர். முன்பு தோன்றிய புத்தர்களுள் ஒருவருக்கு இவர்கள் இருவரும் முக்கிய சீடர்களாய் இருந்து இருக்கின்றனர். பிற்காலத்தில் தோன்றும் புத்தருக்கும் தாங்கள் முக்கிய சீடர்களாய் விளங்க வேண்டும் என்று அவரிடம் இவர்கள் இருவரும் விண்ணப்பித்துக்கொண்டனர். அதனால் தான் சாரிபுத்திரனுக்கும் மொக்கலானனுக்கும் முக்கிய பதவிகளை வழங்க நேர்ந்தது'' என்று கூறினார்.

புத்தர் பெருமான் கூறிய விளக்கத்தைக் கேட்டு, இதர பிக்குகள் சமாதானம் அடைந்தனர்.

இதே சமயத்தில் மற்றொரு புறத்திலிருந்தும் புத்தருக்கு எதிர்ப்பு உண்டாயிற்று.

மகத நாட்டில் இருக்கும் முக்கிய குடும்பங்களைச் சேர்ந்த வாலிபர்கள், இல்லற வாழ்வைத் துறந்துவிட்டு, துறவறத்தைத் தழுவிப் பௌத்த பிக்குகள் ஆயினர். ''இந்தப் போக்கு தீமை பயப்பது'' என்று கூறி இல்லறப் பெண்டிரும் முதியோரும் புத்தர் பெருமானைக் குறைகூறத் தொடங்கினர்.

''கௌதம புத்தர், தமது போதனைகளால் பெற்றோரைப் பிள்ளைகள் அற்றவராகச் செய்துவிடுகிறார். கலியாணம் ஆன பெண்களை, வாழாத நிலைக்கு உட்படுத்துகிறார். குடும்பங்கள் சிதைந்து போகின்றன. சடை முடி தரித்த ஆயிரம் முனிவர்களைப் பிக்குகள் ஆக்கிவிட்டார்; சஞ்சயனின் சீடர்களையும் பிக்குகள் ஆக்கிவிட்டார்; சாரிபுத்திரனும் மொக்கலானனும் துறவறத்தை மேற்கொண்டுவிட்டனர். இன்னும் யார் யாரைத்தான் அவர் துறவி ஆக்கப் போகிறாரோ?'' என்று முணுமுணுத்து, புத்தர் பெருமான்மீது குறைகூறினர்.

பொதுமக்கள் இவ்வாறு குற்றம் சுமத்துவதை, பிக்குகள் புத்தர் பெருமானிடம் தெரிவித்தனர்.

அதற்குப் புத்தர் பெருமான், ''பிக்குகளே! இந்தக் கூச்சல் நீடிக்காது; ஏழு நாட்களுக்குப் பின்னர் தானே ஓய்ந்து போகும்; குறைகூறிப் பாட்டுப் பாடிப் பொதுமக்கள் உங்களைக் கேலி செய்தால் 'ததாகதர் நல்லறங்களைப் போதித்து, மக்களை வழிநடத்தி வீரர் ஆக்குகிறார்; அறிஞர்களைப் பார்த்து வீரர்களைப் பார்த்து, யாராவது முணுமுணுப்பார்களா? நேரிய வழியில் செல்லும் ஞானிகளைக் குறைகூறிச் சபிப்பவர்களும் உண்டா?' என்று பதில் சொல்லுங்கள்'' என்று உபாயம் சொல்லிக் கொடுத்தார்.

பொதுமக்கள் கேலி செய்தபோது, பெருமான் சொல்லிக் கொடுத்தப்படி பிக்குகள் பதில் சொன்னார்கள்.

இந்தப் பதிலைக் கேட்டதும், பொதுமக்கள் உண்மையை உணர்ந்தார்கள். ''ஆம்; ஆம். ததாகதர் மக்களுக்குத் தருமங்களைத்தான் போதித்து நல்ல வழியில் நடத்துகிறார்'' என்று ஒப்புக்கொள்ளத் தொடங்கினர்.

ஏழு நாட்களுக்குப் பின்னர் புத்தர் பெருமான் கூறியது போல், எதிர்ப்புக் கூச்சல் ஓய்ந்து போயிற்று.

# கௌதம புத்தர்

## வரலாறு

## அறநெறிப் பிரச்சாரம்

### உதாயி

**அ**ரண்மனை வாழ்வையும், மனைவியையும் மகனையும் துறந்து, தன் மைந்தன் சித்தார்த்தன் வெளியேறிவிட்டான் என்பது தெரியவந்து அரசன் சுத்தோதனன் பெரிதும் கவலை அடைந்தான்.

தன் மைந்தன் எங்கு சென்றான்? என்ன ஆனான் என்பது பற்றிச் சுத்தோதன மன்னன் அடிக்கடி விசாரித்துக்கொண்டிருந்தான். காட்டில் வசித்து, தன் மைந்தன் கடும் தவம் புரிவதாகத் தெரியவந்து, அவன் மனமுடைந்து வருந்தினான்.

உடனே தனது சிப்பந்திகளில் ஒருவனைச் சித்தார்த்தனிடம் அனுப்பி, ''முட்டாள்த்தனமான முயற்சிகளில் ஈடுபட்டு, கடும் தவம் புரிய வேண்டாம் என்றும், அதை விட்டுவிட்டு அரண்மனைக்குத் திரும்பும்படியும்'' சொல்லச் செய்தான்.

சிப்பந்தி சென்று சித்தார்த்தரிடம் அரசன் சுத்தோதனன் சொல்லி அனுப்பியதைச் சொன்னான். சித்தார்த்தர் சம்மதிக்க வில்லை. ஆகவே சிப்பந்தி மட்டும் சுத்தோதன மன்னனிடம் திரும்பி, சித்தார்த்தர் அரண்மனை திரும்பச் சம்மதிக்கவில்லை என்பதைத் தெரிவித்தான்.

சில ஆண்டுகள் கழிந்தன. தன் புதல்வன் போதனை செய்யத் தொடங்கி இருப்பதாகவும், மக்கள் திரளாக வந்து போதனைகளைக் கேட்பதாகவும் இப்போது மகத நாட்டின்

தலைநகரான ராஜகிருகத்தில் தம் மைந்தன் இருந்து வருவதாகவும் சுத்தோதன மன்னன் கேள்விப்பட்டான்.

மகத நாடு கபிலவாஸ்துவிலிருந்து வெகு தொலைவில் இருக்கும் நாடு. அந்த நாட்டுக்குச் செல்ல வேண்டுமாயின், கங்கையைக் கடந்தாக வேண்டும். தான் காலமாவதற்கு முன்னர் எப்படியாவது தன் புதல்வனைப் பார்த்துவிட வேண்டும் என்று சுத்தோதனன் பெரிதும் விரும்பினான். ஆகவே தம் பிரமுகர்களில் ஒருவனை அழைத்து "சிப்பந்திகளையும் உடன் அழைத்துக்கொண்டு நீ ராஜகிருக நகரம் செல்ல வேண்டும். வயது முதிர்ந்த நான், இறப்பதற்கு முன்னர் அவனைக் காண விரும்புவதாகச் சித்தார்த்தனிடம் நீ தெரிவிக்க வேண்டும். ஆகவே, கபிலவாஸ்துவுக்கு வரும்படி சித்தார்த்தனிடம் நீ கூற வேண்டும்" என்று சொன்னான்.

அரசன் இட்ட கட்டளைப்படி அந்தப் பிரமுகன் புறப்பட்டுச் சென்றான். ராஜகிருகத்துக்கு வெளிப்புறத்தே இருக்கும் வேணு வனத்துக்கு அவன் போய்ச் சேர்ந்தான்

அங்கே பெரும் திரளான மக்கள் புத்தர் செய்யும் உபதேசத்தைக் கேட்டுக்கொண்டிருப்பதை அவன் கவனித்தான். போதனைகள் முடிந்த பின்னர், தான் வந்திருக்கும் விவரத்தைப் புத்தரிடம் தெரிவிக்கலாம் என்ற கருத்துடன், கூட்டத்தின் ஒரு கோடியில், சிப்பந்திகளுடன் அந்தப் பிரமுகன் நின்றுகொண்டிருந்தான்.

புத்தர் செய்த உபதேசங்களும் விவாதங்களும் அவன் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்தன, பிராமணர்கள் கூறும் கருத்துக்களைப் போலன்றி இவர் கூறும் கருத்துக்கள் வேறு விதமாக இருப்பதையும், இந்தப் புதிய கருத்துக்கள் உள்ளத்துக்கு உவப்பையும் அமைதியையும் கொடுப்பதையும் அந்தப் பிரமுகன் உணர்ந்தான். வந்த காரியத்தை மறந்து, உபதேசத்தை ஆர்வத்துடன் அவன் கேட்டுக்கொண்டிருந்தான்.

உபதேசம் முடிந்ததும், கூட்டத்தை விலக்கிக்கொண்டு, அந்தப் பிரமுகன் புத்தர் பெருமானிடம் சென்றான். அவரை

முதலில் வணங்கி, தன்னைச் சங்கத்தில் சேர்த்துக்கொள்ளுமாறு வேண்டினான்.

புத்தரும் சம்மதித்து, அவனைச் சங்கத்தில் சேர்த்துக் கொண்டார். பௌத்த பிக்குவாகி, வேணு வனத்திலேயே அந்தப் பிரமுகன் தங்கிவிட்டான்.

தான் ராஜகிருகத்துக்கு அனுப்பிய பிரமுகன் திரும்பாது இருப்பதை அறிந்த சுத்தோதன மன்னன் வேறு ஒரு பிரமுகனை ராஜகிருகத்துக்கு அனுப்பினான்.

அந்தப் பிரமுகனும் புத்தரின் உபதேசங்களைக் கேட்டு, பௌத்த பிக்குவாகிவிட்டான். ஆகவே அவனும் கபில வாஸ்துவுக்குத் திரும்பவில்லை.

இரண்டாவது பிரமுகனும் கபிலவாஸ்து திரும்பாமல் இருப்பதை அறிந்த சுத்தோதன மன்னன், உதாயி என்பவனை ராஜகிருகத்துக்கு அனுப்பினான்.

உதாயி என்பவன், புத்தர் பிறந்த தினத்தன்று பிறந்தவன்; புத்தருடைய தோழன்.

வேணு வனத்தை அடைந்த உதாயி புத்தர் பெருமான் செய்த போதனைகளைக் கேட்டுச் சொக்கிப் போனான். தானும் உடனே சங்கத்தில் சேர்ந்துவிட விரும்பினான். ஆயினும் முதிய சுத்தோதன மன்னன் சொல்லிய செய்தியைப் புத்தருக்கு அறிவித்துவிட்டு, பிறகு சங்கத்தில் சேரலாம் என்ற முடிவுக்கு வந்தான் உதாயி. ஆகவே, சில நாள்கள்வரை அவன் பொறுத்து இருந்தான்.

புத்தர் பெருமான் ராஜகிருகத்துக்கு வந்து இரண்டு மாதங்கள் ஆகிவிட்டன. காசியைவிட்டுப் புறப்பட்டு ஐந்து மாதங்கள் கடந்து போயின.

இது சமயம் உதாயி புத்தர் பெருமானை அணுகி, ''பெருமானே! மழைக் காலம் கழிந்துவிட்டது. வெய்யில் காலம் தொடங்கி இருக்கிறது. கிராமப் புறங்களில் பிரயாணம் செய்வதற்கு ஏற்ற காலம் இது. எங்கு பார்த்தாலும் இயற்கை பசுமையுடன் காட்சி அளிக்கிறது. காட்டிலுள்ள மரங்கள் எல்லாம் பூக்களால் நிறைந்து, அழகுடன் ஜொலிக்கின்றன. பாதைகளில் எங்கும் ஒரே

நறுமணம். மயில்கள் தோகைகளை விரித்து ஆடுகின்றன; பறவைகள் மகிழ்வுற்று இனிய குரலில் பாடுகின்றன'' என்று சொன்னான்.

''கிராமப்புரத்து வசந்து காலக் காட்சிகளை இவ்வளவு விஸ்தாரமாக நீ வருணிக்கிறாயே ஏன்?'' என்று புத்தர் பெருமான் உதாயியைக் கேட்டார்.

''பெருமானே! தாம் காலமாவதற்கு முன்னர், உங்களைக் காண உங்கள் தந்தை பெரிதும் ஆசைப்படுகிறார். கபிலாவஸ்துவுக்கு வந்து, உங்கள் உறவினர்களுக்கு மத்தியில் நீங்கள் தருமத்தைப் போதித்தால் அவர்கள் அதனால் பெரிதும் மகிழ்ச்சி அடைவார்கள்'' என்று சொன்னான்.

''அவ்வாறே ஆகட்டும்'' என்று தமது சம்மதத்தைப் புத்தர் பெருமான் தெரிவித்தார்.

உதாயி மகிழ்ச்சி அடைந்தான். இது விவரத்தைச் சுத்தோதன மன்னருக்குத் தெரிவிக்கும் பொருட்டு அவன் கபிலவாஸ்துவுக்குப் புறப்பட்டுப் போனான்.



## தந்தையின் அழைப்பு

மகத நாட்டிலிருந்த புத்தர் பெருமான், தம் தந்தையைச் சந்திக்கும் பொருட்டு, சீடர்களுடன் கபிலவாஸ்துவுக்குப் புறப்பட்டார். வழி நெடுகிலும் இருக்கும் சிற்றூர் தோறும் மாஞ்சோலையில் தங்கி, தம்மைத் தரிசிக்க வரும் பொது மக்களுக்குப் புத்தர் பெருமான் உபதேசம் செய்தார்.

இப்படி இடை இடையே தங்கித் தங்கி, கபிலவாஸ்துவை நாடிப் புத்தர் பெருமானும் பிக்குகளும் சென்று கொண்டிருந்தார்கள். இடையில் இருக்கும் ஊர்களிலுள்ள பொதுமக்கள் புத்தர் பெருமான் செய்யும் உபதேசங்களைக் கேட்டு, மன அமைதி பெற்றார்கள். தாங்கள் இதுவரை நம்பி வந்த கோட்பாடுகளுக்கு, புத்தர் பெருமான் செய்யும் போதனைகள் மாறுபட்டு இருப்பதை அறிந்து, அவற்றைப் பற்றிச் சிந்திக்கத் தொடங்கினார்கள்.

வழியில் கங்கை ஆறு குறுக்கிட்டது. அதைக் கடக்க, தோணி எதுவும் அங்கு இல்லை. ஆகவே பெரிய தெப்பம் ஒன்று தயார் செய்து, அதன்மீது ஏறி, கைகளால் தெப் பத்தைச் செலுத்தி, கங்கையின் மறு கரையை அவர்கள் அடைந்தார்கள். தாங்கள் ஏறி வந்த தெப்பத்தை மறு கரையிலேயே விட்டுவிட்டு, தங்கள் பிரயாணத்தை மேலும் அவர்கள் தொடர்ந்தார்கள்.

அப்போது, வழியில் தேச சஞ்சாரம் செய்யும் துறவி ஒருவரை அவர்கள் சந்தித்தார்கள். புதிதாகத் துறவறத்தை மேற்கொண்ட பிக்கு ஒருவர், தேச சஞ்சாரம் செய்யும் துறவியுடன் பேச்சுத் தொடுத்தார்.

இருவரும் தருமம்பற்றி உரையாடத் தொடங்கினுர்கள். உரையாடல் விவாதமாக முற்றியது பெளத்த பிக்கு, புத்தர் பெருமான் போதித்த தருமங்களை ஆதரித்துக் கார சாரமாகப் பேசினுர். அமைதி இழந்து துடிதுடிப்புடன் தமது கருத்துக்களை அந்தப் பிக்கு வெளியிட்டார்.

குறிப்பிட்ட ஒரு இடம் வந்ததும் சஞ்சாரம் செய்து வரும் துறவி, பிக்குகளைவிட்டுப் பிரிந்து, வேறு பாதையில் திரும்பிவிட்டார்.

மாலை நேரம் ஆயிற்று. அப்போது இந்த நிகழ்ச்சிபற்றி, புத்தர் பெருமான் சிறு கதை ஒன்றைச் சொல்லி, அடியில் வருமாறு உபதேசித்தார்.

> ''ஒரு மனிதன் ஆற்றின் மறு கரையை அடையத் தெப்பம் ஒன்று கட்டினுன். பிறகு அதில் ஏறி அமர்ந்து, தமது கைகளையும் கால்களையும் பயன்படுத்தி, ஆற்றின் மறு கரையை அவன் அடைந்தான். அடைந்ததும் அந்த மனிதன் இந்தத் தெப்பத்தால் நான் பெரும் பயன் அடைந்தேன். இதன்மீது அமர்ந்து ஆற்றின் மறு கரைக்கு வந்துவிட்டேன். இந்தத் தெப்பத்தைத் தோளில் சுமந்து சென்றுல் தொடர்ந்து இந்தத் தெப்பம் பயன்படக் கூடும். ஆகவே இதை விடாது நான் வைத் துக்கொள்ளப் போகிறேன்' என்று சொன்னுல் அந்த மனிதனைப்பற்றி நீங்கள் என்ன நினைப்பீர்கள்?''

''சகோதரர்களே! நான் போதிக்கும் தருமம் இத்தகையது. நிர்வாணம் என்னும் மறு கரையை அடையும் நோக்கத்துடன் நாம் தருமத்தைக் கடைப்பிடிக்கிறோம். மன அமைதி என்னும் நிர்வாண நிலை கைகூடிவிட்டால், அதன் பின்னர் தருமம் தேவைப்படுவது இல்லை; அதைப் பற்றிக்கொண்டே இருக்க வேண்டிய அவசியமும் இருக்காது. தருமம் என்பது முடிவான ஒரு இலக்கை அடையத் தேவைப்படும் ஒரு சாதனமே யன்றி, அதுவே லட்சியம் அன்று. தேவைப்படாத ஒரு தோணி ஒரு சுமையாய் இருப்பதைப் போலவே, தேவைப்படாத தருமமும் ஒரு சுமையாகிவிடும்.''

இவ்வாறு புத்தர் பெருமான் கூறினார்.

''அப்படியானால், தருமத்தைப் பிறருக்கு எடுத்துக் கூறி, அவர்கள் மனதைத் திருத்துவது தேவையில்லையா?'' என்று புதிய பிக்குகளில் ஒருவர் கேட்டார்.

அதற்குப் புத்தர் பெருமான்,

''தருமம் என்பது சர்ச்சைக்கோ அல்லது விவாதத்துக்கோ உரிய கொள்கை அன்று; விருப்பு வெறுப்புகளை ஒதுக்கித் தள்ளிவிட்டு, உள்ளத்தை அமைதியாகவும் கம்பீரமாகவும் வைத்துக்கொள்ள உதவுகிற ஒரு வாழ்க்கை நெறியாகும் தருமம். அக வாழ்வில் அமைதியும் சுதந்திர உணர்வும் பெற்றவர்கள், பிற கோட்பாடுகளுக்கு எதிராகப் புதுக் கோட்பாடு ஒன்றைப் புகுத்த வேண்டிய அவசியம் இல்லை; பிற கருத்துக்களுக்கு மாறுபட்ட கருத்து ஒன்றைத் தெரிவிக்க வேண்டிய அவசியமும் இல்லை. உலகத்தில் காணப்படும் சச்சரவுகளைக் கடந்து உயர்ந்த நிலையை அடைந்து மன அமைதி பெற்றவன் அவன்; தெப்பத்தைத் தனக்குப் பின்னே விட்டு, மேல் நோக்கிச் சென்றுகொண்டிருப்பவன் அவன்'' என்று விளக்கினார்.

கங்கையைக் கடந்த பின்னர், புத்தர் தம் சீடர்களுடன் வடக்கு நோக்கிப் பிரயாணம் செய்து, வஜ்ஜி நாட்டுக்குச் சென்றார். அங்கு தாமதியாமல் வடமேற்கில் திரும்பி, தம்

தாய் பிறந்த கோலிய இனத்தவர் வாழும் தேவதாக நகருக்குப் போனார்.

இமய மலையின் அடிவாரத்தில் அந்த நகரம் இருந்தது. அக்கம் பக்கத்தில் கால்நடைகள் மேய்ந்துகொண்டிருந்தன. சித்திரை மாத வெய்யல் காய்ந்துகொண்டிருந்தது.

பிறகு தம் சீடர்களுடன் புத்தர், கபிலவாஸ்து நகரை அணுகிக்கொண்டிருந்தார்.

தம் புதல்வனை எதிர்கொண்டு வரவேற்கும் பொருட்டுச் சுற்றத்தாரையும், அமைச்சர்களையும் அழைத்துக்கொண்டு சுத்தோதன மன்னன் வந்தான்.

தூரத்திலேயே தம் புதல்வனை அவன் பார்த்துவிட்டான். தன் புதல்வனின் பெருமிதமான நடையும் தோற்றமும் அவனைப் புளகாங்கிதம் அடையச் செய்தன. சுத்தோதன மன்னனால் அந்த நிலையில் வாய் திறந்து பேச எதுவும் முடியவில்லை.

துறவு பூண்டு வரும் தன் மைந்தனுக்கு மரியாதை செய்யும் பொருட்டு, சுத்தோதனன் தேரிலிருந்து இறங்கிக் கொண்டான். முறைப்படி மரியாதை செய்துவிட்டு, ''ஏழு ஆண்டுகளாக எனக்கு இருந்த ஆசை இப்பொழுது நிறைவேறி இருக்கிறது'' என்று சொன்னான்.

பிறகு தம் தந்தைக்கு எதிரில் இருந்த ஆசனத்தில் புத்தர் பெருமான் அமர்ந்தார்.

சுத்தோதன மன்னன் தன் மைந்தனைக் கண் குளிர ஆவலோடு நோக்கினான். பெயரைச் சொல்லி ''சித்தார்த்தா!'' என்று பிரியத்துடன் அழைக்க ஆசைப்பட்டான். ஆயினும் அவனுக்குத் தைரியம் வரவில்லை.

அரசன் உள்ளத்தில் கவலையும் மகிழ்ச்சியும் மாறி மாறி உண்டாயின. தன் புதல்வன் பெரும் போதகனாக விளங்குவான் என்பதில் மகிழ்ச்சி; தனக்கு வாரிசாக இருந்து நாட்டை ஆள மாட்டானே என்பதில் வருத்தம். ஆயினும் தனது விருப்பத்தைச் சொல்லாமல் இருக்கச் சுத்தோதனனால் முடியவில்லை. ''எனது ராஜ்யத்தை உன்னிடம் ஒப்படைக்க

எனக்கு விருப்பம். நீயோ அதைத் துச்சம் என மதிப்பாய்'' என்று சொன்னான்.

அதற்குப் புத்தர்,

''உங்கள் மனநிலையை நான் அறிவேன். உங்கள் உள்ளத்தில் அன்பு பொங்கித் ததும்புகிறது; அதே சமயத்தில் மைந்தனின் நிலையை எண்ணிக் கவலையோடு ஏங்குகிறது. தன் மைந்தனை நேசிப்பதைப் போலவே பிறரையும் அவர் நேசிக்கட்டும். அப்படிச் செய்தால், சித்தார்த்தனைக் காட்டிலும் சிறந்த ஒருவனை, இந்த இடத்தில் வரவேற்கும் வாய்ப்பு அவருக்கு ஏற்படும் உண்மையை உபதேசிக்கும் புத்தனை, நேர்மையைப் பிரச்சாரம் செய்யும் புத்தனை அவர் வரவேற்க முடியும்'' என்று சொன்னார்.

தன் மைந்தனின் இனிய குரலைக் கேட்டதும், மெய் சிலிர்த்து, சுத்தோதன மன்னன் பூரித்துப் போனான்.

பிறகு தன் மைந்தனிடம் விடை பெற்றுக்கொண்டு அரண்மனை திரும்பினான்.

புத்தர் தம் சீடர்களுடன், ஆலமரச் சோலையில்-அதாவது நியக்குரோத வனத்தில் — தங்கினார்.

---

## அரண்மனையில் உபதேசம்

கவலையும் மகிழ்ச்சியும் மாறி மாறி உள்ளத்தில் ஊடாடிய காரணத்தால், செய்ய வேண்டிய காரியத்தைத் தக்க தருணத்தில் செய்ய, சுத்தோதன மன்னன் மறந்து போனான். தன் மைந்தனையும் பிக்குகளையும் அமுது செய்ய அழைக்காது சுத்தோதன மன்னன் அரண்மனை திரும்பி விட்டான்.

அரசன் அழைக்காதபடியால், மற்ற சாக்கிய குலப் பிரமுகர்கள், புத்தரையும் சீடர்களையும் தங்கள் இல்லத்துக்கு வந்து அமுது செய்ய அழைக்கவில்லை.

ஆகவே, மறு நாள் காலையில் திருவோட்டைக் கையில் எடுத்துக்கொண்டு, ஊருக்குள் வீடு வீடாகச் சென்று பெருமான் பிச்சை கேட்டார்.

மக்கள் வியப்படைந்தனர். தங்கள் நாட்டு அரசிளம் குமரன், மஞ்சள் நிற ஆடை அணிந்து, பிக்குவாகி, பிச்சை கேட்பதைக் கண்டு வியந்து நின்றனர். ''தேரில் ஏறிக் கொண்டு தெருவில் பகட்டாகப் பவனிவர வேண்டிய அரச குமாரன், திருவோட்டைக் கையில் ஏந்தி, தெருத் தெரு வாய்ப் பிச்சை கேட்கிறுரே!'' என்று ஒரு வித இகழ்ச்சிக் குறிப்போடு பேசத் தொடங்கினர்.

இந்தச் செய்தி, சுத்தோதன மன்னனுக்கும் எட்டிற்று. ஆகவே, பரபரப்புடன் எழுந்து வந்து தன் புதல்வன் புத்தரை அவன் சந்தித்தான். ''என்னை நீ ஏன் இப்படி அவமானப் படுத்துகிருய்? உனக்கும் உன்னுடன் வந்திருக்கும் பிக்கு களுக்கும் என்னுல் உணவு அளிக்க முடியும் என்பது உனக்குத் தெரியாதா?'' என்று கோபத்துடன் கேட்டான்.

''எங்கள் குலத்தவரின் வழக்கம் இது'' என்று புத்தர் பெருமான் அமைதியாகப் பதில் சொன்னுர்.

புத்தர் சொன்ன பதிலைக் கேட்டதும் சுத்தோதனன் ''அரச பரம்பரையில் பிறந்த நீயா இப்படிச் சொல்லுகிருய்? உன்னுடைய முன்னேர்கள் யாரும் இதுவரை இரந்து உண்டு வாழ்ந்தது இல்லையே?'' என்று கூறினுன்.

அதற்குப் புத்தர்,

''அரசே! தங்கள் பரம்பரை அரச பரம்பரை; எனது பரம்பரையோ புத்தர்களுடைய முதிய பரம்பரை! பிச்சை வாங்கி உண்டு வாழும் பரம்பரை அது'' என்று பதில் சொன்னுர்.

அரசன் பதில் எதுவும் சொல்லவில்லை. பெருமான் மேலும் தொடர்ந்து பேசினுர்:

''கிடைத்தற்கரிய புதையல் ஒன்று கிடைத்தால், அதை மைந்தன், தன் தந்தையிடம் கொடுக்க வேண்டும் என்பது மரபு. அதன்படி தருமம் என்னும் மதிப்பரிய மாணிக்கத்தை உங்களுக்கு நான் வழங்குகிறேன்.

அதை நீங்கள் ஏற்றுக்கொள்ளுங்கள். கனவு உலகத்திலிருந்து விழித்து எழுங்கள்; சோம்பி இராதீர்கள்; மனத்தில் உண்மையை ஏற்றுக்கொள்ளுங்கள். நேர்மையைக் கடைப்பிடிங்கள். பேரானந்த நிலை உங்களுக்குக் கிட்டும்'' என்று கூறினார்.

இதைக் கேட்டதும் சுத்தோதன மன்னன் உள்ளத்தில் முதல் நிலைக்கு உரிய மாற்றம் உண்டாயிற்று. ஆகவே, புத்தர் கையில் வைத்திருக்கும் திருவோட்டைத் தம் கையில் வாங்கிக்கொண்டு புத்தரையும் சீடர்களையும் தமது அரண்மனைக்கு அழைத்துப் போனான்.

அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் மிக்க மரியாதையுடன் புத்தரையும் அவருடைய சீடர்களையும் வரவேற்று உபசரித்தார்கள்.

அனைவரும் சாப்பிட்டு முடிந்த பின்னர், புத்தர் பெருமானைச் சூழ்ந்து அமர்ந்து இருந்தார்கள். தனக்கும் அங்கு குழுமி இருப்பவர்களுக்கும் உபதேசம் செய்யுமாறு அரசன் கேட்கவில்லை. என்ன கேட்பது, என்ன சொல்வது என எதுவும் புரியாது, மெய்ம்மறந்து அனைவரும் புத்தரையே பார்த்துக்கொண் டிருந்தார்கள். கடைசியாக, அரசன் சுத்தோதனன் அடியில் வருமாறு சொன்னான்:

''மகனே! நீ இவ்வாறு நடப்பது முறையா? ஆட்சிச் சுமையை நான் ஒருவன் மட்டும் தாங்குமாறு செய்துவிட்டு, நீ போய்விட்டாயே? அதனால் நான் அடைந்த ஏக்கம் கொஞ்சமா? பாலைவனத்தில் அலைந்து திரிபவன் தண்ணீருக்கு ஏங்குவதுபோல உன்னை நினைத்து நான் ஏங்கினேன்'' என்று சொன்னான்.

சிறிது நேரம் மௌனம் நிலவிற்று. அதன் பின்னர் புத்தர் தன் தந்தையிடம்,

''அரசே! அழிவில்லாத வாழ்க்கை என்னும் ஜீவ நீரை உங்களுக்கு நான் கொணர்ந்திருக்கிறேன். அந்த நீரைப் பருகுவதற்கு முன்னர், பாசம் நேசம் பற்று ஆசை ஆகியவை வற்றி வறண்டுவிட வேண்டும்'' என்று சொன்னார்.

மாலை நேரம் வந்தது. புத்தர் செய்யப் போகும் உபதேசத்தைக் கேட்க, மக்கள் திரளாக ஆவலுடன் காத்து இருந்தார்கள். புத்தர் அடியில் வருமாறு பேசினார்:

''இந்த அரண்மனையிலே வாழ்ந்து, உலகில் கிடைக்கும் இன்பப் பேறுகள் அனைத்தையும் நுகர்ந்து நான் காலத்தைக் கழித்தேன். போகப் பொருள்களை அனுபவித்ததன் பயனாய் நான் இன்பத்தைக் காண வில்லை. நல்ல காரியங்களைச் செய்வதனால் துன்பங்களைத் துடைத்துவிடலாம் என்று சிலர் கருதுகிறார்கள். அது தவறு. நல்ல காரியங்களைச் செய்வதனால் ஒருவன் மேலான நிலையை அடையலாமே தவிர, துன்பத்தை அவனால் துடைக்க முடியாது. வேலைக்காரனுக்கும் அடிமைக்கும் இருக்கும் துன்பத்தைப் போலவே, இளவரசனுக்கும் பிரமுகனுக்கும் துன்பம் என்பது கட்டாயம் உண்டு. தன் சொந்தப் பிள்ளை இறந்து போனால் ஏற்படும் துக்கம் இளவரசனுக்கும் உண்டு; வேலைக்காரனுக்கும் உண்டு. துன்பத்தில் வேதனைப் படாத மனிதனே உலகில் இல்லை. பிறப்பு, வாழ்வு இரண்டும் துன்பமானவை. முதுமை, நோய், சாவு ஆகிய மூன்றும் பிறப்பைத் தொற்றிக்கொண்டு இருக் கின்றன. என்னைச் சுற்றிலும் மக்கள், துன்பத்தில் துயருற்று, கண்ணீர் வடிப்பதை நான் கண்டேன். இதைப் போக்குவதற்கு வழி ஒன்று அவசியம் இருக்க வேண்டும் என்பதை நான் உணர்ந்தேன். துயரத்தைப் போக்க வழியில்லாத வாழ்க்கை, முழுதும் மோசமாகி விடக் கூடும் என்று கருதினேன். துன்பம் என்பது வாழ்க்கையின் நியதி அன்று; வாழ்க்கையில் அன்புக்கும் அமைதிக்கும் ஆனந்தத்துக்கும் குறைவு இல்லை; அவற்றை விடுத்து, நமக்கு நாமே துன்பத்தில் உழன்று அவதிப் படுகிறோம்'' என்று சொன்னார்.

இந்த உபதேசத்தை மக்கள் அமைதியுடன் கேட்டுக் கொண்டிருந்தார்கள். மேலும் தொடர்ந்து புத்தர் சொன்னார்:

''தருமம் என்பதுதான் உயிருட்டமுள்ள சட்டம்; அது எல்லாருக்கும் பொதுவானது. அதை விடுத்து நீங்கள் அலைந்தால், முடிவற்ற துயரங்களில் சிக்குண்டு நீங்கள் அவதிப்பட நேரும். தருமத்தைக் கடைப்பிடித்தால் அமைதியும் ஆனந்தமும் உண்டாகும். 'நான்' எனது என்னும் மோகத்தில் சிக்கிக்கொள்ளாமல் அனைத்தையும் நேசிப்பதே தருமம் எனப்படும்'' என்று கூறினார்.

இந்த உபதேசத்தைக் கேட்டதும் மக்கள் மட்டற்ற மகிழ்ச்சி அடைந்தார்கள்; இருள் அடர்ந்த அறைக்குள் ஒளியைக் கொணர்ந்தால், அந்த அறை பிரகாசிப்பதைப் போல, கேட்டுக்கொண்டு இருந்தவர்களின் முகங்கள் பிரகாசம் அடைந்தன.

சுத்தோதன மன்னன் இந்த உபதேசத்தைக் கேட்டு ஆனந்தக் கண்ணீர் சொரிந்தான். ஏக்கம், அகந்தை, ஏமாற்றம் முதலிய தீய பண்புகள் அவனைவிட்டு அகன்றன. ஆகவே, தன் மைந்தன் காட்டும் வழியிலே தானும் செல்ல அவன் பிரியப்பட்டான். ''அரசராய் இருப்போரும் இந்த நெறியில் செல்ல முடியுமா?'' என்று தன் மைந்தனை அரசன் வினவினன்.

''இந்த நெறியை அனைவரும் கடைப்பிடித்து ஒழுக முடியும்'' என்று பெருமான் பதில் சொன்னர்.

இதைக் கேட்டதும், சுத்தோதனன் ஆனந்தக் கடலில் மிதந்தான்.

## மனைவியும் மைந்தனும்

சுற்றத்தார் அனைவரும் புத்தருடைய உபதேசங்களைக் கேட்க வந்திருந்தார்கள். ஆனால் புத்தரின் மனைவி யசோதரை மட்டும் வரவில்லை. மற்றவர்கள் புத்தரைச் சந்திக்கும்படி அவளைத் தூண்டியும் யசோதரை அதற்குச் சம்மதிக்கவில்லை. ''மதிக்கத் தகுந்த பண்புகள் என்னிடம் இருக்குமாயின்,

என் கணவர் வந்து என்னைச் சந்திக்கட்டும்'' என்று அவள் சொல்லிவிட்டாள்.

தரத்திலோ அல்லது தகுதியிலோ அவருக்குத் தான் தாழ்ந்தவள் அல்லள் என்ற எண்ணம் அவளுக்கு இருந்தது.

யசோதரையின் மனப்போக்கைப் புத்தர் பெருமான் தெரிந்துகொண்டார். ஆகவே, அவர் தன் தந்தையிடம் ''யசோதரையின் அந்தப்புரத்துக்குச் சென்று அவளை நான் சந்திக்க விரும்புகிறேன்'' என்று கூறினர்.

பிறகு தம் முக்கிய சீடர் சாரிபுத்திரனையும் மொக்கல்லானனையும் உடன் அழைத்துக்கொண்டு, யசோதரையின் அந்தப்புரத்துக்கு அவர் போனர். அரசன் சுத்தோதனனும் அவர்களுடன் சென்றார்.

அப்போது புத்தர் தம் சீடர் இருவரிடம், ''என் முந்தைய மனைவி இன்னும் முதிர்ந்த பக்குவ நிலையை அடையவில்லை. ஆகவே என்னைக் கண்டதும், ஓடிவந்து அவள் என்னைப் பற்றிக் கொண்டால், ததாகதரைத் தொடக் கூடாது என்று நீங்கள் அவளைத் தடுக்க வேண்டாம்'' என்று எச்சரிக்கையாகச் சொல்லி வைத்தார்.

யசோதரை கந்தையை உடுத்துக்கொண்டும், தலையை மொட்டையடித்துக்கொண்டும் இருந்தாள்.

தனது அந்தப்புரத்துக்குள் வந்ததும் எழுந்து சென்று, புத்தருடைய பாதங்கள் இரண்டையும் பற்றிக்கொண்டு, தேம்பித் தேம்பி அவள் அழுதாள்.

பிறகு தம் மாமனரும் உடன் வந்திருப்பதை அறிந்து, நாணத்துடன் எழுந்து, அப்பால் விலகிக்கொண்டாள்.

அப்போது சுத்தோதன மன்னன் புத்தரிடம், ''யசோதரைக்கு உன்னிடம் அளவற்ற மதிப்பு. நீர் மஞ்சள் நிற ஆடையை அணிந்தாய் என்பதைக் கேள்விப்பட்டு, அவளும் மஞ்சள் ஆடையை உடுத்துக்கொண்டாள்; நாளைக்கு ஒரு முறைதான் சாப்பிடுகிருய்; வெறும் தரையில் படுத்துக்கொள்கிருய் என்பது தெரியவந்து அவளும் அவ்வாறே செய்து வருகிருள்'' என்று சொன்னன்.

அதற்குப் புத்தர், ''மேன்மை பெற்ற அரசே! பூர்வ

புண்ணிய பலத்தால் இவள் இவ்வாறு செய்து வருகிறாள். புத்தர் ஒருவனுக்குத் தாம் மனைவியாக வேண்டும் என்ற விருப்பம் இவளுக்கு இருந்தது. அந்தப் பேறு இப்போது யசோதரைக்குக் கிட்டி இருக்கிறது'' என்று சொன்னார்.

இதன் பின்னர் புத்தர் செய்த அறவுரைகளைக் கேட்டு, யசோதரையும் பௌத்த சமயத்தைத் தழுவினாள்.

பிறகு புத்தர் பெருமான் யசோதரையின் அந்தப்புரத்திலிருந்து வெளியே வந்தார்.

* * *

புத்தர் அரண்மனையில் தங்கி இருக்கும் சமயம் ஒரு நாள் யசோதரை, தன் புதல்வன் இராகுலனை, சிறந்த ஆடை அணிகலன்களால் அலங்கரித்தாள். பிறகு அவனிடம், ''குழந்தாய்! துறவிகளுக்கு மத்தியில் மஞ்சள் உடை அணிந்து அமர்ந்து இருக்கிறாரே, அவர்தான் உன் தந்தை. அவரை அணுகி வணங்கிவிட்டு, 'தந்தையே! எனக்கு உரிய பிதுர்ராஜ்யத்தைக் கொடுங்கள்! என்று கேள்'' என்று சொன்னாள்.

அப்போது இராகுலனுக்கு வயது எட்டு. தன் தாய் கூறிய தன் உட்கருத்தை அவனால் புரிந்துகொள்ள முடியவில்லை.

ஆகவே அவன் புத்தரை அணுகி, தன் தாய் சொல்லியதை அப்படியே மளமளவென்று பெருமானிடம் சொன்னான். ''தந்தையே! எனக்கு உரிய பிதுர்ராஜ்யத்தை எனக்குக் கொடுங்கள்'' என்று கேட்டான்.

பதில் ஒன்றும் சொல்லாது, புத்தர் மௌனமாக நெடிது நேரம் இராகுலனையே பார்த்துக்கொண்டிருந்தார். இந்த வயதில் இவனைத் துறவறத்தை மேற்கொள்ளச் செய்வது பொருத்தமாய் இருக்குமா என்று சிந்தித்துக்கொண்டிருந்தார்.

அப்போது இராகுலன் புத்தரிடம், ''தங்கள் நிழலில் நான் ஒதுங்கி இருப்பது எனக்கு பேரானந்தத்தைக் கொடுக்கிறது'' என்று சொன்னான்.

இந்த வார்த்தைகளைக் கேட்டதும், புத்தருக்கு ஏற்பட்ட ஐயம் மறையலாயிற்று. ஆகவே, அவர் தன் மைந்தனை

நோக்கி, ''குழந்தாய்! போதி மரத்தில் எனக்குக் கிடைத்த பிதுர்ராஜ்யத்தையே உனக்கு நான் வழங்கப் பிரியப்படு கிறேன்'' என்று சொன்னார்.

இதன் பின்னர் சாரிபுத்திரனிடம் திரும்பி, ''இவனுக்குத் துறவற தீட்சை செய்து வை'' என்று புத்தர் கட்டளை இட்டார்.

அதன்படி இராகுலனுக்கு, சாரிபுத்திரன் தீட்சை கொடுத்தார். பௌத்த தருமங்களை, அவனுடைய வயதுக்கு ஏற்பப் போதித்தார்.

இராகுலனும், சாரிபுத்திரனுக்குச் சீடனாகி, பௌத்த தருமங்களைப் பயின்று வந்தான்.

## தந்தையின் விருப்பம்

**பு**த்தருக்குச் சிற்றன்னை ஒருத்தி இருந்தாள்: அவள் பெயர் மகாபிரஜாபதி; அவள்தான் புத்தரை வளர்த்தவள்.

இவளுக்குச் சொந்த மகன் ஒருவன் இருந்தான். அவன் பெயர் நந்தன்.

புத்தர் கபிலவாஸ்துவுக்கு வந்த சமயம், நந்தனுக்குத் திருமணம் பேசி நிச்சயிக்கப்பட்டு இருந்தது; அத்துடன் அவனுக்கு இளவரசுப் பட்டம் கட்டுவதற்குரிய ஏற்பாடு களும் நடந்துகொண்டிருந்தன.

புத்தர் யசோதரையின் அந்தப்புரத்திலிருந்து திரும்பிக் கொண்டிருந்த சமயம், வழியில், நந்தனைச் சந்தித்தார். தாம் கையில் வைத்திருக்கும் திருவோட்டை வாங்கிக் கொள்ளும்படி, நந்தனிடம் அவர் சொன்னார்.

நந்தனும் திருவோட்டைப் பெருமானிடமிருந்து தன் கைகளில் வாங்கிக்கொண்டு, புத்தரைப் பின்தொடர்ந்தான்.

நந்தனுக்கு நிச்சயிக்கப்பட்டு இருந்த பெண், கரிய, நீண்ட, பளபளக்கும் தனது கூந்தலை வாரி ஒழுங்குபடுத்திக் கொண்டிருந்தாள். அப்போது தனக்கு வரவிருக்கும் கணவனின் இனிய குரலைக் கேட்டு, சாளரத்தைத் திறந்து கொண்டு அவள் எட்டிப் பார்த்தாள்.

நந்தன் திருவோட்டைக் கையில் ஏந்திக்கொண்டு புத்தருடன் செல்வதைக் கவனித்த அவள் ''காதலரே! விரைவில் திரும்பிவிடுங்கள்'' என்று கூறினாள்.

நந்தன் திரும்பிப் பார்த்துவிட்டு, புத்தரைப் பின் தொடர்ந்து போனான். அவளோ தனக்கு வரவிருக்கும் கணவன் உருவம் மறையும்வரையில் அவனையே பார்த்துக் கொண்டு ஏக்கத்துடன் நின்றாள்.

புத்தரும் நந்தனும் பிறரும் நியக்குரோத வனத்துக்குப் போய்ச் சேர்ந்தார்கள். அதுவரை துறவறத்தை மேற்கொள்ள வேண்டும் என்ற விருப்பம் நந்தனுக்கு ஏற்படவில்லை.

வனத்தை அடைந்ததும் நந்தனுடைய உள்ளத்தில் நிம்மதி ஏற்பட்டது; ஆகவே, அரச போகத்தைத் துறந்து, தானும் துறவற வாழ்வை மேற்கொள்ள நந்தன் விரும்பினான் தனது விருப்பத்தைப் புத்தர் பெருமானிடமும் அவன் தெரிவித்தான்.

கபிலவாஸ்துவுக்குப் புத்தர் வந்த மூன்றாம் நாளன்று, நந்தன் துறவறத்தை மேற்கொண்டான் என்று சில நூல்கள் கூறுகின்றன; சில நூல்கள் இரண்டாம் நாள் அன்று நந்தன் துறவறத்தை மேற்கொண்டான் என்று கூறுகின்றன.

புத்தர் கபிலவாஸ்துவுக்கு வந்த ஏழாம் நாள் அன்று இராகுலன் துறவறத்தை மேற்கொண்டதாகத் தெரிகிறது.

தனக்குப் பின்னர் நாட்டை ஆள வேண்டிய தன் இரண்டாவது புதல்வன் நந்தனும் தன் பேரன் இராகுலனும் துறவறத்தை மேற்கொண்டு இருக்கும் செய்தியை அறிந்து, சுத்தோதனன் பெரிதும் துயரம் அடைந்தான். ''எனக்குப் பின்னர் இந்த நாட்டை யார் ஆள்வார்கள்? வாழையடி வாழையாகத் தழைத்து ஓங்கிப் பெருக வேண்டிய குலம், சந்ததியின்றி, அழியப் போகிறதே'' என்று ஏங்கி ஏங்கி வருந்தினான்.

பின்னர் புத்தர் தங்கி இருக்கும் இடத்துக்கு விரைந்தான். அவரை அங்கு சந்தித்து ''எனது இரு புதல்வர்களும் துறவறத்தை மேற்கொண்ட சமயம், எனக்கு வருத்தம் அதிகம்

இருந்தது. எனினும், இராகுலன் இருக்கிறான் என்பதனால், குலம் தழைத்து ஓங்கவும், நாட்டைப் பரிபாலிக்கவும் வழி இருக்கிறது என்று நினைத்து நான் சிறிது ஆறுதலுடன் இருந்தேன். இப்பொழுது இராகுலனும் துறவறத்தை மேற்கொண்டுவிட்டதால், நமது குலம் வாழையடி வாழையாகத் தழைத்து ஓங்க இனி வழியில்லை. ஆகவே, பெற்றோரின் அனுமதியின்றி, பிள்ளைகள் துறவறத்தை மேற்கொள்ளச் சங்கத்தில் அனுமதித்தல் கூடாது. இப்படி ஒரு விதி சங்கத்தில் இருப்பது அவசியம்'' என்று விண்ணப்பித்துக் கொண்டான்.

தன் தந்தையின் விருப்பத்துக்குப் பெருமானும் இசைந்தார். ''பெற்றோரின் அனுமதியின்றி, பிள்ளைகளைச் சங்கத்தில் சேர்த்துக்கொள்வது கூடாது'' என்பதை ஒரு விதியாகக் கடைப்பிடிக்கும்படி, பிக்குகளுக்குப் புத்தர் யோசனை சொன்னார்.

இதன் பின்னர் சுத்தோதன மன்னன் விடைபெற்றுக் கொண்டு அரண்மனை திரும்பினான்.

பிறகு நாட்டின் ஆட்சிப் பொறுப்பைத் தகுந்த ஒருவனிடம் ஒப்படைக்கச் சுத்தோதன மன்னன் ஏற்பாடு செய்தான். சாக்கிய குலப் பிரமுகர்களைக் கூட்டி, அவர்களின் சம்மதம் பெற்று, புத்தரின் சிற்றப்பா புதல்வன் பத்தியன் என்பவனிடம் ஆட்சிப் பொறுப்பைச் சுத்தோதன மன்னன் ஒப்படைத்தான்.

பிறகு அவனும் துறவற வாழ்வை மேற்கொண்டான்.

---

## காளையரின் துறவுக் கோலம்

கபிலவாஸ்துவுக்கு வந்த புத்தர் பெருமான் தமது ஒழுக்கத்தாலும் உபதேசத்தாலும் மக்களின் மனத்தைக் கவர்ந்தார். அதனால் சாக்கிய குல மக்களிடையே பௌத்த தருமம் பரவத் தொடங்கிற்று. ஆடவரும் பெண்டிரும் இளையோரும் முதியோரும், பிரபுவும் பிச்சைக்காரனும்

வேறுபாடு இன்றி, பௌத்த சமயத்தைத் தழுவினர்; சிலர் இல்லறத்திலிருந்துகொண்டே, பௌத்த சமய அறநெறிகளைக் கடைப்பிடித்து ஒழுகினர்; சிலர் ஆர்வ மேலீட்டினால், துறவறத்தை மேற்கொண்டு, பிக்குகளாகவும் பிக்குணிகளாக வும் மாறி, வாழத் தொடங்கினர்.

இதன் பின்னர், புத்தர் கபிலவாஸ்துவிலிருந்து ராஜ கிருகத்துக்குப் புறப்பட்டார். வழியில் இருக்கும் மள்ளர் களின் நாட்டில் அனுருப்பியா என்னும் ஒரு சிற்றூரில் அப்போது அவர் தங்கினர்.

அது சமயம் சாக்கிய குலத்தில் உதித்த காளையர்கள் பலரும் கோலிய குலத்தில் உதித்த காளையர்கள் பலரும் புத்தர் பெருமான் தங்கியிருக்கும் மாந்தோப்புக்கு வந்து, உப தேசம் பெற்று, பௌத்த பிக்குகள் ஆயினர்; இவர்களுள் ஆனந்தனும், தேவதத்தனும் குறிப்பிடத்தக்கவர்கள்.

ஆனந்தன் என்பவன், புத்தரின் சிறிய தந்தை சுக்கிலோதனன் புதல்வன். இவன் உபதேசம் பெற்ற நாள் தொடங்கி, எப்பொழுதும் புத்தர் பெருமானுடன் கூடவே இருக்கும் பாக்கியத்தைப் பெற்றவன்; புத்தர் பரிநிர்வாணம் அடையும்பொழுது அருகே இருந்த அணுக்கத் தொண்டன்; புத்தரை உள்ளன்போடு நேசித்தவர்களுள் இவன் முதன்மையானவன்; புத்தரின் வரலாற்றுக் குறிப் புகள் பல, இவன் வாய்மொழி மூலம் கிடைத்தவை; அவை இப்பொழுது சுத்த பிடகத்தில் இடம் பெற்றுள்ளன.

தேவதத்தன் என்பவன் புத்தருடைய அத்தை மகன்; கோலிய மரபில் பிறந்தவன்; யசோதரையின் தம்பி; பௌத்த பிக்குவாகி, பதவி வேட்டையில் நாட்டம்கொண்டு அலைந்தவன். புத்தரைக் கொல்வதற்கு முயன்றவன்; பௌத்த சங்கத்தில் பூசலையும் பிணக்கையும் தோற்று வித்தவன்.*

---

*இவனைச் சில நூல்கள் ஆனந்தனின் சகோதரன் என்றும் புத்தருக்குச் சிறிய தந்தையின் பிள்ளை என்றும் கூறுகின்றன.

இந்த இருவரையும் தவிர்த்து, அன்று பௌத்த சமயத்தைத் தழுவிச் சங்கத்தில் சேர்ந்தவர்களுள் அனுருத்தன் என்னும் அரச குமாரனும் உபாலி என்னும் நாவிதனும் குறிப்பிடத்தக்கவர்கள்.

இவர்களில் அனுருத்தன் என்பவன் பிற்காலத்தில், தத்துவ நூல் ஆராய்ச்சிகளில் தலை சிறந்து விளங்கினான்; புத்தரைப் போலவே இவனும் முதலில் சுகபோகத்தில் அழுந்திக் கிடந்தவன்; மூன்று அரண்மனைகளில் வசித்தவன்; இசைக் கலையில் பெரிதும் ஈடுபட்டு இருந்தவன்.

உபாலி அரண்மனை நாவிதனாய் இருந்தவன்; தாழ்ந்த குலத்தான் ஒருவனுக்கு, பௌத்த சங்கத்தில் சேரும் வாய்ப்புக் கிட்ட மாட்டாது என்ற எண்ணத்துடன் இருந்து வந்தவன்; பிற்காலத்தில் சிறந்த பிக்குவாக விளங்கியவன். விநய பிடகத்தைத் தொகுப்பதற்கு உதவியவர்களுள் முதன்மையானவன். இவர்கள் அனைவரும் எப்படிப் பௌத்த பிக்குகள் ஆயினர் என்பது வருமாறு:

மன்னன் சுத்தோதனன் தம்பியருள் அமுதோதனன் என்பவன் ஒருவன். அவனுக்கு மகாநாமன், அனுருத்தன் என்று இரு புதல்வர்கள் இருந்தார்கள். இவர்களுள் மகா நாமன் மூத்தவன்; இவன் குடும்ப நிர்வாகத்தைக் கவனித்து வந்தான். இளையவன் போக நுகர்ச்சியில் — அதாவது ஆடல் பாடல்களில் — அழுந்திக் கிடந்தான்.

சாக்கிய குலத்துக் குடும்பங்களில் ஒவ்வொரு குடும்பத்திலிருந்தும், எவனாவது ஒரு ஆண் மகன், பௌத்த பிக்கு ஆகி, பௌத்த சங்கத்துக்குத் தன்னை அர்ப்பணித்துக்கொண்டான்: ஆனால் அமுதோதனன் குடும்பத்திலிருந்து எந்த ஆண் மகனும் பிக்கு ஆகவில்லை. இது மகாநாமனுக்குப் பெரிதும் வேதனை அளித்தது.

ஆகவே ஒரு நாள் மகாநாமன், தன் தம்பி அனுருத்தனிடம் சென்றான்; அப்போது அனுருத்தன், ஆடல் பாடல்களை மெய்ம்மறந்து ரசித்துக்கொண்டிருந்தான்; மகாநாமன் அவனிடம், ''தம்பி! முக்கியமான ஒரு விஷயம்பற்றி உன்னிடம் பேச வந்திருக்கிறேன். பல நாட்களாக இந்த விஷயம்

எனது உள்ளத்தை உறுத்திக்கொண்டு இருக்கிறது; நம் குடும்பத்திலிருந்து யாராவது ஒருவன் துறவறத்தை மேற்கொண்டு, பௌத்த சங்கத்தில் சேராமல் இருப்பது, நமது குடும்பத்துக்கே பெரிய ஒரு இழுக்காகும். நாம் தாராளமாகத் தானங்கள் செய்கிறோம் என்பது உண்மைதான். ஆனால் தானங்கள் செய்வது மட்டும் போதாது. தருமத்துக்கே முழுதும் ஒருவன் தன்னை அர்ப்பணித்துக்கொள்வது தான் நம் குடும்பத்துக்குப் பெருமையாய் இருக்கும் உலக முழுதும் தருமம் பரவ நாம் உழைக்க வேண்டும்'' என்று என்று சொன்னான்.

''பிக்குவாக நீங்கள் விரும்புகிறீர்களா?'' என்று அனுருத்தன் அசட்டையாகக் கேட்டான்.

''எனக்கு விருப்பம்தான். ஆயினும் குடும்ப நிர்வாகமும் விவசாய வேலைகளும் என்னைப் பின்னுக்கு இழுக்கின்றன. இவற்றைக் கவனிக்கவே எனக்கு நேரம் சரியாய்விடுகிறது'' என்று பதில் சொன்னான் மகாநாமன்.

''அப்படியானால் நான் பிக்கு ஆக வேண்டும் என்கிறீர்களா?'' என்று கவலையுடன் கேட்டான் அனுருத்தன்.

''ஆம், நான் அப்படித்தான் நினைக்கிறேன். நம் குடும்பத்தில் யாராவது ஒருவன் பிக்குவாகி, அதைப் பெருமைப் படுத்துவது அவசியம் ஆகும். என்னைக் காட்டிலும் குடும்பத்தைப் பெருமைப்படுத்துவதற்கு உரிய வாய்ப்பு உனக்கு மிகுதியாக உண்டு'' என்று கூறினான் மகாநாமன்.

இப்படி அவன் சொன்னதும் அனுருத்தன் திடுக்கிட்டு எழுந்து உட்கார்ந்தான். ''அண்ணா! நான் சுகமாக வளர்க்கப்பட்டவன் என்பதை நீங்கள் நன்கு அறிவீர்கள். பட்டுப் பட்டாடைகள் அணிந்து, வசதிகள் நிறைந்த மாளிகைகளில் வாழ்ந்தவன் நான். சிப்பந்திகளும் வேலைக்காரர்களும் ஊழியம் புரிய ஒய்யாரமாய் வாழ்ந்த என்னால், எப்படித் துறவறத்தை மேற்கொள்ள முடியும்? மோசமான உணவை உண்ணும்போது எனக்கு வயிறு குமட்டுமே? தரையில் படுககவும் கந்தைகள் கட்டிக்கொள்ளவும் என் மனம் ஒருப் படாதே! என் செய்வேன்!'' என்று பரிதவித்தான்.

''அநுருத்தா! அப்படியானால் குடும்ப நிர்வாகப் பொறுப்பை நீ ஏற்றுக்கொள். நான் துறவற வாழ்வை மேற்கொள்கிறேன்'' என்று கூறினான் மகாநாமன்.

''குடும்ப நிர்வாகம் எப்படிச் செய்ய வேண்டும்? என்னால் சரியாக நிர்வகிக்க இயலாவிடின் என் செய்வது?'' என்று சந்தேகத்துடன் கேட்டான் அநுருத்தன்.

''முதலாவது வயல்களை உழ ஏற்பாடு செய்ய வேண்டும். அதன் பின்னர் விதைக்க வேண்டும்; பின்னர் நிலத்துக்குத் தண்ணீர் பாய்ச்ச வேண்டும்; மிகுந்துள்ள நீரை வடிகாலில் கழிக்க வேண்டும்; களைகளைப் பிடுங்கி எறிய வேண்டும்? ஆடுமாடுகள் வந்து மேய்ந்துவிடாதபடியும் மற்ற விலங்குகள் வயலைப் பாழ்படுத்திவிடாதபடியும் பாதுகாக்க வேண்டும். கதிர் முற்றியதும் அறுவடை செய்ய வேண்டும்; கட்டுகள் கட்டிக் களத்துக்கு எடுத்துச் செல்ல வேண்டும்; பிறகு போர் அடித்து நெல்லைக் குவிக்க வேண்டும். பிறகு தூற்றி, பதரும் தூசும் போக்கி, களஞ்சியத்தில் நெல்லைச் சேர்க்க வேண்டும். இப்படி ஒரு ஆண்டு மட்டும் செய்தால் போதாது; ஆண்டு தோறும் தவறாது இந்தக் காரியங்கள் அனைத்தையும் செய்தாக வேண்டும்'' என்று ஒன்றும் விடாமல் விவரித்துச் சொன்னான் மகாநாமன்.

இந்த விவரங்களை எல்லாம் கேட்ட அநுருத்தன் வெலவெலத்துப் போனான். ''அண்ணா! தாங்கள் சொல்லுவதைப் பார்த்தால், குடும்பப் பாரத்தை என்னால் தாங்க முடியாது என்று தோன்றுகிறது. துறவறத்தை மேற்கொள்ள இயலாத நிலையில், தாயார் என்னைச் செல்லமாக வளர்த்து விட்டாள். இவை இரண்டையும் தவிர்த்து, வேறு வழி ஏதாவது உங்களுக்குத் தோன்றுகிறதா?'' என்று கேட்டான் அநுருத்தன்.

''இந்த இரண்டு வழிகளைத் தவிர்த்து வேறு வழி எதுவும் எனக்குத் தெரியவில்லை'' என்று மகாநாமன் பதில் சொன்னான்.

''அப்படியானால் பெருமானை அணுகி, நான் துறவறத்தை மேற்கொள்கிறேன்'' என்றான் அநுருத்தன்.

மகாநாமன் மகிழ்ச்சி அடைந்தான். ''தம்பி! அன்னை யின் அனுமதியை முதலில் பெற்றுக்கொள்'' என்று நினைவு படுத்தினான்.

அதன்படி மறுதினம் அனுருத்தன் தம் அன்னையை அணுகி, பிக்குவாக அனுமதி கேட்டான்.

அதற்கு அவள் முதலில் சம்மதிக்கவில்லை பிறகு பத்தி யன் சங்கத்தில் சேர்ந்தால், தன்னையும் சங்கத்தில் சேர அனு மதிக்க வேண்டும் என்று தாயிடம் சொன்னான்.

''அரசன் பத்தியன் சங்கத்தில் சேர்ந்தால், நீயும் சங்கத் தில் சேரலாம்'' என்று அனுருத்தன் அன்னை அனுமதி கொடுத்தாள்.

ஆகவே அனுருத்தன் சென்று அரசன் பத்தியனைச் சந்தித் தான். முறைப்படி வணங்கிவிட்டு, ''அரசே! பௌத்த சங் கத்தில் சேர, நீங்கள் எனக்கு ஒரு பெரும் தடையாய் இருக்கி றீர்கள்'' என்று கூறினான் அனுருத்தன்.

''நானா?'' என்று ஆச்சரியத்துடன் கேட்டான் அரசன் பத்தியன்.

''தங்களைத் தவிர்த்து வேறு யாரும் தடையாய் இல்லை'' என்று கூறினான்.

ஆச்சரியமுற்ற அரசன், ''நானே சங்கத்தில் சேர்வதில் விருப்பம் உள்ளவன்; அப்படியிருக்கும்போது, பிறரைச் சங் கத்தில் சேர வேண்டாம் என்று நான் தடுப்பதாகச் சொல் வது எப்படிப் பொருந்தும்?'' என்று கேட்டான்.

இப்படி அரசன் சொன்னதும், அனுருத்தன் உவகை யோடு, ''அரசே! தாங்கள் சங்கத்தில் சேர்ந்தால், என் அன்னையும் என்னைச் சங்கத்தில் சேர அனுமதிப்பாள்'' என்று சொன்னான்.

''அப்படியானால் ஏழு வருடங்கள்வரை பொறுத்திரு. பிறகு நாம் இருவரும் சங்கத்தில் சேரலாம்'' என்றான் அர சன் பத்தியன்.

''அப்படிப் பொறுத்து இருக்க முடியாது'' என்று சொன் னான் அனுருத்தன்.

''ஏழு நாட்களாவது பொறுத்திரு'' என்றான் அரசன்.

அதற்கும் அனுருத்தன் சம்மதிக்கவில்லை.

அதனால் ஆட்சிப் பொறுப்பை, தன் புதல்வர்களிடம் அன்றே ஒப்படைத்தான் அரசன் பத்தியன். அனுருத்தனையும் அழைத்துக்கொண்டு, புத்தர் பெருமானிடம் போனான். ஆனந்தன், பக்கு, சிம்பிலன், தேவதத்தன் ஆகியவர்களையும் நாவிதன் உபாலியையும் அழைத்துக்கொண்டு போனான்.

எல்லாரும் பகவான் தங்கி இருக்கும் அனுரூப்பியா என்னும் சிற்றூரை நாடிப் போனார்கள். வழியில் வந்த ஒரு மாந்தோப்பில் தங்கி, பட்டுப் பட்டாடைகளைக் களைந்து நாவிதனிடம் கொடுத்து வைத்துக்கொள்ளும்படி சொன்னார்கள்.

நாவிதன் உபாலியும் சம்மதித்து வாங்கிக்கொண்டான். ஆனால் அவனுடைய உள்ளத்தில் வேறு ஒரு எண்ணம் உதித்தது. ''இந்த உயர்ந்த பட்டாடைகளை எல்லாம் ஊருக்குள் எடுத்துச் செல்வேனாயின், தீய வழியில் இவற்றை நான் திருடி வந்ததாகக் கருதி, சாக்கியர்கள் என்னைக் கொன்றுவிடுவார்கள். ஆகவே, ஊருக்குள் திரும்பாது இளவரசர்களுடன் செல்வதே உசிதம்'' என்று கருதினான்.

அதன்படி அவன் வேகமாகச் சென்று இளவரசர்களுடன் சேர்ந்துகொண்டான்.

எல்லாரும் சேர்ந்து சென்று, அனுரூப்பியாவில் மாந்தோப்பில் தங்கி இருக்கும் புத்தர் பெருமானைச் தரிசித்தார்கள். தங்களைச் சங்கத்தில் சேர்த்துக்கொள்ள வேண்டும் என்று விண்ணப்பித்துக்கொண்டார்கள்.

பெருமானும் இசைந்தார்.

முதலில் நாவிதனுக்குத் தீட்சை செய்விக்கும்படியும், அதனால் உயர்குலத்தோர் என்ற அகந்தை தங்களைவிட்டு அகல வழி பிறக்கும் என்றும் அரசகுமாரர்கள் தெரிவித்துக் கொண்டார்கள்.

அரச குமாரர்களின் விருப்பப்படி உபாலி, முதலில் சங்கத்தில் சேர்த்துக்கொள்ளப்பட்டான்; பிறகு மற்றவர்கள் சேர்த்துக்கொள்ளப்பட்டார்கள்.

எழுவரும் ஒரே நாளில் சங்கத்தில் சேர்ந்தபோதிலும், ஒவ்வொருவரும் முன்னேற்றத்தில், தனித் தனி நிலையில் நின்றார்கள். தேவதத்தன் மாறுபட்ட நிலையில் நின்றான்.

* * *

இங்கு ஒரு உண்மையை நாம் நினைவுப்படுத்திக்கொள்வது பயனுடையதாய் இருக்கும். பௌத்த சமயக் கொள்கைப் படி, ஞானம் பெறுவதோ அல்லது நிர்வாண நிலையை அடைவதோ, திடும் என ஏற்பட முடியாது; படிப்படியாக முன்னேறிச் சென்றுதான் ஒருவன் மேலான கதியை அடைய முடியுமே யன்றி, அதாவது தருமத்தைக் கடைப்பிடிப்பதன் மூலம் மேலான கதியை அடைய முடியுமே யன்றி, பக்தியினாலோ அல்லது ஆண்டவன் அருளினாலோ ஒருவன் மேலான கதியை உடனடியாக அடைந்துவிட முடியாது.

பெரியவர்களாய் இருப்போர், புத்தராய் அவதாரம் செய்தோர், கடைத்தேறுவதற்குரிய வழியை மட்டும்தான் காட்ட முடியுமே யன்றி, பிறரை அவர்களால் தாமே கடைத் தேற்ற முடியாது.

நிர்வாண நிலையை அடைவதற்குப் பௌத்த சமயத்தில் எட்டு நிலைகள் உண்டு. ஒவ்வொரு நிலையையும் கடந்துதான், ஒருவன் எட்டாவது நிலையை அடைய முடியுமே யன்றி, முதல் நிலையில் இருப்பவன், எட்டாவது நிலைக்கு ஒரே படியாகத் தாவி, நற்கதியை அடைந்துவிட முடியாது.

அதனால்தான், ஒரே சமயத்தில் பௌத்த சங்கத்தில் சேர்ந்தபோதிலும், ஆனந்தன், அனுருத்தன், உபாலி முதலானோர் தத்தம் தகுதிகளுக்கு ஏற்ப, முன்னேற்ற நிலையை அடைந்தார்கள் என்று பௌத்த நூல்கள் கூறுகின்றன.

---

## மகா கசியபர்

கபிலவாஸ்துவிலிருந்து புறப்பட்ட புத்தர் பெருமான் பல ஊர்களையும் கடந்து, நாலந்தை நகரை அடைந்தார் பிறகு அங்கிருந்து ராஜகிருகத்துக்கு அவர் சென்றுகொண்

டிருந்தார். இராஜகிருகத்தைச் சுற்றி இருக்கும் குன்றுகள் காட்சி அளித்தன.

நாலந்தையைக் கடந்து சிறிது தூரம் சென்றதும், வழியில் ஒதுக்குப்புறமாக ஒரு கோயில் இருப்பதைப் பார்த்து, தியானம் செய்யும் பொருட்டுப் புத்தர் பெருமான் அங்கே சென்றார்.

அங்குதான் மகா கசியபர் என்னும் பிராமணரைப் பகவான் புத்தர் சந்தித்தார்.

பௌத்த சமயத்தில் இவருக்குப் பெரு மதிப்பு உண்டு. புத்தர் பெருமான் பரிநிர்வாணம் அடைந்த பின்னர், முதல் பௌத்த சங்கத்தைக் கூட்டி, பெருமானின் அறவுரைகளை நூல்களாகத் தொகுத்து, ஒழுங்குபடுத்திய பெருமை இவருக்கு உண்டு.

இவர் வேறு; உருவேலா வனத்துக் கசியபர்கள் வேறு.

இவருடைய வாழ்க்கை அசாதாரண சம்பவங்கள் நிறைந்தது. இவரைச் சிலர் பிராமண குலத்தவர் என்கிறார்கள்; சிலர் இவரை வேறு குலத்தவர் என்று கூறுகிறார்கள். இது சம்பந்தமாக, பிற்காலத்தில் பௌத்த சங்கத்தில் வாதப் பிரதிவாதங்கள் ஏற்பட்டுள்ளன.

வாலிபப் பருவத்திலிருந்தே இவருக்கு இல்லற வாழ்க்கையில் ஈடுபாடு ஏற்படவில்லை; துறவற வாழ்வே தூய வாழ்வு என்ற எண்ணம் தொடக்கத்திலிருந்தே இவருக்கு அழுத்தமாக இருந்தது. பிரமத்தை அடைவதற்கு, இல்லறம் ஒரு தடை என்பது இவருடைய கருத்து. எனவே, திருமணம் செய்துகொள்ள வேண்டும் என்ற விருப்பமே இவருடைய உள்ளத்தில் உதிக்கவில்லை.

ஆனால், இவருடைய அன்னை இதற்கு இடம் கொடுக்கவில்லை. தன் மைந்தனுடைய மனத்தை எப்படியோ திருத்தி, பத்திரை என்னும் கன்னிப் பெண் ஒருத்தியை, மகா கசியபருக்கு மணம் முடித்து வைத்துவிட்டாள்.

கசியபரைக் கலியாணம் செய்துகொண்ட கன்னிப் பெண் பத்திரையும் துறவு மனப்பாங்கு கொண்டவள்; முதல் இரவு அன்றே ஒருவர் மனப்பாங்கை ஒருவர் புரிந்து

கொண்டனர். கணவனும் மனைவியுமாக வாழ்வது இல்லை என்று முடிவு செய்துகொண்டு, இருவருக்கும் இடையில், படுக்கையில் மலர்களைக் கொண்டு ஒரு எல்லைக் கோட்டை அமைத்துக்கொண்டு, வாழ்ந்து வந்தனர்.

சிறிது காலத்துக்குப் பின்னர், மகாகசியபரின் தாய் காலமாகிவிட்டாள். பிறகு முண்டனம் செய்துகொண்டு, இருவரும் வீட்டைவிட்டுப் புறப்பட்டனர். சேர்ந்து வழி நெடுகச் சென்றுகொண்டிருந்த அவர்கள், சந்திப்பு ஒன்று குறுக்கிட்டதும், தனித் தனியே பிரிந்துவிட்டனர்.

இப்படிப் பிரிந்து வந்த கசியபர், கோயில் அருகே தியானத்தில் இருக்கும் புத்தரைப் பார்த்தார். தனக்கு ஆசானாக இருக்க அருகதை உடையவர் என்று கருதி, அவருடைய பாதங்களில் வீழ்ந்து, தன்னைச் சீடனாக அங்கீ கரிக்குமாறு வேண்டினார்.

பெருமானும் அவரைத் தம் சீடனாக அங்கீகரித்துக் கொண்டார்.

மகாகசியபர் தவத்திலும் ஒழுக்கத்திலும் மேம்பட்டவ ராய் இருந்தும், தற்பெருமை என்னும் மாசு அவரைவிட்டு அகலவில்லை. தம்மைக் காட்டிலும் ஒழுக்கத்திலும் தவத்தி லும் குறைவுபட்டு இருப்பவர்களை, இதமாகச் சொல்லித் திருத்த முயலாது, இடித்துச் சொல்லிக் கேலிசெய்வார் இவர். இதனால் இவருக்கும் சங்கத்தில் இருக்கும் இதர பிக்கு களுக்கும் இடையில், நிலவ வேண்டிய உறவு இயல்பான முறையில் நிலவவில்லை.

புத்தர் பெருமானைச் சந்தித்து அவருடைய சீடரான பிறகு, அவருடன் சேர்ந்து வேணு வனத்துக்கு மகாகசியபர் போனார்.

---

## அநாத பிண்டிகன்

பிம்பசார மன்னன் சங்கத்துக்கு அளித்த வேணு வனத் தில் பெருமான் தங்கி இருந்தார்.

இராஜகிருக மக்களில் பெரும்பாலோர், நாள்தோறும் வேணு வனத்துக்குச் சென்று பெருமானைச் சந்தித்து, அவர் செய்யும் உபதேசங்களைக் கேட்டு வந்தார்கள்.

அப்படிக் கேட்கச் சென்றவர்களில் இராஜகிருக நகரத்துத் தனவணிகன் ஒருவன். இவன் பெரும் பணக்காரன். இராஜ கிருக நகரத்தில் மிகுந்த செல்வாக்கு உள்ளவன்.

இவன் ஒரு நாள் புத்தர் பெருமானை அணுகி, தமது இல் லத்தில் அமுது செய்ய வர வேண்டும் என்று வேண்டிக் கொண்டான்.

பெருமானும் சம்மதித்தார்; ஆகவே, அமுது செய்விப் பதற்கு, சிறந்த முறையில் அந்த வணிகன் ஏற்பாடுகளைச் செய்துகொண்டிருந்தான். அறு சுவை உண்டி தயாராகிக் கொண்டிருந்தது.

இது சமயம் இராஜகிருக நகரத்துக்கு, சிராவஸ்தியி லிருந்து வியாபார நிமித்தமாக ஒரு தனவணிகன் வந்தான். இவன் பெயர் சுதத்தன் என்பது. இராஜகிருக நகரத்து வணிகனுடைய மைத்துனன் இவன்.

சுதத்தன் பெரிய செல்வச் சீமான்; ஏழை எளியோர் பால் மிகுந்த இரக்கமுள்ளவன்; அநாதைகளை ஆதரித்து, உணவு கொடுத்துக் காப்பாற்றுவதைத் தமது கடமையாகக் கருதியதோடு மட்டும் நின்றுவிடாமல், அதைக் காரியத்திலும் செய்து காட்டியவன்; அதனால் மக்கள் அவனை அநாத பிண்டிகன்—அதாவது அநாதைகளுக்குப் பிண்டம் அளித்துக் காப்பாற்றுபவன் — என்று பெருமையுடன் அழைத்தார்கள்.

இவன் சிராவஸ்தியிலிருந்து, இராஜகிருகத்துக்கு வந்த போது, தன் மைத்துனன் வீட்டில் பலமான விருந்துக்கு ஏற் பாடுகள் நடந்துகொண்டிருப்பதைக் கண்டான். தன்னைக் கண்டவுடன் அனைத்தையும் ஒதுக்கிவைத்துவிட்டு, தன்னை வர வேற்று உபசரித்து அளவளாவும் தன் மைத்துனன் விருந்துக் கான ஏற்பாடுகளில் முழு மூச்சுடன் ஈடுபட்டு இருப்பதைக் கவனித்து வியப்பு மேலிட்டு நின்முன். ''அரசர் இங்கே விருந்துக்கு வருகிருர் போலும். ஏற்பாடுகள் பிரமாதமாக நடக்கின்றனவே'' என்று நினைத்தான்.

ஏற்பாடுகளைச் செய்துவிட்டு, வீட்டுக்காரன் அநாத பிண்டிகனை வரவேற்றான். அப்போது அநாத பிண்டிகன் அவனிடம், ''மைத்துனரே! அரசர் பிம்பசாரர் விருந்துக்கு வருகிறாரா? ஏற்பாடுகள் பிரமாதமாக இருக்கின்றனவே'' என்று கேட்டான்.

அதற்கு இராஜகிருகத்து வணிகன், ''அரசர் விருந்துக்கு வரவில்லை. புத்தர் பெருமானும் அவரைச் சார்ந்த பிக்குகளும் நாளை இங்கு அமுது செய்ய வருகிறார்கள். அதன் பொருட்டுத்தான் இந்த ஏற்பாடுகள் அனைத்தும்'' என்று பதில் சொன்னான்.

''என்ன புத்தருக்கா? அந்தப் போதி மாதவன் இங்கு வந்திருக்கிறாரா?'' என்று வியப்பு மேலிட்டுக் கேட்டான் சுதத்தன். புத்தர் இராஜகிருகத்தில் இருக்கிறார் என்பதை அவனால் நம்ப முடியவில்லை.

''ஆம், புத்தர் பெருமான் இங்கு வந்திருக்கிறார்'' என்று இராஜகிருகத்து வணிகன் பதில் சொன்னான்.

''அப்படியானால் புத்தரைத் தரிசிக்க நான் பெரிதும் விரும்புகிறேன். மைத்துனரே! இப்பொழுதே நாம் புறப் படலாமா?'' என்று ஆவலுடன் கேட்டான்.

''இது தகுந்த சமயம் அன்று. நாளைவரை பொறுத்து இரு. பிறகு புத்தர் பெருமானைச் சந்திக்கலாம்'' என்றான் இராஜகிருகத்து வணிகன்.

ஆகவே, அநாத பிண்டிகன், படுக்கையில் படுத்து ஓய்வு எடுத்துக்கொண்டான். இரவு நேரம். அவனால் தூங்க முடிய வில்லை. ''பொழுது விடிந்துவிட்டதா? பொழுது விடிந்து விட்டதா?'' என்று இரண்டு முறை அநாத பிண்டிகன் எழுந்து பார்த்தான். பொழுது புலரவில்லை; மூன்றாவது முறையாக அநாத பிண்டிகன் எழுந்து பார்த்தபோது, பொழுது புலர ஆரம்பித்து இருந்தது.

அநாத பிண்டிகன், புத்தர் பெருமான் தங்கி இருக்கும் வேணு வனத்தை நோக்கி நடக்கத் தொடங்கினான். அவன் வேணு வனத்தை அடைந்த சமயம், வைகறை நேரம். அப் போது புத்தர் பெருமான் எழுந்து, சுகந்த காற்றைச்

சுவாசித்தவாறே உலாவிக்கொண் டிருந்தார். அநாத பிண்டிகன் வருவதைப் பார்த்ததும், புத்தர் பெருமான் சென்று ஓர் இடத்தில் அமர்ந்துகொண்டார்.

அநாதபிண்டிகன் அருகே வந்ததும், ''சுதத்தா!'' என்று அவனுடைய இயற் பெயராலே, புத்தர் பெருமான் அவனை அழைத்தார்.

அநாத பிண்டிகனுக்கு ஆச்சரியம் தாங்க முடியவில்லை. அருகே சென்று புத்தர் பெருமானின் அடியிணையை அவன் வணங்கினன். பிறகு பணிவோடு எழுந்து, பெருமானுக்கு எதிரே நின்றான்.

அப்போது புத்தர் பெருமான் அவனிடம் ''உன்னைப் போன்றவர்களுள் பெரும்பாலோர் உறங்கும் நேரம் ஆயிற்றே இது! ஆனல் நீயோ அதிகாலையில் எழுந்து இங்கே வந்திருக்கிறயே ஏன்?'' என்று கேட்டார்.

''வீடுபேறு அடைவதில் விருப்பமுற்று நான் இங்கே வந்திருக்கிறேன்; அமைதியை நாடி உங்கள்பால் வந்திருக்கிறேன்'' என்று அநாதபிண்டிகன் பதில் சொன்னன்.

''தான தருமங்கள் நிறையச் செய்து வருகிறயே, அவற்றல் உனது மனம் ஆனந்தத்தையும் திருப்தியையும் அடைய வில்லையா?'' என்று கேட்டார் பெருமான்.

''அண்ணலே! அவற்றல் உள்ளம் நிறைவை அடைய வில்லை. அதன் பொருட்டுத்தான் உங்களிடம் வந்திருக்கிறேன்'' என்று அநாதபிண்டிகன் பதில் சொன்னன்.

''நீ கூறுவது உண்மைதான், சுதத்தா! மன அமைதியையும் வீடுபேற்றையும் பெறுவதற்கு ஒன்றே ஒன்று அவசியம்'' என்று பெருமான் சொன்னர்.

''பெருமானே! அந்த ஒன்று எது?'' என்று ஆவலுடன் வினவினன் அநாத பிண்டிகன்.

''சுதத்தா! நான் என்னும் அகந்தை அறவே அற்று விட வேண்டும். பெருஞ் செல்வத்தை ஒருவன் துறந்து விடுவதனலோ, தான தருமங்களை நிறையச் செய்வதனலோ வீடுபேறு கிட்டாது. சாம்பலுக்குள் நெருப்புக் கங்கு மறைந்திருப்பதைப்போல, உயர்ந்த நோக்கங்

களுக்கு நடுவிலே, நான் என்னும் அகந்தை ஒளிந்து கொண்டிருக்கும்'' என்று பெருமான் போதித்தார்

''அண்ணலே! எனது நலத்திலோ, பாதுகாப்பிலோ, அல்லது எனது வசதிகளிலோ நான் அக்கறை கொண்டது இல்லை'' என்று அநாத பிண்டிகன் தெரிவித்துக்கொண்டான்.

''சுதத்தா! சொர்க்க இன்பத்தைப்பற்றிய எண்ணமோ, பிறர் புகழ வேண்டும் என்ற விருப்பமோ உனக்கு இருந்தது இல்லையா?'' என்று பெருமான் கேட்டார்.

அநாதபிண்டிகன் சிறிது யோசித்தான். பிறகு ''பெருமானே! அத்தகைய எண்ணங்கள் எனக்கு இருந்தது உண்டு'' என்று ஒப்புக்கொண்டான்.

உடனே பெருமான் அவனிடம்,

''நற்செயல்களால் சொர்க்க இன்பம் கிட்டுவது உண்மைதான். ஆயினும் அவை நிர்வாணத்தைக் கொடா; அந்த இன்பமும் வாழ்வும் நிலையற்றவை; அழியக் கூடியவை; அழிவில்லாத நிலையே நிர்வாணம் எனப்படும்'' என்று கூறினர்.

''உலகில் காணப்படும் துன்பங்களுக்கு மூல காரணமாய் இருப்பவை, பரபரப்பும் சுறுசுறுப்பும். மனத்தைச் சலனமற்றதாக வைத்துக்கொள்வதே, நிர்வாணம் ஆகும். அமைதியைக் கெடுக்கும் பல குணங்களின் தொகுப்பே நான் என்பது.

''நமது வாழ்வை நிர்ணயிப்பது யார்? இந்த உலகில் காணும் உயிர்களைப் படைத்தவர் கடவுள் என்பது உண்மையாயின், எல்லா உயிர்களும் அவருக்குக் கட்டுப்பட்டு நடந்தே தீர வேண்டும். குயவன் பானையை வனைவதைத்போலத்தான் கடவுள் உயிர்களைப் படைக்கிறரெனின், அறநெறி என்பது அவசியமில்லாததாகிவிடும். இந்த உலகத்தைக் கடவுள்தான் ஆட்டிவித்து நடத்துகிறரெனின், உலகில் காணப்படும் இன்பம், துன்பம், பாவம், புண்ணியம், சுத்தம், அசுத்தம் அனைத்தும் கடவுளிடமிருந்து வந்ததாகவே கொள்ள வேண்டும். இவை கடவுளிடமிருந்து வந்தவை

அல்ல என்றால், கடவுள் என ஒன்று இல்லை என்பது உறுதிப்பட்டுவிடுகிறது.

''ஆகவே, கடவுளை வழிபடுவதோ, அல்லது அவரிடம் பிரார்த்திப்பதோ தேவையற்ற ஒரு காரியம். நான் என்னும் அகந்தையையும் தன்னலத்தையும் ஒதுக்கிவிட்டு, நல்ல காரியங்களை நாம் செய்து வந்தால், அதனால் நன்மையே விளையும்'' என்று சொன்னார்.

இந்த உபதேசத்தைக் கேட்டதும், அறிவில் விளக்கம் ஏற்பட்டு, அநாத பிண்டிகன் பௌத்த தருமத்தைத் தழுவினான்.

அப்போது அவன் பெருமானிடம் ''பெருமானே! நல்லதை மற்றவர்களுக்குச் செய்ய எனது உள்ளம் விழைகிறது. ஆயினும் நெறியான சமய வாழ்வு வாழ விரும்பும் ஒருவன், செல்வத்தையும் தொழில்களையும் மனைவி மக்களையும் துறந்துவிட்டு, தங்களைப்போல், துறவறத்தை மேற்கொண்டால்தான் சாத்தியப்படுமா?'' என்று கேட்டான்.

அதற்குப் புத்தர் பெருமான் அடியில் வருமாறு பதில் சொன்னார்:

''எட்டு வித சீலங்களைக் கடைப்பிடித்து ஒழுகுபவர்கள் யாராய் இருப்பினும், சமய வாழ்க்கையின் இன்பத்தை அவர்களால் பெற முடியும். செல்வத்தை விடாப்பிடியாகப் பற்றிக்கொண்டு, இதயத்தை மாசுபடுத்திக் கெடுத்துக்கொள்வதைக் காட்டிலும், செல்வத்தை ஒதுக்கிவிடுவது மேலானது; செல்வத்தின்மீது பற்றுக் கொண்டுவிடாமல் செல்வத்தை வைத்திருப்பதோ, அதை நல்ல துறைகளில் செலவிடுவதோ குற்றமாகாது. அதனால் மற்றவர்கள் நலனடைய முடியும்.

''வாழ்க்கையும் பதவியும் செல்வமும் தீமையானவை அன்று; அவற்றின்மீது ஆசைகொண்டு விடாப்பிடியாக அவற்றைப் பற்றிக்கொண்டு வாழ்வதே தீமை பயக்கும்.

''பிக்கு ஒருவர் உலக வாழ்க்கையைத் துறந்துவிட்டு, சோம்பி இருந்து காலத்தைக் கழிப்பது உத்தம

நெறியன்று: முயற்சி இன்றிச் சோம்பிச் வாழ்வது, வெறுக்கத்தக்க ஒரு வாழ்க்கை ஆகும்.

''ததாகதருடைய தரும நெறி, இல்லத்தைத் துறந்து ஓடும்படி யாரையும் வற்புறுத்துவது இல்லை. நான் என்னும் அகந்தை இன்றி இருத்தல், இதயத்தைப் பரிசுத்தமாக வைத்துக்கொள்ளுதல், போக நுகர்ச்சியில் நாட்டம் கொள்ளாமை, நேரிய வாழ்க்கை வாழ்தல் இவையே ததாகதர் போதிக்கும் அறநெறிகளாகும்'' என்றார்.

புத்தர் போதித்த இந்த அறநெறிகளைக் கேட்ட பின்னர், அநாதபிண்டிகன் அவரிடம் ''பெருமானே! கோசல நாட்டைச் சேர்ந்த சிராவஸ்தியில் வசிக்கிறேன். அங்கே சங்கத்துக்கு ஒரு விகாரை கட்டிக் கொடுக்க விரும்புகிறேன். பெருமான் அதை அங்கீகரிக்க வேண்டும்'' என்று வேண்டினன்.

''பிறருக்கு நன்மை பயக்கும் தான தருமங்களைச் செய்வது மேலானது'' என்று கூறி, அநாதபிண்டிகன் அளிப்பதாகக் கூறும் விகாரையை ஏற்பதாகப் பெருமான் அங்கீகரித்தார்.

---

## க்ஷேமை

புத்தர் பெருமான் தம் சீடர்களுடன், இராஜகிருக நகருக்குப் பக்கத்திலே இருக்கும் வேணு வனத்தை அடைந்து, அங்கு இருக்கும் தவப்பள்ளியில் தங்கி இருந்தார்.

அப்போது யாக்கை நிலையாமை, செல்வம் நிலையாமை ஆகிய இரு உண்மைகளைக் குறிப்பால் உபதேசிக்கும் சம்பவங்கள் இரண்டு நிகழ்ந்தன. அவற்றில் ஒன்று வருமாறு:

மகத நாட்டு மன்னன் பிம்பசாரனுக்கு, அழகு எல்லாம் ஒருங்கே வாய்ந்த மனைவி ஒருத்தி இருந்தாள். அவள் பெயர் க்ஷேமை என்பது. தன்னைக் காட்டிலும் சிறந்த அழகி

ஒருத்தி, இந்தப் பூதலத்திலேயே இருக்க முடியாது என்று கர்வத்துடன் அவள் இருந்து வந்தாள்.

இவள் கோசல நாட்டில் பிறந்தவள்; அந்த நாட்டு மன்னன் பிரசேனஜித்தின் தங்கை. கோசல நாட்டு அரச குடும்பத்தினருக்கு நெடுங் காலமாகவே, ஜைன சமயத்தில் ஈடுபாடு உண்டு. ஆகவே, அந்தக் குடும்பத்தில் பிறந்த க்ஷேமை, ஜைன சமயத்தைப் பெரிதும் நேசித்தாள்.

தன் கணவன் பிம்பசார மன்னன், அடிக்கடி புத்தர் பெருமானைத் தரிசிக்கச் செல்வதும், புத்தரையும் அவருடைய சீடர்களையும் அரண்மனைக்கு வரவழைத்து அமுது படைத்து உபசரிப்பதும் க்ஷேமைக்குக் கட்டோடு பிடிக்கவில்லை. ஆகவே, தங்கள் அரண்மனைக்கு வந்திருக்கும் புத்தர் பெருமானைத் தரிசித்து உபசரியாமல், அசட்டையாக, க்ஷேமை ஒதுங்கி இருந்துகொண்டாள்.

க்ஷேமையின் இந்த மனப்போக்கைத் திருத்துவது அவசியம் என்று பெருமான் கருதினார். பிம்பசார மன்னன் மூலமே க்ஷேமை வந்து தன்னைக் காண்பதற்கு, பெருமான் ஏற்பாடு செய்தார்.

அதன்படி க்ஷேமை தன்னைக் காண வந்ததும், தனது இருத்தி ஆற்றலைக்கொண்டு, பேரழகுவாய்ந்த பெண் ஒருத்தியை, பெருமான் அவளுக்குக் காட்டினார்.

வியந்து அந்தப் பெண் உருவத்தையே க்ஷேமை பார்த்துக் கொண்டிருந்தாள். படிப்படியாக அந்தப் பெண் உருவம், முதுமைப் பருவத்தை அடைந்து விகாரமாகத் தோன்றலாயிற்று.

உடம்பு எல்லாம் சுருக்கங்கள் தோன்றின; உடலிலிருந்த பளபளப்பும் மினுமினுப்பும் கவர்ச்சித்தன்மையும் எங்கேயோ போய்விட்டன. தலையில் இருக்கும் கூந்தல் கருமை நிறம் மாறி, வெளுத்துப் போயிற்று.

இளமையும் அழகும் நிலையற்றவை என்னும் உண்மையை, தமது இருத்தி ஆற்றல் மூலம் புத்தர் க்ஷேமையை உணரச் செய்தார்.

உண்மையை உணர்ந்ததும், அடிபணிந்து, புத்தர்

பெருமானை க்ஷேமை வணங்கினாள்; பௌத்த சமயத்தைத் தழுவி அது கூறும் அறநெறிகளைப் பின்பற்றி ஒழுகத் தொடங்கினாள்.

## ஜேத வனம்

சிராவஸ்தி நகருக்குச் சற்று தூரத்தில் தான் கட்டிக் கொடுக்க விரும்பும் விகாரையைப் புத்தர் பெருமான், சங்கத்துக்காக ஏற்றுக்கொள்வார் என்பது தெரிய வந்ததும், அநாதபிண்டிகன் மகிழ்ச்சி அடைந்தான்.

பிறகு பெருமானிடம் விடைபெற்றுக்கொண்டு, இராஜகிருகத்திலிருந்து புறப்பட்டு, தமது சொந்த நாட்டின் தலைநகரான சிராவஸ்திக்குப் போனான். சிராஸ்வதியை அடைந்ததும், விகாரை கட்டுவதற்கான இடத்தைத் தேர்ந்தெடுப்பதில் கவனம் செலுத்தினான்.

விகாரை தலைநகருக்கு அண்மையிலும் இருக்கக் கூடாது; வெகு தூரத்திலும் இருக்கக் கூடாது; அண்மையில் இருந்தால் சந்தடிகள் மிகுந்து இருக்கும்; அமைதியான நிலையில் தியானம் செய்வதற்கு அந்த இடம் சாத்தியப்படாது. வெகு தூரத்தில் இருந்தால், மக்கள் விகாரைக்கு வந்து போவது சிரமமாய் இருக்கும். அதனால் அறவுரைகளைக் கேட்பதற்குரிய வாய்ப்புகள் பொதுமக்களுக்குக் குறைந்துபோக நேரலாம். இவை மட்டும் அல்லாமல், விகாரை இருக்கும் இடத்தில் இயற்கை வசதிகள் போதிய அளவு இருப்பது அவசியம்; நல்ல தண்ணீரும், நல்ல காற்றும் கிடைக்க வேண்டும்; அடர்ந்த சோலைகளுடன் பார்க்க அது வசீகரமாய் இருக்க வேண்டும்.

இத்தகைய ஒரு இடத்தைத் தேர்ந்து எடுப்பதில் அநாதபிண்டிகன், கவனம் செலுத்தி வந்தபோது, கோசல நாட்டின் பட்டத்து இளவரசன் ஜேதன் என்பவனுக்குச் சொந்தமான பூங்கா ஒன்று இருப்பது அநாதபிண்டிகனுக்குத் தெரியவந்தது.

ஆகவே அந்தப் பூங்காவை, விகாரை கட்டும் பொருட்டு,

தனக்குத் தருமாறு, இளவரசனை அணுகி, அநாதபிண்டிகன் வேண்டினன்.

பூங்காவை விற்பதற்கு இளவரசன் முதலில் சம்மதிக்க வில்லை. பிறகு, ''பூங்கா முழுதும் தங்கத்தைப் பரப்பி உன்னல் காண்பிக்க இயலுமானல், பூங்கா உனக்குக் கிடைத் தாலும் ஒரு வேளை கிடைக்கலாம்'' என்று அலட்சியமாக இளவரசன் பதில் சொன்னன்.

''அப்படியா! சரி. தங்கள் விருப்பப்படி பூங்கா முழுதும் தங்கத்தைப் பரப்பித் தருகிறேன். பூங்காவை எனக்குத் தந்துவிடுங்கள்'' என்று கேட்டான் அநாதபிண்டிகன்.

''நீ பரப்பித் தரும் தங்கத்துக்காக நான் பூங்காவைத் தர முடியாது'' என்று மழுப்பினன் இளவரசன்.

''விலைக்குத் தருவதாக முதலில் வாக்களித்துவிட்டு, பிறகு மறுப்பது நியாயமாகாது'' என்று அநாதபிண்டிகன் மறுத்துச் சொன்னன்.

இளவரசன் சம்மதிக்கவில்லை.

இதன் பின்னர், பஞ்சாயத்தார் முன்னர் அநாதபிண்டி கன் முறையிட்டுக்கொண்டான்.

''ஒரு விலையைக் குறிப்பிட்டுக் கூறுவது, விற்பதற்கு ஒப்புக்கொண்டதாகும்'' என்று, அநாதபிண்டிகனுக்குச் சாதகமாக, பஞ்சாயத்தார் தீர்ப்பளித்தார்கள்.

அநாதபிண்டிகன் வண்டி நிறையத் தங்கத்தை ஏற்றிக் கொண்டு, ஜேத வனத்துக்குச் சென்று, பரப்பத் தொடங்கி னன். அப்போது தங்கத்தைப் பரப்பச் சிறிது இடமே பாக்கி இருந்தது.

இதைக் கவனித்த இளவரசன் அநாதபிண்டிகனுடைய நேர்மையையும் உதார குணத்தையும் மதிக்கலானன். அவன் செய்யும் தருமத்தில் தனக்கும் சிறிது பங்கு இருப்பது நலம் என்று ஆசைப்பட்டான். ஆகவே, அநாதபிண்டிகனி டம் ''சுதத்தரே! மீதம் இருக்கும் இடத்தில் தங்கத்தைப் பரப்ப வேண்டாம். அந்த இடம் எனது அன்பளிப்பாக இருக்கட்டும். சங்கத்துக்கு எனது சொத்தும் சிறிது சேரட் டும்'' என்று சொன்னன்.

அநாதபிண்டிகனும் இளவரசனுடைய இந்த விருப்பத்துக்கு இசைந்தான்.

பிறகு அந்தப் பூங்காவில் — அதாவது ஜேத வனத்தில் — பெரிய விகாரை ஒன்றைக் கட்ட அநாதபிண்டிகன் ஏற்பாடு செய்தான்.

மிகப் பெரும் செல்வச் சீமானாய் இருந்தபடியால், அந்தத் தவப் பள்ளியை — அதாவது விகாரையை — சகல வசதிகளும் அமைந்த ஒரு தவப் பள்ளியாக அநாதபிண்டிகன் கட்டி முடித்தான்.

பிறகு இராஜகிருகத்தில் இருக்கும் புத்தர் பெருமானுக்குச் செய்தி அனுப்பினான். ''விகாரை கட்டி முடிந்து தயாராய் இருக்கிறது என்றும், சிராவஸ்திக்கு எழுந்து அருளி, சங்கத்துக்காக விகாரையை அங்கீகரித்து அருள வேண்டும்'' என்றும் வேண்டினான்.

பெருமானும் தம் சீடர்களை அழைத்துக்கொண்டு, இராஜகிருகத்திலிருந்து, சிராவஸ்திக்குப் புறப்பட்டார்.

புத்தர் பெருமான் ஜேத வனத்தை அடைந்த சமயம், அதன் தலைவாயிலில் நின்றுகொண்டு, அநாதபிண்டிகன் எதிர்கொண்டு நறுமணமுள்ள மலர்களைத் தூவி, பெருமானை வரவேற்றான். தங்கக் கெண்டியில் தாரை வார்த்து, ஜேத வனத்தை, பௌத்த சங்கத்துக்கு அவன் வழங்கினான்.

அநாதபிண்டிகன் அளித்த இந்தக் கொடையைப் புத்தர் பெருமான் அங்கீகரித்துக்கொண்டார். ''கோசல நாடும் அதன் மக்களும், தானம் வழங்கிய அநாதபிண்டிகனும் நலம் பெற்று வாழ்க!'' என்று அவர் வாழ்த்தினார்.

புத்தர் பெருமான் தன் நாட்டுக்கு வந்திருக்கிறார் என்பதை அறிந்த கோசல நாட்டு மன்னன் பிரசேனஜித், ஜேத வன விகாரைக்கு, தமது பரிவாரத்தினருடன் வந்து, புத்தர் பெருமானைத் தரிசித்தான்.

பெருமான் அவனுக்கும் அவனுடைய மனைவி ராணி மல்லிகாவுக்கும் அறநெறிகளை உபதேசித்தார்.

அவர்கள் இருவரும் பெருமானுக்குச் சீடர்கள் ஆயினர்.

# கௌதம புத்தர்

## வரலாறு

## இருபது ஆண்டுகள்

### ஆற்று நீர்

அறநெறிகளைப் போதிப்பதோடு மட்டும் புத்தர் பெருமான் நிற்கவில்லை. மக்களிடையே ஏற்படும் பிணக்குகள் சச்சரவுகள் ஆகியவற்றைத் தீர்ப்பதிலும் அவர் கவனம் செலுத்தினர்.

புத்தர் பெருமான் சிராவஸ்தியில் தங்கி இருந்த சமயம், மள்ளர்களின் குடியரசைச் சேர்ந்த பிரமுகர்கள், ஒரு குழுவை அனுப்பி. தங்கள் நாட்டுக்கு எழுந்தருள வேண்டும் என்று புத்தர் பெருமானிடம் விண்ணப்பித்துக்கொண்டார்கள்.

மள்ளர்களின் நாடு செல்வச் செழிப்புள்ள நாடு. ஆயினும் கொள்ளை நோயும் பஞ்சமும் பரவி, அந்த நாட்டு மக்கள் பெரிதும் அவதிப்பட்டார்கள்; நோயின் காரணமாக ஆயிரக்கணக்கானோர் மடிந்து போனார்கள்.

புத்தர் பெருமான் எழுந்தருளுவாராயின், தங்கள் நாட்டைப் பிடித்து வாட்டும் கொள்ளை நோயும் பஞ்சமும் விலகிவிடும் என்று மள்ளர்கள் நம்பினார்கள்.

மள்ளர்களின் விருப்பத்துக்கு இசைந்து, பெருமானும் வைசாலி நகருக்குச் சென்றார்.

அந்த நகரில் புத்தர் பெருமான் அடி எடுத்து வைத்ததுமே, சோவென்று மழை கொட்டத் தொடங்கிற்று. அதனால் அந்த நகரிலும் அதன் சுற்று வட்டாரங்களிலும் கிடந்த

பிணங்கள் அடித்துப் போகப்பட்டு, நகர் தூயதாயிற்று. அதன் பயனுய், கொள்ளே நோயும் அகன்று போயிற்று.

பெரிதும் மகிழ்ச்சி அடைந்து, மள்ளர்கள் பெருமானேக் கொண்டாடினுர்கள்.

இதன் பின்னர் மள்ளர்களிடம் விடைபெற்றுக்கொண்டு பெருமான் இராஜகிருகம் திரும்பினுர்.

இது சமயம் முக்கியமான மூன்று இடங்களில் பௌத்த மடங்கள் நிறுவப்பட்டன. இராஜகிருகம், சிராவஸ்தி, கபில வாஸ்து ஆகிய மூன்று நகரங்களேயும் அடுத்து, ஒவ்வொரு பௌத்தப் பள்ளி இயங்கி வந்தது.

வைசாலியிலிருந்து திரும்பிய புத்தர் பெருமான், சில மாதங்கள் இராஜகிருகத்தில் தங்கிவிட்டு, பிம்பசார மன்னனிடம் விடைபெற்றுக்கொண்டு, மீண்டும் வைசாலிக்குப் போனுர்.

அப்போது சாக்கியர்களுக்கும் கோலியர்களுக்கும் இடையில், ரோகிணி ஆற்று நீரைப் பகிர்ந்துகொள்வது சம்பந்தமாக, சச்சரவுமூண்டு, போராக அது உருவெடுத்துவிட்டது.

இரு தரப்பினரும் ரோகிணி ஆற்றங்கரையில் அணி வகுத்து நின்று, போரைத் தொடங்க ஆயத்தமானுர்கள்.

இது விவரம் தெரிய வந்ததும், அவர்களிடையே சமாதானத்தை உண்டாக்கும் பொருட்டு, புத்தர் பெருமான் ஆகாய மார்க்கமாகப் புறப்பட்டுச் சென்ருர். ஆகாயத்தில் நின்றபடியே ஆற்றின் இரு கரைகளேயும் அவர் கவனித்தார்.

ஆற்றின் இரு மருங்கிலும், கோலியர்களும் சாக்கியர்களும் கோபத்துடன் போருக்கு ஆயத்தமாய் நிற்பதை அவர் கண்டார்.

இரு தரப்பினரும் புத்தர் பெருமான் ஆகாயத்தில் நிற்பதைப் பார்த்துவிட்டனர். தத்தம் கைகளில் வைத்திருந்த ஆயுதங்களேக் கீழே வைத்துவிட்டு, தரையில் வீழ்ந்து புத்தர் பெருமானே அவர்கள் வணங்கினுர்கள்.

அப்போது புத்தர் பெருமான் அவர்களே நோக்கி, "இளவரசர்களே! வீரர்களே! நான் சொல்வதைக் கவனமாய்க் கேளுங்கள். சிறிது தண்ணீர் பெரிதா? அல்லது

மக்களின் உயிர் பெரிதா? இரண்டில் எது பெரிது?'' என்று வினவினர்.

''உயிர்தான் பெரிது'' என்று அவர்கள் பதில் சொன்னார்கள்.

''அப்படியானல் கோபத்தை உதறித் தள்ளிவிட்டு, ஒற்றுமையுடன் வாழ முயலுங்கள்'' என்று பெருமான் அவர்களுக்கு உபதேசித்தார்.

கோலியர்களும் சாக்கியர்களும் கோபத்தை விட்டு ஒழித்து, பௌத்த சங்கத்தில் சேர்ந்து, பிக்குகள் ஆயினர்.

அவர்கள் அனைவரையும் ஆகாய மார்க்கமாக, அழைத்துக் கொண்டு புத்தர் பெருமான் வைசாலி திரும்பினர்.

## தந்தையின் மரணம்

**வை**சாலியில் தங்கி இருக்கும் புத்தர் பெருமான் ஒரு நாள் அதிகாலையில், வழக்கம்போல், தியானத்தில் ஆழ்ந்திருந்தார்.

அப்போது தம் தந்தை சுத்தோதன மன்னன் கடும் நோயுற்று, படுத்த படுக்கையாய்க் கிடப்பதையும், தன்னைப் பார்க்க அவன் ஆவலுடன் இருப்பதையும் பெருமான் தெரிந்துகொண்டார்.

உடனே ஆனந்தனையும் மற்றும் சில சீடர்களையும் அழைத்துக்கொண்டு, ஆகாய மார்க்கமாகக் கபிலவாஸ்து நகரம் போய்ச் சேர்ந்தார்.

அரண்மனைக்குள் சென்று, தன் தந்தை படுத்து இருக்கும் படுக்கை அருகே அமர்ந்து, தமது கையைத் தம் தந்தையின் தலைமீது வைத்து ''எண்ணிறந்த பிறவிகளில் நான் செய்திருக்கும் நல்வினைகளாலும், நாற்பத்து ஒன்பது நாட்கள் போதி மரத்தின்கீழ் செய்த தியானத்தின் பயனாலும், இந்தத் தலையைப் பாதித்துக்கொண்டிருக்கும் வேதனை முழுதும் அகலட்டும்'' என்று சொன்னர்.

ஒரு நொடியில் வேதனை முழுதும் அகன்று சுத்தோதனன்

குணம் அடைந்தான். ஆயினும் உடல் மட்டும் பலவீன மாகவே இருந்து வந்தது.

தம் தந்தைக்குப் புத்தர் பெருமான் இது சமயம், யாக்கை நிலையாமைபற்றிய அறவுரைகளை உபதேசித்தார்.

இந்த உபதேசங்களைக் கேட்ட பின்னர், அறிவு விளக்கம் பெற்று, சுத்தோதன மன்னன் நிர்வாண நிலையை அடைந் தான்.

சனிக்கிழமை யன்று, அதிகாலையில் சுத்தோதன மன்னன் நிர்வாண நிலையை எய்தினான். அப்போது அவனுக்கு வயது தொண்ணூற்று ஏழு.

சுத்தோதன மன்னன் காலமானதைப் பார்த்ததும், புத்தரின் சிற்றன்னை பிரஜாபதியும் அரண்மனைப் பெண்டிரும் அலறிப் புடைத்துக்கொண்டு அழுதார்கள்; கண்ணீரை ஆறுகப் பெருக்கி, மார்பில் அடித்துக்கொண்டு, கதறினார்கள்.

அவர்கள் அனைவருக்கும் ஆறுதல் சொல்லி, புத்தர் பெரு மான் தேற்றினார்.

இதன் பின்னர் சுத்தோதன மன்னனின் சடலத்தை, சாரிபுத்திரனின் உதவிகொண்டு, பெருமான் குளிப்பாட்டி னார்; மலர், சந்தனம், மாலை, ஆடை முதலியவற்றை அணி வித்து, உயரமான உயர்ந்த ஒரு பீடத்தில் மன்னனின் சடலத்தைக் கிடத்தினார்கள்.

அப்போது. பக்கத்து நாட்டு, அரசர்கள் வந்து, சுத்தோதன மன்னனுக்கு இறுதி மரியாதைகளைச் செய் தார்கள்.

அதன் பின்னர், வாத்தியங்கள் முழங்க, முக்கிய தெருக் களின் வழியாக சடலத்தை, சுடுகாட்டுக்குச் சுமந்து சென்றார்கள்.

சுடுகாட்டை அடைந்ததும், தந்தையின் சடலத்தை, தம் கைகளில், தாங்கி வாங்கி, சிதைமீது வைத்தார் புத்தர் பெருமான்; அதன் பின்னர், தம் கைகளாலேயே அதற்குக் கொள்ளியும் வைத்தார்.

அப்போது மயானத்தில் இருந்தவர்கள் அனைவரும் கோவென்று கதறி அழுதார்கள்.

அவர்கள் அனைவருக்கும் ஆறுதல் சொல்லி, புத்தர் பெருமான் உபதேசம் செய்தார்.

தன் கணவனை இழந்த பிரஜாபதி ஆற்றெணுத் துயரத்தில் ஆழ்ந்தாள். ஆயினும் புத்தர் பெருமான் கூறின உபதேசங்களைச் செவிமடுத்த பின்னர், ஆறுதல் அடைந்தாள். செல்வம் நிலையாமை, யாக்கை நிலையாமை இவை பற்றிய உண்மைகளை அவள் புரிந்துகொண்டாள். ஆகவே, துறவறத்தை மேற்கொண்டு, நற்கதி அடைய வேண்டும் என்ற விருப்பம் அவள் உள்ளத்தில் ஊடாடிற்று.

பிறகு அங்கிருந்து புறப்பட்டு, பெருமான் வைசாலி திரும்பினார். அங்கு மகாவனத்தில் இருக்கும் கூடாகார விகாரையில், தம் சீடர்களுடன் தங்கினார்.

## பிக்குணி சங்கம்

சுத்தோதன மன்னன் காலமான பின்னர் துறவற வாழ்வை மேற்கொண்டு ஒழுகுவதே தனக்குச் சிறப்பு அளிக்கும் என்று பிரஜாபதி எண்ணினாள். ஆகவே, தனக்குத் துறவற தீட்சை கொடுத்து, சங்கத்தில் சேர்த்துக்கொள்ளுமாறு கபிலவாஸ்துவில் தங்கி இருக்கும்போது பகவானிடம் பிரஜாபதி மூன்று முறை வேண்டினாள்.

பெருமான் அதற்கு இசைவு தெரிவிக்க வில்லை. தம் சீடர்களை அழைத்துக்கொண்டு, கபிலவாஸ்துவிலிருந்து அவர் வைசாலிக்குத் திரும்பினார்.

அரசி பிரஜாபதி அதனால் தளர்ந்துவிட வில்லை. தலையை முண்டனம் செய்துகொண்டும், மஞ்சள் நிறத் துவராடையை அணிந்துகொண்டும், வைசாலிக்கு அவள் புறப்பட்டாள். அவளுடன் சேர்ந்து, சாக்கிய குலப் பெண்டிர் பலரும் துறவறத்தில் விருப்புற்று வைசாலிக்குப் போனார்கள்.

வழி நடந்து நடந்து, களைப்பு மேலிட்டு, அந்தப் பெண்கள் சோர்ந்து போனார்கள்; கால்கள் வீங்கிவிட்டன. உடம்பு எல்லாம் ஒரே புழுதி மயம்.

இத்தகைய அலங்கோலத்துடன் வைசாலியில் இருக்கும் விகாரையை அவர்கள் அடைந்தார்கள். மரியாதையாக விகாரையின் வெளிப்புறத்தே நின்றுகொண்டு, புத்தர் பெருமானைத் தாங்கள் சந்திக்க விரும்புவதாகவும், சங்கத்தில் சேரப் பிரியப்படுவதாகவும், ஆனந்தனிடம் தெரிவித்தார்கள்.

விவரம் தெரிய வந்ததும், ஆனந்தன் பெருமானிடம் சென்றான். சிற்றன்னை பிரஜாபதியும் இதர சாக்கிய குலப் பெண்டிரும் சங்கத்தில் சேரும் விருப்பத்தோடு வந்து, விகாரைக்கு வெளியே காத்திருப்பதைப் பெருமானிடம் தெரிவித்தான்.

பெருமான் சிறிது நேரம் சிந்தனையில் ஆழ்ந்தார். பிறகு ''ஆனந்தா! பெண்களைச் சங்கத்தில் சேர்ப்பதை நான் விரும்பவில்லை. அதனால் சங்கம் நீடித்துத் தொடர்ந்து, செயல்பட முடியாத நிலை ஏற்படலாம்'' என்று கூறினார்.

பெருமான் கூறின இந்தப் பதிலைக் கேட்டு, ஆனந்தன் மனம் தளர்ந்துவிட வில்லை. பிரஜாபதி, பெருமானுக்குச் செய்துள்ள சேவைகளை ஆனந்தன் நினைவுபடுத்தினான்: ''பெருமானே! தங்கள் சிற்றன்னை தங்களுக்குப் பாலூட்டி வளர்த்து இருக்கிறார். ஈன்ற சில நாட்களில் தங்கள் அன்னை காலமாகிவிட்டபடியால், சிற்றன்னையின் சிறந்த பராமரிப்பில் தாங்கள் வளர்ந்து இருக்கிறீர்கள். இவற்றை எல்லாம் நினைவில்கொண்டு, தங்கள் சிற்றன்னைக்குத் தாங்கள் அருள் பாலியுங்கள்'' என்று இதமாக விளக்கிச் சொன்னான்.

இவ்வாறு பெண் குலத்துக்காக ஆனந்தன் பரிந்து பேசுவதைச் செவிமடுத்த பெருமான், ''ஆனந்தா! பெண்கள் எட்டு நெறிகளைக் கடைப்பிடித்து ஒழுகச் சம்மதித்தால், அவர்களைச் சங்கத்தில் சேர்த்துக்கொள்வதில் தடை ஒன்றும் இராது'' என்று தெரிவித்தார்.

பெருமான் தெரிவித்த பதிலைக் கேட்டு ஆனந்தன் திருப்தி அடைந்தான். தன் வரவை எதிர்பார்த்து ஆவலுடன் வெளியே காத்திருக்கும் பெண்களிடம் திரும்பி விவரத்தைக் கூறினான்.

பெண்கள் ஆனந்தன் சொன்னதைக் கேட்டு மகிழ்ச்சி

அடைந்தனர். அப்போது பெருமானின் சிற்றன்னை பிரஜாபதி, ஆனந்தனிடம், ''ஆனந்தா! நீராடிய பின் பட்டாடைகளால் தன்னைப் பிரியத்துடன் அலங்கரித்துக் கொள்ளும் இளம் பெண்ணைப் போலவும், நறுமண மலரை விரும்பும் இளநங்கையைப் போலவும், பகவான் கூறும் எட்டு நியமங்களையும் கடைப்பிடித்து ஒழுக நாங்கள் சித்தமாய் இருக்கிறோம்'' என்று ஆர்வத்துடன் பதில் சொன்னாள்.

இது விவரத்தைப் பெருமானிடம் ஆனந்தன் தெரிவித்தான். அதற்கு அவர் பெண்களைச் சங்கத்தில் பிக்குணிகளாகச் சேர்த்துக்கொள்வதற்கு அனுமதி கொடுத்தார். அப்போது ஆனந்தனிடம்,

> ''ஆனந்தா! பெண்கள் சங்கத்தில் சேராது இருந்தால் சங்கம் ஆயிரம் ஆண்டுகள் நீடித்து நிலைக்கும். அவர்களை இப்பொழுது சேர்த்துக்கொள்வதனால், ஐநூறு ஆண்டுகள் மட்டுமே அது நிலைபேறுடையதாய் இருக்கும்'' என்று கூறினார்.

இதன் பின்னர், பிரஜாவதி தேவியும் யசோதரையும் இதர சாக்கிய குலப் பெண்டிரும் துறவறத்தை மேற்கொண்டு பிக்குணிகளாகிச சங்கத்தில் சேர்ந்தனர்.

புத்தர் பெருமான் பிக்குணிகளுக்கு விதித்த எட்டு நியமங்கள் வருமாறு :

(1) தாம் சங்கத்தில் சேர்ந்த ஆண்டுகளையோ, அல்லது தமது வயதையோ கணக்கில் கொள்ளாது, சிறிய பிக்குகளையும் பெரிய பிக்குகளையும் பிக்குணிகள் வணங்க வேண்டும்.

(2) பிக்குகள் இல்லாத ஊரிலோ, பிரதேசத்திலோ எந்த ஒரு பிக்குணியும் தங்கலாகாது.

(3) பதினைந்து தினங்களுக்கு ஒரு முறை பிக்குகள் கூடும்போது, அவர்களிடம் அவள் முறைப்படி உபதேசம் பெற வேண்டும்.

(4) ஆண்டுக்கு ஒரு முறை மாரிக் கால வாசத்துக்குப் பின்னர், பிக்குகளும் பிக்குணிகளும் கூடி இருக்கும் சங்கத்தில் தனது குற்றங் குறைகளை எடுத்துக்

கூறும்படி (பராவணை) சங்கத்திடம் ஒவ்வொரு பிக்குணி யும் கேட்க வேண்டும்.

(5) தவறு செய்த பிக்குணி, இரு பாலாரும் கூடி இருக்கும் சங்கத்தார் விதிக்கும் பரிகாரத்தைத் தவருது செய்ய வேண்டும்.

(6) இரண்டு ஆண்டுக் காலம்வரை, தவருது இந்த ஆறு விதிகளையும் கடைப்பிடித்த மாணவப் பெண்ணை, சங்கத்தில் பிக்குணியாக அங்கீகரிக்கலாம்.

(7) எக்காரணத்தைக் கொண்டும், ஒரு பிக்குவை, பிக்குணி ஒருத்தி கண்டிக்கவோ ஏசவோ கூடாது.

(8) பிக்குணி, பிக்குவுக்கு உபதேசம் செய்யலா காது; ஆனல், பிக்குணிக்குப் பிக்கு உபதேசம் செய்ய லாம்.

* * *

மேலே கூறப்பட்ட எட்டு விதிகளையும் மேலோட்ட மாகப் படித்தால்கூட, பௌத்த சமயம் பெண்ணுக்கு ஒரு நீதியையும், ஆணுக்கு ஒரு நீதியையும் வழங்கி இருக்கிறது என்பது யாருக்கும் புலப்படாமல் போகாது.

மனித குலத்துக்கு உபதேசம் செய்ய அவதரித்த புத்தர் பெருமான், இப்படி ஆணுக்கு ஒரு நீதியும் பெண்ணுக்கு ஒரு நீதியுமாக உபதேசித்து இருப்பாரா என்பது ஆராயப் பாலது.

துறவறம் என்ருலே மனைவி மக்களை விட்டுப் பிரிந்து தனித்து வாழ்வது என்று பொருள். அத்தகைய வாழ்வில் பெண்களுக்கும் இடம் கொடுத்துச் சேர்த்துக்கொண்டால், துறவறம் என்பதே பொருளற்றதாகிவிடும் என்று பெரு மான் கருதி இருக்கக் கூடும்.

தவறுகள் நேராமல் தடுப்பது சிறந்தது. தவறுகள் நேர இடம் கொடுத்து, பிறகு திருத்திக்கொண்டு வாழ்வது இரண் டாம் பட்சமானது. அதனல்தான் பெண்கள் துறவறத்தை மேற்கொண்டு, சங்கத்தில் சேர்வதை அனுமதிக்கப் பெரு

மான் விரும்பவில்லை. ஆயினும் அன்று நிலவிய சூழ்நிலைகளை மனத்திற்கொண்டும், பிக்கு சங்கம் பெண்களைப் புறக்கணிக்கிறது என்னும் கருத்து ஏற்படுவதைத் தடுக்கும் பொருட்டும், பெண்களைச் சங்கத்தில் சேர்க்கப் பெருமான் அனுமதித்து இருக்கிறார் என்று தெரிகிறது.

பொதுவாக, பெண்களை அவர்களின் தாய்மைப் பேற்றைக் கருதி, பாராட்டிப் போற்றியபோதிலும், சமுதாய வாழ்வில், பெண்களுக்கு இரண்டாவது ஸ்தானத்தையே சகல சமயங்களும் வழங்கி இருக்கின்றன என்று கூறினால் அது ஒரு பிழைபட்ட கருத்து ஆகாது.

இஸ்லாமிய சமயத்தில் பெண்களுக்குச் சொத்துரிமை வழங்கப்பட்டு இருக்கிறது. ஆயினும் பர்தாமுறை காரணமாக, ஆடவன் உதவியையே எப்பொழுதும், நம்பி வாழ வேண்டிய ஒரு கட்டாய நிலையில் இஸ்லாமியப் பெண் இருந்து வருகிறாள். ஆடவனுக்குக் கீழ்ப்படிந்து அவனுடைய உதவியை நாடி வாழும் ஒரு அபலையாக அவள் இருக்கிறாள்.

ஹிந்து சமயத்திலும் பெண் சுதந்திரமற்றவளாகவே இருக்கிறாள். ''கன்னிப் பருவத்தில் தந்தை பராமரிப்பிலும், திருமணத்துக்குப் பின்னர் தன் கணவன் பராமரிப்பிலும், முதுமைப் பருவத்தில் புதல்வர்கள் பராமரிப்பிலும், பெண்கள் இருக்க வேண்டும்'' என்று ஹிந்து தர்ம சாஸ்திரங்கள் கூறுகின்றன.

பொது அறங்கள் உரைத்த திருவள்ளுவரும் சமுதாய வாழ்வில் பெண்களுக்கு இரண்டாவது ஸ்தானத்தையே கொடுத்து இருக்கிறார்; பெண்களுக்குக் கீழ்ப்படிந்து ஆண்கள் நடத்தல் கூடாது என்று ஒரு அதிகாரமே வகுத்திருக்கிறார். **பெண்வழிச் சேறல்** என்பது அந்த அதிகாரத்தின் பெயர். அதில் பெண்ணுக்குக் கட்டுப்பட்டு நடக்கும் ஆடவர்களுக்கு ஏற்படும் பலன்களை அடியில் வருமாறு விவரித்து இருக்கிறார்.

மனைவி சொற்படி நடப்பவன் சிறந்த பயனை அடைய மாட்டான்; அவனுக்கு மறுமைப் பயன் கிட்டாது; அவனால் பெருமையுடன் வாழ முடியாது; பெண்ணுக்குக் கீழ்ப்படிந்து நடக்கும், ஆண்மையைக் காட்டிலும், நாணமுள்ள பெண்

மையே பெருமை உடையது'' என்று குறள் ஆசிரியர் கூறி இருக்கிறார்.

கிறிஸ்துவ சமயத்திலும் பெண்களுக்கு இரண்டாவது ஸ்தானத்தையே வழங்கி இருக்கிறார்கள் என்று கூறலாம். இதுவரை எந்த ஒரு பெண்ணும் போப் ஆகவோ, கார்டினல், ஆர்ச் பிஷப் போன்ற உயர்ந்த ஸ்தானத்திலோ அமர்ந்திருப்பதாகத் தெரியவில்லை. பெண்களும் துறவறத்தை மேற்கொண்டு, சமயத் தொண்டு முதலியன செய்துவந்தபோதிலும், ஆர்ச் பிஷப் போன்றவர்களுக்கு இருக்கும் உயர்ந்த கௌரவம் 'மதர் சுப்பீரீயர் என்னும் ஸ்தானத்தில் இருக்கும் கிறிஸ்துவ மாதர்களுக்குக் கிடையாது.

பெண்பிறவி எடுத்த எந்த ஒரு ஆத்மாவும் வீடுபேறு அடைய முடியாது என்றும், நற்கருமங்களைச் செய்து செய்து, ஆண்பிறவியை அடைந்து, அதன் பிறகு செய்யும் நற்கருமங்களின் பயனாகவே அந்த ஆத்மா துறவற வழிநின்று, வீடுபேற்றை அடையும் என்று திகம்பரம் ஜைனப் பிரிவினர் கருதுகின்றனர்.

இவற்றிலிருந்து எல்லாச் சமயங்களுமே பெண்களை ஒரு இழிந்த பிறப்பாகவே கருதி வந்திருக்கிறது என்ற உண்மை தெரியவரும். பௌத்த சமயம் அதற்கு விலக்கு அல்ல.

இதற்குக் காரணம் என்ன?

இயல்பாகவே ஆடவர்களைக் காட்டிலும் பெண்கள், பலம் குறைந்தவர்கள். அத்தகையவர்கள் துறவறத்தை மேற்கொண்டால், நீடித்துத் துறவறத்திலே நிற்கமுடியாமல், அவதூறுகள் ஏற்படலாம். அதனால் சங்கத்தின் சிறப்புக்குப் பழுது நேரலாம். ஆகவே ஆண்களைக் காட்டிலும் பெண் துறவியருக்குக் கட்டுப்பாடுகள் மிகுதியாக இருந்தால், தீமைகள் குறையக் கூடும் என்று கருதித்தான், பிக்குணிகளுக்கு, எட்டு விதிகளைப் பெருமான் விதித்திருக்கிறார்; பிக்குகளுக்குக் கட்டுப்பட்டு, பிக்குணிகள் மரியாதையுடன் நடக்க வேண்டும் என்னும் விதிகளைச் செய்திருக்கிறார் என்று கருதுவதுதான் பொருத்தமாய் இருக்கும்.

ஆயினும் மற்ற சமயத்தவரைக் காட்டிலும் பௌத்த

சமயத்தார், பெண்களுக்கு அதிக சலுகைகளும் உரிமைகளும் வழங்கி இருக்கிறார்கள் என்பதில் ஐயமில்லை.

பௌத்த சமயப் பெண் விரும்பிய ஆடவனை மணந்து கொள்ளலாம்: சுதந்திரமாக வியாபாரத்தில் ஈடுபடலாம்; அவர்களுக்குச் சொத்துரிமை உண்டு; விவாகரத்துச் செய்து கொள்ளும் உரிமை உண்டு. சமுதாய வாழ்வில், அரசியல் வாழ்வில், பௌத்த சமயப் பெண்களுக்கு, சம நீதியும் சம உரிமையும் உண்டு. ஆனால் துறவற வாழ்வில் மட்டுமே பெண்களுக்குச் சம உரிமைகள் இல்லை.

இத்தகைய சம உரிமைகளும் சலுகைகளும் மற்ற சமயத்தைப் பின்பற்றும் பெண்களுக்கு இருப்பதாகத் தெரியவில்லை.

இந்தக் கருத்தோடு நோக்கினால், சமுதாய வாழ்வில், பௌத்த சமயம் முன்றேற்றப் பாதையில் செல்ல, பெண்களை அனுமதித்து இருப்பது புலனாகாமல் போகாது.

---

## இருத்தி ஆற்றல்

எந்தச் சமயமும் தொடக்கத்தில் சத்தியத்தை, நேர்மையை, அன்பை, ஒழுக்கத்தை, மாந்தரின் மேம்பாட்டை நோக்கமாகக் கொண்டு, தோன்றுவது உண்டு; அவற்றைக் கடைப்பிடித்து நடப்பதனால் சிறப்படைந்து பரவுவது உண்டு. பின்னர் நாளடைவில் அற்புதங்கள், மந்திர தந்திரங்கள், அதிசயங்கள் போன்ற இருத்திகளில் தங்கள் வல்லமையைக் காட்டிப் பெருமைப்படுவது உண்டு.

இந்த இரு பண்புகளும் உலகிலுள்ள முக்கிய மதங்கள் அனைத்திலும் ஊடாடி இருப்பதை நாம் காணலாம். கடவுள் நம்பிக்கை கொண்டுள்ள மதத்தினரும், இருத்திகளில் நம்பிக்கை கொண்டுள்ளனர்; கடவுள் நம்பிக்கை இல்லாத மதத்தினரும், இருத்திகள் உண்டு என்பதை ஏற்றுக்கொண்டு உள்ளனர்.

கண்ணன் செய்த அற்புதங்களையும் இருத்திகளையும் பற்றி, பாகவத புராணம் விவரிக்கிறது.

குருடர்களுக்குப் பார்வை வரச் செய்தது, ஐந்து ரொட்டிகளையும் இரண்டு மீன்களையும் வைத்துக்கொண்டு ஐயாயிரம் மக்களுக்கு இயேசுநாதர் உணவு வழங்கியது போன்ற இருத்திகள் குறித்துப் பைபிள் கூறுகிறது.

தவத்தின் மூலம் இருத்தி ஆற்றலை எவரும் பெற முடியும் என்பதை, ஜைன சமய நூல்கள் அறிவிக்கின்றன.

பௌத்த சமயத்திலும் இருத்தி ஆற்றல்களுக்கு இடம் உண்டு. புத்தர் பெருமான் செய்து காட்டிய இருத்திகளையும், அவருடைய சீடர்கள் செய்து காட்டிய இருத்திகளையும் பௌத்த நூல்கள் கூறுகின்றன. சூழ்நிலைகளையும் சந்தர்ப்பங்களையும் மனத்தில்கொண்டு, இருத்திகளைப் பௌத்தர்கள் காட்டி இருக்கின்றனரே யன்றி, வேறு இல்லை. இருத்திகள் மூலம் மக்கள் மேன்மையடைய முடியாது என்றும், உண்மையைக் கடைப்பிடித்து ஒழுகுவதன் மூலமே மக்கள் மேன்மை அடைய முடியும் என்றும் புத்தர் பெருமான் போதனை செய்து இருக்கிறார்.

புத்தர் பெருமான், யாக்கை நிலையாமைபற்றி, பெண் ஒருத்திக்கு இருத்தி ஆற்றல் மூலம் எடுத்துக்காட்டி அவளைத் திருத்தி இருக்கிறார்.

புதிதாகப் பௌத்த சமயத்தைத் தழுவிய பெண் ஒருத்தி, தனது யாக்கையின் வனப்பையும், எழிலையும் நினைந்து நினைந்து, மனத்திற்குள்ளே மகிழ்ந்து பெருமைப் பட்டுக்கொண்டிருந்தாள்.

இந்த எண்ணம் அவளுக்கு இருப்பதைப் பெருமான் தெரிந்துகொண்டார். சொல்லாமல் சொல்லி, அவளுடைய கர்வத்தைப் போக்க அவர் தீர்மானித்தார்.

ஒரு முறை அந்தப் பெண் பெருமானைத் தரிசிக்க வந்திருந்தாள். அப்போது பெருமான் தமது இருத்தி ஆற்றலினால், வனப்புமிக்க பெண் ஒருத்தியை உண்டாக்கி, அந்தப் பெண்ணுக்கு முன்னே நிற்கச் செய்தார். தனது அழகில் கர்வம் கொண்டிருந்த பெண்ணுக்கும் அந்த உருவத்துக்கும் இடையில் காணப்பட்ட வேறுபாடு, அண்டம் காக்கை ஒன்றுக்கும் அழகிய தூய வெள்ளை அன்னப் பறவை ஒன்றுக்.

கும் இடையில் காணப்படும் வேறுபாட்டை நிகர்த்து இருந்தது.

பெருமான் உருவாக்கிக் காட்டிய அழகிய பெண் உருவத்தைப் பார்த்ததும், தனது அழகில் கர்வம் கொண்டு பூரித்துப் போயிருந்த அழகி பிரமித்துப் போனுள்.

இப்படி அவள் இருந்த சமயம் அந்த உருவம் மெல்ல மெல்லக் கிழத்தன்மையை அடையத் தொடங்கிற்று. நரை, திரை, மூப்பு முதலியன தோன்றியதுடன் நில்லாமல், வெறுப் படையத் தக்க நோய்களின் சின்னங்களும் அந்த உருவத்தில் உண்டாயின.

இந்தக் காட்சிகளைக் கண்டதும், தமது அழகில் செருக் குற்று இருந்த அந்தப் பெண், மூர்ச்சித்துக் கீழே சாயும் நிலையில் தவித்தாள்.

அப்போது பெருமான் அவளிடம், ''பெண்ணே! மானிட உடம்பில் எத்தகைய மாற்றங்கள் எல்லாம் நேர லாம் என்பதை இப்பொழுது நீ பார்த்தாய். உருவ அழகில் நீ செருக்குற்று இருப்பது எவ்வளவு பிசகு என்பதை இப் பொழுதாவது நீ தெரிந்துகொள்'' என்று சுட்டிச் சொன்னுர்.

அந்தப் பெண் மனமாற்றம் அடைந்து, திருந்தி, சீலத்துடன் வாழத் தொடங்கினுள்.

• • •

இதன் பின்னர் வைசாலியைவிட்டு, மகுள மலைக்குச் சென்று, ஆறுவது மாரிக் காலத்தை, புத்தர் பெருமான் அங்கு கழித்தார். அப்போது ஆயிரக் கணக்கான மக்கள் பௌத்த சமயத்தைத் தழுவினுர்கள்.

மாரிக் காலம் முடிந்த பின், மகுள மலையிலிருந்து புறப் பட்டு, இராஜகிருகத்துக்குச் சென்று, வேணு வன விகா கையில் பெருமான் தங்கினுர்.

பெருமான் இராஜகிருகத்தில் இருந்தபோது, நடந்த மற்ெருரு குறிப்பிடத்தக்க நிகழ்ச்சி, இருத்தி ஆற்றல் சம் பந்தமானது. அது வருமாறு:

இராஜகிருக நகரத்தில் செல்வச் சீமான் ஒருவன் இருந்தான். நாட்டில் நிலவும் பல்வேறு சமயங்களில், எந்தச் சமயத்தைப் பின்பற்றுவது பொது நலம் பயக்கும் என்பது பற்றி, ஒரு முடிவுக்கு வர முடியாது தத்தளித்துக்கொண்டு இருந்தான்.

இத்தகைய மனநிலையோடு இருந்து வந்த அவன், ஒரு நாள் கங்கை ஆற்றுக்கு நீராடப் போனான். அப்போது சந்தன மரக்கட்டை ஒன்று ஆற்றில் மிதந்து வருவதை அந்தக் கனவான் கண்டான்.

உடனே அந்தக் கட்டையைத் தனது இல்லத்துக்கு எடுத்துச் சென்று, அதில் அழகிய திருவோடு ஒன்று செய்வித்தான். பல கழிகளை ஒன்றுடன் ஒன்று சேர்த்துக் கட்டி, அறுபது அடி நீளத்துக்கு ஒரே கழியாகச் செய்தான். பிறகு அந்தக் கழியின் ஒரு முனையில் சந்தனத் திருவோட்டை வைத்துக் கட்டி, கழியை நிமிர்த்தி நேராக நட்டு வைத்தான்.

அதன் பின்னர் ''என் வீட்டு வாயிலில் ஒரு மரத்தில் சந்தனத் திருவோடு ஒன்று இருக்கிறது. எந்த மதத்தைச் சேர்ந்தவர்கள், ஆகாயத்துக்கு எழும்பி அந்தத் திருவோட்டை எளிதில் எடுத்துக்காட்டுகிறார்களோ, அவர்கள் பின்பற்றும் மதத்தை நானும் பின்பற்றுவேன்'' என்று அறிவித்து இருந்தான்.

இது விவரம் தெரிய வந்ததும், ஒவ்வொரு சமயத்தைச் சார்ந்தோரும் தத்தம் வல்லமையைக் காட்ட முன்வந்தனர். ஆறு நாட்கள்வரை யாராலும், ஆகாயத்துக்கு எழும்பி அந்தத் திருவோட்டை எடுக்க முடியவில்லை.

ஏழாம் நாளன்று, பிச்சையின் பொருட்டு, மொக்கலானர், பிண்டோல பரத்வாஜர் என்பவரையும் தம்முடன் அழைத்துக்கொண்டு அந்த வழியாக வந்தார்.

திருவோடு பற்றிய நிபந்தனை தெரிய வந்ததும், ஆகாயத்துக்குச் சென்று அந்தத் திருவோட்டை எடுத்து, செல்வச் சீமானையும் அவனுடைய குடும்பத்தாரையும், பௌத்த சமயத்தை தழுவச் செய்ய அவர் நிச்சயத்தார்.

மொக்கலானரின் எண்ணத்தை அறிந்த பரத்வாஜர்

''உங்களைப் போன்ற பெரியவர்கள், இருத்தி ஆற்றலைக் காட்டி, திருவோட்டை எடுத்து வருவதைக் காட்டிலும், அடுத்தபடியில் இருப்பவர்கள் அந்தக் காரியத்தைச் செய்வது, உங்களுக்கும் பெருமையை அளிக்கும்; செய்பவர் களுக்கும் பெருமையை அளிக்கும். ஆகவே நானே ஆகாயத் துக்குச் சென்று, அந்தக் கம்பத்தின் உச்சியில் இருக்கும் திருவோட்டை எடுத்து வருகிறேன்'' என்று கூறினார்.

இதற்கு மொக்கலானர் சம்மதித்தார்.

உடனே பரத்வாஜர் தமது இருத்தி ஆற்றலைக் காட்டி, சந்தணத் திருவோட்டை எடுத்து வந்தார்.

பார்த்தவர்கள் அனைவரும் வியப்புமேலிட்டு நின்றனர்.

செல்வந்தனும் அதிசயித்துப் போனான். திருவோட்டில் உணவை நிரப்பி, அதைப் பரத்வாஜரிடம் கொடுத்தான்.

பெற்றுக்கொண்டு, பரத்வாஜரும் மொக்கலானரும் வேணு வனம் திரும்பிக்கொண்டிருந்தனர்.

வியப்பு மேலிட்டு நின்ற ஜனங்கள் அவர்கள் இருவரை யும் பின்தொடர்ந்து சென்றதுடன், மேலும் அற்புதங்களைச் செய்து காட்டுமாறு கேட்கத் தொடங்கினர்.

இதனால் வேணு வனத்து அருகே சந்தடியும் கூச்சலும் அதிகமாயின.

''விவரம் என்ன?'' என்று பெருமான் விசாரித்தார்.

நடந்தவற்றை, பெருமானிடம் தெரிவித்தார்கள்.

உடனே பரத்வாஜரைத் தம்பால் அழைத்து வரச் செய்து, அவர் கையிலிருந்த அந்தச் சந்தணத் திருவோட்டை வாங்கி, உடைத்து அப்பால் எறிந்தார் பெருமான்.

''இருத்தி ஆற்றல் மூலம் மக்களின் மனத்தைப் பிக்குகள் கவர முயல்வது கூடாது என்றும், ஒழுக்கங்களின் மேன்மை யாலேயே மக்களின் மனத்தைப் பிக்குகள் கவர வேண்டும்'' என்றும் பெருமான் வற்புறுத்திச் சொன்னார்.

இதிலிருந்து நாம் தெரிந்துகொள்ள வேண்டிய போதனை என்ன வென்றால், இருத்தி ஆற்றல்கள் இருப்பினும் அவற் றைப் பயன்படுத்துவது, நிர்வாணத்துக்கு வழியாகாது என்பதே.

இப்படிப் போதித்த பின்னரும் சில இருத்திகளைப் பெருமான் செய்து காட்டி இருக்கிறுர்.

அவைபற்றி அடுத்த அத்தியாயத்தில் கவனிக்கலாம்.

---

## புத்தர் செய்த அற்புதங்கள்

இருத்தி ஆற்றல்களைக் காட்டி, பிக்குகள் அற்புதங்கள் புரியக் கூடாது என்று பெருமான், தடை விதித்ததைக் கேள்வியுற்றதும், பிற மதத்தினர், பௌத்தர்களை எள்ளி நகையாடத் தொடங்கினர். ''பௌத்தர்களிடம் தெய்வீகத்தன்மை இல்லை; அதனால்தான் அவர்களிடம் இருத்தி ஆற்றல்களும் இல்லை. அதை மறைப்பதற்காகவே இருத்திகள் கூடாது என்று புத்தர் தடைவிதித்து இருக்கிறுர்'' என்று இகழ்ந்து பேசத் தொடங்கினர்.

இந்தச் செய்தி பிம்பசார மன்னன் காதுகளுக்கும் எட்டிற்று. ஆகவே அவன் புத்தர் பெருமானிடம் வந்து ''பகவானே! இருத்தி ஆற்றல்களுக்குத் தாங்கள் தடை விதித்து இருப்பது குறித்து, பிற மதத்தினர் ஏளனமாகப் பேசுகிறுர்கள்'' என்று தெரிவித்துக்கொண்டான்.

''அரசே! அற்புதங்களைப் புரியக் கூடாது என்று சீடர்களுக்குத் தடை செய்திருக்கிறேனே யல்லாமல், புத்தருக்கு அந்தத் தடை கிடையாது. அரசன் இடும் கட்டளைகள் குடிமக்களைக் கட்டுப்படுத்துமே யல்லாது, அரசனை அவை கட்டுப்படுத்தாது அல்லவா? இன்னும் நான்கு மாதங்களில் அற்புதங்களை நான் செய்து காட்டுகிறேன்.'' ஒரு மாந்தோப்பு இருக்கும் இடத்தைக் குறிப்பிட்டுச் சொல்லி, ''அங்கே அற்புதங்கள் நிகழும்'' என்று சொன்னுர்.

இது விவரம் தெரிய வந்ததும், பௌத்த சமயத்துக்கு மாறுபட்ட கருத்துடையவர்கள் பயந்து போனுர்கள். அரசன் முன்னிலையில் தாங்கள் அவமானப்பட நேர்ந்தால் என் செய்வது என்று அஞ்சினுர்கள். ஆகவே, ஒரு சூழ்ச்சி செய்தார்கள். மாந்தோப்பு என ஒன்று இருந்தால்தானே,

புத்தரால் அற்புதங்களைச் செய்துகாட்ட முடியும் என்று கருதி, சுற்று வட்டாரத்தில் இருந்த மாந்தோப்புகள் அனைத்தையும் அழித்துவிட்டார்கள்.

புத்தர் பெருமான் தம் சீடர்களை அழைத்துக்கொண்டு, மாசி மாதப் பௌர்ணமி யன்று, இராஜகிருகத்தைவிட்டுப் புறப்பட்டார்; நாட்டின் பல்வேறு பகுதிகளில் பிரச்சாரம் செய்துகொண்டே கோசல நாட்டின் தலைநகரான சிராவஸ்திக்குப் போனார்.

அங்கே இருந்த தோட்டக்காரன் ஒருவன், பெரிய மாங் கனி ஒன்றைப் பெருமானுக்கு வழங்கினான். அந்தக் கனியைச் சாப்பிட்ட பின்னர் அதன் கொட்டையை, ஆனந்தனிடம் கொடுத்து, ஒரு இடத்தில் பெருமான் ஊன்றச் செய்தார்.

அதன்படி ஆனந்தன் செய்ததும், தமது கைகளை அலம்பி, தண்ணீரைக் கொட்டைமீது பெருமான் விட்டார்.

உடனே அந்த இடத்தில் பெரிய மாமரம் ஒன்று ஓங்கி வளரத் தொடங்கிற்று. ஐம்பது அடி உயரம்வரை வளர்ந்த அந்த மாமரத்தில் ஏராளமான கனிகள் பழுத்துத் தொங்கின.

இதைப் பார்த்ததும் மக்கள் அதிசயித்து நின்றார்கள்; பிற மதவாதிகள் பயந்தும் நாணமுற்றும் அங்கிருந்து ஓட்டம் பிடித்தார்கள்.

புத்தர் பெருமானே மேலும் தொடர்ந்து பல அற்புதங்களை நிகழ்த்திக் காட்டினார். சீடர்கள் பலர் தங்கள் இருத்தி ஆற்றல்களைச் செய்து காட்டுவதாகப் பெருமானிடம் வேண்டியும் பெருமான் அதற்குச் சம்மதிக்கவில்லை.

இதன் பின்னர் ஆகாய மார்க்கமாகக் கிளம்பி, தம் அன்னை வாழும் தேவலோகத்துக்குச் சென்று, அவளுக்கும் அங்குள்ள பிறருக்கும் பெருமான் பௌத்த தருமத்தை உபதேசித்தார்.

ஏழாவது மாரிக்கால வாசத்தை அவர் தேவலோகத்திலே கழித்தார். அப்போது சாரிபுத்திரரும் மொக்கலானரும் தேவலோகத்துக்குச் சென்று புத்தர் பெருமானைத் தரிசித்தார்கள். தாம் இன்னும் மூன்று மாதங்களுக்குப் பின்னர்

பூலோகத்துக்கு வருவதாகவும், சிராவஸ்தி நகருக்கு முப்பது கல் தொலைவில் இருக்கும் சங்கர்ஷபுரத்தில் இறங்குவதாகவும் அவர்களிடம் பெருமான் சொல்லி அனுப்பினார்.

அதன்படி மூன்று மாதங்களுக்குப் பின்னர், பொன் மயமான ஒரு ஏணியின் வழியாகத் தேவலோகத்திலிருந்து பெருமான் சங்கர்ஷபுரத்தில் இறங்கினார்.

மக்கள் அவரைப் பெரிதும் கொண்டாடினார்கள். அவருடைய புகழும் செல்வாக்கும் நாளுக்கு நாள் அதிகரித்து வந்தன.

இதைப் பார்த்ததும் பிற சமயத்தோர், மனம் புழுங்கித் தத்தளித்தார்கள்.

சங்கர்ஷபுரத்தில் இறங்கிய புத்தர் பெருமான் வைசாலி நகருக்குச் சென்று அங்கு ஜேத வனத்தில் தங்கினார்.

## அவதூறுகள்

எந்த ஒரு மதமும் எதிர்ப்புகளுக்கு உள்ளாகாமல் உலகில் தோன்றியதும் இல்லை; வளர்ச்சி அடைந்ததும் இல்லை. கிறிஸ்துவ மதத்தை, பரிசேயர்கள் எதிர்த்தார்கள்; இஸ்லாமிய சமயத்தைக் குறைஷிகள் எதிர்த்தார்கள்; வைதீக ஹிந்துக்கள் பௌத்த சமயத்தையும் ஜைன சமயத்தையும் எதிர்த்தார்கள்; வைதீக ஹிந்துக்களைப் பௌத்தர்களும் ஜைனர்களும் எதிர்த்தார்கள்.

எந்தப் புதிய மதத்துக்கும் ஆரம்பத்தில் எதிர்ப்பு இலேசாகத் தோன்றும்; புதிய மதம் செல்வாக்கு அடைந்து, பரவ முற்பட்டால் எதிர்ப்பு தீவிரமாகத் தொடங்கும். தீவிரமான எதிர்ப்பையும் சமாளித்துப் பரவும் ஆற்றல் புதிய மதத்துக்கு இருக்குமாயின், அந்த மதத் தலைவர்களைப் பற்றி அவதூறுகள் தலைகாட்டத் தொடங்கும்.

இத்தகைய ஒரு நிலை பௌத்த சமயத்துக்கும் ஏற்பட்டது.

பௌத்த சமயம் தோன்றியபோது, இந்தியாவில், பல வகையான சமய வாதங்கள் நிலவியபோதிலும், வைதீக ஹிந்து சமயமும் ஜைன சமயமும் செல்வாக்குடன் விளங்

கின. இவை இரண்டும் பௌத்த சமயம் பரவுவதை விரும்பவில்லை. பௌத்த சமயத்தினரும் தங்கள் சமயத்தைப் பரப்புவதில் அதிக ஆர்வம் காட்டி வந்தனர்.

இதைப் பொறுக்காத பிற சமயத்தினர், புத்தர் பெருமான்மீது அவதூறு ஒன்றைச் சுமத்த முற்பட்டனர்.

தனக்கும் புத்தர் பெருமானுக்கும் இடையில் காதல் தொடர்பு உண்டு என்று சொல்லும்படி சிஞ்சை என்னும் பெயருடைய துறவிப் பெண் ஒருத்தியை அவர்கள் ஏவி விட்டனர்.

அவள் தனது வயிற்றின்மீது துணியை வைத்துக் கட்டிக் கொண்டு, வேணு வனத்துக்குச் சென்றாள். தனக்கும் புத்தருக்கும் இடையில் நெருங்கிய தொடர்பு இருந்தது என்றும், அதன் பயனாய் இப்பொழுது தான் கருவுற்று இருப்பதாகவும் நாணமின்றி அவள் வெளிப்படையாகவே கூறினாள்.

இது சமயம் ஒரு எலி வயிற்றிலே புகுந்து. அங்கு இருக்கும் துணிகளைக் கடித்துக் குதறியதால், சிஞ்சையின் குட்டு வெளிப்பட்டுப் போயிற்று.

விவரம் தெரிய வந்ததும், விகாரையில் இருப்பவர்கள் சிஞ்சையைக் கடிந்து உரைக்கத் தொடங்கினர். அவளைத் தண்டிப்பதற்கும் ஆயத்தமாயினர்.

இதைப் பார்த்ததும், சிஞ்சை அங்கிருந்து ஓடிவிட்டாள்.

இந்தப் பெண் துறவி எந்தச் சமயத்தைச் சார்ந்தவள் என்பது திட்டமாகத் தெரியவில்லை.

இவளைப் போலவே, சுந்தரி என்னும் பெண் ஒருத்தியையும், புத்தர் பெருமான்மீது பழி சுமத்தும்படி எதிரிகள் ஏவினர்.

அவள் நாள்தோறும், மாலையில் ஜேதவனத்துக்குச் செல்வது போலும், காலையில் அங்கு இருந்து திரும்புவது போலும் நடித்தாள்.

''சுந்தரியுடன் புத்தர் தொடர்புகொண்டுள்ளார்'' என்று ஒரு பொய் வதந்தியை எதிரிகள் பரப்பினர்.

சில நாட்கள்வரை இந்தப் பொய் வதந்தி எங்கும் பரவியது. பிறகு எதிரிகளே, ஒருவருக்கு ஒருவர் தம்முள்

சண்டையிட்டுக்கொண்டு, சுந்தரியைக் கொன்று குப்பை மேட்டில் எறிந்துவிட்டனர்.

அவர்கள் ஒருவருடன் ஒருவர் இதுபற்றிச் சச்சரவிட்டுக் கொண்டு இருந்ததால், உண்மை வெளியாயிற்று.

சுந்தரி கொலையுண்ட செய்தியை, ஒற்றர்கள் அரசனுக்கு அறிவித்தனர்.

குற்றவாளிகளைத் தருவித்து, அரசன் விசாரணை நடத்தினான். உண்மை தெரிய வந்ததும், குற்றவாளிகளைக் கொண்டே, தாங்கள் செய்த குற்றத்தை ஊர் அறிய அறிவிக்கும்படி அரசன் ஏற்பாடு செய்தான்.

இதனால் குற்றவாளிகளின் சூழ்ச்சி அம்பலமானதுடன், பெருமானுடைய புகழும் சங்கத்தினுடைய புகழும் நாளுக்கு நாள் ஓங்கி வளரத் தொடங்கின; மக்கள் திரள் திரளாக வந்து பௌத்த சமயத்தைத் தழுவலாயினர்.

இந்த ஆண்டு மாரிக் காலத்தைப் பெருமான் தம் சீடர்களுடன் ஜேத வனத்திலே கழித்தார்; அதன் பின்னர், ஊர் ஊராகச் சென்று, ஒழுக்கத்தின் மூலமும், பிரச்சாரத்தின் மூலமும் அறநெறிகளைப் பரப்பி வந்தார் பெருமான்.

## கடுகு

புத்தர், இயேசுநாதர் போன்ற பெரியவர்கள், தாங்கள் கண்ட உண்மைகளை. கதைகள் மூலம் மக்களுக்கு விளக்கிப் புரிய வைத்து இருக்கிறார்கள். கதைகள் சொல்லுவதில் புத்தர் பெருமானுக்கு இணையாக யாரையும் சொல்ல முடியாது. அவர் சொல்லி இருக்கும் கதைகளுக்கு நிகரான கதைகளை உலக இலக்கியங்களிலே நாம் அரிதாகவே காண முடியும்.

சாவு என்பது எங்கும் உண்டு; அதைத் தவிர்க்க யாராலும் முடியாது என்பதை, அடியில் வரும் கதை நமக்கு அறிவிக்கிறது.



சிராவஸ்தி நகரில் கிஸா கோதமி என்னும் பெயருள்ள வாலிப மங்கை ஒருத்தி இருந்தாள். திருமணம் ஆகி, தன் கணவனுடன் அவள் வாழ்ந்து வந்தாள்.

அவளுக்கு அழகிய ஆண் குழந்தை ஒன்று பிறந்தது. அந்தக் குழந்தையை அருமையோடும் பெருமையோடும் அவள் வளர்த்தாள்.

ஒரு நாள் அந்தக் குழந்தை நோய்வாய்ப்பட்டு இறந்து போயிற்று.

அதை அறியாத அவள், குழந்தை நோயுற்று மயங்கிய நிலையில் கிடப்பதாக எண்ணிக்கொண்டாள். ஆகவே குழந்தையை எடுத்துச் சென்று தனக்குத் தெரிந்தவர்களிடம் காட்டி, குழந்தையைக் காப்பாற்றுமாறு வேண்டினாள்.

தக்க மருத்துவரிடம் காட்டி வைத்தியம் செய்யும்படி, கோதமிக்கு அவர்கள் சொன்னார்கள்.

ஆகவே அவள் குழந்தையைத் தூக்கிக்கொண்டு, பெரிய மருத்துவர் ஒருவரிடம் ஓடினாள்.

வைத்தியர் குழந்தையைப் பார்த்ததும், அது இறந்து விட்டது என்பதைத் தெரிந்துகொண்டார். ஆகவே, அவர் கோதமியிடம் ''பெண்ணே! உனது குழந்தை இறந்து விட்டது'' என்று கூறினார்.

அதற்குக் கோதமி, ''ஐயா! வைத்தியரே! இறந்த குழந்தையை உயிர்ப்பிக்க முடியாதா?'' என்று ஏக்கத்துடன் கேட்டாள்.

''முடியாது அம்மா! முடியாது! ஆயினும் ஒரு வழி சொல்லுகிறேன் கேள். ஜேத வனத்துக்குச் சென்று, புத்தர் பெருமானிடம் மன்றாடிக் கேட்டுப்பார். ஒரு வேளை உனது குழந்தை அவரால் உயிர் பிழைத்தாலும் பிழைக்கலாம்'' என்று யோசனை சொன்னார்.

இதைக் கேட்டதும், குழந்தையைத் தன் தோள்மீது போட்டுக்கொண்டு, கோதமி ஜேத வனத்துக்குப் போனாள். பெருமானைச் சந்தித்து ''பெருமானே! என் குழந்தையைக் காப்பாற்றுங்கள். அதற்கு உயிர்ப் பிச்சை கொடுங்கள்'' என்று வேண்டினாள்.

அவள் கண்கள் இரண்டிலிருந்தும் கண்ணீர் தாரை
தாரையாகக் கொட்டிற்று.

பெருமான் நிலைமையைப் புரிந்துகொண்டார். ஆகவே,
கோதமியை நோக்கி, ''அம்மா! உன் குழந்தை பிழைக்க
வேண்டும் என்றுதானே நீ விரும்புகிறாய்?'' என்று கேட்டார்.

''ஆம் பெருமானே!'' என்று ஆவலுடன் பதில் சொன்
னாள் கோதமி.

''அப்படியானால், கொஞ்சம் கடுகு வாங்கி வா. நீ
கடுகு வாங்கும் வீட்டில் இதற்கு முன்னர் யாரும் இறந்து
இருக்கக் கூடாது. அத்தகைய ஒரு வீட்டில் நீ கொஞ்சம்
கடுகு வாங்கி வந்தால் உன் புதல்வனை உயிர்ப்பித்துவிட
லாம்'' என்று கூறினார்.

''சரி வாங்கி வருகிறேன்!'' என்று கூறிவிட்டு, குழந்தை
யையும் தூக்கிக்கொண்டு கோதமி சென்றாள்.

முதலில் ஒரு வீட்டுக்குச் சென்று, ''தாயே! கொஞ்சம்
கடுகு கொடுங்கள்'' என்று கேட்டாள்.

ஒரு மூதாட்டி கொஞ்சம் கடுகை அள்ளி வந்து கிஸா
கோதமியிடம் கொடுத்தாள்.

அதை வாங்கிக்கொண்ட கோதமி அந்த மூதாட்டியிடம்
''அம்மையே! யாரும் இந்த இல்லத்தில் இறந்து போனது
உண்டா?'' என்று கேட்டாள்.

''ஆம்'' என்று பதில் சொன்னாள் மூதாட்டி.

இதைக் கேட்டதும் கோதமி, ''தாயே! அப்படியானால்
இந்தக் கடுகு எனக்குப் பயன்படாது'' என்று கூறி மூதாட்டி
யிடம் கடுகைத் திருப்பிக் கொடுத்துவிட்டாள்.

அதன் பின்னர் கோதமி மற்றொரு வீட்டுக்குச் சென்று
கடுகு கேட்டாள்.

''சரி தருகிறேன்'' என்று வீட்டுக்காரி சொன்னாள்.

அப்போது கோதமி அவளிடம் ''யாரும் இறவாத ஒ
வீட்டிலிருந்து சிறிது கடுகு வாங்கி வருமாறு புத்தர் பெ
மான் பணித்தார். அதனால்தான் கேட்கிறேன்'' என்
சொன்னாள்.

உடனே அந்த வீட்டுக்காரி, ''பெண்ணே! பிறப்பு

இறப்பும் வாழ்க்கையில் நிகழ்ந்தே தீரும். இரண்டு ஆண்டுகளுக்கு முன்னர் என் கணவர் இறந்து போனார்'' என்று கூறினாள்.

''அப்படியானால் கடுகு தேவை இல்லை'' என்று கோதமி அங்கிருந்து போய்விட்டாள்.

பிறகு மூன்றாவதாக ஒரு வீட்டுக்குச் சென்று, விவரத்தைச் சொல்லி, தனக்குக் கடுகு வேண்டும் என்று கேட்டாள்.

தங்கள் வீட்டில் ஒரு ஆண்டுக்கு முன் குழந்தை ஒன்று இறந்துவிட்டதாக வீட்டில் இருப்பவர்கள் கூறினார்கள்.

விவரம் தெரிய வந்ததும் கவலை தோய்ந்த உள்ளத்துடன் பெருமானிடம் திரும்பினாள் கோதமி.

அவளைப் பார்த்ததும், ''பெண்ணே! நான் சொன்னபடி கடுகு கிடைத்ததா?'' என்று பெருமான் கேட்டார்.

''கிடைக்கவில்லை. எந்த வீட்டில் கேட்டாலும் யாராவது இறந்து போனதாகக் கூறுகிறார்கள். அதனால் நான் கடுகு வாங்காமல் திரும்பிவிட்டேன்'' என்று பதில் சொன்னாள் கிஸா கோதமி.

இதன் பின்னர் பெருமான் அவளிடம் ''பெண்ணே! பிறப்பவர் யாவரும் இறப்பது உறுதி என்னும் உண்மையை நீ அறிய வேண்டும் என்பதற்காகவே கடுகு வாங்கி வருமாறு சொன்னேன். உற்றார் உறவினரை இழப்பது எல்லாருக்கும் இயல்பு என்னும் உண்மையை நீ அறிந்திருப்பாய் என்று நம்புகிறேன்'' என்று கூறினார்.

இந்த விளக்கத்தைக் கேட்டதும் கிஸா கோதமி ஆறுதல் அடைந்தாள். தன் மைந்தனை அடக்கம் செய்துவிட்டு, பௌத்த சங்கத்தில் சேர்ந்து, பிக்குணியானாள்.

---

## நெசவாளியின் துயரம்

சாவு என்பது இயல்பான ஒரு நிகழ்ச்சி. அதன் பிடிப்பிலிருந்து யாராலும் தப்ப முடியாது. அது எப்படி வரும், எப்பொழுது வரும் என்பதை யாராலும் சொல்ல

முடியாது இந்த உண்மையை அடியில் வரும் சம்பவம் நமக்கு நினைவுபடுத்துகிறது :

அலாவி என்னும் ஊரில் நெசவாளி ஒருவன் இருந்தான். அவனுக்குப் புதல்வி ஒருத்தி இருந்தாள். அவளும் தன் தந்தை செய்த நெசவுத் தொழிலையே செய்து வந்தாள்.

அவளுக்குப் புத்தர் பெருமானுடைய போதனைகளில் ஈடுபாடு அதிகம் உண்டு. மூன்று ஆண்டுகளுக்கு முன்னர் புத்தர் பெருமான் செய்த போதனைகளைக் கேட்டு, அவள் வியப்பில் மூழ்கிப் போனாள். இப்பொழுது தன் ஊருக்குப் புத்தர் பெருமான் வரப் போகிறார் என்பதை அறிந்து, ஆனந்தம் அடைந்தாள். அவர் வருவதை எதிர்பார்த்து, ஆவலுடன் காத்திருந்தாள்.

அன்று அவசரமாக ஒரு துணியை நெய்து முடித்துக் கொடுக்க வேண்டியது இருந்தது. ஆகவே அதற்கு நூலையும் ஊடு கட்டையையும் எடுத்துக்கொண்டு தம் தந்தையின் தறி இருக்கும் இடத்துக்கு அவள் போனாள்.

வழியில் ஓர் இடத்தில் பெருமான் செய்யும் உபதேசத்தைக் கேட்பதற்காக மக்கள் குழுமி இருந்தார்கள். யாரையோ எதிர்பார்ப்பவர் போலப் பெருமான் மௌனமாகக் காத்து இருந்தார்.

இது சமயம் நெசவாளிப் பெண் அங்கே வந்து, ஒதுப்புறமாக ஓர் இடத்தில் அமர்ந்தாள்.

உடனே புத்தர் பெருமான் அவளைத் தம் அருகே வருமாறு அழைத்தார்.

அதன்படி அவள் வந்ததும், பெருமான் அவளை நோக்கி, ''பெண்ணே! நீ எங்கிருந்து வருகிறாய்? எங்கு போகிறாய்?'' என்று வினவினார்.

அதற்கு அந்தப் பெண் ''பெருமானே! எங்கிருந்து வந்தேன் எங்கு போகிறேன் என்பதை நான் அறிவேன். ஆனால் எந்த இடத்திலிருந்து வந்தேன், எந்த இடத்துக்குப் போகிறேன் என்பது எனக்குத் தெரியாது'' என்று பதில் சொன்னாள்.

இவ்வாறு அவள் பதில் சொன்னதும், முரண்பாடுகள்

உள்ள மறு மொழிகளைக் கூறி, இந்தப் பெண், பெருமானைக் கிண்டல் செய்வதாக, சீடர்கள் ஆத்திரம் அடைந்தார்கள்.

ஆனால் பெண்ணின் ஆழ்ந்த ஞானத்தை வியந்த பெருமானே பதில் ஒன்றும் சொல்லாமல் மௌனமாய் இருந்தார். பிறகு அவளைப் பார்த்து ''பெண்ணே! நீ சொன்ன விடைகளை விளக்கிச் சொல்'' என்று கூறினார்.

அதற்கு அவள் 'பெருமானே! என் தந்தையின் இல்லத்திலிருந்து புறப்பட்டு, எங்கள் நெசவுக் கூடத்துக்கு நான் போகிறேன்; இதனால்தான் எங்கிருந்து வருகிறேன்; எங்கு போகிறேன் என்பதை அறிந்ததாக நான் சொன்னேன். ஆனால் எந்தக் கதியிலிருந்து இக்கதிக்கு நான் வந்தேன் என்பது எனக்குத் தெரியாது; இனி எந்தக் கதிக்கு நான் செல்வேன் என்பதும் எனக்குத் தெரியாது'' என்று விளக்கம் சொன்னாள்.

பெண்ணின் ஞானத்தைப் பாராட்டிவிட்டு, தமது அறவுரைகளைப் பெருமான் கூறத் தொடங்கினார். மக்கள் கேட்டுக்கொண்டு இருந்தார்கள்.

பேச்சு முடிந்ததும், கருவியை எடுத்துக்கொண்டு, தம் தந்தையின் நெசவுக்கூடத்துக்குப் போனாள் அந்தப் பெண்.

அங்கே தன் தந்தை நெசவு செய்யாமல் தறி முன்னே தூங்கிக்கொண்டிருப்பதைக் கண்டாள்.

ஆகவே தறி அருகே சென்று, நூல்களை எல்லாம் அவள் சரிப்படுத்தினாள்.

இது சமயம் விழித்துக்கொண்ட அவளுடைய தந்தை திடும் எனத் தறியைச் சரிப்படுத்த முயன்றபோது, ஒரு மரக் கட்டை, மகளுடைய மார்பின்மீது விழுந்தது.

அதனால் அந்தப் பெண் உடனே அந்த இடத்தில் இறந்து போனாள்.

இதைப் பார்த்ததும் தந்தை கோவென்று கதறினான். தன் மகளின் பிணத்தின்மீது கண்ணீரை உகுத்து, புலம்பிப் புலம்பி அழுதான். இந்தத் துயரத்தை அவனால் தாங்க முடியவில்லை. ஆகவே புத்தர் பெருமானிடம் சென்று ஆறுதல் பெற அவன் நினைத்தான்.

ஆற்றொண்ணுத் துயரத்தில் மூழ்கித் தம்பால் வந்திருக்கும் நெசவாளிக்கு, பெருமான் ஆறுதல் வார்த்தைகள் சொல்லி அவனைத் தேற்றினுர். நான்கு வாய்மைகளை மெல்ல மெல்ல அவனுக்கு விளக்கிச் சொல்லி நெசவாளியின் உள்ளத்தை வாட்டும் துயரைப் பெருமான் துடைத்தார்.

அவனுடைய மனம் இப்பொழுது பரிபக்குவப்பட்டு விட்டதனுல், துயரத்தை அந்த நெசவாளி விட்டு ஒழித்தான்.

இதன் பின்னர் புத்தர் பெருமான் அங்கிருந்து, இராஜகிருக நகருக்குப் புறப்பட்டுப் போனுர்.

## அறம் உரைப்பதற்கு நியதி

பசியால் நலிந்து வாடும் மனிதனுக்கு, அவனுக்குள்ள பசியைப் போக்க முதலில் முயல வேண்டுமே யன்றி, அவனிடம் அந்த நிலையில் அறங்களின் மேன்மைகளைப் போதிக்க முயல்வது கூடாது என்று புத்தர் கூறி இருக்கிறுர். இந்தக் கருத்தைச் சித்தரிக்கும் சம்பவம் வருமாறு:

ஒரு முறை புத்தர் பெருமான் அலாவி என்னும் ஊருக்குச் சென்று இருந்தார். அங்குள்ள மக்கள் பெருமானைப் பெரிதும் கொண்டாடி வரவேற்று உபசரித்தார்கள்; அவருடைய உபதேசத்தைக் கேட்பதற்குத் தேவையான ஏற்பாடுகளைச் செய்துகொண்டிருந்தார்கள்.

அந்த ஊரில் வாழும் ஏழை விவசாயி ஒருவன் பெருமானுடைய உபதேசங்களை நேரில் கேட்க மிகுந்த ஆவலுடன் இருந்தான். ஆனுல் உபதேசம் தொடங்க விருந்த நாள் அன்று அதிகாலையில் அந்த ஏழை விவசாயிக்குச் சொந்தமான பசு காணுமல் போய்விட்ட செய்தி தெரியவந்தது.

இதனுல் பெரிதும் கவலை அடைந்த அந்த விவசாயி என்ன செய்வது என்று யோசித்தான். புறப்பட்டுச் சென்று பசுவைத் தேடுவது என்றும் பிறகு உபதேசத்தைக் கேட்கப் போவது என்றும் அவன் தீர்மானித்தான்.

அதன்படி புறப்பட்டுச் சென்று, சுறுசுறுப்புடன் பசுவை அங்கும் இங்கும் அவன் தேடி அலைந்தான். நாலா பக்கங்

களிலும் தேடி அலைந்து பசுவை அவன் கண்டுபிடித்தான். மாட்டைப் பிடித்துக்கொண்டு, நண்பகல் நேரத்தில் தமது வீடு திரும்பினான்.

அவனுக்குப் பசியும் தாகமும் களைப்பும் அதிகமாய் இருந்தன. இருப்பினும் அவற்றைப் பொருட்படுத்தாது, பெருமான் உபதேசம் செய்யும் இடத்துக்கு அவன் நேரே போனான்.

. மக்கள் குழுமி இருந்தார்கள். பெருமான் செய்யும் உபதேசங்களைக் கேட்க, கைகூப்பி வணங்கியவாறு காத்து இருந்தார்கள்.

பெருமானோ உபதேசத்தைத் தொடங்காமல் அப்படியே மௌனமாய் இருந்தார். அப்பாவி ஏழை விவசாயியின் மனநிலையை அறிந்த அவர், அவன் வருகைக்காகக் காத்திருந்தார்.

விவசாயியோ ஆவலோடு வந்து, கூட்டத்தோடு கூட்டமாகச் சேர்ந்து உட்கார்ந்து இருந்தான்.

பகவான் சுற்று முற்றும் பார்த்தார்; ஆவலோடு வந்திருக்கும் ஏழை விவசாயியைத் தன் அருகே வருமாறு அழைத்தார். அதே சமயத்தில் தம் அருகே இருக்கும் சீடன் ஒருவனிடம், பசியோடு வந்திருக்கும் ஏழை விவசாயிக்குப் போதிய ஆகாரம் கொணர்ந்து கொடுக்குமாறு கூறினார்.

> ''பசியோடு இருப்பவன் செவியில் உபதேசங்கள் ஏற மாட்டா. முதலில் அவனுக்குப் பசியடங்கச் சாப்பாடு போடுங்கள். பின்னரே அறவுரை நிகழ்த்தப் படும்'' என்று சொன்னார்.

அதன்படி சீடன் கொணர்ந்து கொடுத்த உணவை உண்டு, பசியாறிக் களைப்பைப் போக்கிக்கொண்டான் அந்த விவசாயி.

அதன் பின்னர், பெருமான் உபதேச மொழிகளை உரைக்கத் தொடங்கினார்.

பெருமானின் இந்த நடத்தையைக் கண்டு, சீடர்களில் பலர் பெரிதும் ஆச்சரியம் அடைந்தனர். அப்பாவி விவசாயி ஒருவனுக்கு இவ்வளவு சலுகை காட்டியிருக்க வேண்டியது இல்லை என்று கருதினர்,

அவர்களின் கருத்தை உணர்ந்த பெருமான் தம் சீடர்களை இதமாகக் கண்டித்தார்.

''அப்பாவி விவசாயியிடம் நான் நடந்துகொண்டது குறித்து வியப்படையத் தேவையில்லை. இவனுக்கு அறங்களைக் கேட்பதில் இருக்கும் ஆர்வம் அளவிடற்பாலது. அதனால் பசி, தாகம், களைப்பு ஆகியவற்றைச் சட்டை செய்யாது, அறத்தைக் கேட்பதற்கு ஆர்வத்துடன் இங்கு வந்திருக்கிறான். தனக்கு இருக்கும் அசௌகரியங்களை எல்லாம் அவன் சிறிதும் பொருட்படுத்தவில்லை. என்னே! அறத்தின்பால் இவனுக்கு இருக்கும் ஆர்வமும் பிடிப்பும்'' என்று வியந்து சொன்னார்.

---

## யாக்கை நிலையாமை

புத்தர் பெருமான் சுமார் நாற்பத்தைந்து ஆண்டுகள் தொடர்ந்து பிரச்சாரம் செய்து தருமத்தை எங்கும் பரப்பி இருக்கிறார். மழைக் காலம் நான்கு மாதங்கள் மட்டும் ஒரே இடத்தில் தொடர்ந்து தங்கிவிட்டு, மற்ற எட்டு மாத காலமும் ஊர் ஊராகச் சென்று தருமப் பிரச்சாரம் செய்திருக்கிறார்.

அப்படி ஊர் ஊராகச் சென்று தருமப் பிரச்சாரம் செய்த காலத்தில் எத்தனையோ வகையான மக்களைப் பெருமான் சந்தித்து இருக்கிறார். அரசர்களைச் சந்தித்திருக்கிறார்; அந்தணர்களைச் சந்தித்து இருக்கிறார். முரடனைச் சந்தித்து இருக்கிறார்; மூர்க்கனைச் சந்தித்து இருக்கிறார்; யோக்கியனைச் சந்தித்து இருக்கிறார்; அயோக்கியனைச் சந்தித்து இருக்கிறார்; ஆர்வமுடையவர்களைச் சந்தித்து இருக்கிறார்; அகம்பாவிகளைச் சந்தித்து இருக்கிறார்; உண்மையான துறவியையும் சந்தித்து இருக்கிறார்; போலித் துறவியையும் சந்தித்து இருக்கிறார்; திருடனைச் சந்தித்து இருக்கிறார்; கொலைகாரனைச் சந்தித்து இருக்கிறார்.

இத்தனை வகையான மனிதர்களையும் தமது இனிய சொற்களாலும், இதமான நடத்தையாலும் நல்வழிப்

படுத்தித் திருத்தி இருக்கிறார். தருமத்தை ஆர்வத்துடன் பல்வேறு நிலையிலும் தன்மையிலும் இருப்பவர்கள் கடைப் பிடித்து ஒழுக, ஊக்குவித்து இருக்கிறார். அற்புதமான கதைகளைச் சொல்லி, மக்களை, பெருமான் நல்வழியில் திருத்தி இருக்கிறார். இளமை நிலையாமை, யாக்கை நிலை யாமை, செல்வம் நிலையாமை, தீவிர வாதம், போலி நடத்தை, ஆகியவைபற்றிப் பெருமான் சொன்ன விளக்கங் கள் கதை வடிவில் அமைந்திருக்கின்றன. அவற்றில் ஒன்று வருமாறு:

இராஜகிருகத்தில் பிரபலமான கணிகை ஒருத்தி இருந் தாள்; அவள் பெயர் திரிமா. அவள் இனிமையாகப் பேசு வாள்; அவளுடைய தோற்றம் மிடுக்காகவும் எடுப்பாகவும் இருக்கும்.

பெருமானுடைய சீடர்களுக்கு உதவுவதிலும் அமுது படைப்பதிலும் திரிமா ஆர்வம் மிக்கவளாய் இருந்தாள்.

அதனல் நாள்தோறும் பிக்குகள் திரிமாவின் மாளிகைக் குப் பிச்சை ஏற்கப் போவார்கள்.

இப்படிப் போன பிக்குகளில் ஒரு பிக்கு, திரிமாவின் பேரழகைக் கண்டு சொக்கிப் போனர். நாட்கள் செல்லச் செல்ல, அந்தப் பிக்குவின் உள்ளத்தில், திரிமாவைப் பற்றிய நினைப்பு நீடித்துக்கொண்டே போயிற்று.

இந்த நிலையில் திடும் என ஒரு நாள் திரிமா நோய்வாய்ப் பட்டாள். ஆயினும் பிக்குகளுக்குப் பிச்சையிடுவதை அவள் நிறுத்தவில்லை. தான் நோயினல் நலிந்து இருப்பதையும் பொருட்படுத்தாது, தம் இல்லத்துக்கு வரும் பிக்குகளை வணங்கிவிட்டு, மரியாதையுடன் திரிமா பிச்சையிடுவாள். எழுந்து நடக்க முடியாத நிலையில் இருந்ததால், பிக்குகளைத் தம்பால் அழைத்துவரச் செய்து, மரியாதை செய்து வணங்கு வாள். நோயுற்று இருந்தும்கூட அவளுடைய வசீகரத் தோற்றம் எளிய உடையிலும் பதின் மடங்கு சோபித்தது.

திரிமாமீது காதல்கொண்டிருந்த பிக்கு, எளிய தோற் றத்திலும் அவள் சோபிப்பதைக் கண்டு பரவசப்பட்டுப் போனன். அவன் உண்பதை விடுத்தான். உறங்குவதை

விடுத்தான். மற்றப் பிக்குகளுடன் உரையாடுவதை விடுத்தான். திரிமாவைப் பற்றிய ஏக்கத்திலேயே அந்தப் பிக்கு முழுதும் மூழ்கிப் போயிருந்த சமயத்தில், ஒரு நாள் திடும் எனத் திரிமா இறந்து போனுள்.

பிக்குவின் மனப் போக்கைத் திருத்தத் திருவுளம் பற்றிய புத்தர் பெருமான் திரிமா இறந்த நான்காம் நாளன்று, பிம்பசார மன்னனையும் சீடர்கள் சிலரையும் அழைத்துக் கொண்டு, திரிமாவின் இல்லத்துக்குப் போனுர்.

திரிமாவின் உடல் ஊதிப்போய் இருந்தது. புழுக்கள் அதன்மீது நெளிந்துகொண்டிருந்தன. தாங்க முடியாத துர்நாற்றம், அருகே செல்ல முடியாதபடி அவர்களைத் தடுத்தது.

இப்போது புத்தர் பெருமான் தம் அருகே நிற்கும் பிம்பசார மன்னனிடம், ''அரசே! இதோ நம் எதிரே கிடப்பது என்ன?'' என்று கேட்டார்.

''திரிமாவின் உடம்பு'' என்ருன் அரசன்.

''இவள் உயிருடன் இருந்த காலத்தில் இவளை அணைத்து மகிழ நாள் ஒன்றுக்கு ஆயிரம் பொன்களை ஆடவர்கள் கொடுத்தார்கள் அல்லவா? அந்த ஆடவர்கள் இப்பொழுது ஐநூறு பொன்கள் கொடுத்து இவளை அணைத்து மகிழ முன் வருவார்களா?'' என்று கேட்டார்.

''வரவே மாட்டார்கள். கட்டாயப்படுத்தாவிட்டால், இவளுடைய உடம்பைச் சுமந்து செல்லவும் இணங்க மாட்டார்கள்'' என்று அரசன் பதில் சொன்னுன்.

உடனே புத்தர் பெருமான் அங்கு இருந்தவர்களை நோக்கி, ''எத்தனையோ ஆடவர்களின் உள்ளத்தைக் கொள்ளைகொண்டு, கிறுகிறுக்க வைத்த திரிமாவின் உடலுக்கு நேர்ந்திருக்கும் கதியைப் பாருங்கள். உலகில் எதுவும் நிலையாய் இருப்பது இல்லை. அழிந்து போகும் இயல்பு எதற்கும் உண்டு'' என்று அறிவுறுத்தினுர்.

பெருமானின் இந்த உபதேசம் அங்கு இருந்தவர்களின் உள்ளத்தில் ஆழமாகப் பதிந்தது. தரும நெறியினின்று வழுவாது நடக்க, அவர்கள் உறுதியுடன் முனைந்தார்கள்.

திரிமாமீது தவருக வேட்கைகொண்டு இருந்த பிக்கு தனது தவறை உணரத் தொடங்கினன். யாக்கை நிலையாமை என்னும் உண்மை அவன் உள்ளத்தில் ஆழமாகப் பதிந்ததன் பயனுய் அவன் திருந்தி வாழ முயன்ருன்.

## மூர்க்கனின் மனமாற்றம்

**கொ**டிய குணமுள்ள மூர்க்கன் ஒருவனைத் தமது அன்பு வழியில் புத்தர் பெருமான் திருத்தியதை, அடியில் வரும் கதை நமக்குச் சித்தரிக்கிறது.

சிராவஸ்தியில் இருந்த பெருமான் ஒரு முறை அங்கிருந்து அலாவி என்னும் ஊருக்குப் போனுர்.

அந்த நகரத்தை அடுத்து இருக்கும் காட்டில் அலாவி என்னும் பெயருள்ள இயக்கன் ஒருவன் இருந்தான். ஊருக்குள் நுழைந்து குழந்தைகளைப் பிடித்துப் போய்த் தின்று அவன் தொல்லை கொடுத்து வந்தான்.

இதனுல் பெரிதும் திகிலடைந்து அவதிப்பட்ட அந்த ஊர் மக்கள், நாள்தோறும் அவனுக்கு ஒரு குழந்தையை அனுப்புவதாக ஓர் உடன்படிக்கை செய்துகொண்டார்கள். அதன்படி நாள்தோறும் ஒரு குழந்தையை நகர மக்கள் அவனுக்கு அனுப்பி வந்தார்கள்.

ஒரு நாள் அரசன் தம் குழந்தையை அனுப்ப வேண்டிய முறை. இளவரசனை அனுப்பும் பொருட்டு அரசன் ஏற்பாடு செய்துகொண்டிருந்தான்.

இது சமயம் நகருக்கு விஜயம் செய்திருந்த புத்தர் பெருமான், அரசனையும் நகர மக்களையும் இயக்கனின் கொடிய பிடிப்பிலிருந்து காப்பாற்றத் திருவுளம்பற்றியதோடு, இயக்கனையும் திருத்த எண்ணினுர்.

ஆகவே இயக்கன் வாழும் காட்டுக்கு அவர் தனியே புறப்பட்டுச் சென்ருர். அவன் வாழும் மாளிகைக்குள் நுழைந்து, அவன் அமரும் பீடத்தில் அமர்ந்துகொண்டார். இயக்கன் எங்கோ போயிருந்தான்,

திரும்பி வந்தபோது, தனது ஆசனத்தில் யாரோ ஒருவர் அமர்ந்திருப்பதைப் பார்த்ததும், இயக்கன் ஆத்திரம் அடைந்தான். புத்தர் பெருமானை அடிக்க முயன்றான்; அவனால் முடியவில்லை.

ஆச்சரியமுற்றுத் திகைத்து நின்ற அவனை, இதமான வார்த்தைகள் கூறி, பெருமான் திருத்த முயன்றார்.

பெருமான் கூறிய வார்த்தைகள், இயக்கனின் உள்ளத்தில் சில மாற்றங்களை உண்டாக்கின.

ஆகவே பெருமானிடம், ''எத்தனையோ துறவிகளை நான் சந்தித்து இருக்கிறேன். நான் கேட்ட கேள்விகளுக்குப் பதில் சொல்ல முடியாமல் அவர்கள் தத்தளித்ததால், அவர்களைப் பிடித்து, அக்கு அக்காகப் பிய்த்து, கங்கை ஆற்றில் எரிந்து இருக்கிறேன். கௌதமரே! உமக்கும் அந்தக் கதிதான் நேரப் போகிறது'' என்று உறுமினான் அந்த இயக்கன்.

கேள்விகளைத் தம்மிடம் கேட்குமாறும், அவனுக்குத் திருப்தி ஏற்படும் வகையில், தாம் பதில் சொல்வதாகவும் இயக்கனிடம் பெருமான் தெரிவித்தார். அவன் கேட்ட கேள்விகளும் பதில்களும் வருமாறு:

**கேள்வி :** ஆசைச் சுழல்களில் சிக்கி, அவதிப் படாமல் மனிதன் வாழ வழி உண்டா? இருக்ுமானால் அது எது?

**பதில் :** மூன்று இரத்தினங்களை நம்புவதாலும் கடைப்பிடிப்பதாலும், ஆசைச் சுழல்களில் சிக்கி அவதிப் படாமல் மனிதன் கரையேற முடியும்.

**கேள்வி :** பிறவிப் பெருங்கடலை நீந்த ஒருவன் என்ன செய்ய வேண்டும்?

**பதில் :** அறத்தின் சட்டங்களை உள்ளன்போடும் ஊக்கத்தோடும் தெரிந்துகொண்டு, அவற்றின்படி வாழ்பவனால், பிறவிப் பெருங்கடலை நீந்த முடியும்.

**கேள்வி :** தீயவற்றின் பிடிப்பிலிருந்து விடுபடுவது எவ்வாறு?

**பதில் :** பெருமை பயக்கும் செயல்களைச் செய்வதில் எவன் ஈடுபட்டு இருக்கிறானோ, அவனால் தீயவற்றின்

பிடிப்பிலிருந்து விடுபட முடியும். துன்பம் துயரம் இவற்றிலிருந்தும் விடுபட முடியும்.

**கேள்வி :** மோகம் என்பதன் சிறு கறைகூடப் படியாமல், பரிசுத்தனுய் இருப்பதற்கு ஒருவன் என்ன செய்ய வேண்டும்?

**பதில் :** நான்கு மார்க்கங்களைக் கடைப்பிடித்து ஒழுகுவதனுல், மோகம் என்னும் கறை படியாமல் ஒருவன் தன்னைப் பாதுகாத்துக்கொள்ள முடியும்.

தாம் கேட்ட கேள்விகளுக்குப் புத்தர் சொன்ன மறு மொழிகளைக் கேட்டு அந்த இயக்கன் திருப்தி அடைந்தான். பௌத்த சமயத்தைத் தழுவி, அந்த இடத்தில் ஒரு பௌத்தப் பள்ளியை அவன் நிர்மாணித்தான்.

தமது பதினுருவது மாரிக் காலத்தை, பெருமான், அந்தப் பள்ளியில் கழித்தார்.

## வேடர்களுக்கு நேர்ந்த கதி

இராஜகிருக நகரில் இருக்கும் வேணு வனத்தில் தங்கி இருந்த புத்தர் பெருமான், மகத நாட்டின் இதர பகுதிகளில் சுற்றுப் பிரயாணம் செய்துகொண்டு இருந்தார்.

அந்த நகரில் பணக்கார வியாபாரி ஒருவன் இருந்தான். அவனுக்கு அழகிய மகள் ஒருத்தி இருந்தாள்.

ஒரு நாள் அதிகாலையில் விழித்து எழுந்த அவள் மாடத்தில் அமர்ந்து, சாளரத்து வழியே வீதியைக் கவனித்தாள்.

அப்போது வாலிப வேடன் ஒருவன் தான் அடித்த மான் ஒன்றை ஒரு வண்டியில் போட்டுக்கொண்டு வீதி வழியே நடந்து சென்ருன்.

அவனைப் பணக்காரன் புதல்வி பார்த்துவிட்டாள். வேடனுடைய அழகில் சொக்கிப் போன அவள், அவனுடன் சேர்ந்து காட்டுக்குப் போய்விட்டாள்.

காட்டுக்குச் சென்றதும், வேடனும் பணக்காரன் புதல்வியும் திருமணம் செய்துகொண்டு கணவனும் மனைவியுமாக

வாழ்ந்தார்கள். அவர்களுக்குப் பிள்ளை குட்டிகள் நிறையப் பிறந்து, அவர்களும் பெரியவர்கள் ஆகிவிட்டார்கள்.

இது சமயம் புத்தர் பெருமான் அவர்கள் வாழும் காட்டுக்கு வந்தார். அங்கே வேடன் விரித்து இருக்கும் வலையில் சிக்கி, மான் ஒன்று தத்தளித்துக்கொண்டிருப்பதை அவர் கண்டார். தாமதியாது சென்று, வலையில் சிக்கி இருக்கும் மானைப் புத்தர் பெருமான் விடுவித்தார். பிறகு ஒரு மரத்தடிக்குச் சென்று, மர நிழலில் அமர்ந்து, தியானத்தில் ஆழ்ந்தார்.

வலை விரித்திருந்த வேடன் வந்து பார்த்தபோது, வலையைப் பிரித்து, சிக்கிய பிராணியை யாரோ அவிழ்த்து விட்டு இருப்பதை அவன் கவனித்தான். அவனுக்குக் கோபம் தாங்க முடியவில்லை.

சுற்று முற்றும் பார்த்தபோது, மஞ்சள் நிற உடை அணிந்த மனிதன் ஒருவர் மர நிழலில் அமர்ந்து இருப்பதை வேடன் கண்டான். ''இந்த மனிதன்தான் குறும்பு செய்து இருக்கக் கூடும்'' என்று அவன் நினைத்தான். அதற்காக அந்த மனிதனைத் தக்கபடி தண்டிக்கக் கருதி, வில்லையும் அம்பையும் எடுத்துக் குறிபார்த்து, மரத்தடி நிழலில் அமர்ந்து இருப்பவர்மீது எய்யப் போனான்.

அவனால் ஒன்றும் செய்ய முடியவில்லை. கைகள் நடுங்கின. கால்களை அப்பால் இப்பால் நகர்த்த முடியவில்லை. கற்சிலை போல் அவன் அசைவற்று நின்றான். தமக்கு அருகில் நடப்பதை அறியாது, பெருமான் தியானத்தில் ஆழ்ந்திருந்தார்.

வேட்டைக்குச் சென்றிருக்கும் தங்கள் தந்தை குறிப்பிட்ட நேரப்படி திரும்பாது இருப்பதைக் கண்ட அவனுடைய மைந்தர்கள் அதிகக் கவலை அடைந்தார்கள். தங்கள் தந்தைக்கு ஏதாவது ஆபத்து நேர்ந்திருக்கக் கூடும் என அஞ்சிய அவர்கள், ஆயுதங்களை எடுத்துக்கொண்டு, தங்கள் தந்தையைத் தேடிக்கொண்டு புறப்பட்டார்கள்.

குறிப்பிட்ட ஒரு இடத்தில் தங்கள் தந்தை சிலைபோல் அசைவற்று இருப்பதையும், எதிரே மஞ்சள் உடை தரித்த

மனிதர் ஒருவர் இருப்பதையும் அவர்கள் பார்த்தார்கள். இவருடைய வசிய சக்தியினுல்தான் தங்கள் தந்தைக்கு இந்தக் கதி நேர்ந்திருக்கக் கூடும் என்று கருதிய அவர்கள், ஆயுதத்தால் அந்த மனிதரைத் தாக்க முயன்ருர்கள். அப்போது அவர்களின் கைகள் செயலற்றுப் போயின. பேச முடியாமலும் நகர முடியாமலும் அந்தந்த இடத்திலேயே அவர்கள் அசைவற்று நின்ருர்கள்.

இது சமயம் தியானம் கலைந்து புத்தர் பெருமான் விழித்துப் பார்த்தார்; தமக்கு எதிரே வேடனும் அவனைச் சார்ந்தவர்களும் சிலைபோல் அசையாது நின்றுகொண்டு இருப்பதை அவர் கவனித்தார்.

அவர்களின் நிலையைக் கண்டு மனமிரங்கி, முந்தைய நிலைமை அவர்களுக்கு ஏற்படுமாறு செய்தார்.

தாங்கள் செய்த தவறுக்கு வருந்தி, புத்தர் பெருமானை அவர்கள் சரண் அடைந்தனர்.

புத்தர் பெருமான் அருள்கூர்ந்து அவர்களுக்கு உபதேசம் செய்தார்.

அவர்களும் தங்கள் கொடிய தன்மைகளை விடுத்து, பௌத்த சமயத்தைத் தழுவினர்.

---

## அணுக்கத் தொண்டர்

இந்த நிகழ்ச்சிக்குப் பின்னர், புத்தர் பெருமான் சிராவஸ்திக்குத் திரும்பி, ஜேத வன விகாரையில் தங்கினுர்.

இப்பொழுது அறநெறிப் பிரச்சாரம் செய்யத் தொடங்கி, கிட்டத்தட்ட இருபது ஆண்டுகள் கடந்து விட்டன.

இது சமயம் பிக்குகளின் கூட்டத்தில், கட்டுப்பாடு இன்மை தலைகாட்டத் தொடங்கிற்று.

ஒரு முறை புத்தர் பெருமான் பிச்சைக்குப் புறப்பட் டார். அவருடன் சென்ற ஒரு பிக்கு, பெருமானின் பாத்தி ரத்தை எடுத்துக்கொண்டார்.

ஒரு குறிப்பிட்ட இடம் வந்ததும், பெருமான் ஒரு வழியைக் குறிப்பிட்டு, அந்த வழியில் போக வேண்டும் என்று கூறினர். அவருடன் கூட வந்த பிக்குவோ வேறு வழியில் செல்வதை விரும்பி, பெருமானை விட்டுப் பிரிந்து தான் செல்ல விரும்பிய வழியில் சென்றுவிட்டார். பிரிந்து சென்ற பிக்கு திருடர்களால், நையப் புடைக்கப்பட்டு, தலையில் படுகாயமுற்றுத் திரும்பினர்.

பிக்குவின் இந்த நடத்தையைக் கண்டு பெருமான் பெரிதும் வேதனை அடைந்தார். ஆகவே, பிக்குகளை ஒருங்கு கூட்டி, தமது கருத்தைப் பெருமான் வெளியிட்டார். ''எனக்கு வயது அதிகமாகி வருகிறது. ஆகவே, உங்களில் யாராவது ஒருவரை அணுக்கத் தொண்டராக நியமித்துக் கொள்ளும் விருப்பம் எனக்கு இருக்கிறது'' என்று கூறினர்.

சாரிபுத்திரரும் மொக்கலானரும் தாங்கள் அணுக்கத் தொண்டராக இருக்க விரும்புவதாக ஆர்வத்துடன் தெரிவித்தனர். மற்றும் சில பிக்குகளும் தாங்கள் அணுக்கத் தொண்டு செய்ய விரும்புவதாகப் பெருமானிடம் தெரிவித்துக்கொண்டனர்.

இவர்களின் விருப்பத்தை ஏற்கப் பெருமான் மறுத்து விட்டார். ''மக்களிடையே தருமத்தைப் பரப்ப வேண்டிய பெரும் பணி உங்களுக்கு இருக்கிறது. என்னுடன் சேர்ந்து நீங்கள் அந்தக் காரியத்தை ஆர்வத்துடன் செய்யுங்கள்'' என்று கூறினர்.

இதுவரை பெருமானின் கூடவே இருந்து தொண்டு புரிந்து வந்த ஆனந்தன், தாம் அணுக்கத் தொண்டனுகி, சேவை செய்யும் விருப்பத்தைப் பெருமானிடம் தெரிவியாமல் மௌனமாய் இருந்தான்.

இதைக் கவனித்த மற்ற பிக்குகள் பெருமானுக்குத் தொண்டுபுரிய இருக்கும் விருப்பத்தை அவரிடம் தெரிவித்துக் கொள்ளுமாறு ஆனந்தனைத் தூண்டினர்.

அதற்கு ஆனந்தன், ''எனது குணத்தையும் நடத்தையையும் பெருமான் நன்கு அறிவார்; இதுவரை என்னல் இயன்ற தொண்டுகளைத் தவருமல் பெருமானுக்கு நான் செய்து வந்தி

ருக்கிறேன். பெருமான் விரும்பி அழைத்தால், அனுக்கத் தொண்டனுக இருந்து ஆர்வத்துடன் பணிவிடை செய்ய நான் காத்திருக்கிறேன்'' என்று பதில் சொன்னுர்.

ஆனந்தனின் அடக்கத்தினுல் அக மகிழ்ந்த பெருமான், அவனேத் தமது அனுக்கத் தொண்டனுக நியமித்துக் கொண்டார்.

தாம் கூறும் எட்டு நிபந்தனேகளேப் பெருமான் ஏற்றுக் கொண்டால்தான் தாம் அனுக்கத் தொண்டனுக இருந்து, செம்மையாகப் பணிபுரிய முடியும் என்று தெரிவித்துக் கொண்டு, அடியில் வரும் எட்டு நிபந்தனேகளேப் பெருமானிடம் ஆனந்தன் கூறினுர்.

(1) பெருமானுக்குக் கிடைக்கும் சிறந்த உடைகளே அவர் தனக்குத் தரக் கூடாது.

(2) அதேபோல, பிச்சையையும் தரக் கூடாது.

(3) பெருமான் அமரும் அறையில் தன்னேயும் அமரச் சொல்லக் கூடாது.

(4) பெருமானுக்குக் கிடைக்கும் மரியாதைகளில் தனக்கும் பங்கு இருத்தல் கூடாது.

(5) பெருமானுக்கு அழைப்பு வந்தால் தன்னேயும் அவர் உடன் அழைத்துச் செல்ல வேண்டும்.

(6) தூரத்திலிருந்து வந்திருப்பவர்களேத் தரிசனத்துக்கு அழைத்து வந்தால், மறுப்புச் சொல்லாது பெருமான் தரிசனம் தர வேண்டும்.

(7) எந்தச் சமயத்திலும் பெருமானே அணுகத் தடை இருத்தல் கூடாது.

(8) தான் வெளியே சென்று இருக்கும் சமயங்களில் பிறருக்குப் போதித்தவற்றை, தான் திரும்பியதும் பெருமான் தனக்கும் போதிக்க வேண்டும்.

இந்த எட்டு நிபந்தனேகளேயும் ஏற்றுக்கொண்டு, ஆனந்தனேத் தமது அனுக்கத் தொண்டனுகப் பெருமான் நியமித்துக்கொண்டார்.

இதன் பின்னர் சுமார் இருபத்தைந்து ஆண்டுகள் அனுக்கத் தொண்டனுக இருந்து ஆனந்தன், பெருமானுக்குப்

பணிவிடைகள் புரிந்து இருக்கிறார். பெருமானின் கடைசிக் காலம்வரை, அதாவது பெருமான் நிர்வாணம் எய்தும்வரை, அருகே இருந்தவர் ஆனந்தன்.

பௌத்த சமயத் தொண்டர்களில் ஆனந்தன் முதன்மை ஸ்தானம் பெற்ற தொண்டர். பெருமானின் அன்றாட அலுவல்கள் சம்பந்தமான செய்திகள் அனைத்தும், பெரும்பாலும் ஆனந்தனின் வாய்மொழி மூலம் கிடைத்தவை ஆகும்.

பௌத்தர்களின் மறைக்குத் **திரிபிடகம்** என்று பெயர். அதில் இருக்கும் **அபிதம்ம பிடகம்** என்பது ஆனந்தரின் வாய்மொழி மூலம் கிடைத்தவை என்கின்றனர்.

பூவோடு கூடிய நாரும் மணம் பெறும் என்பதை ஒப்ப, பெருமானின் அணுக்கத் தொண்டனாய் இருக்கும் பேறு பெற்ற ஆனந்தரும் பெருமை பெற்றார். பௌத்த சமய வரலாற்றில் ஆனந்தருக்கு முக்கியமான இடம் உண்டு.

ஆயினும் சாரிபுத்திரர் மொக்கலானர் ஆகிய இருவருக்கும் கொடுத்திருக்கும் உன்னத ஸ்தானத்தை, ஆனந்தருக்கு, பௌத்த சமய நூல்கள் அளிக்கவில்லை.

காரணம் என்ன?

சாரிபுத்திரர், மொக்கலானர் இருவரும் ஞானத்திலும், ஆற்றலிலும் வாதம் புரிவதிலும் ஆனந்தரைக் காட்டிலும் மேம்பட்டவர்கள்.

இவர்கள் இருவரும் பெருமானுடைய ஞானத் தொண்டர்கள். ஆனந்தன் பணிவிடைத் தொண்டர்.

பௌத்த சமயத்தில், ஞானத்துக்கு எப்பொழுதும் மேம்பட்ட ஒரு மதிப்பு உண்டு.

## அங்குலிமாலன்

**எ**த்தனையோ வகையான மனிதர்களைத் திருத்தி, பெருமான் பௌத்த பிக்குகள் ஆக்கி இருக்கிறார்; அவர்களுள் அங்குலிமாலன் என்பவன் ஒருவன். அவன் கொடிய வழிப் பறிக் கொள்ளைக்காரனாய் இருந்து, பெருமானின் உபதேசத்

தால் திருந்தி, பௌத்த பிக்குவானவன். அவன் பிக்குவான வரலாறு வருமாறு:

ஒரு முறை பகவான் கோசல நாட்டின் தலைநகர் சிராவஸ்திக்குச் சென்று, அங்கு இருக்கும் ஜேத வனத்தில் தங்கி இருந்தார்.

அப்போது தலைநகரில் கடுமையான பாதுகாப்புகள் செய்யப்பட்டு இருப்பதைக் கண்டு, ''ஏன் இவ்வளவு பாதுகாப்புகள்? யாரும் இங்கு படை எடுத்து வரப் போகிறார்களா?'' என்று வினவினார்.

அதற்குப் பிக்குகள் ''பெருமானே! யாரும் படை எடுத்து வரவில்லை. அங்குலிமாலன் என்னும் கொடிய கொள்ளையன் ஒருவன் பெருந் தொல்லை கொடுத்து வருகிறான். அவனைத் தடுக்கும் பொருட்டு அரசன் பாதுகாப்பு ஏற்பாடுகள் செய்திருக்கிறார்'' என்று தெரிவித்தார்கள்.

உடனே பெருமான், ''அங்குலிமாலன் எங்கே இருக்கிறான்? அங்குலிமாலன் என்றால் விரல்களை மாலையாகத் தரித்திருப்பவன் என்பது அன்றோ பொருள்?'' என்று கேட்டார்.

''அவன் எங்கோ தொலைவில் இருக்கிறானும்; தன்னை எதிர்ப்பவர்களின் விரல்களைத் துண்டித்து, மாலையாகப் போட்டுக்கொள்வதனால் அங்குலிமாலன் என்று அவனுக்குப் பெயர் ஏற்பட்டதாம். அவனிடம் போனவர்கள் யாரும் விரல்களை இழக்காமல் திரும்பியது இல்லையாம்'' என்று சொன்னார்கள்.

இப்படி அவர்கள் சொன்னதும், ''நான் சென்று அங்குலிமாலனைச் சந்திக்க விரும்புகிறேன்'' என்று பெருமான் சொன்னார்.

உடனே சீடர்களில் ஒருவர், ''பெருமானே! தாங்கள் அவனைச் சந்திக்கச் செல்ல வேண்டாம். தாங்கள் கூறும் போதனைகளை அவன் செவிகொடுத்துக் கேட்க மாட்டான்'' என்று பதற்றத்துடன் சொன்னார்.

''இல்லை; இல்லை. நான் சென்று அங்குலிமாலனுக்கு அவசியம் போதனை செய்யப் போகிறேன். போதனை செய்

வதன் மூலம் அங்குலிமாலனைத் திருத்துவது அவசியம் ஆகும்'' என்று பெருமான் கூறினார்.

''பெருமானே! போதனை செய்வதன் மூலம் அங்குலி மாலனைத் திருத்திவிட முடியாது'' என்று மற்றொரு பிக்கு சொன்னார்.

''போதனை செய்வதன் மூலம் அங்குலிமாலனைத் திருத்தி விட முடியும்; ஆகவே நான் போகிறேன்'' என்று பெருமான் மீண்டும் சொன்னார்.

''அப்படியானால் அரசனுடைய படை-வீரர்களில் சிலரை அழைத்துக்கொண்டு, பாதுகாப்புடன் செல்லுங்கள்'' என்று கூறினார் அந்தப் பிக்கு.

பிக்கு இவ்வாறு சொன்னதும் பெருமான் சிறிது புன் முறுவலித்துவிட்டு, ''அங்குலிமாலனைப் போதனை மூலம் நான் திருத்தச் செல்கிறேனே யன்றி அவனைத் தாக்கி முறி யடிக்கும் பொருட்டு நான் செல்லவில்லை. ஆகவே பாது காப்பு எதுவும் எனக்குத் தேவையில்லை'' பதில் சொன்னார்.

இதன் பின்னர், அங்குலிமாலனைச் சந்திக்கும் பொருட்டு, பெருமான் புறப்பட்டுப் போனார்.

அரசனுடைய விரல்களை எவ்வாறு துண்டிக்கலாம் என்று அங்குலிமாலன் திட்டமிட்டுக்கொண்டு இருந்த சமயம், மஞ்சள் உடை.தரித்த பிக்கு ஒருவர் வருவதைப் பார்த்து, வாளை உருவிக் கையில் வைத்துக்கொண்டு, ''பிக்கு! போகாதே நில்'' என்று அங்குலிமாலன் கூவினான்.

பெருமான் அவனை ஒரு முறை கருணையோடு நோக்கி னார். பிறகு அவனிடம், ''நான் நின்றுவிட்டேன். நீதான் நிற்கவில்லை'' என்று சொல்லிக்கொண்டே நடந்து போனார்.

''நில் என்று சொல்லுகிறேன்; நீ போய்க்கொண்டிருக் கிறாயே'' என்று கூறிக்கொண்டு, உருவிய வாளைக் கையில் பிடித்தவாறு அங்குலிமாலன் ஓடி வந்தான்.

பெருமான் அவனைத் திரும்பிப் பார்த்தார்; கையில் வைத்திருந்த வாள் நழுவிக் கீழே விழுந்துவிட்டது.

இதனால் ஆச்சரியமுற்ற அங்குலிமாலன் பெருமானை உற்று நோக்கினான்: அவருடைய கண்களில் சாந்தம் தவழ்ந்

தது. கருணையால் முகம் சோபையுடன் துலங்கிற்று; அசாதாரணமான புன்முறுவல் யாரையும் ஈர்க்கவல்லதாய் இருந்தது. அங்குலிமாலன் பிரமித்துப் போனான். வாய் திறந்து பேச முடியாது மௌனமாக உட்கார்ந்தான். பெருமானும் அவன் அருகே உட்கார்ந்தார். சிறிது நேரம் சென்ற பின், பெருமானை நோக்கி, ''எதற்காக நீங்கள் இங்கே வந்தீர்கள்?'' என்று அங்குலிமாலன் கேட்டான்.

''உனக்கு உதவி செய்யும் பொருட்டு வந்திருக்கிறேன்'' என்று பெருமான் பதில் சொன்னார்.

''எனக்கு உதவி செய்யவா வந்திருக்கிறீர்?'' என்று கேட்டுவிட்டு அங்குலிமாலன் உரக்கச் சிரித்தான். ''உமது உதவி எனக்குத் தேவை இல்லை. உமது விரல்கள்தான் எனக்குத் தேவை'' என்று கூறினான் அங்குலிமாலன்.

இப்படி அவன் கூறியதும் தமது கைகள் இரண்டையும் அங்குலிமாலனிடம் நீட்டி, ''தேவையான விரல்களைத் துண்டித்து எடுத்துக்கொள். விரல்களோடுகூட வேறு உதவியும் என்னிடமிருந்து உனக்குத் தேவைப்படும்'' என்று கூறினார்.

''என்ன உதவி?'' என்று கேட்டான் அங்குலிமாலன்.

''இதுவரை நீ அடைந்து இருக்கும் வெற்றிகளைவிட மேலான வெற்றி பெற உனக்கு நான் வழிகாட்டுகிறேன்'' என்று கூறினார் பெருமான்.

''மந்திர தந்திரங்கள் கற்றுத் தந்து, என்னை வசியப்படுத்தும் உத்தேசம் உமக்கு இருக்கிறதா?'' என்று கேட்டான் அங்குலிமாலன்.

''அது எல்லாம் இல்லை. தன்னைத்தான் மனிதன் எப்படி வெற்றிகொள்வது என்னும் வழியை உனக்கு நான் காட்ட வந்திருக்கிறேன். அந்த வழியில் செல்பவர்களுக்கு, பயம் என்பதே தோன்றாது நண்பரே!'' என்று கூறினார் பெருமான்.

''நண்பரே!'' என்று பெருமான் அழைத்ததும் அங்குலிமாலன் திடுக்கிட்டுப் போனான். அவன் உள்ளத்தில் பெரிய மாற்றம் உண்டாயிற்று. அச்சத்தை விட்டொழித்து, என்னை அன்புடன் 'நண்பரே!' என்று அழைக்கிறாரே!

இவர் என்ன சொல்லுகிறார் கேட்கலாம்'' என்று நினைத்தான் அங்குலிமாலன்.

நான்கு வாய்மைகளையும் எட்டுச் சீலங்களையும் எடுத்துக் கூறி, அங்குலிமாலனைப் பிக்குவாகச் சேர்த்தார் பெருமான்.

இதன் பின்னர் துவராடை அணிந்து, பிக்குவாகி, பெருமானைத் தொடர்ந்து, சிராவஸ்தி நகருக்குப் போனான் அங்குலிமாலன்.

அடக்க ஒடுக்கத்துடன் அங்குலிமாலன் வருவதைப் பார்த்ததும், ஜேத வனத்தில் இருக்கும் பிக்குகள் ஆச்சரியம் அடைந்தனர்.

பெருமான் அங்குலிமாலனை அவர்களிடம் அழைத்துப் போய், "இவர்தான் பிக்கு அங்குலிமாலன்'' என்று அறிமுகம் செய்து வைத்தார்.

இது சமயம் கோசல நாட்டு அரசன் பிரசேனஜித், தம் பரிவாரத்தினருடன் பெருமானைத் தரிசிக்கும் பொருட்டு அங்கு வந்தான்.

அப்போது பெருமான் அரசனிடம், ''மன்னரே! தாங்கள் பரிவாரத்துடன் இந்தப் பக்கம் வந்திருப்பதைப் பார்த்தால் ஏதோ விசேஷம் இருப்பதாகத் தோன்றுகிறதே?'' என்று கேட்டார்.

''ஆம் பெருமானே! இந்தப் பகுதியில் அங்குலிமாலன் என்னும் கொள்ளைக்காரன் ஒருவன் நடமாடுகிறான். அவன் மிகக் கொடியவன். ஆயிரக்கணக்கான மக்களைக் கொலை செய்தவன். அவன் செய்யும் அட்டகாசத்தால் மக்கள் பீதியுற்று இருக்கிறார்கள். பல முறை முயன்றும் அந்தக் கொடியவனைப் பிடிக்க முடியவில்லை. அவன் எங்கு பதுங்கி இருக்கிறான் என்பதும் தெரியவில்லை. தாங்களும் தங்கள் சீடர்களும் தனித்துச் செல்லும்போது கவனத்துடன் செல்ல வேண்டும் என்று எச்சரித்துப் போகவே இங்கு வந்தேன்'' என்று தெரிவித்துக்கொண்டான்.

உடனே பெருமான், ''அரசே! அங்குலிமாலன் இப்பொழுது அகப்படுவானாயின் அவனைத் தாங்கள் என்ன செய்வீர்கள்?'' என்று புன்முறுவல் பூத்தவாறு கேட்டார்.

''ஆயிரம் பேரை அநியாயமாகக் கொன்ற அந்தப் பாவிக்கு, மரண தண்டனையைக் காட்டிலும் விதிப்பதற்கு வேறு என்ன தண்டனை இருக்க முடியும்?'' என்று கேட்டான் அரசன் பிரசேனஜித்.

அப்போது பெருமான் அரசனிடம், ''அரசே! அவன் துவராடை உடுத்து, பிக்குவாகிவிட்டால் கூடவா?'' என்று கேட்டார் பெருமான்.

பெருமான் இப்படிக் கேட்டதும் அரசன் பிரசேனஜித் சிறிது நேரம் யோசித்தான். பிறகு பெருமானை நோக்கி, ''பெருமானே! அங்குலிமாலன் துறவறத்தை மேற்கொண்டு, பிக்குவாகக் காட்சி அளித்தால், சங்கத்தாருக்குச் செய்யும் மரியாதையை அவனுக்கும் நான் செய்வேன்'' என்று தெரிவித்தான் அரசன்.

உடனே பெருமான் தமக்கு அருகே அமர்ந்து இருக்கும் ஒரு பிக்குவைச் சுட்டிக்காட்டி, ''இந்தப் பிக்குதான் அங்குலிமாலன். இதுவரை கொடுமைகள் புரிந்து வந்த அங்குலிமாலன், இப்பொழுது அவற்றை எல்லாம் விட்டு ஒழித்து, திருந்திய வாழ்வை மேற்கொண்டு பிக்குவாகி விட்டார்'' என்று தெரிவித்தார்.

பெருமான் கூறியதைக் கேட்டு, அரசன் பிரசேனஜித் பிரமித்துப் போனான். அவனுடைய கைகளும் கால்களும் உதறல் எடுத்தன. ''இவன் அங்குலிமான்'' என்பதை அவனுடைய உள்ளம் நம்ப மறுத்தது. ''இந்தப் பிக்கு அவனாய் இருக்க முடியாது'' என்று தனக்குத் தானே அரசன் சொல்லிக்கொண்டான்.

ஆயினும் அவன்தான் அங்குலிமாலன் என்பது நிச்சயமானதும், அரசன் வியப்பு மேலிட்டு நின்றான். உணர்ச்சி வயப்பட்டு இருந்த அவன் பெருமானை நோக்கி ''அண்ணலே! கொடியவர்களையும் கொலைகாரர்களையும் காட்டுமிராண்டிகளையும் நல்வழிப்படுத்தி, திருந்திய வாழ்க்கை வாழச் செய்யும் ஆற்றல் தங்களுக்கு இருக்கிறது. ஆயுத பலத்தால் சாதிக்க முடியாத ஒரு காரியத்தை, எதனாலோ தாங்கள் சாதித்துவிட்டீர்கள்'' என்று சொன்னான்.

அதற்குப் பெருமான், ''அரசே! அன்பு என்னும் பண்பு ஆயுதங்களையும் காட்டிலும் வலிமை மிக்கது. அன்பினால் சாதிக்க முடியாதது ஒன்றும் இல்லை'' என்று கூறினார்.

அரசனால் இதை ஏற்க முடியவில்லை. ''அன்புக்கு அதிக பலம் உண்டு என்பதை என்னால் ஒப்புக்கொள்ள முடியாது. ஏதோ மந்திர தந்திரங்களினால்தான் அங்குலிமாலனைத் தாங்கள் வசப்படுத்தி இருக்கிறீர்கள். பொறுத்து இருந்து பார்க்கலாம்'' என்று சொல்லி, பெருமானிடம் விடை பெற்றுக்கொண்டு, அரசன் அரண்மனை திரும்பினான்.

* * *

அரசன் போன பின்பு அங்குலிமாலன் பக்கம் திரும்பி, ''பிக்குவே! தினை விதைத்தவன் தினை அறுப்பான் என்னும் பழமொழிக்கு இணங்க, ஒருவன் செய்யும் வினையின் பலன்களை அனுபவியாமல் தீராது. ஆகவே நீர் ஊருக்குள் சென்று பிச்சை எடுத்து வாரும்'' என்று கூறினார்.

அங்குலிமாலன் புறப்பட்டுச் சென்றான். இதுவரை அங்குலிலமாலனால் அவதிப்பட்ட மக்களுக்கு ஆத்திரம் அடங்கவில்லை. அவர்கள் அங்குலிமாலனைக் கல்லால் அடித்துக் காயப்படுத்தினார்கள்; தலையில் பலத்த காயம்; ஒரு கண் பிதுங்கி வெளியே வந்துவிட்டது. உடம்பெல்லாம் ரத்தம் வழிந்துகொண்டு இருந்தது.

அலங்கோலமான இந்தக் கோலத்துடன், அங்குலிமாலன் பெருமானிடம் திரும்பினான். சோர்வுற்று, பெருமான் அருகே அவன் அமர்ந்தான். ''அரசன் காட்டிய அன்பையும் பாதுகாப்பையும் மக்கள் எனக்கு வழங்க முன்வர வில்லை. கற்களால் அடித்து, கத்திகளால் குத்தி என்னை அவர்கள் காயப்படுத்திவிட்டார்கள். இதுவரை நான் செய்த வினைகளின் பலன்களை இப்பொழுது நான் அனுபவிக்கிறேன்'' என்று சொன்னான்.

''உமக்குத் திருப்திதானே?'' என்று பெருமான் கேட்டார்.

''ஆம் திருப்திதான்'' என்று அங்குலிமாலன் ஒப்புக் கொண்டான். அதன் பின்னர் தமது தீவினைப் பயன்களை அனுபவித்துத் தீர்த்து, அவன் நிர்வாணப் பேற்றை அடைந்தான்.

* * *

அங்குலிமாலன் கதை பௌத்த சமய அடிப்படைத் தத்துவம் ஒன்றை நமக்குப் போதிக்கிறது.

தாம் தாம் செய்யும் வினைகளின் பலன்களை அனுபவி யாமல் எவனும் வாழ்க்கைச் சுழலிலிருந்து தப்ப முடியாது. பெரியோராய் இருப்பவர்கள் தீவினைப் பயன்களிலிருந்து விடுபட வழிகளைத்தான் காட்ட முடியுமே யன்றி, தீவினையின் பலன்களை அவர்களின் அருள் நோக்கினால்கூட, போக்கிவிட முடியாது.

இது பௌத்த சமயத்தின் அடிப்படை உண்மைகளில் ஒன்று.

# கௌதம புத்தர்

## வரலாறு

## ஆதரவும் எதிர்ப்பும்

### பூர்வ கருமம்

இருபது ஆண்டுகள் தொடர்ந்து பெருமான் அறநெறிப் பிரச்சாரம் செய்து வந்த காரணத்தால், பௌத்த மதம் நாட்டில் விரிந்து பரவிற்று. செல்வாக்கும் ஆதரவும் அதற்குப் பெருகி வந்தன. அரசர்களும் அந்தணர்களும், படித்தவர்களும் பாமரரும், செல்வச் சீமானும், பரம ஏழையும் பௌத்த மதத்தைத் தழுவி வாழ்க்கை நடத்த முன் வந்தார்கள்.

புத்தர் பெருமான் காலத்தில் நாட்டில் பல்வேறு சமயங்கள் நிலவின. அவற்றில் குறிப்பாக ஆறு சமயங் களுக்கு மக்களிடையே ஆங்காங்கே பிடிப்பு இருந்தது. இந்த ஆறு சமயங்களுள் இரண்டு சமயங்கள்-ஜைன சமயம், வைதீக சமயம்-அதிக செல்வாக்குடன் விளங்கின.

இந்த இரு சமயங்களின் தாக்குதல்களைச் சமாளித்து, பௌத்த சமயம் தழைத்து ஓங்கி வந்தது. இதற்குக் காரணம்?

வைதீக சமயத்தார் வேத வேள்விகளைப் புரிவதிலும், அதனால் கிடைக்கும் பயன்களைக் கொண்டு, சுக போக வாழக்கை வாழ்வதிலும் அதிக அக்கறை காட்டினார்கள். சமூகத்தினிடையே சாதி வேறுபாடுகளைப் புகுத்தி, பிறப்பி லேயே ஒருவனை உயர்ந்த சாதியான் என்றும், மற்றொரு வனைத் தாழ்ந்த சாதியான் என்றும் கூறினார்கள்.

ஜைன மதத்தவரோ, கடுமையான தவ வாழ்வுதான் சிறந்த வாழ்வு என்று கூறினார்கள். மக்களின் அன்றாட வாழ்வில் அதிக அக்கறை காட்டாது, காடுகளுக்குச் சென்று, குகைகளில் தங்கி, கடும் தவம்புரிந்து வந்தார்கள்.

இந்த இரு போக்குகளுமே தவறானவை என்று பெருமான் போதித்தார். இந்த இரு வழிகளுமே பொது மக்களுக்கு ஏற்ற வழிகள் அன்று என உபதேசித்தார். கட்டுப்பாடு இல்லாத சுகபோக வாழ்க்கையும் கடுமையான தவமும் பொதுமக்கள் பின்பற்றத்தக்கவை அன்று; பின் பற்றவும் கூடாது என்று அவர் விளக்கினார்.

பெருமான் போதனை செய்த வழி சுலபமான வழியாக வும், அதே சமயத்தில் மனத்துக்கு அமைதியைக் கொடுக்கும் வழியாகவும் இருந்ததால் பொதுமக்கள் ஆர்வத்துடன் பௌத்த சமயத்தைக் கடைப்பிடித்து ஒழுகினார்கள்.

நாளுக்கு நாள் பௌத்த சமயம் செல்வாக்கு அடைந்து வருவதைக் கண்டதும், பிற சமயத்தினர், மனம் புழுங்கி னார்கள். இல்லாத பொல்லாத பழிகளையும் அவதூறுகளை யும் பௌத்த சமயத்தின்மீதும், பெருமான்மீதும் பிக்குகள் மீதும் சுமத்தத் தொடங்கினார்கள்.

புறத்திலிருந்து கிளம்பிய எந்தத் தாக்குதல்களையும் அவதூறுகளையும் சமாளித்து, பௌத்த சமயம் ஓங்கி வளர்ந்து வந்தது.

அதே சமயத்தில், பௌத்த சமயத்தைப் பின்பற்று வோருக்குள்ளேயே - குறிப்பாக பிக்கு சங்கத்துக்குள்ளேயே- பூசல்களும் பிணக்குகளும் போட்டி மனப்பான்மையும், பதவி மோகமும் தலைகாட்டத் தொடங்கின.

பௌத்த சமயம் போற்றும் மும்மணிகளில் சங்கம் என்பது ஒன்று. பௌத்த சமய அறநெறிகளை மக்களி டையே பரப்புவதற்கும், புத்தர் பெருமானைப் போற்று வதற்கும் ஏற்பட்ட ஒரு நிறுவனம் அது. அந்த நிறுவனத் துக்குள்ளேயே கருத்து வேற்றுமைகளும் பதவி மோகமும் தோன்றத் தொடங்கின.

இதற்குக் காரணம் என்ன?

பிரச்சாரத்தின் பயனாய் நாளுக்கு நாள் பௌத்த சமயத்துக்கு ஆதரவும் செல்வாக்கும் பெருகி வருவதைக் கண்டு, பிக்கு சங்கத்தில் சேர விருப்பம் கொண்டு பலர் முன் வந்தனர். அப்படி வந்தவர்களுள், பெருமைக்காக வந்தவர்கள் இருந்தார்கள்; நற்கதி அடைவதற்குச் சங்கம் வழி காட்டும் என்ற கருத்துடன் வந்தவர்கள் இருந்தார்கள்; பதவி வேட்டையில் நாட்டம் உள்ளவர்களும் சங்கத்தில் இருந்தார்கள்.

பதவி ஆசையில் விருப்புற்றுச் சங்கத்தில் சேர்ந்தவர்களுள் தேவதத்தன் என்பவன் முதன்மையானவன்.

இவனை, சில நூல்கள் புத்தருடைய அத்தை மகன் என்று கூறுகின்றன; சில நூல்கள் புத்தருடைய சிறிய தகப்பனார் அமிதோதனுடைய புதல்வன் என்று கூறுகின்றன. ஆனால் பெரும்பாலான பௌத்த நூல்கள் தேவதத்தனை அத்தை மகன் என்றே கூறுகின்றன.

தேவதத்தன் மகா திறமைசாலி; கெட்டிக்காரன்; தனது மனப்போக்குக்கு இயைய, பிறரை வசப்படுத்துவதில் ஆற்றல் மிக்கவன். அரச குலத்தில் பிறந்த வாலிபன்; துடுக்கும் மிடுக்கும் துணிச்சலும் உள்ளவன். பதவி மோகம் கொண்டவன்.

இத்தகைய ஒருவன் அரச பதவியில் நாட்டம் கொள்ளாமல் ஏன் துறவறத்தை மேற்கொண்டான்?

புத்தர் காலத்தில், அரசனுக்கு இருக்கும் மதிப்பைக் காட்டிலும், துறவிகளுக்கு நாட்டில் மதிப்பு மிகுதியாக இருந்தது. அதனால்தான் அரசகுல இளவல்கள் பலர் சங்கத்தில் ஆர்வத்துடன் சேர்ந்து இருக்கிறார்கள்.

ஆறு அரசகுல இளவல்களும் ஒரு நாவிதனும் பௌத்த சங்கத்தில் சேர்ந்த விவரம் முன்பு ஒரு அத்தியாயத்தில் (பக்கம் 121) விவரிக்கப்பட்டு இருக்கிறது. அப்போது சேர்ந்தவர்களுள் தேவதத்தனும் ஒருவன்.

சங்கத்தில் சேர்ந்து இருந்தபோதிலும், பூர்வ ஜன்ம வாசனையால், சங்கத்தில் பிளவை உண்டாக்கியவர்களுள் தேவதத்தன் முதன்மையானவன். பதவி மோகம் கொண்டு

அலைந்தவன். போட்டிச் சங்கத்தை நிறுவி, புத்தர் பெருமானை எதிர்த்தவன்; எதிர்த்ததோடு மட்டும் நிற்காமல், அவரைக் கொலை செய்வதற்கும் முயன்றவன். திறமையும், அறிவும், தவ வலிமையும் தன்னிடம் இருப்பதனல் பெருமானையே துணிந்து எதிர்த்தவன்.

திறமைகள் பல இருப்பினும், உண்மையான பொது நலநோக்கு இல்லாவிட்டால், அவை பிரகாசிக்க மாட்டா என்பதற்கு, தேவதத்தனின் வாழ்க்கை சரியான ஒரு எடுத்துக் காட்டு.

திறமை இருந்தும், அறிவு இருந்தும், ஆற்றல் இருந்தும், தவவலிமை இருந்தும், பொதுநல நோக்கு இல்லாமையால், தேவதத்தன் எப்படி அழிந்தான் என்பதை அடுத்து வரும் அத்தியாயத்தில் பார்க்கலாம்.

---

## தேவதத்தன்

நெஞ்சில் துறவார்; துறந்தாற்போல் வஞ்சித்து வாழ்வாரின் வன்கணர் இல் என்று தமது கருத்தைக் குறளில் திருவள்ளுவர் வெளியிட்டு இருக்கிறர். போலி வேடம் பூண்டு, பொது மக்களை வஞ்சித்து வாழ்க்கை நடத்துபவர்களைவிட, கொடியவர்கள் யாரும் இல்லை என்பது இந்தக் குறளின் கருத்து.

தேவதத்தன் பெருமானுக்குப் பத்து வயது இளையவன். சாக்கிய குல இளவல்கள் பெருமானின் உபதேசத்தைக் கேட்டு, பிக்கு ஆனர்கள் அல்லவா? அப்போது தேவதத்தனும் தீட்சை பெற்றுப் பிக்குவானன்.

தேவதத்தன் அறிவிலும், முயற்சியிலும் சிறந்தவன்; பௌத்த தருமங்களை நன்கு அறிந்தவன்; அவற்றைப் பிறருக்கு எடுத்து உரைப்பதில் திறமை மிக்கவன்; அவனுடைய குரல் எடுப்பாகவும் இனிமையாகவும் வசீகரமாயும் இருக்கும். அவன் பேசுவதைக் கேட்ட பின்னர், அவன் சொற்படி நடக்க யாரும் தயாராய் இருப்பார்கள்.

இந்த நல்ல குணங்களோடு இன்னும் சில குணங்களும் தேவதத்தனிடம் உண்டு. அவன் கண்டிப்பானவன்; திட்டம் போட்டபடி காரியங்களைச் சாதித்துக்கொள்வதற்காக, எதையும் அவன் துணிந்து செய்வான்; ஈவு இரக்கமின்றிப் பிறரிடம் நடந்துகொள்ளவும் அவன் தயங்க மாட்டான். இவற்றோடுகூட இருத்தி ஆற்றல்களிலும் அவன் மேம்பட்டு விளங்கினான்.

அன்பு, பரிவு, இரக்கம் முதலிய நற் குணங்களோடு சேர்ந்திருக்கும் இருத்தி ஆற்றல் நன்மையை விளைவிக்கும். ஆணவம், தற்பெருமை, பதவி, மோகம், பொறாமை இவற்றுடன் சேர்ந்திருக்கும் இருத்தி ஆற்றல், அதைக் கொண்டுள்ளவனை அழித்துவிடும் என்று பெருமான் அடிக்கடி எச்சரித்திருக்கிறார்.

பெருமானின் இந்த எச்சரிக்கைக்கு இணங்கி நடப்பவர்களும் சங்கத்தில் இருந்தார்கள். எதிர்த்து நடப்பவர்களும் இருந்தார்கள்.

எதிர்த்து நடந்தவர்களுள் தேவதத்தன் தலையாயவன்.

தியானம் செய்து செய்து, தேவதத்தன் தமது தவ வலிமையை மிகுதிப்படுத்திக்கொண் டிருந்தான். இருத்திகள் செய்வதில் மற்ற பிக்குகளை மிஞ்சியவனாக அவன் இருந்தான். தமது ஆற்றலிலும் அறிவிலும் இருத்திகளிலும் பெருமிதமுற்று இருந்த அவன், புகழையும் செல்வாக்கையும் தலைமைப் பதவியையும் பெற என்ன செய்யலாம் என்று ஒரு நாள் யோசித்தான். 'மகத நாட்டு இளவரசன் அஜாதசத்துருவைப் பயன்படுத்திக்கொண்டால் எனது விருப்பங்கள் ஈடேற முடியும்' என்ற முடிவுக்கு வந்தான்.

உடனே கொசாம்பியை விட்டுப் புறப்பட்டு, தேவதத்தன் இராஜகிருக நகரம் போய் சேர்ந்தான். ஏனெனில் ஒரு ஆண்டுக்கு முன்னர்தான் கொசாம்பி நகரில் பிக்குகளிடையே பிணக்கு ஏற்பட்டது, தேவதத்தன் மனதில் பசுமையாய் இருந்தது. அத்தகைய பிணக்கை இராஜகிருகத்தில் வாழும் பிக்குகளிடையிலும் உண்டாக்கிவிடலாம் என்ற கருத்தோடு அவன் புறப்பட்டுப் போனான்.

இராஜகிருக நகரை அடைந்ததும், தமது இருத்தி ஆற்றலைப் பயன்படுத்தி, பாம்புக்கொடி சுற்றிய ஒரு குழந்தை போல, தமது உருவை மாற்றிக்கொண்டு தனியே இருக்கும் அஜாதசத்துருவின் மடியில் போய்ப் படுத்துக்கொண்டான்.

அலறிப்புடைத்துக்கொண்டு, இளவரசன் அஜாத சத்துரு கூச்சலிட்டான்.

அப்போது ஒரு குரல் ''இளவரசே! உமக்குப் பயமாய் இருக்கிறதா?'' என்று வினவிற்று.

''ஆம். பயமாய் இருக்கிறது. நீ யார்?'' என்று வினவினுன் இளவரசன்.

''நான் தேவதத்தன்'' என்று கூறினுன் குழந்தை வடிவில் இருந்த தேவதத்தன்.

''நீர் தேவதத்தன் என்பது உண்மையாயின் உமது சுய வடிவத்தை எனக்குக் காட்டும்'' என்று வேண்டினுன் இளவரசன்.

பிச்சைப் பாத்திரத்துடனும் பிக்குக் கோலத்துடனும் இளவரசன் முன்னே தோன்றினுன் தேவதத்தன்.

இளவரசன் அஜாத சத்துரு பெரிதும் வியப்பு மேலிட்டுப் போனுன். அவனைத் தனது அந்தரங்க ஆலோசனுக அங்கிகரித்து, தேவதத்தனுடன் நெருங்கிப் பழகினுன் அஜாத சத்துரு. அவனுக்கும் அவனுடைய சகபாடிகளுக்கும் தேவையான உதவிகளை,இளவரசன் அஜாத சத்துரு செய்துவந்தான்.

கொசாம்பியில் இருந்த புத்தர் பெருமானும் தமது முக்கிய சீடர்களை அழைத்துக்கொண்டு, இராஜகிருகம் போய்ச் சேர்ந்தார்; பிம்பசார மன்னன் சங்கத்துக்கு அளித்திருந்த வேணு வனத்தில் தங்கி இருந்தார். தம் பரிவாரத்தினருடன் வந்து, பிம்பசார மன்னன் பகவானைத் தரிசித்துவிட்டு, அரண்மனை திரும்பினுன். பிறகு இடையிடையே வந்து, பகவானை வேணு வனத்தில் தரிசித்து,அவர் கூறும் உபதேச மொழிகளைச் செவிகுளிரக் கேட்டான்.

இளவரசன் அஜாத சத்துருவோ, தேவதத்தனுக்கு ஆதரவு ஊட்டி வந்தான். நாள்தோறும் சென்று தேவதத்தனைச்

சந்தித்தான். ஐநூறு பிக்குகளுக்குத் தேவையான உணவுப் பண்டங்களைத் தேவதத்தனுக்கு அனுப்பி வைத்தான்.

இளவரசன் ஆதரவு காட்டுவதை அடுத்து, அவனைச் சார்ந்த மற்றவர்களும் தேவதத்தனுக்கு உதவி செய்ய முன் வந்தார்கள். நாளுக்கு நாள் தேவதத்தனுடைய செல்வாக்கும் புகழும் பெருகி வந்தன.

இந்த நடப்பைக் கவனித்த மொக்கலானர் பெருமானிடம் சென்று, ''பெருமானே! தேவதத்தனுடைய செல்வாக்கு நாளுக்கு நாள் அதிகரித்து வருகிறது. பிக்குகளில் சிலரும் அவனைப் பின்பற்றத் தொடங்கி இருக்கிறார்கள். முளையிலே கிள்ளி எறியாவிட்டால் இதனால் பேராபத்து நேரலாம்'' என்று எச்சரித்தான்.

அதற்குப் பெருமான் சமாதானம் சொன்னார்: ''மொக்கலானரே! இதற்காகத் தாங்கள் கவலைப்பட வேண்டாம். தாம் செய்கின்ற வினைகளின் பயன்களிலிருந்து எவனாலும் தப்ப முடியாது. வாழைக்கு அதன் குலையும், மூங்கிலுக்கு அதன் கதிரும், அமிதமாகத் தேடுபவனுக்கு அவனுடைய தேட்டமும் அழிவை உண்டாக்கும். அதைப் போலவே, தேவதத்தனும் தன் செயலாலே அழியப் போகிறான்'' என்று கூறினார்.

தேவதத்தனோ தனக்குப் புகழும் செல்வாக்கும் அதிகரித்து வருவதைக் கண்டு, தன்னைத் தானே பெரியவனாகக் கருதிக்கொள்ளத் தொடங்கினான். ''புத்தருக்குப் பதிலாக சங்கத்தின் தலைமைப் பதவியை நான் ஏற்றுக் கொண்டால் என்ன?'' என்று கருதலானான்.

இந்த எண்ணம் அவன் உள்ளத்தில் உதித்ததுமே, தேவதத்தனிடம் இருந்த இருத்தி ஆற்றல்கள் அனைத்தும் அவனைவிட்டு நீங்கின.

பதவி மோகம் ஏற்பட்டுவிட்டால் அது யாரையும் சும்மா இருக்க விடாது. முனைப்புடன் காரியத்தில் இறங்க அவனை அது தூண்டும். தேவதத்தனும் இந்த விதிக்கு விலக்கானவன் அல்லன்.

ஆகவே அவன் காரியத்தில் இறங்கினன்; ஒரு நாள் புத்தர் பெருமானிடம் சென்று, சங்கத்தின் பதவியைத் தனக்கு அளிக்குமாறு, நாசுக்கான முறையில் தமது கருத்தைத் தேவதத்தன் வெளியிட்டான். ''பகவானே! தங்களுக்கு வயது அதிகமாகி வருகிறது. உடலில் தெம்பும் தங்களுக்குக் குறைந்து கொண்டு போகிறது. சங்கத்தின் அலுவல்களைத் தங்களால் இனி நன்கு கவனிக்க இயலாது. ஆகவே, சங்கத்தின் தலைமைப் பதவியை யாராவது ஒருவரிடம் ஒப்படைத்து விட்டு, தாங்கள் ஓய்வு பெறுவது நல்லது. தங்களைப் போலவே நானும் மேன்மையான சாக்கிய குலத்தில் பிறந்தவன்; அரச பரம்பரையில் வந்தவன். அதனுல் பிக்குகள் எல்லாரும் என் சொல்லுக்குக் கட்டுப்பட்டு நடப்பார்கள். தங்களுக்குப் பின்னர், சங்கத்தின் தலைமைப் பதவியை ஏற்கும் அருகதை எனக்குத்தான் மிகுதியாக உண்டு'' என்று சொன்னன்.

தேவதத்தன் இவ்வாறு கூறியதை எல்லாம் பொறுமையுடன் கேட்டுக்கொண்டிருந்த பெருமான் புன்முறுவல் பூத்துவிட்டு ''தேவதத்தா! பதவிமீது மோகம்கொண்டு அலையாதே. தலைமைப் பதவியைக் கொடுப்பதாய் இருந்தால், என் முக்கிய சீடர்கள் சாரிபுத்திரன், மொக்கலானன் ஆகிய இருவரில் யாராவது ஒருவருக்குத்தான் கொடுக்க நேருமே யன்றி, அந்தப் பதவி உனக்குக் கிடைக்காது. ஆகவே பதவி மோகத்தை விட்டுவிடு'' என்று கூறினர்.

கண்டிப்பாக இவ்வாறு பெருமான் பதில் கூறியதும் தேவதத்தன் அதிக ஆத்திரமடைந்தான். மேலும் அங்கே இருக்கப் பிரியப்படாது, எழுந்து வெளியே போய்விட்டான்.

அன்று முதல் தேவதத்தன் சும்மா இருக்கவில்லை. சங்கத்துக்கு விரோதமான காரியங்களில் அவன் ஈடுபடத் தொடங்கினன். சங்கத்துக்கு வெவ்வேறு கட்டளைகளை அவன் பிறப்பித்துக்கொண்டு இருந்தான்.

இதனுல் பிக்குகள் நிலை தடுமாறினர். எந்த விதிகளைக் கடைப்பிடித்து ஒழுகுவது என்பதுபற்றி அவர்கள் கலங்கினர்.

இதை அறிந்த புத்தர் பெருமான், மொக்கலானர் மூலம் பொது மக்களுக்கு ஒரு அறிவிப்பு விடுத்தார். ''தேவதத்தன் இடும் ஆணைகள் புத்தரையோ தருமத்தையோ சங்கத்தையோ கட்டுப்படுத்தா. அவற்றுக்கும் சங்கத்துக்கும் எவ்வித சம்பந்தமும் இல்லை'' என்று அறிவிக்கச் செய்தார்.

இந்த அறிவிப்பைக் கேட்டதும், தேவதத்தனின் கோபமும் ஆத்திரமும் அதிகமாயிற்றே தவிரக் குறையவில்லை. புத்தரை ஒழித்துக்காட்டினு லன்றி, தமது விருப்பம் நிறைவேருது என்ற முடிவுக்கு வந்தான் அவன்.

ஆகவே அதற்கான காரியங்களில் ஈடுபடத் தொடங்கினுன் தேவதத்தன்.

---

## அஜாத சத்துரு

மகத நாட்டு இளவரசன் அஜாத சத்துருவும் தேவதத்தனும் நெருங்கிய நட்புக்கொண்டு இருந்தார்கள் அல்லவா? இளவரசனைக் கொண்டே தமது விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்ளலாம் என்று தீர்மானித்தான் தேவதத்தன். ஏனென்ருல் அரசாங்கத்தின் உதவி இல்லாமல், புத்தர் போன்ற பெரியவர்களைத் தொலைப்பது எளிதல்ல என்பது தேவதத்தனுக்குத் தெரியும்.

ஆகவே தேவதத்தன் புறப்பட்டுச் சென்று அஜாத சத்துருவைச் சந்தித்தான்.

அஜாத சத்துருவும் தேவதத்தனை வரவேற்று உபசரித்தான். இருவரும் அளவளாவிக்கொண் டிருந்தனர். அப்போது தேவதத்தன் அஜாத சத்துருவிடம் ''இளவரசே! முன்பு எல்லாம் மக்கள் தீர்க்காயுளுடன் நீண்ட காலம் வாழ்ந்தார்கள். இப்பொழுதே மக்களின் வாழ்நாள் அளவு குறுகிப் போய்விட்டது. அதனுல் அரச பதவியில் அமர முடியாமலே தங்கள் காலம் முடிவடையக் கூடும், அரச பதவியில் அமர்ந்து நாட்டை ஆள முடியாமலே, தாங்கள் இறந்து போகக் கூடும்'' என்று கூறி, அஜாத

சத்துருவின் உள்ளத்தில் ஒருவித கலக்கத்தை உண்டு பண்ணினான்.

''ஆம் ஆம் தாங்கள் சொல்வது உண்மைதான். என் தந்தை மிகுந்த ஆரோக்கியத்துடன் இருக்கிறார். எனக்கோ, தலை நரைக்கத் தொடங்கி இருக்கிறது. தாங்கள் சொல்வது போல் அரச பதவியில் அமராமலே நான் இறக்கப் போவது உண்மைதான்'' என்று ஆமோதித்தான் அஜாத சத்துரு.

''உன் தந்தையின் காலத்தை ஒரு முடிவுக்குக் கொண்டு வந்துவிட்டால், நீ அரசனாகிவிடலாம்'' என்று கூறினான் தேவதத்தன்.

இப்படி தேவதத்தன் சொன்னதும் அஜாத சத்துரு சிறிது திடுக்கிட்டான். பதவி ஆசை அவனையும் விடவில்லை. ஆகவே அவன் தேவதத்தனை நோக்கி ''அப்படிக் கொல்வது தருமமாகுமா? எல்லாம் அறிந்த தாங்கள் கூறுகிறபடி செய்ய நான் காத்திருக்கிறேன்'' என்று பதில் சொன்னான்.

அதற்குத் தேவதத்தன் ''அரசனைக் கொல்வது அதருமம் அன்று. ஆயுட் காலம்வரை பதவியைக் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டு இருப்பவர்களைச் சும்மாவிட்டு வைக்க லாகாது. அவர்களை அப்புறப்படுத்திவிட்டுப் பதவியைக் கைப்பற்றிக்கொள்ள வேண்டும்'' என்று யோசனை சொன்னான் தேவதத்தன்.

''தாங்கள் கூறுவது நியாயம்தான். நான் என்ன செய்ய வேண்டும்? கட்டளையிடுங்கள்'' என்று ஆவலுடன் கேட்டான் அஜாத சத்துரு.

''இளவரசே! தாங்களே தைரியத்துடன் சென்று, தங்கள் கையாலேயே தங்கள் தந்தை பிம்பசார மன்னனைக் குத்திக் கொல்ல வேண்டும்'' என்றான் தேவதத்தன்.

உடனே அஜாத சத்துரு ''தாங்கள் கூறுவது தருமத் துக்குப் புறம்பாய் இராது. ஆகவே, அந்தக் காரியத்தை நான் செய்து முடிக்கிறேன்'' என்று ஒப்புக்கொண்டான்.

''இளவரசே! கூறியபடி அந்தக் காரியத்தைச் செய்து முடித்து, மகத நாட்டு மன்னன் பதவியைத் தாங்கள் கைப்

பற்றிக்கொள்ளுங்கள். கௌதம புத்தரின் உயிரைப் போக்கிவிட்டு, நான் புத்தர் பதவியில் அமருகிறேன்'' என்று உவகையுடன் கூறினுன் தேவதத்தன்.

அஜாத சத்துருவுக்குத் தன் தந்தையிடம் பாசம் உண்டு. இருப்பினும் தேவதத்தனுடைய தூண்டுதல் காரணமாக, பதவி மோகத்தில் சிக்கி, தன் தந்தையைக் கொல்வதற்கு அஜாத சத்துரு ஆயத்தமானுன். குத்துவாளைத் தனது இடுப்பிலே சொருகி மறைத்துக்கொண்டு, ஆத்திரத்தோடும் அச்சத்தோடும், சமய சந்தர்ப்பமில்லாத ஒரு வேளையில் தன் தந்தை பிம்பசார மன்னன் இருக்கும் அறைக்குச் சென்றுன்,

வழக்கத்துக்கு மாறுன நேரத்தில், உணர்ச்சி வயப்பட்டவனுய், இளவரசன் வந்து இருப்பதைக் கவனித்த காவலாளிகள் சந்தேகப்பட்டார்கள். உடனே இளவரசனைப் பிடித்து அவர்கள் சோதனை போட்டபோது, இடையில் குத்துவாளை ஒழித்து வைத்திருப்பதைக் கண்டுவிட்டார்கள்.

மந்திரிகளும் மற்ற அதிகாரிகளும் சேர்ந்து இளவரசனை விசாரித்தார்கள். இளவரசனுல் சாக்குப் போக்கு எதுவும் சொல்ல முடியவில்லை. அரச பதவிக்கு ஆசைப்பட்டு, தேவதத்தன் தூண்டுதல் பேரில், தன் தந்தையைத் தான் கொல்ல வந்த விவரத்தை அவர்களிடம் அஜாத சத்துரு கக்கி விட்டான்.

விவரம் தெரிய வந்ததும் மற்ற அதிகாரிகளும் திடுக்கிட்டார்கள். இளவரசன் அஜாத சத்துருவைப் பிம்பசார மன்னனிடம் அழைத்துப் போய், நடந்தவற்றை அவனுக்குத் தெரிவித்தார்கள்.

மன்னன் பிம்பசாரனுக்கு, தன் மைந்தன் அஜாத சத்துருவிடம் பாசம் உண்டு. அது மட்டு மல்லாமல் பெருமானின் உபதேசங்களைக் கேட்டுக் கேட்டு, அவனுடைய மனம் பக்குவம் அடைந்து இருந்தது. அதனுல் ஆத்திரப்படாமலும் அவசரப்படாமலும் தன் மைந்தனை அவன் நிதானமாக விசாரித்தான். ''குழந்தாய்! எதற்காக என்னை நீ கொல்லத் துணிந்தாய்?'' என்று கேட்டான்.

''ராஜ்யத்தின்மீது ஆசைப்பட்டு'' என்று அஜாதசத்துரு பதில் சொன்னான்.

அதற்குப் பிம்பசார மன்னன் கவலையோடு, ''மகனே! அரசனாய் இருப்பதும் அரசாங்கம் நடத்துவதும் எளிய காரியங்கள் அன்று. உனக்கு அரசாள விருப்பம் இருப்பது எனக்குத் தெரிந்து இருப்பின், விருப்போடு, அரசை உனக்கு நான் தந்திருப்பேனே! ஆட்சிக் கவலைகளை விட்டு ஒழித்து, புத்தர் பெருமானின் போதனைகளில் மனம் செலுத்தி, அமைதியோடு வாழவிரும்பி இருப்பேனே'' என்று சொன்னான்.

பிறகு மந்திரிகள் பக்கம் திரும்பி, ''அமைச்சர்களே! இதுபற்றி உங்கள் அபிப்பிராயத்தைக் கூறுங்கள்'' என்று மன்னன் பிம்பசரான் கேட்டான்.

''இளவரசனையும் தேவதத்தையும் அவனைச் சார்ந்த பிக்குகளையும் சிரச்சேதம் செய்ய வேண்டும்'' என்று அவர்களுள் சிலர் யோசனை சொன்னார்கள்.

சில மந்திரிகள், ''பிக்குகள்மீது எவ்விதக் குற்றமும் இல்லை. ஆகவே அவர்களைத் தண்டிக்கக் கூடாது. தேவதத்தனையும் இளவரசனையும் தண்டிக்க வேண்டும்'' என்று சொன்னார்கள்.

மற்றும் சிலர் ''யாரையுமே தண்டிக்கக் கூடாது. விஷயத்தை அரசரின் விருப்பத்துக்கு விட்டுவிட வேண்டும். இதுபற்றி அரசன் இடும் கட்டளையை நிறைவேற்றத் தயாராய் இருக்க வேண்டும்'' என்று கூறினார்கள்.

உடனே அரசன், ''தீமை செய்பவர்களுக்கு நாமும் தீமை செய்யக் கூடாது என்று பெருமான் போதித்து இருப்பதை மறந்துவிட்டீர்களா?'' என்று நினைவுபடுத்தினான்.

மறு தினம், ''இன்று முதல் அஜாத சத்துருவே மகத நாட்டு மன்னன்'' என்று பொதுமக்களுக்கு அறிவித்துவிட்டு, ஆட்சிப் பொறுப்பைத் தன் மைந்தனிடம் ஒப்படைத்தான் பிம்பசார மன்னன்.

பொறுப்பை ஏற்றுக்கொண்ட அஜாத சத்துரு அகமகிழ்ந்தான். தேவதத்தனின் யோஜனையின் விளைவுதான் இது என்று பூரித்துப் போனான்.

தேவதத்தனின் விருப்பங்களை நிறைவேற்றி வைக்க அவன் ஆயத்தமாய் இருந்தான்; எது சொன்னாலும் செய்யத் தயாராய் இருந்தான்.

அஜாத சத்துருவின் உதவிபெற்று, என்ன என்ன காரியங்களை எல்லாம் தேவதத்தன் செய்ய முனைந்தான் என்பதை இனிக் கவனிக்கலாம்.

## தேவதத்தனின் வெறி

அரசு கட்டில் ஏறிய பின் அஜாத சத்துரு, தேவ தத்தனைப் பெரிதும் போற்றினான். தேவதத்தன் சொற்படி நடக்குமாறு அதிகாரிகளுக்கு உத்தரவிட்டான்.

உடனே தேவதத்தன் காரியத்தில் இறங்கினான். பெரு மானைக் கொல்வதற்கான ஏற்பாடுகளைச் செய்தான். அஜாத சத்துருவின் வீரர்களில் சிலரைத் தன்பால் அழைத் தான். அவர்களில் ஒருவனிடம், ''வீரனே! நீ சென்று கௌதம புத்தரைக் கொன்றுவிட்டு, திரும்பி வா'' என்று உத்தரவிட்டான்.

அந்த வீரன் புறப்பட்டுச் சென்றதும் மற்றும் இரு வீரர்களை அழைத்து, ''நீங்கள் குறிப்பிடும் இன்ன வழியாகச் செல்லுங்கள். அந்த வழியில் யார் வந்தாலும் அவனைக் கொன்றுவிட்டுத் திரும்புங்கள்'' என்று ஏவினான்.

இப்படி மொத்தம் பதினாறு பேரை, புத்தர் பெரு மானைக் கொல்லும் பொருட்டு, தேவதத்தன் அனுப்பினான்.

வாளைக் கையில் பிடித்துக்கொண்டு, வில்லையும் அம்பு களையும் தோளில் மாட்டிக்கொண்டு, அந்த வீரன் புத்தர் இருக்கும் இடத்தை நாடிப் போனான். பெருமான் அருகில் சென்றதும், அவனுடைய கைகளும் கால்களும் உதறல் எடுத்தன. அச்சத்தோடும் நடுக்கத்துடனும் அவன் வரு வதைக் கவனித்த பெருமான் அவன் ஏதோ தீய எண்ணத் துடன் வருகிறான் என்பதைத் தெரிந்துகொண்டார். ஆகவே அவனை நோக்கி, ''நண்பனே! பயப்பட வேண்டாம். அருகே வா'' என்று அழைத்தார்.

அந்த வீரன் வெலவெலத்துப் போனுன். தான் கொணர்ந்திருந்த ஆயுதங்களைக் கீழே போட்டுவிட்டு, ஓடோடியும் சென்று பெருமானுடைய பொன்னடிகளில் வீழ்ந்தான். ''பெருமானே! அறியாது அபராதம் செய்து விட்டேன். என்னை மன்னியுங்கள்'' என்று சொல்லித் தேம்பித் தேம்பி அழுதான். தான் வர நேர்ந்த நோக்கத்தை விவரமாகப் பெருமானிடம் தெரிவித்தான்.

இதமான வார்த்தைகள் கூறி, பெருமான் அந்த வீரனுக்கு இருக்கும் அச்சத்தைப் போக்கினுர்; மனம் திருந்தி, அந்த வீரன் பெருமானுடைய சீடன் ஆனுன்.

பிறகு பெருமானிடம் விடைபெற்றுக்கொண்டு அவன் திரும்பிப் போனுன்.

அப்போது, ''நீ வந்த வழியில் திரும்ப வேண்டாம். வேறு வழியில் செல்'' என்று அவனுக்கு யோசனை சொன்னுர் பெருமான்.

அதன்படி அந்த வீரன் வேறு வழியில் திரும்பினுன்.

முதலில் போன வீரன் திரும்புவதை எதிர்பார்த்து, வழியில் இரு வீரர்கள் காத்து இருந்தார்கள். அவன் வரவில்லை. ஆகவே அவன் எதற்காகவோ தாமதிப்பதாகக் கருதிக்கொண்டு, அந்த வழியில் இருவரும் போனுர்கள்.

முன்பு வந்த வீரனுக்கு ஆறுதல் சொல்லி உபதேசித்ததைப் போலவே இந்த இரு வீரர்களுக்கும் பெருமான் உபதேசித்தார். அவர்களும் பெருமானுக்குச் சீடர்கள் ஆயினர். பிறகு அவர்களும் விடைபெற்றுக்கொண்டு, திரும்பினுர்கள்.

வந்த வழியே திரும்ப வேண்டாம் என்று பெருமான் சொல்லியபடி, அவர்கள் வேறு வழியில் திரும்பினர்.

இப்படியே, பெருமானைக் கொல்ல வந்த மற்ற வீரர்களும் அவருக்குச் சீடர்கள் ஆயினர்.

முதலில் போன வீரன் தேவதத்தனிடம் திரும்பி நடந்தவற்றைத் தெரிவித்தான். ''என்னுல் பெருமானைக் கொல்ல முடியவில்லை. வேறு யாராலும், எவ்வளவு பெரியவர்களாலும் அவரைக் கொல்ல முடியாது'' என்று கூறினுன்.

இந்த விவரங்கள் தெரிய வந்ததும், தன்னைத் தவிர வேறு யாராலும் பெருமானைக் கொல்ல முடியாது என்ற முடிவுக்கு வந்தான் தேவதத்தன்.

இந்த எண்ணத்தை நிறைவேற்றும் பொருட்டு, கழுகுப் பாறையின் உச்சிக்குச் சென்று அவன் நின்றுகொண்டான். ஏனெனில் அந்தப் பாறைக்குக் கீழே, தியானம் செய்தவாறு பெருமான் உலாவுவது வழக்கம்.

அந்த வழக்கப்படி பெருமான் கீழே உலாவிக்கொண் டிருந்தபோது, மேலே நின்ற தேவதத்தன் ஒரு பாறையை உருட்டிப் பெருமான்மீது தள்ளினான்.

அந்தப் பாறை பெருமான்மீது விழவில்லை. ஆனால் அது உருண்டு விழுந்த அதிர்ச்சியில், சிறு கல் ஒன்று வெடித் துச் சிதறிப் பெருமானின் கால்மீது ரத்தக் காயத்தை உண்டு பண்ணிவிட்டது.

பெருமான் வருத்தத்தோடு நிமிர்ந்து பார்த்தார். ''முட்டாளே! தகாத பெரிய தீமையைச் செய்து உனக்கு நீயே ஏன் அழிவு தேடிக்கொள்கிறாய்'' என்று கூறினார்.

பிறகு பெருமான் விகாரைக்குத் திரும்பிவிட்டார். விவரம் தெரியவந்ததும் பிக்குகள் ஆத்திரம் அடைந்தார்கள். பெருமான் உயிருக்கு ஆபத்து எதுவும் நேர்ந்துவிடாதபடி காவல்புரியத் தொடங்கினார்கள்.

இதை அறிந்த பகவான் பிக்குகளைக் கூப்பிட்டு, தமக்குப் பாதுகாப்பு எதுவும் தேவை இல்லை என்றும் தத்தம் காரியங் களைப் பிக்குகள் கவனிக்கலாம் என்றும் கூறிவிட்டார்.

> ''சத்தியத்தில் நாட்டம் கொண்டு இருப்பவர்களுக் குப் பாதுகாப்புத் தேவையில்லை. இயல்பாக அவர்களுக்கு மரணம் சம்பவிக்குமே யன்றி, தாக்குதல் மூலம் அவர் களுக்கு மரணம் சம்பவியாது. ஆகவே, ஆரவாரம் செய் யாது சும்மா இருங்கள்'' என்று பெருமான் அவர்களிடம் கூறினார்.

தமது முயற்சிகளில் படுதோல்வி அடைந்த தேவதத்தன், வேறு ஒரு முயற்சியை மேற்கொண்டான். மகத நாட்டு மன்னனிடம் மதம் கொண்ட யானை ஒன்று இருந்தது.

நாளகிரி என்னும் அந்த யானையின் பிடிப்பில் சிக்கியவர்கள் யாரும் இதுவரை உயிர் பிழைத்தது இல்லை. ஆகவே, அந்த யானையை ஏவிவிடச் செய்து, பெருமானைக் கொல்வது என்று தேவதத்தன் தீர்மானித்தான் தனது இந்தத் தீர்மானத்தை நிறைவேற்ற யானைப் பாகர்களின் உதவியை நாடினான் தேவதத்தன். ''பாகர்களே! நான் அரசனுக்கு மிகவும் வேண்டியவன். என் சொற்படி நடந்து காரியத்தை நீங்கள் நிறைவேற்றி முடித்தால், அரசனிடம் சொல்லி, இப்போது கிடைப்பதைக் காட்டிலும் அதிக அரிசியும் பணமும் உங்களுக்குக் கிடைக்க ஏற்பாடு செய்கிறேன்'' என்று சொன்னான்.

''பிக்குவே! நாங்கள் என்ன செய்ய வேண்டியது இருக்கும் சொல்லுங்கள்'' என்று யானைப் பாகர்கள் கேட்டார்கள்.

''நகரில் பிச்சை ஏற்கும் பொருட்டு, புத்தரும், பிக்குகளும் தெருவில் வருவார்கள். அப்போது நாளகிரி என்னும் மதயானையைப் புத்தர்மீது ஏவிவிட்டு, அவரைக் கொன்று விட வேண்டும்'' என்று தேவதத்தன் கூறினான்.

''சரி'' என்று பாகர்கள் சம்மதித்தார்கள்.

மறு தினம் காலையில் வழக்கம்போல் பிச்சைப் பாத்திரத்தைக் கையில் எடுத்துக்கொண்டு, இராஜகிருக வீதிகளில் பெருமான் வந்தார்.

அப்போது யானைப் பாகர்கள் நாளகிரி என்னும் யானையை அவிழ்த்துவிட்டு, பெருமான்மீது ஏவினார்கள்.

பிளிறிக்கொண்டு, வீதியில் யானை வெகு வேகமாக ஓடி வந்தது.

இதைக் கண்ட மக்கள் பீதியுற்று அலறிப் புடைத்துக்கொண்டு, அங்கும் இங்கும் சிதறியோடினார்கள். சிலர் வீடுகளின் கூரைமீது ஏறிக்கொண்டார்கள்.

ஓடிவரும் நாளகிரி பெருமானைக் கவனித்தது; பெருமான் அதை உற்றுக் கவனித்தார். உடனே யானை துதிக்கையைத் தூக்கிக்கொண்டும், காதுகளை அசைக்காமலும் பெருமானை நாடி வந்தது.

இதைக் கவனித்த பிக்குகள் பதறிப் போய், ''பெரு

மானே! மதயானை நாளகிரி தெருவில் வருகிறது. வாருங்கள் திரும்பிப் போய்விடுவோம்'' என்று கூவினார்கள்.

உடனே பெருமான் அவர்களை நோக்கி, ''பிக்குகளே! கலவரம் அடைய வேண்டாம். ததாகதரின் உயிரைப் பலாத்காரத்தால் யாரும் பறித்துவிட முடியாது'' என்று கூறினார்.

ஓடிவந்த யானை பெருமானை அணுகியதும், துதிக்கையைத் தொங்கப் போட்டுக்கொண்டு அமைதியாக நின்றது.

பெருமான் அன்போடு நாளகிரியின் நெற்றியில் தட்டிக் கொடுத்தார். அன்பான சில வார்த்தைகள் சொன்னார்.

யானையோ வணங்கி, பெருமானின் பாதத் துகள்களை அள்ளித் தலைமீது போட்டுக்கொண்டு அமைதியாகத் திரும்பி விட்டது. அதனிடம் காணப்பட்ட மதயானைக்கு உரிய இயல்புகள் மாறிவிட்டன.

மக்கள் இந்த நிகழ்ச்சியைக் கண்டு ஆச்சரியம் அடைந்தார்கள். ''அங்குசத்தாலும் கழிகளாலும் மக்கள் யானைகளைக் கட்டுப்படுத்துவார்கள். இந்த முனிபுங்கவரோ அங்குசம் முதலிய ஆயுதத்தைப் பயன்படுத்தாமல், அதன் கொட்டத்தை அடக்கிவிட்டாரே!'' என்று பேசிக்கொண்டார்கள்.

தேவதத்தனின் இழிந்த மனப்போக்கை, வெளிப்படையாக இகழ்ந்து பேசவும் தொடங்கினார்கள். ''ஆற்றலும் பலமும் கொண்ட சிரமண கோதமரை, பாவி தேவதத்தன் கொல்ல அல்லவா முயன்று வருகிறான்'' என்று தேவதத்தனை ஏசவும் செய்தார்கள்.

தேவதத்தனின் செய்கைகளால் பெருமானின் புகழ் பெருகிற்றே தவிர, குறையவில்லை.

தேவதத்தன் ஒருவனைத் தவிர்த்து, பெருமானின் அன்புக்கு வயப்பட்டுப் போகாதவர்கள் யாரும் இல்லை. மதம் பிடித்த யானைகூட அல்லவா அவருடைய அன்புக்குப் பணிந்து போய்விட்டது. பதவி மோகம் பெருமானுக்கு இல்லாதது காரணமாய் இருக்கலாமோ!

# சங்கத்தில் பிளவு

பெருமானைக் கொல்லப் பல முறை முயன்றும் தேவதத்த ஞல் முடியவில்லை. ஆகவே வேறு ஒரு சூழ்ச்சி செய்வதன் மூலம் பெருமானுக்கு இருக்கும் புகழையும் பெருமையையும் குறைத்துவிடலாம் என்று தேவதத்தன் கருதினன். சங்கத்தில் ஒரு பிளவை உண்டுபண்ணினல், தமது விருப்பம் சரிவர நிறைவேறக் கூடும் என்று முடிவுக்கு வந்தான் தேவதத்தன்.

துறவற நியதிகளைக் கடைப்பிடிப்பதில் தீவிர வழிகளை மேற்கொண்டால் தனக்குப் பெருமையும் புகழும் பெருகக் கூடும் என்றும், அதன் காரணமாகச் சங்கத்தில் ஒரு பிளவை உண்டாக்கிவிட முடியும் என்றும் தேவதத்தன் நினைத்தான். இந்த நினைப்பைத் தமது முக்கிய சீடர்கள் நான்கு பேர் களிடம் சொல்லி, அவர்களின் கருத்தைக் கேட்டான்.

இந்தப் போக்கு தவருன ஒரு போக்கு என்றும், இதனல் புத்தருடைய பெருமையைக் குறைத்துவிட முடியாது என்றும் அவர்கள் எச்சரித்தார்கள்.

தேவதத்தன் கேட்கவில்லை, ஆகவே அவர்கள் தேவதத்த னேடு சேர்ந்து பெருமானிடம் சென்ருர்கள். முறைப்படி பெருமானை வணங்கிவிட்டு, அருகே அமர்ந்தார்கள். அப்போது தேவதத்தன், ''பெருமானே! உணவு உடை ஆகியவற்றில் எளிமையை மேற்கொள்ள வேண்டும் என்றும், ஆசைகளைக் கட்டுப்படுத்தி, மனதை அமைதியாக வைத்துக் கொள்ள வேண்டும் என்றும் தாங்கள் இதுவரை போதித்து வந்திருக்கிறீர்கள். ஆகவே அடியில் காணும் ஐந்து நியமங் களைக் கடைப்பிடிப்பது தங்கள் போதனைகளுக்கு இயைந்தன வாக இருக்கும். அந்த ஐந்து நியமங்கள் வருமாறு :

(1) பிக்குகள் காடுகளில் வசிக்க வேண்டுமே யன்றி ஒரு போதும் கிராமங்களில் வசிக்கக் கூடாது.

(2) வீடு வீடாகச் சென்று பிக்குகள் பிச்சை ஏற்க வேண்டுமே யன்றி, இல்லங்களுக்குச் சென்று விருந்து உண்ணக் கூடாது.

(3) கந்தல்களை மட்டும் பிக்குகள் உடுக்க வேண்டுமே யன்றி, இல்லறத்தார் வழங்கும் உடைகளை ஏற்று அணிந்துகொள்ளக் கூடாது.

(4) மரத்தடிகளில் தங்க வேண்டுமே யன்றி வேறு இடங்களில் தங்கக் கூடாது.

(5) மீன், இறைச்சி போன்ற புலால் உணவைப் பிக்குகள் சாப்பிடக் கூடாது.

தேவதத்தன் சொன்ன ஐந்து நியதிகளையும் பெருமான் கவனத்துடன் கேட்டார். பிறகு பொறுமையோடு பதில் சொன்னார் :

''தேவதத்தா! நீ கூறும் நியதிகளை நான் ஏற்க முடியாது. விருப்பமுள்ளவர்கள் அவற்றைக் கடைப் பிடிப்பதில் தடை ஒன்றும் இல்லை. விருப்பம் உள்ள வர்கள் காட்டிலேயே வசிக்கட்டும்; வீடு வீடாய் சென்று பிச்சை ஏற்கட்டும். கந்தைகளை அணிந்துகொள்ளட்டும்; விருந்துக்கு அழைப்பு வந்தால் மறுத்து விடட்டும்; இல்லறத்தார் வழங்கும் உடைகளை விரும்பாதவர்கள் ஏற்க வேண்டாம். யாரையும் கட்டாயப்படுத்தி நியதி களைக் கடைப்பிடிக்குமாறு கட்டளையிடுவது சரியன்று.

''கோடை காலத்தில் பிக்குகள் வெளியே தங்குவது அவசியம். ஆனால், மாரிக் காலத்தில் பிக்குகள் மரத் தடியில் தங்கக் கூடாது. தங்கவும் முடியாது. பிரத்தி யேகமாகத் தயாரிக்கப்படாதனவாக இருந்தால், இறைச்சியையோ மீனையோ, பிக்குகள் சாப்பிடுவதில் தவறு இல்லை'' என்று பெருமான் கூறினார்.

பெருமானுடைய மறுப்பு தெரிய வந்ததும், தேவதத்தன் மட்டற்ற மகிழ்ச்சி அடைந்தான். இராஜகிருக நகருக்குத் திரும்பி, பிரச்சாரம் செய்வதில் முனைந்தான். ''நானும் என் சீடர்களும் கடுமையான நியதிகளைக் கடைப்பிடித்து ஒழுகுகிறோம்; ஆனால் புத்தரும் அவரைச் சார்ந்த பிக்கு களுமோ, போக போக்கியங்களில் மூழ்கிச் சுக வாழ்க்கை நடத்துகிறார்கள்'' என்று பிரச்சாரம் செய்யலானான்.

தேவதத்தனின் கூற்றை வாலிபக் பிக்குகள் சிலர் நம்பினார்கள். பொது மக்களும் நம்பத் தொடங்கினார்கள்.

மறு நாள் பெருமான் தேவதத்தனைச் சந்தித்தார். ''சங்கத்தில் பிளவை உண்டாக்க நீ முயல்வதாகத் தெரிகிறதே! இது உண்மைதானா?'' என்று கேட்டார்.

''ஆம்'' என்று தேவதத்தன் ஒப்புக் கொண்டான்.

அதற்குப் பெருமான், ''தேவதத்தா! உனது போக்கு வரம்பையும் கடப்பதாய் இருக்கிறது. அமைதி நிலவும் சங்கத்தில் நீ பிளவை உண்டுபண்ண முயல்கிறாய். இதற்குப் பிராயச்சித்தமே கிடையாது. அமைதியோடும் இணக்கத்தோடும் வாழ முயல்வதுதான் மேன்மைப்படுத்தும்'' என்று கவலையோடு சொன்னார்.

பகவான் சொன்னதைக் கேட்கத் தேவதத்தன் பிரியப்படவில்லை. சித்தத்தை மேலும் கடினப்படுத்திக்கொண்டு காரியத்தில் இறங்கினான்.

மறு தினம் ஆனந்தனைச் சந்தித்தபோது, ''புத்தர் ஒருவர் இல்லாமலே சங்கத்தை நான் நிறுவப் போகிறேன்'' என்று தேவதத்தன் கூறினான்.

இந்த விவரத்தைப் பெருமானிடம் ஆனந்தன் தெரிவித்தான்.

அதற்குப் பெருமான், ''நல்லவர்களுக்கு நல்லது செய்வது எளிதாய் இருக்கும். தீயவர்களுக்கு நல்லது செய்வது சிரமமாய் இருக்கும். தீயவர்கள் தீயதை எளிதில் செய்துவிடுவர்; நல்லவர்களால் தீயதை எளிதில் செய்ய முடியாது'' என்று வருத்தத்துடன் கூறினார்.

பௌத்த சங்கத்தில் உபோசத நாள் என ஒரு சம்பிரதாயம் உண்டு. அன்று பிக்குகள் அனைவரும் ஒரு இடத்தில் கூடி, தெரிந்தோ தெரியாமலோ தாங்கள் செய்த தவறுகளைக் கூட்டத்தில் கூறி, தங்களைத் தாங்களே தூய்மைப்படுத்திக்கொள்ள வேண்டும்.

அப்படி ஒரு உபோசத நாள் அன்று, தேவதத்தன் எழுந்து, பிக்குகள் அனைவரும் ஐந்து நியதிகளைக் கடைப்பிடித்து ஒழுக வேண்டும் என்று வாதாடினான்.

புதிதாகச் சங்கத்தில் சேர்ந்திருந்த வாலிபப் பிக்குகள், தேவதத்தன் சொன்ன நியதிகளை வெளிப்படையாகவே ஆதரிக்கத் தொடங்கினர்.

இதனால் சங்கத்தில் பிளவு ஏற்பட்டுவிட்டது. தன்னை ஆதரித்த பிக்குகளில் கிட்டத்தட்ட ஐநூறு பிக்குகளை அழைத்துக்கொண்டு, தேவதத்தன் காயசிச மலைக்குப் போய்விட்டான்.

இது விவரத்தைச் சாரிபுத்திரரும் மொக்கலானரும் பெருமானிடம் தெரிவித்தார்கள்.

விவரம் தெரியவந்ததும் பெருமான் அவர்களிடம், ''நீங்கள் இருவரும் காயசீச மலைக்குச் செல்லுங்கள். நிலைமை முழுதும் மோசமாகிவிடுவதற்கு முன்னர், உங்களால் இயன்றதைச் செய்யுங்கள்'' என்று சொன்னார்.

உடனே இருவரும் எழுந்து வணங்கி, பெருமானை வலம் வந்து விடைபெற்றுக்கொண்டு, காயசீச மலைக்குப் புறப்பட்டனர்.

இருவரும் காயசிச மலைக்குப் போவதை, வாயிலில் நின்று கவனித்த பிக்கு ஒருவர் துயரம் தாளாமல் வாய்விட்டு அழுதார்.

இதைக் கவனித்த பெருமான், ''பிக்குவே! நீர் ஏன் அழுகிறீர்?'' என்று வினவினார்.

''பெருமானே! தங்களின் முக்கிய சீடர்கள் சாரிபுத்திரரும், மொக்கலானரும் தேவதத்தன் போதிக்கும் தருமத்தை அங்கீகரித்து, தங்களை விடுத்துச் செல்கிறார்கள். அதனால் தான் நான் அழுகிறேன்'' என்று அந்தப் பிக்கு பதில் சொன்னார்.

உடனே பெருமான், ''பிக்குவே! அதற்காக நீர் அழ வேண்டாம். என்னை விட்டு அவர்கள் போகவில்லை. பிக்குகளைத் திருப்பி அழைத்து வரும் பொருட்டுச் செல்கிறார்கள்'' என்று தெரிவித்தார்.

சமாதானம் அடைந்த அந்தப் பிக்கு சும்மா இருந்தார்.

# தேவதத்தனின் முடிவு

தாம் அழைத்துச் சென்ற பிக்குகளை எல்லாம் ஒருங்கு கூட்டி உட்காரவைத்து, தேவதத்தன் உபதேசம் செய்து கொண்டு இருந்தான்.

அப்போது, சாரிபுத்திரரும் மொக்கலானரும் தன்னை நாடி வருவதைத் தேவதத்தன் கவனித்தான். உடனே அவன் தன் எதிரே இருக்கும் பிக்குகளை நோக்கி, ''பிக்குகளே! நான் போதிக்கும் தருமம் எவ்வளவு சிறந்தது என்பதைப் பார்த்தீர்களா! சிரமண கோதமரின் முக்கிய சீடர்கள் இருவரும் — சாரிபுத்திரரும் மொக்கலானரும் — நான் போதிக்கும் தருமத்தை ஏற்க வருகிறார்கள்; எனது சங்கத்திலே சேர வருகிறார்கள்'' என்று பெருமித முற்றுச் சொன்னான்.

உடனே தேவதத்தனின் முக்கிய சீடரான கோலலிகன் என்பவன், ''மதிப்புக்கு உரியவரே! சாரிபுத்திரரையும் மொக்கலானரையும் தாங்கள் நம்ப வேண்டாம். ஏதோ தீய கருத்துடன்தான் அவர்கள் வருகிறார்கள் எனத் தோன்றுகிறது'' என்று சொன்னான்.

கோலலிகனின் கூற்றை, தேவதத்தன் ஏற்கவில்லை. தலைக்கன மிகுதியால் அவன் பூரித்துப் போனான், ''நண்பரே! தடை செய்ய வேண்டாம். எனது போதனைகளை விருப்புடன் கேட்க வந்திருக்கும் அவர்களை நாம் மகிழ்வுடன் வரவேற்போம்'' என்று கூறினான்.

பிறகு சாரிபுத்தரரை நோக்கி, ''சாரிபுத்திரரே! வாருங்கள், வாருங்கள். என் அருகே அமருங்கள்'' என்று தேவதத்தன் அழைத்தான்.

சாரிபுத்திரரும் மொக்கலானரும் தேவதத்தன் காட்டிய இருக்கைகளில் அமராமல் மற்ற பிக்குகளின் பக்கத்திலே அமர்ந்துகொண்டனர்.

தேவதத்தன் உபதேசம் செய்யத் தொடங்கினான். சோர்வடையாமல் உற்சாகத்துடன் நடுநிசிவரை அவன் உப

தேசம் செய்தான். வாலிபப் பிக்குகள் ஆர்வம் குன்றுமல் கேட்டுக்கொண் டிருந்தார்கள்.

தேவதத்தனுக்கு இப்பொழுது வயது அறுபது. அதனுல் தொடர்ந்து நீடித்த நேரம் அவனுல் உபதேசம் செய்ய முடிய வில்லை. இரவு நெடு நேரமாகிவிட்டபடியால், தூக்கமும் சோர்வும் உண்டாயின. ஆகவே, அவன் சாரிபுத்திரரை நோக்கி, ''சாரிபுத்திரரே! கூட்டத்தினர் ஆர்வத்துடன் போதனைகளைக் கேட்டுக்கொண் டிருக்கிறுர்கள். ஆகவே தாங்கள் தொடர்ந்து உபதேசியுங்கள். நான் சிறிது நேரம் ஓய்வு எடுத்துக்கொள்கிறேன்'' என்று சொல்லி எழுந்து போய்விட்டான். சென்றவன் சிறிது நேரத்தில் அயர்ந்து தூங்கலானுன்.

அவன் போன பின்பு சாரிபுத்திரரும் மொக்கலானரும் பெருமானின் உபதேசங்களை விளக்கிக் கூறி, வாலிபப் பிக்கு களின் மனத்தைத் திருப்ப முயன்றுர்கள். ''பிக்குகளே! பெருமான் போதிப்பதுதான் உண்மையான நெறியாகும். விருப்பமுள்ளவர்கள் பெருமானிடம் திரும்ப வரலாம்'' என்று சொல்லி அழைத்தார்கள்.

இரண்டொருவரைத் தவிர்த்து, அனைவரும் ஏகமனதாகச் சம்மதித்து, இரு சீடர்களுடன் சேர்ந்து புறப்பட்டு, பெருமான் தங்கி இருக்கும் வேணு வனத்துக்குப் போய்ச் சேர்ந்தார்கள்.

தேவதத்தன் எழுந்து பார்த்தான். பிக்குகளைக் காண வில்லை. விவரம் தெரிய வந்ததும் பெரிதும் அதிர்ச்சி அடைந்து போனுன். ஆகவே, வாலிபப் பிக்குகளைத் தேடிக் கொண்டு, பின் சென்றுன் அவனுல் நடக்க முடியவில்லை. மலை அடிவாரத்தை அடைந்ததும், ஒரு ஏரி அருகே சிறிது நேரம் ஓய்வு எடுத்துக்கொண்டான்.

பிறகு நீர் அருந்தச் சென்றபோது, சுழல் சகதியில் மாட்டிக்கொண்டு தத்தளித்தான். அதிலிருந்து தப்ப முடியாது பரிதாப நிலையில் தேவதத்தன் இறந்து போனுன்.

அறிவு, தவம், ஆற்றல் ஆகிய நற்பண்புகள் ஒருவனிடம் இருந்தாலும் பொதுநல நோக்கு இல்லாவிட்டால், அவை ஒருவனுக்கு அழிவைத்தான் கொடுக்கும் என்னும் உண்மையைத் தேவதத்தன் வாழ்க்கையிலிருந்து நாம் தெரிந்து கொள்கிறோம்.

இந்தப் பூசல்கள் நடந்த சமயம் பெருமானுக்கு வயது எழுபது. பொது வாழ்வில் அவர் ஈடுபட்டு முப்பதைந்து ஆண்டுகள் ஆகிவிட்டன. மற்ற சமயத் தலைவர்களுக்கு இருப்பதைக் காட்டிலும் பெருமான் அதிக செல்வாக்குடன் இருந்த காலம் இது.

# கௌதம புத்தர்

## வரலாறு

## சீடர் குழாம்

## பெருமானும் அஜாத சத்துருவும்

தேவதத்தன் செய்த சூழ்ச்சிகளும், சங்கத்தில் ஏற்பட்ட பிளவும் முதலில் பெருமான் உள்ளத்தில் சிறிது கவலையை உண்டுபண்ணின. அதற்காக, பெருமான் மனம் தளர்ந்து விடவில்லை. நான் எனது என்னும் பந்தங்களிலிருந்து முழுதும் விடுபட்டு, பக்குவ நிலையை அடைந்திருந்த அவர், கவலையை விட்டொழித்து தருமப் பிரச்சாரம் செய்வதைத் தொடர்ந்து மேற்கொண்டார். பிக்குகளுடன் ஊர் ஊராகச் சென்று, வழக்கப்படி உபதேசம் செய்து தருமத்தைப் பரப்பி வந்தார்.

இதற்கு இடையில்,-அதாவது பெருமான் பரிநிர்வாணம் அடைவதற்கு முன்னதாக - பல சம்பவங்கள் நிகழ்ந்துள்ளன. அவற்றில் குறிப்பிடத் தக்கவை மூன்று: பிம்பசார மன்னனின் மரணம், சாக்கிய குலத்தின் அழிவு, சாரிபுத்திரர் மொக்கலானர் ஆகிய முக்கிய சீடர் இருவரும் இறந்தமை.

இந்த மூன்று சம்பவங்களும் பௌத்த சமயத்துடன் தொடர்புள்ள சம்பவங்களாதலால், அவற்றைப்பற்றிச் சிறிது தெரிந்துகொள்வோம்.

புத்தர் வாழ்ந்த காலத்தில் ஆட்சி செய்த முக்கிய மன்னர்களில் பிம்பசார மன்னனும் ஒருவன். இவன் மகத நாட்டை ஆண்டவன். இவன் ஆட்சிக் காலத்தில் பல்வேறு சமயங்களைச் சார்ந்த மக்கள் மகத நாட்டில் வாழ்ந்தார்கள்.

அவர்கள் எல்லாருக்கும் வேண்டிய ஆதரவு கொடுத்து, விருப்பு வெறுப்பு இன்றி, பிம்பசார மன்னன் காப்பாற்றி வந்தான்.

ஆரம்பத்தில் அவன் வைதீக மதச் சார்புடைவனாய் இருந்து, வேள்வி முதலியன இயற்றுவதில் அக்கறை காட்டி வந்தான். ஒழுக்கத்தினாலும், தியானத்தினாலும்தான் ஒருவன் மேன்மையடைய முடியுமே யன்றி, வேள்விகள் செய்வதால் பயனில்லை என்று சொல்லி, பெருமான் அவனைப் பௌத்த சமயத்தில் ஈடுபாடு கொள்ளச் செய்தார்.

சங்கத்துக்கு வேணு வனத்தைக் கொடுத்து, பெருமானையும் பிக்குகளையும் பிம்பசார மன்னன் ஆதரித்துப் போற்றினான்.

இராஜகிருகம் வரும்போது எல்லாம் பெருமான் வேணு வனத்தில் தங்கினார். மன்னனும் பெருமானைச் சந்தித்து உரையாடி மகிழ்ந்தான். வர வர, பௌத்த சமயத்தில் பிம்பசார மன்னனுக்கு ஈடுபாடு அதிகமாகி, பெருமானை அவன் பெரிதும் போற்றினான்.

பிறகு, தேவதத்தனின் தூண்டுதல் காரணமாக, பிம்பசார மன்னனின் மகன் அஜாத சத்துருவுக்கு மகத நாட்டின் மன்னன் ஆகும் வாய்ப்புக் கிடைத்தது.

மகத நாட்டுக்கு மன்னனாகி, அஜாத சத்துரு நாட்டை ஆண்டு வந்தபோதிலும், மக்கள் பிம்பசார மன்னனைப் பாராட்டி வந்ததால், அஜாத சத்துரு ஆத்திரமடைந்தான். தன் தந்தை பிம்பசார மன்னனை அரண்மனைக்குள்ளேயே, சிறைவைத்துக் கட்டுப்படுத்தினான்; ஆகாரம் முதலியன கொடுக்காது தன் தந்தையைப் பட்டினி போட்டான்.

இதை அறிந்த பிம்பசார மன்னனின் மனைவி, தன் கணவனைச் சந்திக்கச் செல்லும்போது எல்லாம் தன் மைந்தனுக்குத் தெரியாது, ஆகாரம் எடுத்துப் போய்க் கொடுத்து, பிம்பசார மன்னனைக் காப்பாற்றி வந்தாள்.

தன் தந்தை தெம்புடனும் ஆரோக்கியத்துடன் இருந்து வருவதை அறிந்து, அஜாத சத்துரு ஆத்திரம் அடைந்தான். தன் தாய்தான் உணவு எடுத்துச் சென்று கொடுத்து, மன்னனைக் காப்பாற்றி வருகிறாளோ என்ற ஐயம் அஜாத

சத்துருவுக்கு உண்டாயிற்று. ஆகவே, தன் தாயார் சென்று தன் தந்தையைக் காண்பதை, அஜாத சத்துரு தடை செய்து நிறுத்திவிட்டான்.

பிம்பசார மன்னன் தன் புதல்வன் செய்யும் கொடுமைகளை எல்லாம் பொறுத்துக்கொண்டு இருந்தான். தான் சிறையிருக்கும் கூடத்திலுள்ள சாளரத்தின் வழியாக, புத்தர் பெருமானை நாள்தோறும் தரிசிக்கும் வாய்ப்பு பிம்பசார மன்னனுக்குக் கிடைத்து வந்தது.

இது சமயம் கிருத்திரகூட மலையில் தங்கி, பெருமான் உபதேசம் செய்து வந்தார். மாலை நேரத்தில் மலையை விட்டுக் கீழே இறங்கி, பெருமான் உலாவிக்கொண்டிருப்பார்.

அப்போது பிம்பசார மன்னன் சாளரத்தின் வழியாக, பெருமானைத் தரிசித்து அக மகிழ்ந்தான். இதனால் சிறை வாசத்தின் கொடுமைகளைப் பிம்பசார மன்னனால் மறக்க முடிந்தது.

புத்தர் தரிசனத்தால் தன் தந்தை நிம்மதியுடன் இருக்கிறார் என்பது தெரிய வந்து அந்தக் கதவுகளையும் அஜாத சத்துரு அடைத்துவிட்டான்.

பிம்பசார மன்னன் ஏக்கமுற்றுத் தவித்தான். அதன் விளைவாக, சிறைக்கூடத்திலேயே அவன் இறந்து போனான்.

பதவி மோகம் ஏற்பட்டுவிட்டால், ஒருவன் சும்மாவே இருக்க மாட்டான். செய்யத் தகாத காரியங்களை எல்லாம் செய்யக் கூடிய துணிவு அவனுக்கு ஏற்பட்டுவிடும். இந்தப் போக்கு இன்று நேற்று ஏற்பட்டதன்று; பண்டை நாள் முதலே அது இருந்து வருகிறது என்பதை நாம் சரித்திரத்தில் பரக்கக் காணலாம். பதவி மோகத்தால் உந்தப்பட்ட தேவதத்தன், புத்தரைக் கொல்லப் பல வழிகளில் முயன்றான்; அஜாத சத்துரு தன் அருமைத் தந்தையையே, சிறையில் வைத்துப் பட்டினி போட்டுக் கொன்றான்.

கொல்லத் தகாதவர்களைக் கொல்வதனால் ஒருவனுக்குப் பதவி கிட்டலாம். ஆனால், உள்ளத்து அமைதியும் ஆனந்தமும் அதனால் கிட்டிவிடுமா என்ன? முடியாது என்னும்

உண்மையை அஜாத சத்துருவின் வாழ்க்கையிலிருந்து நாம் தெரிந்துகொள்ளலாம்.

தன் தந்தையைக் கொன்றுவிட்டு, அஜாத சத்துரு ஆட்சியைக் கைப்பற்றிக்கொண்டான். இருப்பினும் அவன் உள்ளத்தில் நிம்மதி இல்லை. தந்தையைக் கொன்ற நினைப்பு இடையிடையே ஊடாடி, அவன் உள்ளத்தை அறுத்தது.

அமைதியை இழந்து இருந்த அவன் ஒரு நாள் இரவு நிலா முற்றத்தில் அமர்ந்து இருந்தான். அரண்மனை வைத்தியன் ஜீவகனும் அமைச்சர்களும் அதிகாரிகளும் அஜாத் சத்துருவின் பக்கத்திலே உட்கார்ந்து இருந்தார்கள். அப்போது அஜாத சத்துரு அவர்களை நோக்கி, ''பல்வேறு முயற்சிகளில் ஈடுபட்டு, விரும்பியதைப் பெற்றபோதிலும் சில மாந்தருக்கு மனத்தில் நிம்மதி நிலவுவது இல்லை. இதற்குக் காரணம் என்ன? நமது இராஜகிருக நகரத்தைச் சுற்றி, பல்வேறு துறவிகள் வாழ்கின்றனர். இவர்களில் யாரிடம் சென்றால், மன நிம்மதி பெறுவதற்கான வழிகளை நாம் தெரிந்துகொள்ளலாம்?'' என்று கேட்டான்.

தத் தமக்குத் தெரிந்த பெருந் துறவியரைப்பற்றி, ஒவ்வொரு மந்திரியும் கூறினான். ஒருவன் ''பூரண கசியபரிடம் போகலாம்'' என்றான். மற்றொருவன், ''மற்கலி கோசலனை அணுகலாம்'' என்றான். மூன்றாமவன் அஜித கேசகம்பலன் என்னும் துறவியைப்பற்றிச் சொன்னான். நான்காமவன் பகுத கச்சாயனன் என்பவர் பெயரையும் நிகண்ட நாதபுத்திரர் பெயரையும் குறிப்பிட்டான்.

இவர்களைப்பற்றி எல்லாம் அஜாத சத்துரு கேள்விப்பட்டிருந்தான். ஆயினும் பிறருக்கு மன நிம்மதியைக் கொடுக்கும் வகையில் போதிக்கும் ஆற்றல் அவர்களுக்கு இருக்குமா என்ற ஐயம் அஜாத சத்துருவுக்கு இருந்து வந்தது.

அங்கு கூடியிருந்தவர்களில் ஜீவகன் என்னும் வைத்தியன் மட்டும் எதுவும் பேசாது மௌனமாய் இருந்தான்.

இதைக் கவனித்த அஜாத சத்துரு அவனிடம், ''ஜீவகரே! நீர் ஏன் எதுவும் சொல்லாமல் மௌனமாய் இருக்கிறீர்?'' என்று கேட்டான்.

அதற்கு அவன், ''அரசே! கௌதம புத்தரைப்பற்றித் தாங்கள் கேள்விப்படாமல் இருக்க முடியாது. மன நிம்மதியைக் கொடுப்பதற்கு அவர் போதிக்கும் நெறிகள்தான் ஏற்றவை எனலாம். எனது இல்லத்துக்கு அண்மையில் இருக்கும் மாஞ்சோலையில் சீடர் குழாத்துடன் அவர் தங்கி இருக்கிறார்'' என்று கூறினன்.

புத்தர் பெருமானைத் தரிசிக்க அஜாத சத்துரு விரும்பினன். ஆயினும் அவனுடைய தற்பெருமை அதற்கு முதலில் இடம் கொடுக்கவில்லை. தன் தந்தையைக் கொன்ற தன்னை, புத்தர் பெருமான் அங்கீகரிப்பாரா? தன் மனத்துக்கு நிம்மதி ஏற்பட வழிகாட்டுவாரா என்னும் ஐயமும் இடையிடையே அஜாத சத்துருவுக்கு உண்டாயிற்று.

எனினும் நிம்மதியை இழந்து இருந்த அவன், ஜீவகனுடன் சென்று புத்தர் பெருமானைத் தரிசிக்கத் தீர்மானித்தான்.

ஆகவே சற்று நேரத்தில் அரசனும் ஜீவகனும் சென்று, பெருமானைச் சந்திப்பதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டன.

அஜாத சத்துருவும் ஜீவகனும் மற்றும் சிலரும் மாஞ்சோலைக்குப் புறப்பட்டார்கள். இரவு நேரம்; எங்கும் இருள் பரவி இருந்தது. மாஞ்சோலையில் பிக்கு முதலியோரைக் காணேம். அஜாத சத்துரு துணுக்குற்றான். ஏதாவது ஆபத்தில் தன்னை மாட்டி வைக்கும் பொருட்டு, ஜீவகன் தன்னை மாஞ்சோலைக்கு அழைத்து வந்திருப்பானே என்று அஜாத சத்துரு பயந்து போனன். இருப்பினும் அதை வெளியே காட்டிக்கொள்ளாது ஜீவகனிடம், ''நாம் இப்பொழுது எங்கே போகிறேம்? நாம் வந்து இருக்கும் சூழ்நிலையில் அமைதி காணப்படினும், அதே சமயத்தில் அச்சமும் தோன்றுகிறதே ஏன்? நல்ல எண்ணத்துடன்தான் இங்கே என்னை நீர் அழைத்து வந்திருக்கிறீரா?'' என்று கேட்டான்.

அதற்கு ஜீவகன், ''அரசே! தீய எண்ணம் எதுவும் எனக்கு இல்லை. அதோ வெளிச்சம் தெரிகிறதே அங்குதான் புத்தர் பெருமான் இருக்கிறார். அந்தச் சாந்த மூர்த்தியை அணுகினல், உங்கள் உள்ளத்திலும் சாந்தி நிலவ உங்களுக்கு அவர் வழிகாட்டுவார்'' என்று பதில் சொன்னன்.

பிறகு இருவரும் புத்தர் இருக்கும் இடத்துக்குப் போய்ச் சேர்ந்தனர். அஜாத சத்துரு மரியாதையுடன் புத்தரை வணங்கினான். பின்னர் தனக்கு இருக்கும் சில ஐயங்களைப் பெருமானிடம் தெரிவித்து, விடை பகருமாறு வேண்டினான்.

அவன் கேட்ட கேள்விகள் அனைத்துக்கும் பெருமான் விடை பகர்ந்தார். ''பிற உயிர்களைத் தன் உயிர்போல் நேசிக்கும் பெற்றி உனக்கு ஏற்பட்டுவிடுமாயின், உள்ளத்தில் உனக்குச் சாந்தி உணர்வு உதயமாகத் தொடங்கும்'' என்று சொன்னார்.

பெருமான் சொன்னவற்றை எல்லாம் கேட்டுக்கொண்டு இருந்த அஜாத சத்துரு, ''பெருமானே! நான் கொடிய பாவங்கள் செய்தவன்; அரியணைக்கு ஆசைபட்டு என் தந்தையையே கொன்றவன். கொடியவனான என்னைத் தாங்கள் தங்கள் சீடனாக அங்கீகரிப்பீர்களா? இத்தகைய கொடிய பாவங்களை இனி நான் செய்யேன் என்று தங்களுக்கு உறுதி கூறுகிறேன்'' என்றான்.

அதற்குப் பெருமான், ''தவறு செய்தவர்கள் திருந்தி வாழ முன்வந்தால், உண்மையாகவே திருந்திய வாழ்க்கை நடத்தினால், அவர்கள் உள்ளத்தில் நிச்சயம் அமைதி ஏற்படும்'' என்று சொன்னார்.

அஜாத சத்துரு மௌனமாகக் கேட்டுக்கொண்டு இருந்தான். உபதேசங்களைக் கேட்பதில் அஜாத சத்துருவுக்கு ஆர்வம் அதிகம் இருந்தது. ஆயினும் அவற்றை வாழ்க்கையில் கடைப்பிடித்து ஒழுக அத்தனை ஆர்வம் அவனுக்கு இல்லை. பதவி ஆசை அவனை விட்டு அகலவில்லை.

உரையாடி முடிந்த பின்னர், புத்தர் பெருமானை வணங்கி, விடைபெற்றுக்கொண்டு, அஜாத சத்துரு அரண்மனை திரும்பினான். பதவி ஆசை அவனைவிட்டு அகலாவிடினும் அஜாத சத்துரு அன்று நாட்டில் நிலவிய பல்வேறு சிரமண மதங்களுக்கு ஆதரவு காட்டி வந்திருக்கிறான். அதனால்தான் பதவி ஆசை காரணமாக, தன் தந்தையைக் கொன்ற அவனுக்கு, நாட்டில் எதிர்ப்பு இல்லாது போயிற்று.

சிரமணத் தலைவர்கள் ஆன்ம ஈடேற்றத்தில் அதிக அக்

கறை கொண்டிருந்தமையால், அரசியல் விவகாரங்களில் தலையிடவோ, ஆலோசனைகள் சொல்லி அரசர்களை ஆட்டி வைக்கவோ அவர்கள் விரும்பியதாகத் தெரியவில்லை. ஆன்ம ஈடேற்றத்துக்கு அரசு ஒரு தடை என்று கருதியதனால்தான், புத்தர் பெருமான் அரசைத் துறந்தார் என்பதை முன்பு நாம் தெரிந்துகொண்டோம். அரசனைக் காட்டிலும் சிர மண மதத் தலைவருக்கு அந்தக் காலத்தில் மதிப்பு அதிகம். மக்களுடைய அன்றாட வாழ்க்கையில் அரசன் அதிகம் குறுக் கிடாதபடியால், மக்களும் அரசனுடைய அலுவல்களில் அதிக அக்கறை கொள்ளாமல் இருந்திருக்கிறார்கள். ராமன் ஆண்டாலும் சரி, ராவணன் ஆண்டாலும் சரி என்று அசட் டையாக இருந்திருக்கிறார்கள் என்ற ஒரு முடிவுக்கு நாம் வர வேண்டியது இருக்கிறது.

---

## பிரசேனஜித்

அறங்களைக் கேட்பதில் அஜாத சத்துரு அக்கறை காட்டினானுயினும், அவற்றை வாழ்க்கையில் கடைப்பிடித்து நடப்பதில் அவன் அதிக அக்கறை காட்டவில்லை. தமது ஆதிக்கத்தைப் பலப்படுத்திக்கொள்வதில் அஜாத சத்துரு அதிக நாட்டம் செலுத்தினானே தவிர வேறு இல்லை.

புத்தர் பெருமான் காலத்தில், வடக்கே பெரும்பாலும் சிறு சிறு ராஜ்யங்கள்தான் இருந்தன. சில ராஜ்யங்கள் முடிமன்னர்களால் ஆளப்பட்டன; சில ராஜ்யங்களில் செல் வாக்குள்ள பலர் ஒன்றுகூடி, ஒரு சபையை அமைத்துக் கொண்டு, நாட்டை ஜனநாயக முறையில் நிர்வகித்தார்கள்.

மகத நாட்டையும் அங்க நாட்டையும் பிம்பசார மன்னன் ஆண்டுவந்தான்.

கோசல நாட்டையும் காசி நாட்டையும் பிரசேனஜித் ஆண்டுவந்தான்.

கோசல நாட்டு மன்னன் பிரசேனஜித்தின் தமக்கை வைதேகியைப் பிம்பசார மன்னன் திருமணம் செய்துகொண் டான். இவர்களுக்குப் பிறந்தவன்தான் அஜாத சத்துரு.

வைதேகிக்குத் திருமணம் நடந்தபோது, காசி நாட்டின் சில பகுதிகளைச் சீதனமாக, கோசல நாட்டு மன்னன் வழங்கி இருந்தான். பிம்பசார மன்னன் கொலையுண்ட பிறகு, அந்தப் பிரதேசத்திலிருந்து கிடைக்கும் வருவாயை வழக்கப்படி, அஜாத சத்துருவுக்கு அனுப்ப, பிரசேனஜித் மறுத்துவிட்டான். அதனால் பிரசேனஜித்துக்கும் அவன் மருமகன் அஜாத சத்துருவுக்கும் இடையே பிணக்குகளும் சச்சரவுகளும் உண்டாயின.

ஒரு முறை பிக்கு ஒருவர் காட்டிய வழியைப் பின்பற்றி, அஜாத சத்துருவைக் கோசல நாட்டு அரசன் சிறைப்படுத்தி விட்டான்.

அதன் பின்னர் இரு அரசர்களுக்கும் இடையில் சமாதானம் ஏற்பட்டது. பிரசேனஜித்தின் புதல்வியை, அஜாத சத்துருவுக்குத் திருமணம் செய்து கொடுத்து, அதன் பயனாய் இரு அரசர்களுக்கும் இடையிடையே நிலவிவந்த பிணக்கு ஒருவாறு தீர்ந்து போயிற்று.

அந்தக் காலத்தில் குலப் பெருமையில் அரசர்கள் பெரிதும் அக்கறை கொண்டிருந்தார்கள். தாழ்ந்த குலம் எனக் கருதப்பட்ட குலத்தில் பிறந்தவர்கள், உயர்ந்த குல அரச குடும்பங்களுடன் திருமணத் தொடர்புகொள்வதில் விருப்பம் காட்டி வந்தார்கள்.

கோசல நாட்டை ஆண்ட பிரசேனஜித் பிறந்த குலம் மாதங்க குலம் என்பது. அந்தக் குலத்தைத் தாழ்ந்த ஒரு குலமாக, மற்ற அரசர்கள் கருதினார்கள். ஆகவே உயர்ந்த அரச குலங்களுடன் திருமணத் தொடர்புகொண்டு, தான் பிறந்த குலத்துக்குப் பெருமைத் தேடிக்கொள்ள விரும்பினான் பிரசேனஜித்.

புத்தர் பெருமான் பிறந்திருக்கும் சாக்கிய குலம் பெருமை பெற்ற குலம் என்பது பிரசித்தம். ஆகவே சாக்கிய குலத்தில் பிறந்திருக்கும் கன்னி ஒருத்தியைத் திருமணம் செய்து கொள்ள, கோசல நாட்டு அரசன் பிரசேனஜித் விரும்பினான். அதற்காக, சாக்கிய நாட்டுக்குத் தூதுவர்கள் சிலரை

அனுப்பி, பெண் கேட்பதற்குப் பிரசேனஜித் ஏற்பாடு செய்தான்.

பெண் கேட்கும் பொருட்டு, தூதுவர்கள் சாக்கிய நாட்டுக்குப் புறப்பட்டுச் சென்ருர்கள்.

சாக்கியர்களின் அரசு, கோசல அரசனின் கீழ் இருக்கும் ஒரு சிற்றரசு. குலத்தில் பெருமை மிக்கவர்களாய் இருப்பினும், அரசியலில் கோசல நாட்டு அரசன் பிரசேனஜித்துக்கு, சாக்கியர்கள் கட்டுப்பட்டு நடக்க வேண்டியவர்களாய் இருந்தார்கள்.

தங்கள் குலத்தில் கோசல நாட்டு அரசன் பெண்எடுக்க விரும்புவதை அறிந்ததும் சாக்கியர்கள் ஆத்திரம் அடைந்தார்கள். தங்கள் ஆத்திரம் பலிக்காது என்பது தெரிய வந்ததும், சாக்கியர்கள் ஒரு தந்திரம் செய்தார்கள்.

சாக்கிய குலத்தில் மகாநாமன் என்னும் பெயரில் ஒரு பிரமுகன் இருந்தான். அவனுக்குத் தாசி வயிற்றில் பிறந்த பெண் ஒருத்தி வளர்ந்து பெரியவளாகி, திருமணப் பருவத்தை எய்தி இருந்தாள்.

இவளும் இவளுடைய தந்தை மகாநாமனும் ஒரே பாத்திரத்தில் சாப்பிடுவதைப் பிரசேனஜித்தின் தூதுவர்கள் பார்த்தார்கள். இதனுல் இவள் உண்மையான க்ஷத்திரிய குலத்தில் பிறந்தவள் என்ற முடிவுக்கு வந்து, அவளைக் கோசல நாட்டுக்கு அழைத்துப் போய், தங்கள் அரசன் பிரஜேனசித்துக்குத் திருமணம் செய்து வைத்தார்கள்.

பிரசேனஜித் அவளைப் பட்டமகிஷி ஆக்கினுன். அவளுக்கு ஒரு ஆண் குழந்தை பிறந்தது. விடுடபன் என்று பெயர் வைத்து, அந்தக் குழந்தையை வளர்த்தார்கள்.

விடுடபன் வாலிபப் பருவத்தை அடைந்தான். கோசல நாட்டு இளவரசன் என்னும் பெருமையோடு அவன் வாழ்ந்தான்.

ஒரு முறை விடுடபன் சாக்கிய நாட்டுக்குச் சென்ற போது, தக்கபடி மரியாதை செய்து, சாக்கியர்கள் விடுடபனை உபசரிக்கவில்லை.

காரணம் என்ன என்பதை அறிய முயன்றபோது, தன்

தாய் சாக்கியப் பிரமுகன் ஒருவனுடைய தாசி மகள் என்பதும், ஏமாற்றித் தம் தந்தைக்கு அவளைத் திருமணம் செய்து வைத்துவிட்டார்கள் என்பதும் விடுடபனுக்குத் தெரிய வந்தது.

இதனுல் விடுடபன் ஆத்திரம் அடைந்தான். இதற்காகச் சாக்கியர்களைத் தக்கபடி தண்டிக்கக் கருதினுன்.

விடுடபன் மனக்கொதிப்புடன் இருந்து வந்த சமயம், மற்ருெரு செய்தியும் விடுடபனுக்குக் கிடைத்தது. சாக்கிய நாட்டுக்குத் தான் சென்று திரும்பிய பின்னர், தான் அமர்ந்த ஆசனத்தைச் சாக்கியர்கள் தண்ணீர்விட்டு அலம்பினுர்கள் என்னும் செய்தி எட்டிற்று. இதனுல் விடுடபனுக்கு இருந்த ஆத்திரம் பன்மடங்கு அதிகம் ஆயிற்று. சமய சந்தர்ப்பத்தை எதிர்பார்த்து விடுடபன் காத்திருந்தான்.

இந்த நிலையில் கோசல நாட்டு அரசன் பிரசேனஜித், புத்தர் பெருமானைத் தரிசிக்கும் பொருட்டு, சாக்கியர்களின் நாட்டுக்குப் போயிருந்தான். அப்போது அவனுக்கு வயது எண்பது நடந்துகொண்டு இருந்தது.

இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கொண்டு, பிரசேனஜித்தின் புதல்வன் விடுடபன் கோசல நாட்டைக் கைப்பற்றிக்கொண்டான்.

முதிய பிரசேனஜித்தால், தன் புதல்வனை எதிர்த்து ஒன்றும் செய்ய முடியவில்லை. தன் மாப்பிள்ளை அஜாத சத்துருவின் உதவியைப் பெற்று, நாட்டைத் திரும்பப் பெறலாம் என்று கருதி, இராஜகிருகத்தை நோக்கிப் புறப் பட்டான் பிரசேனஜித்.

அவனுல் இராஜகிருகத்துக்குப் போக முடியவில்லை. ஏக்கத்தின் காரணமாகவும் முதுமையின் காரணமாகவும், வழியில், ஒரு தரும சத்திரத்தில், அவன் இறந்து போனுன்.

## சாக்கிய குலத்தின் அழிவு

குலச் செருக்கு மிகுதியாகிவிடுமாயின், அந்தக் குலம் அழிவிலிருந்து தப்ப முடியாது என்பதற்கு, சாக்கிய

குலத்துக்கு நேர்ந்த அழிவு சரித்திரத்தில் ஒரு சான்ருக விளங்குகிறது.

குலச் செருக்கினுல் தன்னை இழிவாக நடத்திய, தன் தந்தை பிரசேனஜித்தை ஏமாற்றிய சாக்கியர்களை அழிக்க விடுடபன் முயன்ருன். தன் தந்தை காலமான பின்னர் முழு மூச்சுடன் காரியத்தில் இறங்கி, சாக்கியர்களை அழிப்பதற்கான ஏற்பாடுகளை விடுடபன் செய்தான்.

இதை அறிந்த புத்தர் விடுடபனிடம் சென்று, சாக்கிய குலத்தை அழிக்க முயல வேண்டாம் என்று சொல்லித் தடுத்தார்.

விடுடபனும் சம்மதித்துப் படை-எடுப்பை நிறுத்திக் கொண்டான்.

இருப்பினும் விடுடபனின் ஆத்திரம் அடங்கவில்லை. சில நாட்களுக்குப் பின்னர் இரண்டாவது முறையாக, சாக்கியர்கள்மீது படை எடுக்க அவன் ஏற்பாடு செய்தான்.

இப்போதும் சென்று, புத்தர் பெருமான் விடுடபனைத் தடுத்தார். மூன்ருவது முறையாக அவன் படை எடுத்த போதும் பெருமான் அவனைத் தடுத்தார்.

ஆனுல் நான்காவது முறையாக, விடுடபன் படை எடுத்து, சாக்கியர்களைத் தாக்க ஏற்பாடு செய்துகொண்டு இருந்தபோது புத்தர் பெருமான் சும்மா இருந்துவிட்டார். தாங்கள் செய்துள்ள கருமங்களின் விளைவுகளிலிருந்து சாக்கியர்களைத் தப்புவிப்பது கடினம் என்று பெருமான் கருதினுர் போலும். ஆகவே, அவர் இதுபற்றி மேலும் விடுடபனிடம் பேசுவதை நிறுத்திக்கொண்டார்.

குலச் செருக்கு மிகுந்துவிட்டால், எத்தகைய அக்கிரமத்தைச் செய்யவும், செருக்குடையோர் தயங்க மாட்டார்கள் என்று தெரிகிறது.

சாக்கியர்களுக்கும் கோலியர்களுக்கும் இடையே ஆற்று நீர் சம்பந்தமாகத் தகராறு ஏற்பட்டபோது, இரு தரப்பினரும் போருக்கு ஆயத்தமாய் இருந்தார்கள்.

அப்போது புத்தர் பெருமான் குறுக்கிட்டு, இரு தரப்பினருக்கும் சமாதானம் செய்து வைத்தார்.

ஆயினும் சாக்கியர்கள் சும்மா இருக்கச் சம்மதிக்க வில்லை. தகராறு உள்ள ஆற்று நீரில் சாக்கியர்கள் நஞ்சைக் கலந்தார்கள். அதனால் ஆயிரக் கணக்கானோர் இறந்து போயினர்.

இந்தக் கருமத்தின் பயனையே சாக்கியர்கள் அனுபவிக்கப் போகிறார்கள் என்று கருதிப் பெருமான் சும்மா இருந்து விட்டார்.

நான்காவது முறையாக, விடுடபன் சாக்கியர்கள்மீது படை எடுத்துச் சென்று, ஆண், பெண், குழந்தைகள் அத்தனை பேரையும் ஈவு இரக்கமின்றி வதம் செய்தான். செருக்குற்று, தருக்கி இருந்த சாக்கியர் குலம் இப்படி அழிந்து போயிற்று.

* * *

புத்தர் பெருமான் காலத்தில், வட. இந்தியாவில் மொத்தம் பதினாறு நாடுகள் இருந்தன. அவற்றில் சில நாடுகள் குடியாட்சியின் கீழ் இருந்து வந்தன. சில நாடுகள் முடியாட்சியின் கீழ் இருந்து வந்தன. குடியாட்சி நாடுகளில் வஜ்ஜியர்களின் குடியரசு மகோன்னத நிலையில் இருந்தது. வஜ்ஜியர்களை லிச்சவிகள் என்றும், விரிஜியர்கள் என்றும் கூறுவார்கள்.

கல்வி அறிவிலும் செல்வச் செழிப்பிலும், நாகரிக வாழ் விலும் ஒற்றுமையிலும் லிச்சவிகள் சிறந்து விளங்கினார்கள்.

லிச்சவிகள் நாள்தோறும் கூட்டம் கூடிச் சந்தித்து, உரையாடி, ஒற்றுமையுடன் நாட்டு நிர்வாகத்தைக்கவனித்து வந்தார்கள். இவர்களின் தலைநகர் வைசாலி.

வைசாலி நகரில் பல்வேறு சமயத்தைச் சார்ந்தவர்கள் வாழ்ந்தார்கள். புத்தர் பெருமானும் அடிக்கடி வைசாலி நகருக்குச் சென்று, தருமப் பிரச்சாரம் செய்து இருக்கிறார். லிச்சவிகளின் வாழ்க்கையையும், அவர்களிடம் நிலவும் ஒற்றுமையையும் வியந்து பாராட்டி இருக்கிறார். "பிக்குகளே! இதுவரை தேவர்களைப் பாராதவர்கள், லிச்சவிகளைப் பார்க்கட்டும்'' என்று பெருமான் கூறியிருப்பதிலிருந்து

லிச்சவிகளின் பெருமையை நாம் அறியலாம். பிக்கு சங்கத்தின் அமைப்பு விதிகளில் பெரும்பாலானவை, லிச்சவிகளின் ஆட்சிக் குழு அமைப்பு விதிகளிலிருந்து எடுத்துக்கொள்ளப் பட்டவை என்று பல ஆராய்ச்சியாளர்கள் குறிப்பிட்டு இருக்கிறார்கள். சட்டங்களை இயற்றுவதில் மட்டும் லிச்சவிகள் தீவிரமாய் இருக்கவில்லை. அவற்றை வாழ்க்கையில் கடைப் பிடிப்பதிலும் அவர்கள் விழிப்புடனும் உறுதியோடும் இருந்து வந்தார்கள். அதனால் அந்த நாட்டில் குற்றங்களும் தவறு களும் மிக மிக அரிதாகவே நேர்ந்தன என்றும் குறிப்பிட்டு இருக்கிறார்கள்.

அந்தக் காலத்தில் குடியரசுகளும் முடியரசுகளும் அக்கம் பக்கத்தில் நிலவியபோதிலும், குடியரசுகளைக் கவிழ்க்க, முடி மன்னர்கள் பெரிதும் முயன்று இருக்கிறார்கள். விடுடபன் சாக்கியர்களின் குடியரசை அழித்தான் என்பதை முன்பு பார்த்தோம். இப்பொழுது வஜ்ஜியர்களின் முடியரசை அழிக்க அஜாத சத்துரு முயன்றான். தன் முயற்சி வெற்றி அடையுமா என்பதை அறிந்து வரும் பொருட்டு வஸ்ஸா காரன் என்னும் பிராமணன் ஒருவனைப் புத்தர் பெருமானிடம் அனுப்பினான் அஜாத சத்துரு.

இது சமயம் புத்தர் பெருமான் கிருத்திரகூட மலையில் பிக்குகளுடன் தங்கி இருந்தார்.

வஸ்ஸாகாரன் கிருத்திரகூட மலையை அடைந்து, பெரு மானைச் சந்தித்து, முறைப்படி வணங்கிவிட்டு, அடக்கமாக ஓர் இடத்தில் அமர்ந்தான். பிறகு அஜாத சத்துரு சொல்லி யனுப்பிய செய்தியைப் பெருமானிடம் தெரிவித்தான்.

ஆனந்தன் பெருமானுக்குப் பக்கத்தில் நின்றவாறு விசிறிக்கொண்டிருந்தான். வஸ்ஸாகாரன் தெரிவித்த செய்திக்கு, நேரடியாகப் பதில் தெரிவிக்கப் பெருமான் விரும்பவில்லை போலும். ஆகவே அவர் ஆனந்தனை நோக்கி,

''ஆனந்தா! வஜ்ஜியர்கள் அடிக்கடி கூட்டம் கூடி, கலந்து ஆலோசித்து விவாதித்து ஒரு முடிவு எடுப்ப தாகக் கேள்விப்பட்டு இருக்கிறாயா?'' என்று வினவினார்.

அதற்கு ஆனந்தன், ''ஆம், பெருமானே! வஜ்ஜியர்கள் அடிக்கடி கூட்டம் கூடி முடிவு எடுப்பதாகக் கேள்விப்படுகிறேன்'' என்று பதில் சொன்னான்.

(2) ''வஜ்ஜியர்கள் ஒற்றுமையாகக் காரியங்களைக் கவனிக்கிறார்களா? ஒரே சமயத்தில் ஒன்று கூடி, காரியங்களில் ஈடுபடுகிறார்களா?'' என்று கேட்டார்.

''ஆம். அவர்கள் ஒற்றுமையாக ஒன்று சேர்ந்து காரியங்களைக் கவனிப்பதாகக் கேள்விப்படுகிறேன்'' என்று பதில் சொன்னான் ஆனந்தன்.

(3) விதிக்காத சட்டத்தை விதித்திருப்பதாக வஜ்ஜியர்கள் கூறுவது உண்டா? விதிக்கப்பட்ட சட்டங்களை மீறாமல் வஜ்ஜியர்கள் நிறைவேற்றுவது உண்டா? சட்டங்களுக்கு இணக்கமாக அவர்களின் நடத்தைகள் இருக்கின்றனவா?'' என்று கேட்டார் பெருமான்.

''ஆம் பெருமானே! சட்டங்களை மீறாமல் வஜ்ஜியர்கள் நடப்பதாக நான் கேள்விப்படுகிறேன்'' என்று பதில் சொன்னான் ஆனந்தன்.

(4) ''ஆனந்தா! அரசியலில் அனுபவம் மிகுந்த முதியவர்கள் கூறும் ஆலோசனைகளைக் கேட்டு, அவற்றின்படி வஜ்ஜியர்கள் நடக்கிறார்களா?'' என்று பெருமான் வினவினார்.

''ஆம், பெருமானே! முதியோர்களின் யோசனைபடி வஜ்ஜியர்கள் நடப்பதாக நான் கேள்விப்படுகிறேன்'' என்று ஆனந்தன் பதில் சொன்னான்.

(5) ''பெண்களை - மணமானவளாயினும் சரி, ஆகாதவளாயினும் சரி, —கட்டாயத்துக்கு உட்படுத்தாமல் மதிப்புடன் வஜ்ஜியர்கள் நடத்துகிறார்களா?'' என்று கேட்டார் பெருமான்.

அதற்கு ஆனந்தன், ''ஆம். பெருமானே! வஜ்ஜியர்கள் பெண்களை மதிப்புடன் நடத்துகிறார்கள். கட்டாயப்படுத்துவது இல்லை என்று கேள்விப்படுகிறேன்'' என்று பதில் சொன்னான்.

(6) ''ஆனந்தா! கோயில்களைத் தக்கபடி வஜ்ஜியர்கள் பாதுகாக்கிறார்களா?'' என்று கேட்டார் பெருமான்.

''ஆம் பெருமானே! தக்கபடி பாதுகாப்பதாகக் கேள்வி'' என்று சொன்னான் ஆனந்தன்.

(7) ஆனந்தா! தங்கள் நாட்டுக்கு வரும் தவ முனிவர்களுக்கு, தக்க ஆதரவு காட்டி வஜ்ஜியர்கள் போற்றுகிறார்களா?'' என்று கேட்டார் பெருமான்.

''ஆம், பெருமானே! தக்க ஆதரவு தந்து, தவ முனிவர்களை, வஜ்ஜியர்கள் போற்றுவதாக நான் கேள்விப் படுகிறேன்'' என்று ஆனந்தன் தெரிவித்தான்.

இதன் பின்னர் பெருமான், அஜாத சத்துரு அனுப்பிய வஜ்ஜாகாரனை நோக்கி, ''பிராம்மணரே! இந்த ஏழு நியமங் களை வஜ்ஜியர்கள் கடைப்பிடித்து ஒழுகும்வரை, அவர் களுக்கு எவ்விதத் தாழ்வும் நேராது'' என்று கூறினார்.

உடனே வஜ்ஜாகாரன், ''ஆம், உண்மைதான் பெருமானே! இந்த ஏழு நியமங்களில் ஒன்றைக் கடைப்பிடித்து ஒழுகினாலும் அவர்களை யாராலும் அசைக்க முடியாது'' என்று தெரிவித்துவிட்டு, விடைபெற்றுக்கொண்டு அஜாத சத்துருவிடம் திரும்பினான்.

## பிக்குகளுக்கு உபதேசம்

அஜாத சத்துருவின் தூதன் திரும்பிய பின், புத்தர் இராஜகிருகத்திலேயே தங்கி இருந்தார்; அப்போது ஆனந்தரிடம், ''ஆனந்தா! நீ சென்று, சுற்றுப் புறத்தில் மடங்களில் வாழும் பிக்குகளை உபதேச மண்டபத்துக்கு வந்து கூடுமாறு சொல்'' என்று சொன்னார்.

அதன்படி ஆனந்தன் ஏற்பாடு செய்தார். பிக்குகள் வந்து உபதேச மண்டபத்தில் அமர்ந்து இருந்தார்கள். பதினெட்டு மடங்களைச் சேர்ந்த பிக்குகள் கூடி இருக்கும் கூட்டத்தில் பெருமான் அடியில் வருமாறு உபதேசம் செய்தார்.

''அன்பார்ந்த பிக்குகளே! நீங்கள் ஒற்றுமையாக இருக்க வேண்டும். அடிக்கடி கூட்டம் கூடி, கலந்து பேசி முடிவு எடுக்க வேண்டும்.

''முக்கிய விஷயங்கள்பற்றி, கூட்டத்தில் முடிவு எடுக்க வேண்டும். எடுத்த முடிவுகளை நேர்மையோடு நிறைவேற்ற வேண்டும்.

''ஏற்கப்படாத நியதிகளைப் பிறர்மீது சுமத்தக் கூடாது; ஏற்கப்பட்ட நியதிகளைப் புறக்கணித்துத் தள்ளுதல் கூடாது.

''மேலோரை மதித்து நடக்க வேண்டும் அவர்களின் கட்டளைகளைத் தவறாது நிறைவேற்ற வேண்டும்.

''ஆசைகளை அடக்கிக் கட்டுப்படுத்துங்கள். குறிப்பாக, காம இச்சையை அடக்கிக் கட்டுப்படுத்துவதில் கவனம் செலுத்துங்கள். இல்லையேல் கொடிய அடிமைத் தனத்துக்கு நீங்கள் ஆளாக நேரும்.

''தனிமையில் அமர்ந்து தியானம் செய்யுங்கள். சட்ட திட்டங்களையும் விதிகளையும் தவறாது கடைப் பிடியுங்கள்.

''சமயப் பற்றுள்ளவர்களை, உங்கள் மடங்களுக்கு அழைத்து உபசரியுங்கள். அவர்களுடன் உரையாடி விஷயங்களைத் தெரிந்துகொள்ளுங்கள்.

''இன்பத்தில் நாட்டம்கொண்டு எதையும் செய்யாதீர்கள்; பேசாதீர்கள். சிப்பந்திகள் நிறைய இருப்பதாகச் சொல்லிப் பெருமைப்படாதீர்கள்.

''தீயோர் சகவாசத்தை விலக்கித் தள்ளுங்கள். அறிவையும் ஞானத்தையும் தேடுவதில் கவனம் செலுத்துங்கள்.

''இவற்றைக் கடைப்பிடித்து ஒழுகினால் பிக்குகள் மேன்மையடைய முடியும்.''

இவ்வாறு பெருமான் போதனை செய்தார்.

இவற்றோடுகூட இன்னும் பல உபதேசங்களையும் புத்தர் பெருமான் செய்தார்.

இதன் பின்னர், பிக்குகளை அழைத்துக்கொண்டு, அம்பல தீகா என்னும் ஊருக்குச் சென்றார். பிறகு, அங்கிருந்து நாலந்தை என்னும் நகருக்குப் போனார்.

நாலந்தை என்பது புத்தர் பெருமான் சென்ற காலத்தில் சிறிய ஒரு கிராமமாக இருந்திருக்கிறது. பிற்காலத்தில் தான், - அதாவது புத்தர் பெருமான் மகா பரிநிர்வாணம் அடைந்து ஆறு நூறு ஆண்டுகள் கடந்த பின்னர்தான் — இந்தக் கிராமம் பௌத்த சமயத்தில், ஒரு மகோன்னதமான இடத்தைப் பெற்றிருக்கிறது.

பிற்காலத்தில் நாலந்தை என்னும் இடத்தில் மிகப் பெரியதொரு பல்கலைக் கழகம் தோன்றி இருக்கிறது. நாட்டின் நாற் திசைகளிலிருந்தும், உலகின் பல்வேறு பகுதிகளிலிருந்தும், மாணவர்கள் நாலந்தை பல்கலைக் கழகத்துக்கு வந்து கல்வி பயின்று இருக்கிறார்கள். தருமபாலர் என்பவர் காஞ்சிபுரத்தைச் சேர்ந்த தமிழர். இவர் நாலந்தையில் கல்வி பயின்றதுடன், பிற்காலத்தில் நாலந்தையின் தலைமை ஆசிரியராகத் திகழ்ந்து இருக்கிறார். பின்னர் சீனம் முதலிய நாடுகளுக்குச் சென்று பௌத்த சமயத்தைப் பரப்பியவரும் இவரே. திந்நாகர் என்னும் பிக்குவும் காஞ்சிபுரத்திலிருந்து, நாலந்தைக்குச் சென்று அங்கு கல்வி பயின்றவர்.

ஹியூங் சியாங், இத்சிங் என்னும் சீன யாத்திரீகர்கள் இருவரும் நாலந்தையில் தங்கி, கல்வி பயின்று இருக்கிறார்கள். ஹியூங் சியாங் எழுதின குறிப்புகளிலிருந்துதான் நாலந்தை பல்கலைக் கழகத்தின் பெருமைகளை நாம் தெரிந்து கொள்ள முடிகிறது.

நாலந்தை பல்கலைக் கழகத்தில், பௌத்த சமயத்தை மட்டும் மாணவர்களுக்குக் கற்பிக்க வில்லை. இலக்கியம், இலக்கணம், தர்க்கம், தரிசனம், இதர மதங்கள், மருத்துவம், இதர கலைகள் ஆகியவற்றை எல்லாம் மாணவர்களுக்குக் கற்பித்து இருக்கிறார்கள்.

ஒரே சமயத்தில் நாலாயிரம் மாணவர்கள் தங்கி, கல்வி பயில்வதற்கு வசதிகள் இருந்து இருக்கின்றன. அரசர்களும் வள்ளல்களும் வழங்கிய நன்கொடையைக் கொண்டே, மாணவர்களுக்குக் கல்வி வசதி, விடுதி வசதி, உணவு வசதி முதலிய வசதிகள் செய்து கொடுத்து, பல்கலைக் கழகத்தைச் சிறப்புடன் நடத்தி இருக்கிறார்கள். உடல் வளர்ச்சி, அறிவு வளர்ச்சி, ஒழுக்கம், பொறுப்பு உணர்ச்சி ஆகியவை மாணவர்களிடையே செம்மையுடன் வளர்ச்சியடையத் தகுந்த ஏற்பாடுகள் அங்கு செய்யப்பட்டன. தகுதியுள்ள மாணவர்களைத் தவிர்த்து, மற்றவர்களைப் பல்கலைக் கழகத்தில் சேர்ப்பது தவிர்க்கப்பட்டது. படிக்க வரும் மாணவர்களின் ஆர்வம், ஆற்றல், அறிவு, கல்வி இவற்றை நன்கு பரிசீலித்த பின்னரே பல்கலைக் கழகத்தில் சேர்த்துக் கொள்ளப் பெறுவர். சேர வரும் மாணவர்களை முதலில் வாயில்காப்போர் பரிசீலிப்பர்; அதில் தேர்ச்சி பெற்ற மாணவர்களைப் பல்கலைக் கழகத்துக்குள் அனுமதிப்பர்; அங்கே பேராசிரியர்கள், மீண்டும் மாணவர்களைப் பரீட்சிப்பர். இந்தப் பரிட்சையில் தேரிய மாணவர்கள், பிறகு, பல்கலைக் கழகத்தில் சேர்த்துக்கொள்ளப்படுவர்.

நாலந்தை பல்கலைக் கழகத்தில் மகாயான பௌத்த சம்பிரதாயம் போதிக்கப்பட்டதாகத் தெரிகிறது.

மற்ற மதங்களைப் போலவே, பௌத்த சமயத்திலே முக்கியமான இரு பிரிவுகள் உண்டு. ஒன்றுக்கு மகாயானம் என்றும், மற்றொன்றுக்கு ஹினயானம் என்றும் பெயர். இந்த இரு பிரிவுகளையும்பற்றி, பின்னர் கவனிக்கலாம்.

நாலந்தை சிறு கிராமமாக இருந்தபோதுதான், புத்தர் பெருமான் தம் சீடர்களுடன் அங்கு விஜயம் செய்தார்.

சில காலம் நாலந்தையில் தங்கிய பின்னர், பிக்குகளையும் அழைத்துக்கொண்டு பெருமான் பாடலிக் கிராமத்துக்குச் சென்றார்.

இந்தக் கிராமம்தான் பெரிதாக வளர்ந்து, பிற்காலத்தில் பாடலிபுத்திரமாக விளங்கிற்று. அதன் சிறப்புக்கும் மேன்மைக்கும் காரணமாக இருந்தவன் மகத நாட்டு

மன்னன் அஜாத சத்துரு ஆவான். இப்பொழுது இந்த நகரம் பாட்னு எனும் பெயரில் பீகார் மாகாணத்தின் தலை நகராக இருக்கிறது.

பாடலிக் கிராமத்தில் சில நாட்கள் தங்கி உபதேசம் செய்த பின்னர், சீடர்களை அழைத்துக்கொண்டு, பெருமான் கங்கைக் கரையை அடைந்தார். அங்கே ஆற்றைக் கடக்க, தெப்பங்களையும் படகுகளையும் மற்றவர்கள் தயார் செய்து கொண்டார்கள். பெருமானே தமது இருத்தி ஆற்றலினால் அதன் மறு கரையை அடைந்தார்.

இதன் பின்னர் சில சிற்றூர்களில் தங்கி, பிரச்சாரம் செய்துகொண்டே சென்று, வைசாலி நகரை அடைந்தார்.

## அம்பாபலி

**வை**சாலி நகரில் பெருமான் தங்கிய சமயம், பிரபல மான கணிகை ஒருத்தி அந்த நகரில் வசித்தாள். அவள் பெயர் அம்பாபலி. இவளுக்குச் சொந்தமான மாஞ்சோலை யில்தான் பெருமான் வந்து, தமது சீடர் குழாத்துடன் தங்கி இருந்தார்.

பிறந்தவுடனேயே பெற்றோரால் கைவிடப்பட்டவள் அம்பாபலி. பிறந்ததுமே அவளை ஒரு மாஞ்சோலையில் போட்டுவிட்டனர் பெற்றோர்.

மாஞ்சோலையில் கிடந்த குழந்தையை வைசாலி நகரத் துக் கணிகை ஒருத்தி எடுத்து வளர்த்தாள். வளர்ந்து, பருவம் அடைந்து, கண்டோர் மனத்தைக் கொள்ளைகொள்ளும் சட்டழகியாக அம்பாபலி காட்சி அளித்தாள். போட்டி போட்டுக்கொண்டு, லிச்சவிப் பிரபுக்கள், அம்பாபலியைத் திருமணம் செய்துகொள்ள ஆசைப்பட்டனர். போட்டி கடுமையாக இருந்ததால், யாரை மணப்பது என்பது பெரும் பிரச்சினையாகிவிட்டது.

ஆகவே யாரையும் திருமணம் செய்துகொள்ளாமல், தன் வளர்ப்புத் தாயைப் போலவே, அம்பாபலி கணிகைத் தொழிலில் ஈடுபட்டாள்.

அம்பாபலியின் மாய வலையில் வீழ்ந்து, அவளுக்கு லிச்சவிப் பிரபுக்கள் பொருளை வாரி வாரிக் கொடுத்தார்கள். அழகில் மட்டும் அன்றி, பெண்மைப் பண்புகளிலும் அம்பாபலி மேம்பட்டு விளங்கியபடியால், எத்தகைய ஆடவனும் அவளிடம் சொக்காமல் இருக்க முடியாது. இரண்டு வார்த்தைகளாவது அவளுடன் பேச வேண்டும் என்னும் ஆசை எவனுக்கும் ஏற்படாமல் போகாது.

செல்வத்திலும் அழகிலும் குணத்திலும் மேம்பட்டு விளங்கியதால், அம்பாபலிக்கு மதிப்பும் புகழும் மிகுதியாய் இருந்தன.

இருந்தும் நிம்மதி இன்றி, அம்பாபலி பெரிதும் அவதிப் பட்டாள். தனது இந்த மனநிலையைத் தன் பணிப்பெண் ஒருத்தியிடம் அம்பாபலி வெளிப்படையாகவே கூறினாள். ''பெண்ணே! என் மனம் நிம்மதி இழந்து தவிக்கிறது. எதனால் இந்தத் தவிப்பு எனக்கு ஏற்படுகிறது என்பதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை'' என்று சொன்னாள்.

தன் எஜமானி இப்படிக் கூறியதும் அந்தப் பணிப்பெண் அதிசயித்துப் போனாள். ''என்ன அம்மா! இப்படிச் சொல்கிறீர்கள்? தங்களுக்கு என்ன குறைவு. அழகு இருக்கிறது. பணம் இருக்கிறது. தாங்கள் என்ன சொன்னாலும் செய்து தர, லிச்சவிப் பிரமுகர்கள் காத்துக் கிடக்கிறார்கள். ஈடும் எடுப்பும் இல்லாத அழகுடன் நீங்கள் ஜொலிக்கிறீர்கள். இருந்தும் உங்கள் உள்ளம் அமைதி இல்லாது தவிக்கக் காரணம் என்ன? ஒரு வேளை குழந்தை இல்லாததுதான், இந்தத் தவிப்புக்குக் காரணமாய் இருக்குமோ?'' என்று சொன்னாள்.

''இவை எல்லாம் காரணம் இல்லை. இவற்றைக் காட்டிலும் மேலான ஏதோ ஒன்றை அடைய எனது உள்ளம் ஏங்கித் தவிக்கிறது. அது என்ன என்பதுதான் எனக்கும் புரியவில்லை'' என்று கூறினாள் அம்பாபலி.

இது சமயம் வேறு ஒரு பணிப்பெண், அம்பாபலிக்குக் காலை ஆகாரம் எடுத்துவந்தாள். வந்தவள் அம்பாபலியிடம், ''அம்மா! கௌதம புத்தர் தம் சீடர்களுடன் நமது நகருக்கு

வந்திருக்கிறார். தங்களுக்குச் சொந்தமான மாஞ்சோலையில் அவர் தங்கி இருக்கிறார்'' என்று கூறினாள்.

இதைக் கேட்டதும் அம்பாபலி புளகாங்கிதம் அடைந்தாள். ''பெண்ணே! எனது தேரைச் சித்தம் செய்து உடனே கொண்டுவரச் சொல். நான் புறப்பட்டுச் சென்று புத்தர் பெருமானைத் தரிசிக்க விரும்புகிறேன்'' என்று கூறினாள்.

தேர் சித்தமானதும் தமது பணிப்பெண்களில் சிலரைத் தம்முடன் அழைத்துக்கொண்டு, தேரில் ஏறி, ஆம்ர வனத்துக்கு — அதாவது மாஞ்சோலைக்கு — அம்பாபலி புறப்பட்டாள்.

இது சமயம் புத்தர் பெருமான் அம்பாபலிக்குச் சொந்தமான ஆம்ர வனத்தில் பிக்குகளுடன் தங்கி இருந்தார். பரிபக்குவம் அடைந்தவர்களின் மனத்தைக்கூடக் கவரவல்ல பேரழகி ஒருத்தி சிறிது நேரத்தில், தம்மிடம் வரப்போவதைப் பெருமான் ஞான திருஷ்டியால் அறிந்தார். அவள் அழகைப் பார்த்ததும் பிக்குகளின் உள்ளம் கலங்கிவிடக் கூடாது என்பதற்காக, அடியில் வரும் உபதேசத்தைப் பெருமான் பிக்குகளுக்குச் செய்துகொண்டு இருந்தார்.

> ''பிக்குகளே! புலன்களை அடக்கிக் கட்டுப்படுத்துவதாலும் மனத்தை அடக்கிக் கட்டுப்படுத்துவதாலுமே எந்தப் பிக்குவும் மேன்மையடைய முடியும். ஆகவே, கவனத்துடன் இருந்து, புலன்களையும் மனத்தையும் கட்டுப்படுத்திக்கொள்ளுங்கள். உலக வாழ்க்கையில் மிகுந்த பற்றுதல் கொள்ளாமலும், அதைப் புறக்கணித்து ஒதுக்கித் தள்ளாமலும் வாழப் பழகிக்கொள்ளுங்கள்'' என்று கூறினார்.

''மனத்தையும் உடலையும் எவ்வாறு கட்டுப்படுத்துவது?'' என்ற கேள்வி அங்கே கூடியிருக்கும் ஒவ்வொரு பிக்குவின் உள்ளத்திலும் உதித்தது. அதற்கு விடை பகரும் பாணியில், புத்தர் பெருமான் அடியில் வருமாறு உபதேசித்தார்.

> ''பிக்குகளே! விழிப்புடன் இருந்தால் மனத்தைக் கட்டுப்படுத்திவிடலாம். எதைச் செய்தாலும் அதில் மனத்தைச் செலுத்தி ஈடுபாட்டுடன் செய்ய வேண்டும்.

வெளியே போனாலும் சரி, வீட்டுக்குள் நுழைந்தாலும் சரி, கையை நீட்டினாலும் சரி, அல்லது மடக்கினாலும் சரி, மென்று சாப்பிடும்போதும் சரி, அல்லது விழுங்கும் போதும் சரி, முன்னே நோக்கும்போதும் சரி, அல்லது பின்னே நோக்கும்போதும் சரி, விழிப்புடன் இருந்து கொண்டு செய்தால், மன அடக்கம் ஏற்பட்டுவிடும்'' என்று உபதேசித்தார்.

''முயன்று அடக்கினாலும், மனம் அலையுண்டு திரிந்தால் என் செய்வது?'' என்று பிக்கு ஒருவர் கேட்டார்.

அதற்குப் பெருமான்,

''மகனே! எண்ணங்களையும் உணர்ச்சிகளையும், நிர்ப்பந்தப்படுத்துவதனால், இலக்கை எட்டிப் பிடித்து விட முடியாது. இடைவிடாது மேற்கொள்ளும் பயிற்சி களின் மூலமே தமது எண்ணங்களையும் உணர்ச்சிகளை களையும் ஒருவன் கட்டுப்படுத்த முடியும். ஆசையூட்டும் சொற்களையும் காட்சிகளையும் தவிர்க்க வேண்டும். காலம் கடந்த நேரங்களில் உணவு உட்கொள்வதைத் தவிர்க்க வேண்டும். தருமத்தைப்பற்றிய நினைப்பு எப் பொழுதும் நெஞ்சில் நிறைந்து இருக்க வேண்டும். தியா னம் செய்வதன் மூலம் மனத்தை வசப்படுத்த வேண் டும். இவ்வாறு பயின்று வந்தால், மனத்தை அடக்கிக் கட்டுப்படுத்துவது சுலபமாகும். மந்திர பலத்தால் மனத்தைக் கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவர முடியாது. பயிற்சியின் மூலமே மனத்தை அடக்க முடியும்'' என்று பெருமான் விளக்கிச் சொன்னார்.

அதை ஒரு உதாரணத்தின் மூலம் பெருமான் விளக்கினார்.

''நேற்று நாம் இந்த மாஞ்சோலைக்கு வந்த சமயம், உழவன் ஒருவன் நிலத்தைச் சுறுசுறுப்புடன் உழுததை நீங்கள் பார்த்தீர்கள். தக்கப்படி உழுது நிலத்தைப் பண்படுத்திவிட்டு, சாயுங் காலம் ஆனதும் வீட்டுக்கு அவன் போய்விட்டான். இன்று திரும்பி வந்து, விதை களை விதைத்துக்கொண்டிருக்கிறான்: நாளை வந்து போதிய அளவு தண்ணீர் பாய்ச்சிவிட்டு, திரும்பிப் போய்

விடுவான். மந்திர பலத்தால் பயிரை உற்பத்தி செய்வது சாத்திய மன்று. 'நேற்று உழுதேன்; இன்று விதை விதைத்து இருக்கிறேன். விதைகளே! நாளைக்கு முளைத்து நீங்கள் கதிர்களாகிப் பக்குவப்பட்டுவிட வேண்டும்' என்று கூறினால், விதைகள் முளைத்துக் கதிர்களாகி விடுமா? ஆகாது என்பது அனைவருக்கும் தெரியும். அதைப்போலத்தான் மனத்தைப் பக்குவப்படுத்துவதும்'' என்று கூறினார் பெருமான்.

இத்தகைய உபதேசம் நடைபெற்ற சமயம், அம்பாபலி தன் பணிப்பெண்களுடன் அங்கு வந்துசேர்ந்தாள்.

அவள் எளிய உடைதான் அணிந்திருந்தாள். அணிகலன்கள் எதையும் அம்பாபலி அணிந்திருக்க வில்லை. தேரைவிட்டு இறங்கி, அம்பாபலி, பெருமான் வீற்றிருக்கும் இடத்துக்கு நடந்து சென்றாள். எளிமையான இந்தக் கோலத்திலும், அம்பாபலி கவர்ச்சிமிக்க பேரழகியாகத் திகழ்ந்தாள். பெருமானை அணுகி, தலைதாழ்த்தி வணங்கினாள் அம்பாபலி.

அம்பாபலி தலைதாழ்த்தி வணங்கிய சமயம், பிக்குகள் அப்பால் விலகிக்கொண்டனர்.

அம்பாபலி நடுக்கத்துடன் பெருமானை வணங்கிக் கொண்டே, ''பெருமானே! புலன்களால் அனுபவிக்க வேண்டிய இன்பங்கள் அனைத்தையும் நான் எவ்வளவோ அனுபவித்து இருக்கிறேன். உலகத்தார் நல்லவை என்று கொண்டாடும் அனைத்தும் என்னிடம் குறைவில்லாமல் இருக்கின்றன. இருந்தும் என் உள்ளத்துக்கு அமைதி கிட்டவில்லை. வேதனையும், சூனியமும், வெறுப்பும்தான் மிஞ்சுகின்றன. ஆசை, சிதைவு, அழிவு ஆகியவற்றில் முட்டாள்தனமாக அகப்பட்டுக்கொண்டு மக்கள் அவதிப்படுகிறார்கள். வாழ்க்கைச்சுழலில் சிக்கித் தவியாமல், நான் விடுதலைபெற விரும்புகிறேன்'' என்று கூறினாள்.

இப்படி அம்பாபலி சொன்னதும், பெருமான் அவள் மீது மிகுந்த பரிவுகொண்டார். தருமத்தை அவளுக்கு உபதேசித்தார்.

இதன் பின்னர் அம்பாபலி, ''பெருமானே! தாங்களும் பிக்குகளும் நாளை எனது இல்லத்துக்கு எழுந்தருளி, அமுது செய்து, என்னை உய்விக்க வேண்டும்'' என்று வேண்டினாள்.

'சம்மதம்' என்பதற்கு அறிகுறியாக, பெருமான் மௌனமாக இருந்தார்.

அம்பாபலிக்கு மகிழ்ச்சி தாங்க முடியவில்லை. பெருமானை மீண்டும் வணங்கி, விடைபெற்றுக்கொண்டு, மகிழ்ச்சியுடன் வீடு திரும்பினாள்.

அம்பாபலி தேரில் ஏறித் திரும்பிக்கொண்டிருந்த சமயம், லிச்சவிப் பிரமுகர்கள் சிலர் அவளுக்கு எதிர்ப்பட்டார்கள். தங்கள் தேர்களை இடித்துக்கொண்டு அம்பாபலியின் தேர் செல்வதைக் கவனித்த அவர்கள் அம்பாபலியிடம், ''ஏ அம்பாபலி! இப்படிப் பரபரப்புடன் எங்கள் தேர்களுக்கு எதிராக உனது தேரை ஓட்டச் செய்கிறாயே! ஏன்?'' என்று கேட்டார்கள்.

''நாளை பிக்குகளுடன் பெருமான் அமுது செய்ய எனது இல்லத்துக்கு எழுந்தருள்கிறார்'' என்று அம்பாபலி பதில் சொன்னாள்.

அம்பாபலியின் பதிலைக் கேட்டு, லிச்சவிப் பிரபுக்கள் ஆச்சரியம் அடைந்தார்கள். ''அம்பாபலி! பெருமானுக்கும் பிக்குகளுக்கும் நாங்கள் அமுது அளிக்கிறோம். இதற்கு நீ சம்மதித்தால் உனக்கு நாங்கள் இலட்சம் பொன்கள் தருகிறோம்'' என்று சொன்னார்கள்.

அதற்கு ''பிரபுக்களே! நீங்கள் வைசாலி ராஜ்யத்தைத் தந்தாலும் சரி, அதற்கு நான் சம்மதியேன்' என்று கூறி விடைபெற்றுக்கொண்டு அம்பாபலி போய்விட்டாள்.

லிச்சவிப் பிரபுக்கள் அதன் பின்னர், பெருமானைச் சந்தித்து வணங்கிவிட்டு, ''பெருமானே! நாளை நாங்கள் அளிக்கும் பிச்சையை ஏற்க வேண்டும்'' என்று சொன்னார்கள்.

உடனே பெருமான் அவர்களிடம் ''பிரபுக்களே! நாளை அம்பாபலியின் இல்லத்துக்கு நான் அமுது செய்யச் செல்லுகிறேன்'' என்று சொன்னார்.

அதற்கு அவர்கள், "பெருமானே! கணிகை ஒருத்தியின் இல்லத்துக்கு அமுது செய்யச் செல்வது பெருமை அன்றே! தாங்கள் அரச குலத்தில் பிறந்தவர்கள். நாங்களும் அரச குலத்தினர். ஆகவே எங்களுடன் சேர்ந்து அமுது செய்வது தான் தங்களுக்குப் பெருமையாய் இருக்கும்" என்று சொன்னார்கள்.

உடனே பெருமான் அவர்களை நோக்கி,

"தருமத்தின் முன்னே அனைவரும் சமம். ஆண் பெண் என்னும் வேற்றுமையோ, இளவரசன் கணிகை என்னும் வேற்றுமையோ அதற்குக் கிடையாது. ஆகவே நாளை நான் பிக்குகளுடன் அம்பாபலியின் இல்லத்துக்கு உணவுக்குப் போகிறேன்" என்று சொன்னார்.

பெருமான் இவ்வாறு சொன்னதும் "கணிகைப் பெண் ஒருத்தி நம்மையும் மிஞ்சிவிட்டாளே!" என்று லிச்சவிப் பிரபுக்கள் தங்களுக்குள்ளே சொல்லிக்கொண்டார்கள். பிறகு பெருமானிடம் விடைபெற்றுக்கொண்டு திரும்பினார்கள்.

மறு தினம் பெருமானுக்கும் பிக்குகளுக்கும் தமது இல்லத்தில் அம்பாபலி அமுது படைத்து உபசரித்தாள். பெருமான் கூறின உபதேச மொழிகளை உவகையுடன் செவிமடுத்தாள்.

பிறகு தனக்குச் சொந்தமான ஆம்ர வனத்தைப் பிக்கு சங்கத்துக்குத் தானம் செய்தாள் அம்பாபலி.

அதன் பின்னர் பௌத்த சமயத்தைத் தழுவி அம்பாபலி பிக்குணியானாள்.

## இரு முக்கிய சீடர்கள்

பிறகு பெருமான் வைசாலியை விட்டுப் புறப்பட்டார். சீடர்களையும் அழைத்துக்கொண்டு, பெலுவா என்னும் கிராமத்துக்குப் போனார். தமது நாற்பத்தைந்தாவது மாரிக் கால வாசத்தை அந்தக் கிராமத்தில் பெருமான் கழிக்க விரும்பினார்.

ஆகவே அவர் பிக்குகளை நோக்கி, ''பிக்குகளே! மாரிக் காலத்தை நான் இந்தச் சிறு கிராமத்திலே கழிக்க விரும்பு கிறேன். நீங்கள் எல்லாரும் அக்கம் பக்கத்தி லுள்ள சின்னஞ் சிறு கிராமங்களில் வாழும் நண்பர்கள், உறவி னர்கள் ஆகியோர் இல்லங்களிலே தங்குங்கள்'' என்று சொன்னார்.

அதன்படி பிக்குகள் சென்றுவிட்டார்கள். பெலுவா என்பது ஒரு சிற்றூர். அவ்வூரிலே எல்லாருக்கும் உணவு கிடைப்பது அரிதாகையால், பெருமான் இந்த ஏற்பாட்டைச் செய்தார்.

பெலுவா கிராமத்தில் பெருமான் மாரிக் கால வாசம் செய்த சமயம், கடுமையான நோயினால் பீடிக்கப்பட்டார். வேதனையின் கொடுமை சகிக்க முடியாததாக இருந்தது. பொறுமையோடு அந்த வேதனையைப் பெருமான் சகித்துக் கொண்டார். யாரிடமும் அதுபற்றி அவர் தெரிவிக்க வில்லை. 'சீடர்களுக்குத் தெரிவியாமலும் அவர்களிடம் விடைபெற்றுக்கொள்ளாமலும், நிர்வாணப் பேற்றை அடை வது கூடாது' என்று பெருமான் கருதினார். ஆகவே, வேதனை யைப் பொறுத்துக்கொண்டு, உறுதியுடன் இருந்தார். அதனால் வேதனை அகன்று, மீண்டும் உடல் நலம் பெற்றார்.

உடல் முற்றும் குணமடைந்த பின்னர், வெளியே புறப் பட்டு வந்து மர நிழலில் பெருமான் அமர்ந்திருந்தார். அப் போது ஆனந்தன் பெருமானை அணுகி வணங்கிவிட்டு, அருகே அமர்ந்தார். அவர் புத்தரை நோக்கி, ''பெருமானே! நோயின் காரணமாகத் தங்கள் உடம்பு துரும்புபோல இளைத்துப் போய்விட்டது. எதிர்காலம் எனக்கு இருள் சூழ்ந்து இருப்பது போலத் தோன்றுகிறது. நிர்வாணப் பேற்றை அடைவதற்கு முன்னதாகச் சங்கத்தாருக்கு உப தேசிக்க வேண்டியவற்றை உபதேசித்தால், எனக்குச் சிறிது மன நிம்மதி ஏற்படும்'' என்று தெரிவித்துக்கொண்டார்.

இவ்வாறு ஆனந்தன் தெரிவித்ததும் பெருமான் அவரிடம்,

''ஆனந்தா! சங்கத்தார் இது பற்றி என்னிட மிருந்து வேறு எதை எதிர்பார்க்கிறார்கள்? சங்கம்

என்னை நம்பி இருக்கிறது; அதை நான் நடத்துகிறேன் என்று எவன் கருதுகிறனே, அத்தகைய ஒருவன்தான் சங்கத்துக்குப் போதனை செய்ய முடியும். நான் அவ்வாறு கருதியது இல்லை. உபதேசிக்க வேண்டிய உண்மைகளை ஒளிவு மறைவு இன்றி நான் உபதேசித்து இருக்கிறேன். குறிப்பிட்ட சிலருக்குத்தான் நான் போதிப்பேன்; மற்றவர்களுக்கு நான் போதிக்க மாட்டேன் என்று கூறி, எதையும் நான் மூடி மறைத்தது கிடையாது. சத்தியத்தை அனைவராலும் அறிய முடியும். சொந்த முயற்சி தான் ஒருவனை மேன்மைப்படுத்தும். தன்னையே தான் பரிசீலித்துக்கொண்டால் ஒவ்வொரு மனிதனும் புத்தன் ஆகலாம். அத்தகையவனுக்கு ஆசானும் தேவையில்லை; தலைவனும் தேவை இல்லை. பிறரை அடைக்கலமாகக் கொள்ளவேண்டிய அவசியமும் இல்லை.'' என்று கூறினர்.

பெருமான் இவ்வாறு கூறியதும் ஆனந்தன் அவரிடம், ''அண்ணலே! எங்களை விட்டுப் பிரிய வேண்டாம்'' என்று வேண்டினர்.

அதற்குப் பெருமான்,

''ஆனந்தா! எனக்கு வயது எண்பது ஆகிறது. போதிய காலம் வாழ்ந்துவிட்டேன். முதுமையின் காரணமாக எனது உடல், ஒட்டை வண்டியைப்போல, கலகலத்துப் போய் இருக்கிறது. புறப் பொருள்களில் நாட்டம் இல்லாது, மனத்தை உள்முகமாச் செலுத்தி, உடலை நான் பேணிக்கொண்டிருக்கிறேன். இந்த நிலை நீடிப்பதை இன்னும் நீ விரும்புகிறுயா?'' என்று கேட்டார்.

அதற்கு ஆனந்தன், ''அண்ணலே! தாங்கள் நிர்வாணம் அடைந்துவிட்டால் அதன் பின்னர் எங்களுக்கு யார் உபதேசிப்பார்கள்?'' என்று கேட்டார்.

''ஆனந்தா! உங்களில் இருக்கும் ஒளியைக் கொண்டே நீங்கள் முன்னேற முயல வேண்டும். தருமம் வழிகாட்டி உங்களை உய்விக்கும். ஆகவே தருமத்தைக் கடைப்பிடியுங்கள். எது தருமம் என்பதை நீங்களே

தெரிந்துகொள்ள முயல வேண்டும். வேறு எதையும் அடைக்கலமாகக் கொண்டுவிடாதீர்கள்'' என்று கூறினர்.

மாரிக் காலத்தைப் பெலுவாவில் கழித்த பின்னர், புத்தர் பெருமான் சிராவஸ்திக்குச் சென்று ஜேத வனத்தில் தங்கினர்.

இது சமயம் பெருமானின் முக்கிய சீடர்களில் ஒருவரான சாரிபுத்திரர் தமது நிர்வாண காலம் இன்னும் சில நாட்களில் நிகழலாம் என்பதை ஞான பலத்தால் உணர்ந்தார்.

சாரிபுத்திரர் பிறந்த கிராமம் நாலந்தை. சிராவஸ்தி நகருக்கு அண்மையில் இருந்தது; அங்கே அவருடைய அன்னை இருந்தார். அங்கு சென்று, தம் அன்னைக்குப் பௌத்த தருமங்களை உபதேசித்த பின்னர், நிர்வாணப் பேற்றை அடைய நினைந்தார் சாரிபுத்திரர்.

ஆகவே பெருமானிடம் சென்று, விவரத்தைக் கூறி, சாரிபுத்திரர் அவரிடம் விடைபெற்றுக்கொண்டார். பின்னர் மீண்டும் தரையில் வீழ்ந்து பெருமானை வணங்கிவிட்டு, தம் சீடர்களையும் அழைத்துக்கொண்டு நாலந்தைக்குப் புறப்பட்டார்.

ஏழு நாட்கள் பிரயாணம் செய்து, தமது சொந்தக் கிராமமான நாலந்தையை அடைந்தார். தம் அன்னையைச் சந்தித்து நலம் விசாரித்த பின்னர், பெருமானின் புகழை அவளுக்குக் கூறி, அதன் பிறகு பௌத்த தருமத்தை அவளுக்கு உபதேசித்தார்.

அதன் பின்னர், தம் சீடர்களை அழைத்து, அவர்களிடம் சாரிபுத்திரர் விடைபெற்றுக்கொண்டார். ''சீடர்களே! என்னுடன் கூட நாற்பத்து நான்கு ஆண்டுகள் நீங்கள் வாழ்ந்து இருக்கிறீர்கள். நான் ஏதாவது உங்களுக்குத் தவறு இழைத்து இருந்தால், என்னை மன்னித்துவிடுங்கள்'' என்று தெரிவித்துக்கொண்டார்.

உடனே சீடர்கள், ''குருநாதரே! தங்களுடன் நாற்பத்து நான்கு ஆண்டுகள் உடன் வாழ்ந்து, நாங்கள் பெருமை

பெற்ளேம்; நாங்கள் தங்களுக்கு ஏதாவது தவறு இழைத்து இருந்தால் மன்னிக்கவேண்டுகிரேம்'' என்று சொன்னுர்கள்.

இதன் பின்னர், சாரிபுத்திரர் தாம் பிறந்த அறையில் இருந்தார். சயனித்தவாறு தியானத்தில் இருந்த அவர் அதி காலையில், நிர்வாணப் பேற்றை அடைந்தார். விருப்பு வெறுப்புகளைக் கடந்த நிலையையும், சடப் பொருள்களுடன் தொடர்பு இல்லாத ஒரு நிலையையும் சாரிபுத்திரர் பெற்ருர்.

சாரிபுத்திரரை நல்லடக்கம் செய்வதற்கு, சீடர்கள் தக்க ஏற்பாடுகளைச் செய்தார்கள். சந்தண மரத்தால் ஈம விறகுகளை அடுக்கி அதன்மீது சாரிபுத்திரரின் சடலத்தை எடுத்து வைத்து, முறைப்படி சீடர்கள் தகனம் செய் தார்கள்.

பின்னர், சாரிபுத்திரரின் அஸ்தியை ஒரு கலசத்தில் எடுத்து வைத்து, அதைப் புத்தரிடம் எடுத்துச் சென்ருர்கள்.

பெருமான் அந்தக் கலசத்தைத் தமது வலக் கரத்தால் தொட்டு ஆசிர்வதித்தார். பின்னர் அங்கு கூடியிருந்த பிக்குகளுக்கு, சாரிபுத்திரரின் பெருமைகளை விவரித்தார்.

அதன் பின்னர் ஜேத வனத்துக்கு எடுத்துப் போய் சாரிபுத்திரரின் அஸ்தியை வைத்து, ஒரு சேதியம் கட்டு வதற்குப் பெருமான் ஏற்பாடு செய்தார்.

பிறகு அங்கிருந்து புறப்பட்டு, பிக்குகளையும் அழைத்துக் கொண்டு, இராஜகிருகம் போய்ச் சேர்ந்தார் பெருமான்.

பெருமான் இராஜகிருகத்தில் வேணு வன விகாரையில் தங்கி இருந்த சமயம், புறச் சமயவாதிகளின் தூண்டுதலின் பேரில், பெருமானின் மற்ெருரு முக்கிய சீடரான மொக்க லானரை வழிப்பறிக் கொள்ளைக் கூட்டத்தினர், வெட்டிக் கொன்று, சடலத்தை ஒரு புதரில் எறிந்துவிட்டார்கள்.

கொடுமையான இந்தச் சாவு மொக்கலானருக்கு நேர்ந்தது குறித்து, மற்ற பிக்குகள் பெரிதும் வருந்திஞர்கள். பிக்கு ஒருவருக்கு இத்தகைய கதி நேரலாமா என்பது குறித்து, தங்களுக்கு இடையே உரையாடி, உண்மைக் காரணத்தை அறிய முயன்ருர்கள்.

பெருமான் மொக்கலானரின் மரணம் குறித்து, அவர்களுக்கு விளக்கம் சொன்னார்:

''பிக்குகளே! முற்பிறவி ஒன்றில் தம் முதிய பெற்றோரை, காட்டில் தவிக்க விட்டுவிட்டு மொக்கலானன் போய்விட்டான்; அப்போது அவனுடைய பெற்றோரைத் திருடர்கள் அடித்துக் கொன்றுவிட்டார்கள். அதன் பயனைத்தான் இப்பொழுது மொக்கலானன் அனுபவிக்க நேர்ந்திருக்கிறது. தத்தம் செயல்களின் பயன்களை அனுபவியாமல் எவராலும் தப்ப முடியாது'' என்று விளக்கம் தந்தார்.

இதன் பின்னர், மொக்கலானருக்கும் சேதியம் கட்டுவிப்பதற்கு, பெருமான் ஏற்பாடு செய்தார்.

மற்ற பிக்குகள், மொக்கலானரின் சடலத்தை எடுத்து வந்து, தகனம் செய்தார்கள். பிறகு அவருடைய அஸ்தியை ஒரு இடத்தில் அடக்கம் செய்து, அதன்மீது சேதியம் ஒன்றை எழுப்பினார்கள்.

# கௌதம புத்தர்

## வரலாறு

## வீடு பேறு

### சுந்தன் அளித்த உணவு

தமக்கு இடது கையும் வலது கையும் போல் இருந்து உதவிய, தருமத்தைப் பரப்புவதில் ஆர்வம் காட்டிய இரு சிடர்களும் நிர்வாணப் பேற்றை அடைந்த பின்னர், பெருமான் உள்ளத்தில் சிறிது வேதனை ஏற்பட்டது. நிதான புத்தியால் அதை அவர் கட்டுப்படுத்திக்கொண்டார்.

பிறகு அங்கிருந்து புறப்பட்டு, ஊர் ஊராகச் சென்று, தருமத்தைப் பரப்பி வந்தார். அது சமயம் அவர், ஒரு நாள் பாவா என்னும் ஊருக்குப் போனார். ஆனந்தனும் இதர பிக்குகளும் அவருடன் கூடச் சென்றார்கள்.

அங்கே சுந்தன் என்னும் தட்டான் ஒருவனுக்குச் சொந்தமான ஒரு மாஞ்சோலையில் அவர்கள் தங்கினார்கள்.

பிக்குகளுடன் வந்து, தமது மாஞ்சோலையில் புத்தர் பெருமான் தங்கி இருக்கிறார் என்பது தெரிய வந்ததும், சுந்தன் புறப்பட்டு வந்து, பெருமானையும் மற்றவர்களையும் வரவேற்று, முறைப்படி வணங்கினான். மறு தினம் பிக்கு களுடன் வந்து தமது இல்லத்தில் அமுது ஏற்க வேண்டும் என்று வேண்டினான்.

''சம்மதம்'' என்பதற்கு அறிகுறியாகப் பெருமான் மௌனமாய் இருந்தார்.

சுந்தன் மகிழ்ச்சியுடன் வீடு திரும்பினான். பெருமானுக் கும் பிக்குகளுக்கும் விமரிசையாக விருந்து செய்யும்

பொருட்டு, தேவையான ஏற்பாடுகளை அவன் செய்தான். சுவை மிகுந்த நறுமணமுள்ள் பல்வகையான இனிப்புப் பதார்த்தங்களை அவன் தயார் செய்து இருந்தான்; சாதம் சமைத்து இருந்தான். அதோடுகூட இளம் காட்டுப் பன்றி ஒன்றை அடித்து, அதன் இறைச்சியையும் பக்குவப்படுத்திச் சமைத்து இருந்தான்.

அனைத்தும் சித்தமானதும், மறு தினம் காலையில், சுந்தன் மாஞ்சோலைக்குச் சென்று, பெருமானையும் பிக்குகளையும் மீண்டும் ஒரு முறை அழைத்தான்.

பிச்சைப் பாத்திரத்தைக் கையில் எடுத்துக்கொண்டு, பெருமான் சுந்தன் வீட்டுக்குப் புறப்பட்டார். பிக்குகளும் அவருடன் சேர்ந்து புறப்பட்டார்கள்.

சுந்தனின் இல்லத்தை அடைந்து பெருமானும் பிக்குகளும் உணவு அருந்தினர்கள். சுந்தன் காட்டுப் பன்றி இறைச்சியையும் அரிசிச் சோறையும் எடுத்து வந்து பெருமானுக்குப் படைத்தான்.

அப்போது பெருமான் சுந்தனிடம் ''சுந்தா! காட்டுப் பன்றி இறைச்சியை எனக்கு மட்டும் படை. மீதம் இருப்பதை மண்ணில் புதைத்துவிடு. யாருக்கும் அதைப் படைக்க வேண்டாம்'' என்று சொன்னர்.

சுந்தன் அவ்வாறே செய்தான். பிக்குகளுக்கு மற்ற பதார்த்தங்களை அவன் படைத்தான்.

சுந்தன் படைத்த உணவைச் சாப்பிட்ட பின்னர், பெருமானுக்குத் தாங்க முடியாத வயிற்றுக் கடுப்பு உண்டாயிற்று. ஆயினும் வேதனையை வெளிக்காட்டிக்கொள்ளாமல் பெருமான் பொறுமையுடன் அதைச் சகித்துக்கொண்டார். அப்போது அவர் ஆனந்தனிடம் ''ஆனந்தா! நாம் குசி நகருக்குப் போகலாம்'' என்று சொன்னர்.

''சரி'' என்று ஆனந்தன் சம்மதித்தான்;

எல்லாரும் புறப்பட்டார்கள். வெய்யில் கடுமையாகக் காய்ந்தது. அதனல் பெருமான் ஆனந்தனை நோக்கி, ''ஆனந்தா! எனக்கு மிகுந்த களைப்பாய் இருக்கிறது.

எனது மேல் அங்கியை நான்காக மடித்து, அந்த மர நிழலில் போடு'' என்று சொன்னார்.

அதன்படி ஆனந்தன் செய்ததும் பெருமான் சென்று அந்தத் துணிமீது அமர்ந்துகொண்டார். பிறகு ஆனந்தனை நோக்கி ''ஆனந்தா! எனக்கு அதிக தாகமாய் இருக்கிறது. நீ சென்று எனக்குக் கொஞ்சம் தண்ணீர் கொண்டு வா'' என்று ஏவினார்.

அதற்கு ஆனந்தன் ''பெருமானே! மாட்டு வண்டிகள் சென்றதனால், ஓடைத் தண்ணீர் கலங்கிப் போய் இருக்கிறது. இன்னும் சிறிது தூரம் போய்விட்டால், காகுத்த ஆறு ஒடுகிறது. அதன் நீர் பரிசுத்தமாய் இருக்கும்'' என்று சொன்னான்.

உடனே பெருமான் ''ஆனந்தா! இந்த ஓடையிலேயே தண்ணீர் கொண்டு வா. எனக்குத் தாகம் மிகுதியாய் இருக்கிறது'' என்று மீண்டும் சொன்னார்.

ஆனந்தன் சென்று ஓடையைப் பார்த்தார். வண்டிகள் பல கடந்து சென்று இருந்தும், நீர் கலங்காமல், பரிசுத்தமாயும் நறுமணத்தோடும் இருப்பதைக் கண்டு ஆச்சரியம் அடைந்தார். பிறகு பாத்திரத்தில் தண்ணீரை மொண்டு வந்து பெருமானிடம் கொடுத்தார்.

அந்த நீரைப் பெருமான் பருகினார்.

இது சமயம் அங்கு வந்திருந்த மள்ளர் பிரமுகன் ஒருவன் பெருமானைத் தரிசித்து அவருக்கு இரண்டு பொன்னிற ஆடைகளை வழங்க முன்வந்தான்.

அவற்றில் ஒன்றை ஆனந்தனுக்குக் கொடுக்கும்படி பெருமான் சொன்னார்; மற்றொன்றைத் தமக்காக வாங்கிக் கொண்டார்.

பிரமுகன் விடைபெற்றுக்கொண்டு திரும்பிய பின்பு, அவன் வழங்கிய பளபளப்பான ஆடையைப் பெருமான் தம் உடல்மீது போர்த்துக்கொண்டார்.

அப்பொழுது ஒரு ஆச்சரியம் நிகழ்ந்தது. பிரமுகன் கொடுத்த பளபளப்பான ஆடையின் பிரகாசம் குன்றிப்

போயிற்று. பெருமான் மேனியின் பிரகாசம், அந்த ஆடையின் பிரகாசத்தை மங்கச் செய்துவிட்டது.

இதைக் கவனித்து ஆச்சரியமுற்ற ஆனந்தன், "பெருமானே! ஆடையைக் காட்டிலும், தங்கள் மேனியின் பிரகாசம் அதிகரிக்கக் காரணம் என்ன? இந்தக் காட்சி புதுமையாய் இருக்கிறதே?" என்று ஆச்சரியமுற்றுக் கேட்டார்.

அதற்குப் பெருமான், "ஆனந்தா! மள்ளர்களின் நாட்டில், இரு சால மரங்களுக்கு இடையில், ததாகதர் நிர்வாணம் அடைவார். அதனுல்தான் ததாகதரின் உடம்பு பளபளப்புடன் ஜொலிக்கிறது. சரி, நாம் காகுத்த நதியின் பக்கம் போகலாம்" என்று சொன்னுர்.

"சரி" என்று ஆனந்தன் சொன்னதும் அவர்கள் காகுத்த நதியின் பக்கம் சென்ருர்கள்.

## ஆனந்தன் கேட்ட விளக்கங்கள்

காகுத்த நதியை அடைந்ததும், பெருமான் அந்த ஆற்றில் இறங்கி நீராடினுர்; பிறகு அதன் நீரையும் பருகினுர். அதன் பின்னர் ஆற்றைக் கடந்து அருகே இருக்கும் மாஞ்சோலைக்குப் புத்தர் பெருமான் போய்ச் சேர்ந்தார். ஆனந்தன் அவருடைய உடைகளை உலர்த்திக்கொண்டு இருந்தார்.

அப்போது சிறிது ஓய்வு எடுத்துக்கொள்ள விரும்பிய பெருமான் சந்தன் என்னும் பிக்குவை நோக்கி, "சந்தா! ஒரு துணியை எடுத்து நான்காக மடித்து, மர நிழலில் போடு" என்று கூறினுர்.

அதன்படி சந்தன் செய்ததும், பெருமான் சென்று வலப்புறமாக ஒருக்கணித்துப் படுத்து இருந்தார். சிறிது நேரம் கண்ணயர்ந்து பெருமான் தூங்கினுர். சந்தன் பக்கத்தில் அமர்ந்து காவல் புரிந்தார்.

இது சமயம் ஆனந்தன் அங்கே வந்து சேர்ந்தார்.

பெருமான் விழித்துக்கொண்டார். தான் நிர்வாணம் அடைய வேண்டிய நேரம் சமீபித்துவிட்டதை உணர்ந்த

அவர் ஆனந்தனிடம் தெரிவிக்க வேண்டிய சில முக்கிய விஷயங்களைத் தெரிவிக்கத் தீர்மானித்தார். தாம் கடைசியாக அருந்திய உணவு சுந்தன் அளித்த உணவு. தமது நிர்வாணத்துக்கு அந்த உணவுதான் காரணம் என்று மக்கள் கருதினால் அதன் காரணமாகச் சுந்தனுக்கு அபவாதம் ஏற்படக் கூடும். தனக்கு நேர்ந்திருக்கும் அபவாதத்தை நினைந்து நினைந்து, சுந்தன் மனம் நொந்து வருந்தக் கூடும். ஆதலால் சுந்தனுக்கு அபவாதம் நேராது தடுக்கப் பெருமான் திருவுளம் பற்றினார். எனவே அவர் ஆனந்தனை நோக்கி,

''ஆனந்தா! இப்பொழுது நீ சுந்தனிடம் சென்று, எனது அபிப்பிராயத்தைத் தெரிவி. எனது வாழ்க்கையில் நான் இரு சமயங்களில் அருந்திய உணவுகள் பெருமைக்கு உரியவை என்று சுந்தனிடம் கூறு. சுஜாதா அளித்த உணவினால் நான் போதி ஞானம் பெற்றேன். ஆசா பாசங்களைக் கட்டுப்படுத்தவும் மேன்மையான ஞானத்தைப் பெறவும் அந்த உணவு எனக்கு உதவிற்று. ஆகவே சுஜாதா அளித்த உணவு பெருமைக்கு உரியதாகிறது. கடைசியாகச் சுந்தன் அளித்த உணவை உண்ட பின், நான் மகா பரி நிர்வாணத்தை அடையப் போகிறேன். கந்தங்களின் பிணிப்புகளிலிருந்து எனக்கு விடுதலை கிடைக்கப் போகிறது. ஆகவே, சுந்தன்அளித்த உணவும் மகிமை வாய்ந்தது என்பதை அவனிடம் கூறு'' என்று சொன்னார்.

இதன் பின்னர் அவர் ஆனந்தனிடம், ''நாம் சிராவஸ்தி நதிக்கரைக்குப் போகலாம்'' என்று சொன்னார்.

அதன்படி அவர்கள் அங்கே போய்ச் சேர்ந்தார்கள். அப்போது பெருமான், ''ஆனந்தா! எனது படுக்கையை இரு சால மரங்களுக்கு நடுவிலே போடு. தலைப் பக்கம் வடக்கில் இருக்குமாறு படுக்கை அமையட்டும்'' என்று சொன்னார்.

அதன்படி ஆனந்தன் செய்து முடித்ததும் பெருமான் சென்று, தலையை வட திசையில் வைத்து, ஆண் சிங்கத்தைப்

போல, கம்பீரமாகப் படுத்துக்கொண்டு தியானத்தில் ஆழ்ந்தார்.

அப்போது தேவ துந்துபிகள் முழங்கின. தேவலோகத்து மந்தார மலர்கள் பொல பொல வென்று உதிர்ந்தன. சால மரங்கள் இரண்டும் பூக்களால் நிறைந்து பூமாரி பொழிந்தன. பருவம் அல்லாத பருவத்தில் சால மரங்களும் மற்ற மரங்களும் மலர்களாலும் கனிகளாலும் நிறைந்து இருப்பதைக் கண்டு அனைவரும் அதிக ஆச்சரியம் அடைந்தார்கள். அல்லி மலர்கள் அக்கம் பக்கத்தில் பூத்து, அழகு மயமாய்க் காட்சி அளித்தன; எங்கும் ஒரே நறுமண மயம்.

இவற்றை எல்லாம் கண்டு ஆச்சரியம் அடைந்த பிக்கு ஒருவர், ''பெருமானுக்கு மரங்களும் மலர்களைச் சொரிந்து மரியாதை செய்கின்றன!'' என்று சொன்னார்.

இப்போது பெருமான் கண்களைத் திறந்து அந்தப் பிக்கு விடம்,

''எனக்கு மரியாதை செய்யும் பொருட்டு மரங்கள் மலர்களைச் சொரியலாம். ஆனால் எனக்கு ஏற்படும் பெருமை அதனால் அன்று. பிக்குகளும் பிக்குணிகளும் இல்லற ஆடவரும் இல்லறப் பெண்டிரும் நான் போதித்து வந்துள்ள தருமத்தைக் கடைப்பிடித்து ஒழுகும்போதுதான் எனக்கு உண்மையான பெருமை ஏற்படுகிறது'' என்று சொன்னார்.

வெளிப் பகட்டுகளாலும் சடங்குகளாலும் யாரும் மேன்மையடைய முடியாது என்பதையும் அறநெறிகளை உளம் தோய்ந்து கடைப்பிடிப்பதன் மூலமே யாரும் மேன்மையடைய முடியும் என்பதையும் நினைவுபடுத்தவே பெருமான் இவ்வாறு கூறினார்.

இதன் பின்னர் பெருமானிடம் அனேக விஷயங்கள்பற்றி, தமக்குள்ள ஐயங்களை அகற்றுமாறு ஆனந்தன் கேட்டார்.

''பெருமானே! ததாகதர் மாரிக் கால வாசத்தைப் பல இடங்களில் கழித்து இருக்கிறார். அவற்றில் எந்த எந்த ஸ்தலங்களைப் பிக்குகள் பெருமைமிக்கதாக, மதித்துப் போற்ற வேண்டும்?'' என்று வினவினார் ஆனந்தன்.

''நான்கு ஸ்தலங்களைப் பெருமைப்படுத்திப் போற்ற வேண்டும்:

''(1) ததாகதர் பிறந்த இடம்

''(2) ததாகதர் போதி ஞானம் அடைந்த இடம்

''(3) தருமப் பிரவர்த்தனம் செய்த இடம்.

''(4) ததாகதர் மகா பரிநிர்வாணம் அடைந்த இடம்.

''இந்த நான்கு இடங்களையும் பௌத்தர்கள் கண்ணியப்படுத்திப் போற்ற வேண்டும். இதனுல் அவர்கள் மேலான கதியை அடைவர்'' என்று பெருமான் கூறினுர்.

இதன் பின்னர் பெண்பாலரிடம் பிக்குகள் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டும் என்பதுபற்றி, புத்தரிடம் ஆனந்தன் வினவினுர்.

''பெருமானே! பெண்பாலாரிடம் நாங்கள் எப்படி நடந்துகொள்ள வேண்டும்?'' என்று ஆனந்தன் கேட்டார்.

''ஆனந்தா! அவர்களைப் பார்க்காமல் இருக்க வேண்டும்'' என்று பகவான் பதில் சொன்னுர்.

''பார்க்க நேர்ந்தால், பிறகு எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும்?'' என்று வினவினுர் ஆனந்தன்.

''அவர்களுடன் பேசாமல் இருக்க வேண்டும்'' என்று பதில் சொன்னுர் பெருமான்.

''பெண்களே வலிய முன்வந்து பேசினுல் என் செய்வது?'' என்று வினவினுர் ஆனந்தன்.

''விழிப்புடன் இருந்துகொள்ள வேண்டும்'' என்று அறிவுறுத்தினுர் பெருமான்.

இதன் பின்னர் ஆனந்தன் ''பெருமானே! ததாகதர் நிர்வாணப் பேற்றை அடைந்த பின்னர், சடலத்தை என்ன செய்ய வேண்டும்?'' என்று கேட்டார்.

அதற்குப் பெருமான் ''ஆனந்தா! இதன் பொருட்டு நீ கவலைப்பட வேண்டாம். உனது கவனத்தை நீ மேன்மையடைவதற்கான துறைகளில் அக்கறையுடன் செலுத்திவா. அதனுல் உனக்கு நன்மை உண்டு. ததாகதரை நம்பும்

அறிஞர்களும் அந்தணர்களும் பிரமுகர்களும் எனது சடலத்தை அடக்கம் செய்வதில் கவனம் செலுத்திச் செய்ய வேண்டியதைச் செய்வார்கள்'' என்று சொன்னார்.

''பெருமானே! சடலத்தை எவ்வாறு அடக்கம் செய்ய வேண்டும்?'' என்று வினவினார் ஆனந்தன்.

''அரசர்கள் எல்லாருக்கும் அரசரை எப்படி அடக்கம் செய்வார்களோ அவ்வாறு அடக்கம் செய்ய வேண்டும்'' என்று பெருமான் சொன்னார்.

''அரசர்கள் எல்லாருக்கும் அரசரை எவ்வாறு அடக்கம் செய்வது வழக்கம்?'' என்று வினவினான் ஆனந்தன்.

''சடலத்தைப் புதிய கோடித் துணியால் முதலில் சுற்ற வேண்டும். அதன்மீது பிறகு பஞ்சை வைத்து, மீண்டும் கோடித் துணியால் சுற்ற வேண்டும். இப்படி மாறி மாறி, பஞ்சாலும் கோடித்துணியாலும் ஐநூறு தடவைகள் சுற்றிய பின்னர், அந்தச் சடலத்தை எண்ணெய் நிரம்பிய இரும்புப் பாத்திரத்தினுள் எடுத்துவைத்து, இரும்பு மூடியால் அதை மூடி, வாசனைக் கட்டைகளாலான காஷ்டத்தில் அந்தப் பேழையை வைத்து, சிதையில் தீ மூட்ட வேண்டும். பிறகு சாம்பல், எலும்புகள் முதலியவற்றை எடுத்துப்போய் ஒரு நாற்சந்தியில் புதைத்து, அதன்மீது ஒரு சேதியம் எழுப்ப வேண்டும்'' என்று பெருமான் கூறினார்.

இவ்வாறு பெருமான் சொல்லி வந்ததைக் கேட்டுக் கொண்டிருந்த ஆனந்தனுக்குத் துக்கம் தாங்க முடியவில்லை. விகாரையின் ஒதுப்புறமான ஒரு இடத்துக்குச் சென்று, ஆனந்தன் தேம்பித் தேம்பி அழுதார்.

இது சமயம் பெருமான் அருகே இருக்கும் பிக்குகளைக் கவனித்தார். அவர்களுக்கு மத்தியிலே ஆனந்தனை அவர் காணவில்லை. ஆகவே அவர் பிக்குகளை நோக்கி, ''பிக்குகளே! ஆனந்தன் எங்கே?'' என்று வினவினார்.

''பெருமானே! விகாரைக்குள் சென்று அவர் அழுது கொண்டிருக்கிறார்'' என்று ஒரு பிக்கு பதில் சொன்னார்.

அவரை அழைத்து வரும்படி பெருமான் சொன்னார்,

## மள்ளர்கள்

பெருமானின் கட்டளைப்படி, அந்தப் பிக்கு சென்று, அழுதுகொண்டிருக்கும் ஆனந்தரிடம் ''சகோதரரே! பெருமான் உம்மை அழைக்கிறார்'' என்று கூறினார்.

உடனே புறப்பட்டு வந்து, முறைப்படி பெருமானை வணங்கிவிட்டு, பக்கத்தில் அமர்ந்தார் ஆனந்தன்.

அப்போது பெருமான் அவரை நோக்கி,

''ஆனந்தா! அழுவதாலும் புலம்புவதாலும் கண்ணீர் உகுப்பதாலும் பயனில்லை. இதுபற்றி உனக்கு நான் பல முறை உபதேசித்து இருக்கிறேன். பிறந்தவர் யாவரும் இறப்பது உறுதி என்னும் உண்மையை நீ உணர வேண்டும். மனைவி மக்கள், தாய் தந்தையர், உற்றார் உறவினர், அனைவரையும் விட்டுப் பிரிய வேண்டிய ஒரு நிலை கட்டாயம் ஒவ்வொருவருக்கும் ஏற்பட்டே தீரும். ஆகையால் கவலைப்படுவதையும் கண்ணீர் உகுப்பதையும் விட்டுவிட்டு, மனத்தைத் திடமாக வைத்துக்கொள். ஆனந்தா! பல ஆண்டுகள் அணுக்கத் தொண்டனாக இருந்து, மனம் கோணாமல் எனக்கு நீ உள்ளன்புடன் பணிவிடைகள் புரிந்திருக்கிறாய். வாக்காலும் மனத்தாலும் செயலாலும் அன்போடும் பண்போடும் அசையாத உறுதியுடனும் தொண்டு செய்திருக்கிறாய். அவற்றுக்கு உரிய பலனை நீ அவசியம் அடைவாய்''

என்று ஆனந்தனின் பண்புகளைப் பகவான் பலர் முன்னிலையில் பாராட்டிச் சொன்னார்.

அதன் பின்னர் மற்ற பிக்குகளிடம், அணுக்கத் தொண்டன் என்ற முறையில் தம்பாலும் பிறர்பாலும் ஆனந்தன் சிறப்பாக நடந்துகொண்ட விதத்தைப் பகவான் விவரித்தார்.

பகவான் இவ்வாறு கூறி முடித்ததும் ஆனந்தன் அவரிடம் ''பெருமானே! குசி நகரம் என்னும் இந்த ஊர் சாதாரணமான ஒரு சிற்றூர். இத்தகைய ஒரு சிற்றூரில்

தாங்கள் பரிநிர்வாணம் அடைவது பொருத்தமாய் இராது. சிராவஸ்தி, இராஜகிருகம், காசி, கொசாம்பி, சம்பா முதலிய பெரிய நகரங்கள் அண்மையில் இருக்கின்றன. அந்த நகர் ஒவ்வொன்றிலும் தனவான்களும் கல்விமான்களும் பிராமணர்களும் நிறையப் பேர் இருக்கிறார்கள். இந்த நகர்களில் ஏதாவது ஒரு நகரில் தங்கள் நிர்வாணப் பேற்றை அடைந்தால், அப்போது அந்த நகரிலுள்ள பிரமுகர்களும் பிராமணர்களும் தங்களுடைய சடலத்தைப் பெருமையுடன் அடக்கம் செய்ய வசதியாய் இருக்கும்'' என்று சொன்னார்.

அதற்குப் பெருமான் ''ஆனந்தா! இந்த ஊர் முன்பு ஒரு காலத்தில் குசவதி என்னும் பெயரில் பெருமை மிக்க நகரமாகத் திகழ்ந்து இருக்கிறது. ஆகவே இதுபற்றிய எண்ணத்தை விட்டுவிட்டு, குசீ நகரில் வாழும் மள்ளர்களிடம் சென்று 'நாளை அதிகாலையில் ததாகதர் நிர்வாணம் அடையப் போகிறார். முன்னரே இது விவரம் நமக்குத் தெரியாமல் போயிற்றே என்று பிறகு நீங்கள் வருந்தக் கூடாது என்பதற்காக, உங்களிடம் இது விவரத்தை ததாகதர் அறிவிக்கச் சொன்னார் என்று அவர்களிடம் தெரிவித்து வா'' என்று கட்டளையிட்டார்.

உடனே விடை பெற்றுக்கொண்டு, மள்ளர்களைச் சந்தித்து, செய்தி தெரிவிக்கும் பொருட்டுக் குசீ நகருக்கு ஆனந்தன் போனார்.

அங்கே மள்ளர் குலப் பிரமுகர்கள் ஒரு கூடத்தில் ஏதோ ஒரு அலுவல் சம்பந்தமாகக் கூடி இருந்தார்கள். ஆனந்தன் அவர்களை அணுகி ''மள்ளர் குலப் பிரமுகர்களே! நாளை அதிகாலையில் பெருமான் நிர்வாணப் பேற்றை அடையப் போகிறார். நீங்கள் எல்லாரும் வந்து கடைசியாக அவரை தரிசியுங்கள்'' என்று கூறினார்.

விவரம் தெரிய வந்ததும், மள்ளர்கள் ஆற்றொண்ணாத் துயரத்தில் ஆழ்ந்தார்கள். தாமதியாது தம்தம் மனைவி மக்களை அழைத்துக்கொண்டு, பெருமான் சயனித்து இருக்கும் இடத்துக்கு வந்து சேர்ந்தார்கள். பெருமானைத் தரிசித்து வணங்கியவாறு நின்றார்கள்.

அப்போது ஆனந்தன் பெருமானிடம் ''பகவானே! மள்ளர் குலத்தில் இன்ன குடும்பத்தைச் சேர்ந்த இன்னர், தம் மனைவி மக்களுடனும் உற்றூர் உறவினருடனும் தங்களைத் தரிசிக்க வந்திருக்கிறார்'' என்று சொல்லி ஒவ்வொரு குடும்பமாக அறிமுகம் செய்து வைத்தார்.

## கடைசிச் சீடர்

இரண்டு சால மரங்களுக்கு இடையில் வடக்குத் திக்கில் தலையை வைத்து, ராஜ சிம்மம் போல், பெருமான் கம்பீரமாகப் படுத்து இருந்தார். தெற்கில் வைகாசி மாதத்துப் பூரணச் சந்திரன் தனது தண்ணொளியைப் பரப்பிக்கொண்டிருந்தது. மள்ளர்கள் குடும்பம் குடும்ப மாக வந்து பெருமானைத் தரிசித்துக்கொண்டு இருந்தார்கள்.

மள்ளர்கள் தரிசித்து முடிந்த பின்பு, சுபத்திரர் என்னும் துறவி ஒருவர் அங்கே வந்து சேர்ந்தார். இவர் ஜைன சமயத் துறவியா அல்லது வைதீக சமயத்தைச் சார்ந்தவரா என்பது நிச்சயமாகத் தெரியவில்லை. புத்தர் பெருமான் பரிநிர்வாணம் அடையப் போகிறார் என்பது தெரிய வந்ததும், தமக்குள்ள சில ஐயங்களை அகற்றிக்கொள்ளும் பொருட்டு, அவர் அங்கே வந்தார்.

வயதான அந்தத் துறவி எது பற்றியும் ஒரு முடிவுக்கு வர முடியாமல், உண்மையை அறியும் பொருட்டு அங்கும் இங்கும் ஆச்சாரியர்களைத் தேடி அலைந்து திரிபவர். அவர் ஆனந்தனை அணுகி, ''நண்பரே! எனக்குள்ள சில ஐயங்களை நிவர்த்தித்துக்கொள்ளும் பொருட்டு, புத்தர் பெருமானை நாடி வந்திருக்கிறேன். அவரை நான் தரிசிக்க வேண்டும்'' என்று சொன்னார்.

அதற்கு ஆனந்தன் ''நண்பரே! பெருமான் களைப்புற்று இருக்கிறார். இப்பொழுது அவருக்குத் தொந்திரவு கொடுக்கக் கூடாது'' என்று கூறினார்.

இரண்டு மூன்று முறை சுபத்திரர் வேண்டியும் ஆனந்தன் சம்மதிக்கவில்லை.

சுபத்திரர் வேண்டுவதும், ஆனந்தர் மறுப்பதும் பெருமானுக்குத் தெரிய வந்தது. உடனே அவர் ''ஆனந்தா! சுபத்திரரைத் தடுக்க வேண்டாம். அவரை உள்ளே வரச் சொல். அறிவில் தேட்டம் கொண்டு வந்திருப்பவர் அவர். அவரால் எனக்கு எவ்வித தொந்திரவும் நேராது. அவர் கேட்கும் கேள்விகளுக்கு நான் சொல்லும் பதில்கள் அவருக்குத் திருப்தி அளிக்கும்; எளிதில் அவற்றை அவர் புரிந்துகொள்வார்'' என்று கூறினர்.

இதன் பேரில் பெருமானைத் தரிசிக்க, ஆனந்தர் சுபத்திரரை அனுமதித்தார்.

உள்ளே சென்ற சுபத்திரர் பெருமானை முறைப்படி வணங்கிவிட்டு அருகே அமர்ந்தார். ''பூரண கசியபன், மற்கலி கோசலன், அஜித கேசகம்பலன், பகுத கச்சாயனன், சஞ்சய பேலட்ட புத்தன், நிகண்ட நாதபுத்தன் ஆகியோர் மனிதன் மேலான கதியை அடைய, வெவ்வேறு வழியைக் கூறுகின்றனர். இவற்றில் எந்த வழி சிறந்த வழி? அவர்கள் துணிந்து கூறும் உண்மைகள் அறிந்து கூறப்படும் உண்மைகளாக இருக்குமோ? அல்லது அறியாமையால் தான் அவர்கள் கூறுகிறுர்களா?'' என்று கேட்டார்.

அதற்குப் பெருமான், ''சுபத்திரரே! அவர்கள் தெரிந்து கொண்டு கூறுகிறுர்களா? அல்லது தெரியாமல் கூறுகிறுர்களா? என்பது ஒரு புறம் இருக்கட்டும். இப்பொழுது தருமத்தைப் பற்றி உமக்கு நான் கூறுகிறேன். கவனமாய்க் கேளும்'' என்று சொன்னர்.

''பெருமானே! கேட்கச் சித்தமாய் இருக்கிறேன்'' என்று சுபத்திரர் பதில் சொன்னர்.

உடனே பெருமான்,

''சுபத்திரரே! தூய உள்ளத்துடன் எட்டு சீலங்களைக் கடைப்பிடித்து ஒழுகி, பிறர்பால் யார் தயையுடன் நடந்துகொள்கிறுர்களோ, அவர்கள் மேலான கதியை அடைவது திண்ணம். இந்த எட்டுச் சீலங்களும் எந்தச் சமய சம்பிரதாயத்தில் காணப்படுகின்றனவோ, அந்தச் சமயத்தைச் சார்ந்த மக்கள் மேலான கதியை

அடைவார்கள். இந்த எட்டுச் சீலங்களும் எந்தச் சமயத்தினரால் கடைப்பிடிக்கப்படவில்லையோ, அவர்களால் மேலான கதியை அடைய முடியாது.''

இதன் பின்னர் எட்டுச் சீலங்கள் எவை என்பதை, சுபத்திரருக்குப் பெருமான் விவரித்துச் சொன்னார்.

பெருமான் சொன்ன விளக்கங்கள், சுபத்திரரின் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்தன. ஆகவே தாம் பௌத்த சமயத்தைத் தழுவி, பெருமானின் சீடராக விரும்புவதாகப் பெருமானிடம் சுபத்திரர் தெரிவித்துக்கொண்டார்.

பெருமானும் சம்மதித்து, தீட்சை கொடுத்து அவரைப் பிக்குவாக்கி, தம் சீடராக அங்கீகரித்துக்கொண்டார். தாமே தீட்சை கொடுத்துப் பெருமான் பிக்குவாகிய கடைசிச் சீடர் சுபத்திரர்.



## மகா பரி நிர்வாணம்

இதன் பின்னர் பெருமான் ஆனந்தரைப் பார்த்து,

''ஆனந்தா! ததாகதர் பரி நிர்வாணம் அடையப் போவதால், இனி வழி காட்டும் குருநாதர் இருக்க மாட்டாரே என்ற கவலையும் ஏக்கமும் நீங்கள் கொள்ள வேண்டாம். நான் மறைந்துவிட்டதாக நீங்கள் எண்ண வேண்டாம். இதுவரை உங்களுக்கு நான் போதித்துவந்த அறநெறிகளிலும் ஒழுக்க நெறிகளிலும் நான் உயிருடன் இருப்பதாக நீங்கள் எண்ணிக்கொள்ளுங்கள். அந்த நெறிகளும் ஒழுக்க நெறிகளும் ததாகதனாக அமைந்து உங்களுக்கு அவசியம் வழி காட்டும்'' என்று கூறினார்.

பிறகு அங்கு குழுமி இருக்கும் பிக்குகளை நோக்கி, ''பிக்குகளே! உங்களுக்கு ஏதாவது ஐயம் இருந்தால், இப்பொழுதே என்னிடம் கேட்டு, அவற்றை அகற்றிக் கொள்ளுங்கள். ததாகதர் உயிருடன் இருக்கும்பொழுது நமக்குள்ள ஐயங்களை நாம் அகற்றிக்கொள்ளாது போனோமே

என்ற ஒரு ஏக்கம் உங்களுக்கு இருக்கக் கூடாது'' என்று கூறினர்.

பிக்குகள் எதுவுமே கேளாது மௌனமாய் இருந்தார்கள்.

பிறகு இதே கேள்வியை இரண்டாம் முறையாக, பிக்குகளிடம் பெருமான் கேட்டார்.

அப்போதும் பிக்குகள் எதுவும் கேட்காமல் மௌனமாய் இருந்தார்கள்.

மூன்ருவது முறையாகக் கேட்டபோதும் பிக்குகள் மௌனமாய் இருந்தார்கள்.

இந்த நிலையைக் கவனித்த ஆனந்தன் மகிழ்ச்சியால் பூரித்துப் போனர். ''பெருமானே! இந்தக் கூட்டத்தில் இருக்கும் பிக்குகளுக்குத் தருமம்பற்றியோ சங்கம்பற்றியோ எத்தகைய ஐயமும் இல்லை'' என்று சொன்னர்.

''ஆம் ஆனந்தா! உண்மைதான். இந்த ஐநூறு பிக்குகளுக்கும் தருமம்பற்றியும் சங்கம்பற்றியும் எத்தகைய ஐயமும் இல்லை என்பதை நான் அறிவேன். இவர்கள் அனைவருக்கும் நிர்வாணப் பேறு அவசியம் கிட்டும். இறுதியில் சங்கத்தில் சேர்ந்தவராயினும் சரி, அவருக்கும் இனிப் பிறவித் துன்பம் ஏற்படாது'' என்று பெருமான் கூறினர்.

இதன் பின்னர் பிக்குகளை நோக்கி,

''என் அருமைப் பிக்குகளே! பஞ்ப பூதங்களின் சேர்க்கையால் உண்டான எந்தப் பொருளுக்கும் அழிவு உண்டு. இதை எப்பொழுதும் நினைவில் இருத்திக் கொண்டு, விழிப்புடன் இருங்கள். நிர்வாணப் பேற்றை அடைவதற்கு, உண்மையோடும் ஊக்கத்தோடும் உறுதியோடும் முயலுங்கள்'' என்று சொன்னர்.

இதுதான் புத்தர் பெருமான் உபதேசித்த கடைசி உபதேசம்.

இந்த வார்த்தைகளைக் கூறிய பின்னர், ஒன்றன் பின் ஒன்ருக நான்கு ஞான நிலைகளைப் பெருமான் கடந்தார். அதன் பின்னர் இடம், எண்ணம், உணர்வு, பேதாபேதம் முதலிய நிலைகளை ஒன்றன் பின் ஒன்ருகக் கடந்து, நிர்வாணப்

பெரும் பேற்றைப் பெருமான் அடைந்தார். அதாவது பிறவாத ஒரு பெரு நிலையை எய்தினர்.

அப்போது ஆனந்தன், அருகில் இருக்கும் பிக்குவை நோக்கி, ''பெருமை வாய்ந்த அனுருத்தரே! பகவான் காலமாகிவிட்டார்'' என்று கூறினர்.

அதற்கு அனுருத்தர், ''ஆனந்தரே! பகவான் காலமாகவில்லை. உணர்ச்சிகளையும் எண்ணங்களையும் கடந்த ஒரு பேரின்ப நிலையை அவர் எய்தி இருக்கிறார்'' என்று பதில் சொன்னர்.

புத்தர் பெருமான் வைகாசி மாதம் முழுமதி நாள் அன்று அதிகாலையில் மகா பரி நிர்வாணம் எய்தினர். அப்போது அவருக்கு வயது எண்பது பூர்த்தியாகி, எண்பத்தோராவது வயது தொடங்கியது எனலாம். புத்தர் பெருமான் இந்த மண்ணுலகில் எண்பது ஆண்டுகள் வாழ்ந்து இருக்கிறார்.

பெருமான் நிர்வாணம் அடைந்துவிட்டார் என்பது தெரியவந்ததும், பரிபக்குவம் அடையாத பிக்குகள் சிலர் வாய்விட்டு அரற்றி அழத் தொடங்கினர்கள். ''அண்ணல் எங்களைவிட்டுப் பிரிந்துபோய்விட்டாரே! உலகின் ஒளி அணைந்துவிட்டதே! இனி எங்களுக்கு யார் வழிகாட்டுவார்கள்?'' என்று புலம்பினர்கள்.

அனுருத்தர் போன்ற முதிர்ச்சி அடைந்த பிக்குகள் அழவில்லை. அழுகிற பிக்குகளை அழைத்து, ஆறுதல் சொல்லி, தேற்றினர் அனுருத்தர். ''பிக்குகளே! பெருமான் நமக்குச் செய்திருக்கும் போதனையை நீங்கள் இதற்குள் மறந்து போனீர்களா? உற்றார் உறவினர் அனைவரையும் நாம் விட்டுப் பிரிய நேரும் என்ற உண்மையை நீங்கள் அறியாதவர்களா?'' என்று சொன்னர்.

இதன் பின்னர் அனுருத்தரும் ஆனந்தரும், சமய சம்பந்தமான விஷயங்களைப்பற்றி உரையாடிக்கொண்டிருந்தார்கள்.

பொழுது புலர்ந்ததும், அனுருத்தர் ஆனந்தரிடம், ''பெருமான் நிர்வாணப் பேரின்ப நிலை அடைந்துவிட்ட

செய்தியை, குசி நகரத்தில் வாழும் மள்ளர்களிடம் தெரிவித்து வாரும். பெருமானுடைய சடலத்தை, அடக்கம் செய்வதற்கான ஏற்பாடுகளை அவர்கள் செய்யட்டும்'' என்று கூறினார்.

அதன்படி ஆனந்தர் புறப்பட்டுச் சென்று, மள்ளர்களிடம் விவரத்தைத் தெரிவித்தார்.



## அடக்கம் செய்தனர்

விவரம் தெரியவந்ததும், அலறிப் புடைத்துக்கொண்டு, மள்ளர்கள் உபவர்த்தனம் என்னும் சால மரச் சோலைக்கு விரைந்தார்கள். ''மேன்மையானவர் மறைந்துவிட்டாரே! நன்மை புரிவதில் நாட்டமுடையவர் நம்மைவிட்டுக் காலமாகிவிட்டாரே! உலகின் ஒளி அணைந்து போய்விட்டதே!'' என்று புலம்பினார்கள்.

பின்னர் பூமாலைகள், சந்தணம் முதலிய நறுமணப் பொருள்களையும் கோடித் துணிகள் முதலியவற்றையும் எடுத்துக்கொண்டு சால மரச் சோலையை அடைந்தார்கள். இன்னிசைகள் முழங்க, புத்தருக்குத் தாங்கள் கொணர்ந்திருக்கும் நறுமணப் பொருட்களைக்கொண்டு அலங்காரம் செய்தார்கள். பிறகு இசைக் கருவிகளை முழக்கியும், புத்தர் பெருமானுடைய புகழைப் பாடியும் பெருமைப்படுத்தினார்கள். 'இன்று அடக்கம் செய்யலாம், இன்று அடக்கம் செய்யலாம்' என்று நினைத்து நினைத்து, ஆறு நாட்கள்வரை, புத்தரின் திருமேனியைத் தீப்படுத்தாமல் மள்ளர்கள் வைத்திருந்தார்கள்.

பிறகு ஏழாம் நாளன்று மன்னர் தலைவர்கள் எட்டுப் பேர் எழுந்து, நீராடிவிட்டுப் புத்தாடை அணிந்துகொண்டார்கள். பிறகு புத்தருடைய திருமேனியை அடக்கம் செய்யும் பொருட்டுத் தூக்கப் போனார்கள். ''பெருமானின் திருமேனியை நகரின் தென்புறத்தில் அடக்கம் செய்யலாம்'' என்னும் கருத்துடன் அவர்கள் தூக்கினார்கள்.

அவர்களால் தூக்க முடியவில்லை. ஆச்சரியமடைந்த அவர்கள் அனுருத்தரிடம் சென்று, ''பெரியவரே! பெருமானின் திருமேனியை எங்களால் தூக்க முடியவில்லையே! காரணம் என்ன?'' என்று கேட்டார்கள்.

அதற்கு அவர் ''நீங்கள் தென்புறத்தில் அடக்கம் செய்யும் கருத்துடன் தூக்க முயன்றீர்கள். ஆனால் தேவர்களின் கருத்து வேறு விதமாய் இருப்பதால்தான் உங்களால் சடலத்தைத் தூக்க முடியவில்லை'' என்று பதில் சொன்னார்.

''தேவர்களின் கருத்து என்ன?'' என்று மள்ளர் தலைவர்கள் வினவினார்கள்.

''பெருமானின் திருமேனியை வடதிசையில் அடக்கம் செய்ய வேண்டும் என்பது தேவர்களின் விருப்பம்'' என்று அனுருத்தர் தெரிவித்தார்.

''அதன்படி ஏற்பாடு செய்கிறோம்'' என்று சம்மதித்த மள்ளர் தலைவர்கள் அதற்கான ஏற்பாடுகளைச் செய்தார்கள். பெருமானின் திருமேனி செல்லவேண்டிய வடபுறத்து வழிகள் அனைத்தையும், மள்ளர்கள் திருத்தமாக அலங்கரித்தார்கள்.

பிறகு தேவர்களின் விருப்பப்படி, பெருமானின் திருமேனியை வடதிசையில் அடக்கம் செய்யும் பொருட்டு, சுமந்துகொண்டு, மள்ளர் தலைவர்கள் புறப்பட்டார்கள்; இன்னிசைகள் முழங்கின. ஆடிக்கொண்டும் பாடிக்கொண்டும் வடதிசையில் புறப்பட்டார்கள். மந்தார மலர்களைக் கொண்டு, தேவர்கள் பூமாரி பொழிந்தார்கள். முதலில் நகரத்தின் வடக்குவாயில் வழியாக நகரத்துக்குள் எடுத்துச் சென்று, நகரின் நடுப் பாகத்தை அடைந்த பின்னர், அங்கிருந்து கிழக்குப் பக்கம் திரும்பி, கிழக்கு வாயிலின் அருகே இருக்கும் மகுடபந்தனம் என்னும் பெயருடைய கோயிலுக்குப் பக்கத்தில் திருமேனியை இறக்கினார்கள்.

பிறகு ஆனந்தரிடம் ''இனி என்ன செய்ய வேண்டும்?'' என்று மள்ளர்கள் தலைவர்கள் கேட்டார்கள்.

''சக்ரவர்த்தி ஒருவருக்குச் செய்யும் மரியாதைகளைச் செய்து திருமேனியை அடக்கம் செய்ய வேண்டும்'' என்று ஆனந்த தேரர் பதில் சொன்னார்.

''அதன்படி செய்கிறோம்'' என்று மள்ளர் தலைவர்கள் கூறினார்கள்.

பிறகு புத்தர் பெருமானின் திருமேனியைத் துணியாலும் பருத்திப் பஞ்சினாலும் ஒன்றின்மீது ஒன்றாக ஐநூறு தடவை சுற்றினார்கள். அதன் பின்னர் பெரிய ஒரு இரும்புப் பாத்திரத்தில் நிறைய எண்ணெய்விட்டு, துணியால் சுற்றின உடலை அதற்குள் தூக்கிவைத்து, மற்றொரு இரும்புப் பாத்திரத்தினால் அதை மூடினார்கள். பிறகு பாத்திரத்தைச் சுற்றி, ஈம விறகுகளை அடுக்கினார்கள்.

இவ்வாறு செய்து முடிந்ததும், மள்ளர் தலைவர் நால்வர் நீராடிவிட்டு, புத்தாடை அணிந்துகொண்டார்கள். பிறகு நெருப்பை எடுத்துச் சென்று, ஈம விறகில் நெருப்பை வளர்க்க முயன்றார்கள். தீப்பற்றவில்லை. இதைக் கண்டு ஆச்சரியமுற்ற மள்ளர் தலைவர்கள், அனுருத்த மகா தேரரை அணுகி, விவரம் என்ன என்று கேட்டார்கள்.

''கசியப மகா தேரர் வந்து, பெருமானின் திருமேனியைத் தரிசித்த பின்னர், தீப் படுத்த வேண்டும் என்பது தேவர்களின் விருப்பம்'' என்று அனுருத்த மகா தேரர் பதில் சொன்னார்.

கசியப மகா தேரர் வந்து தரிசிக்கும்வரை காத்திருக்க மள்ளர்கள் சம்மதித்தார்கள்.

கசியப மகா தேரர் ஐநூறு பிக்குகளுடன் பாவா நகரிலிருந்து, குசி நகரத்தை நோக்கி வந்துகொண்டிருந்தார். அப்போது இடையே ஒரு மர நிழலில் தங்கி இருந்தபோது, ஜைனத் துறவி ஒருவரை கசியப மகா தேரர் சந்தித்தார். அந்தத் துறவியின் கையில் தேவலோகத்து மந்தார மலர் ஒன்று இருப்பதைக் கண்டு, விவரம் கேட்டார்.

அதற்கு அந்த ஜைனத் துறவி, பகவான் புத்தர் நிர்வாணப் பேற்றை அடைந்துவிட்டார் என்றும், அது சமயம் தேவர்கள் பொழிந்த மந்தார மலர்களில் இதுவும் ஒன்று என்றும் கூறினார்.

புத்தர் பெருமான் நிர்வாணப் பேற்றை அடைந்துவிட்டார் என்னும் செய்தியைக் கேட்டு முதலில் கசியப மகா

தேரர் திடுக்கிட்டார். ஆயினும் தமது பரி பக்குவ நிலையால், கசியப மகா தேரர் தமது மனத்தைத் திடப்படுத்திக்கொண் டார். மற்ற பிக்குகளோ, பெருமான் தங்களைவிட்டுப் பிரிந்து போய்விட்டாரே என்று வாய்விட்டு அரற்றி அழுதனர்.

அவர்கள் அனைவருக்கும் கசியப மகா தேரர் ஆறுதல் சொன்னார். அதன் பின்னர், அனைவரையும் அழைத்துக் கொண்டு, புத்தர் பெருமானை அடக்கம் செய்யும் இடத்துக்கு அவர் போய்ச் சேர்ந்தார்.

பிறகு புத்தர் பெருமானின் திருமேனியை மும்முறை வலம் வந்து, கசியப மகா தேரர் வணங்கினார். அதன் பின்னர், அவருடன் வந்திருந்த மற்ற ஐநூறு பிக்குகளும் வலம் வந்து வணங்கினார்கள்.

அனைவரும் வணங்கி, மரியாதை முதலியன செய்து முடித்த பின்னர், ஈமவிறகில் நெருப்பு தானே பற்றிக் கொண்டு எரியத் தொடங்கிற்று.

உலக மக்கள் உய்யும் பொருட்டு, நாடு முழுதும் யாத் திரை செய்து, தாம் கண்ட உண்மைகளை உபதேசித்து, தொடர்ந்து ஐம்பது ஆண்டுகள் தவறாது தருமத்தைப் பரப்பி வந்த புத்தர் பெருமானின் பூதவுடல் எரிந்து சாம்ப லாயிற்று. பெருமானின் உடலில் இருந்த எலும்புகள் மட்டுமே எரியாது எஞ்சி நின்றன.

இது சமயம் வானிலிருந்து மழை பொழிந்து தீயை அவித்தது. மள்ளர்களும் நறுமண நீரினால், தீயை அணைத் தார்கள். பூமியிலிருந்தும் நீர்த் தாரைகள் பொங்கி, தீயை அணைத்தன.

அதன் பின்னர் பெருமானின் எலும்புகளை ஒரு பொன் தட்டில் எடுத்து வைத்து, குசி நகரத்தில் இருக்கும் ஒரு மண்டபத்துக்கு மள்ளர்கள் எடுத்துப் போனார்கள். அங்கே ஓர் இடத்தில் வைத்து, மலர்களைத் தூவி வணங்கி, ஏழு நாட்கள் மள்ளர்கள் வழிபட்டார்கள்.

புத்தர் பெருமான் நிர்வாணப் பேற்றை அடைந்துவிட் டார் என்றும், அவரது திருமேனியைத் தீப்படுத்தி, எஞ்சி நிற்கும் எலும்புகளைக் குசி நகரத்து மண்டபத்தில் சேகரித்து

வைத்து மள்ளர்கள் வழிபட்டு வருகிறார்கள் என்னும் செய்தி நாடுதோறும் பரவிற்று.

ஒவ்வொரு நாட்டு அரசனும் மக்களும் பெருமானுடைய தாதுக்களில் தங்களுக்கும் உரிமை உண்டு என்று சொல்லி, பங்கு கேட்கத் தொடங்கினார்கள்.

மகத நாட்டு மன்னன் அஜாத சத்துரு, வைசாலி நாட்டு லிச்சவிகள், கபிலவாஸ்துவைச் சேர்ந்த சாக்கியர்கள், சுல்லகப்பைப் பூரியர்கள், ராமகிராமத்துக் கோலியர்கள், பாவாபுரி மள்ளர்கள். வேதந் தீபத்தைத் சேர்ந்த பிராமணர் ஒருவர் ஆகியோர் உரிமை கொண்டாடி, தாதுக்களில் தங்களுக்கும் பங்கு வேண்டும் என்று கோரினர். குசீ நகரத்து மள்ளர்கள். பெருமான் எங்கள் கிராமத்தில் நிர்வாணம் அடைந்தாராதலால், தாதுக்களில் யாருக்கும் நாங்கள் பங்கு தர முடியாது'' என்று மறுத்தார்கள்.

அப்போது துரோணர் என்னும் அந்தணர் அனைவருக்கும் சமாதானம் சொல்லி, தாதுக்களை எட்டுக் கூறுகள் செய்து, உரிமை கொண்டாடிய ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு கூறை வழங்கினார், கூறுபோட்டு முடித்த பின்னர், பிப்பிலி வனத்தைச் சேர்ந்த மௌரியர்கள் தங்களுக்கும் தாதுக்களில் பங்கு வேண்டும் என்று கோரினார்கள். அவர்களுக்குக் கிடைக்கவில்லை. ஆகவே, சுடலையில் எஞ்சி இருக்கும் சாம்பலை எடுத்துப் போய், அதைப் பூமியினுள் வைத்து அதன்மீது மௌரியர்கள் ஒரு சேதியம் கட்டினார்கள் அதே போல மற்ற எண்மரும் தாதுக்களைத் தங்கள் தங்கள் நகருக்கு எடுத்துப் போய், பூமிக்குள் வைத்து, அதன்மீது சேதியம் எடுப்பித்தார்கள்.

தாதுக்களை அளந்து கூறுபோட்டுக் கொடுத்த துரோணர் அதை அளந்து கூறு போடத் தான் பயன்படுத்திய படியை எடுத்துப் போய், பூமிக்கு அடியில் வைத்து அதன்மீது ஒரு சேதியம் கட்டினார். இவ்வாறு நாட்டில் புத்தர் பெருமானுக்குப் பத்துச் சேதியங்கள் ஏற்பட்டன.

**பொருந்து போதியில் இருந்த மாவதர்**
**திருந்து சேவடி மருந்தும் ஆகுமே.**

இதுவரை புத்தர் பெருமானின் வாழ்க்கையை ஓரளவு தெரிந்துகொண்டோம். இனி, பௌத்த சமயம் போற்றும் மும்மணிகளுள் தருமத்தைப்பற்றி அது கூறுவதைத் தெரிந்து கொள்ள முயல்வோம்.

இனம், மொழி, நாடு, காலம் இவற்றை எல்லாம் கடந்து, உலக மக்களுக்கு வழிகாட்டும் பெருமையை, விரல் விட்டு எண்ணத்தகுந்த ஒருசிலரே அடைந்து இருக்கின்றனர். அவர்களுள் புத்தர் பெருமானும் ஒருவர்.

அவருடைய வாழ்க்கையை முன் அத்தியாயங்களில் ஒருவாறு நாம் தெரிந்துகொண்டோம். அவர் செய்த உபதேசங்கள் பற்றியும் ஆங்காங்கே சிறிது தெரிந்துகொண்டோம்.

இனி அவர் போதித்த அறங்கள் யாவை?

அந்த அறங்களைக் கடைப்பிடிக்க, அவர் காட்டிய ஒழுக்க நெறிகள் யாவை?

அவர் போதித்த அறங்கள் ஒழுக்க நெறிகள் ஆகியவற்றுக்கும், மற்ற மதத்தினர் கூறும் அறங்கள் ஒழுக்க நெறிகள் ஆகியவற்றுக்கும் இடையிலே நிலவும் ஒற்றுமை வேற்றுமை யாவை?

இவைபற்றி அடுத்த அத்தியாயத்தில் சிறிது தெரிந்து கொள்ளலாம்.



# பௌத்த தருமம்

**தம்மம் சரணம் கச்சாமி**

தருமத்தை நான் சரணடைகிறேன்

# பௌத்த தருமம்

## அடிப்படைக் கோட்பாடுகள்

உலக மக்கள் இன்று கடைப்பிடித்து ஒழுகும் மதங்களை இரண்டு பெரும் பிரிவுக்குள் அடக்கலாம்.

ஒரு பிரிவு நம்பிக்கைக்கு மட்டும் முதல் இடம் கொடுக்கும் மதங்கள். இந்தப் பிரிவில் இஸ்லாமிய சமயம், கிறிஸ்துவ சமயம், ஹிந்து சமயத்தில் சைவம் வைணவம் போன்ற கிளைச் சமயங்கள், சீக்கிய சமயம் ஆகியன அடங்கும். இந்தப் பிரிவினர் கடவுள் ஒருவர் உண்டு என்பதை முழுக்க முழுக்க நம்புபவர்கள். கடவுள் அருளினால்தான் அவருடைய திருவுளப் பாங்கின்படிதான், இந்த உலகம் நடைபெறுகிறது என்பதில் அசைக்க முடியாத நம்பிக்கை இவர்களுக்கு உண்டு.

மற்றொரு பிரிவினர், அறிவுக்கு அதாவது சுய அனுபவ ஞானத்துக்கு முதலிடம் கொடுப்பவர்கள்; ஒருவனுடைய உயர்வுக்கும் தாழ்வுக்கும் அவனவன் செய்யும் செயல்கள் தான் காரணமேயன்றி, கடவுள் காரணம் அன்று என்னும் கருத்தைக் கொண்டவர்கள். இந்தப் பிரிவில் ஜைன மதம், பௌத்த மதம், ஹிந்து மதத்தில் அத்துவைத சமயம் ஆகியன அடங்கும்.

ஆகவே அறிவுக்கு, — அதாவது ஞானத்துக்கு — முக்கியத்துவம் கொடுக்கும் சமயம் பௌத்த சமயம் என்பதை நினைவில் பதித்துக்கொண்டு, பௌத்த சமய அறநெறிகள் யாவை என்பதை இனிக் கவனிக்கலாம்.

மூலாதாரமான சில கோட்பாடுகளை அடித்தளமாகக் கொண்டு, அவற்றுக்கு ஏற்ப, சில அறநெறிகளை வகுத்துக் கொண்டு ஒவ்வொரு மதமும் செயல்படுகிறது.

ஆதி முதல் மனிதன் ஆதாம் கடவுளின் கட்டளையை மீறி, ஒரு கனியைப் பறித்துத் தின்று பாவம் செய்தான்,

அவன் செய்த பாவத்தின் பயனாய் — கடவுளின் கட்டளையை மீறிய தன் பயனாய் — மனித சமுதாயம் துன்பத்தை அனுபவிக்கிறது. இதை அறிந்த இறைவன், மக்கள் சமுதாயத்தின் மீது பரிவுகொண்டு, தம் புதல்வன் இயேசுநாதரை மண்ணுலகுக்கு அனுப்பி, போதனைகள் செய்வதன் மூலமும் தியாகம் செய்வதன் மூலமும் மனித சமுதாயத்தைத் திருத்தி நல்வழிப்படுத்தச் செய்தார். இவைதான் கிறிஸ்துவ சமயத்தின் அடிப்படைக் கோட்பாடுகள். இந்தக் கோட்பாடுகளை அடித்தளமாகக்கொண்டே கிறிஸ்துவ சமய அறநெறிகள் வகுக்கப்பட்டு உள்ளன.

ஆண்டவனே பெரியவன்; அவனுடைய விருப்பப்படி தான் இந்த உலகமும் அண்ட சராசரங்களும் இயங்குகின்றனவே அல்லாமல், மனிதனுடைய விருப்பப்படி இந்த உலகம் நடைபெறவில்லை. மனிதன் தவறு செய்யும் இயல்புள்ளவன்; மனிதனைத் திருத்தி நல்வழிப்படுத்தும் பொருட்டு, இடையிடையே தம் தூதர்களை ஆண்டவன் அனுப்புவான். அப்படி அனுப்பப்பட்ட திருத்தூதர்களில் நபிகள் நாயகம் முகம்மது (ஸல்) அவர்கள் இறுதித் தூதர் ஆவர். மனிதனை நல்வழிப்படுத்தும் பொருட்டு, இறைவன் நபிகள் நாயகம் அவர்களின் வாயிலாக இறக்கி வைத்த சம்பூரண இறுதி வேதம் திருக்குர்ஆன் ஆகும். அதில் கூறப்பட்டு இருக்கும் அறநெறிகளின்படி வாழும் மனிதன் மேன்மையடைவான். ஆண்டவனுடைய அருளுக்குப் பாத்திரமாவான்.

இவையே முஸ்லிம்களின் அடிப்படைக் கோட்பாடுகள் ஆகும். இந்தக் கோட்பாடுகளை அடித்தளமாகக்கொண்டே இஸ்லாமிய அறநெறிகள் வகுக்கப்பட்டுள்ளன.

இந்த இரு சமயங்களும் பௌத்த சமயத்துக்குப் பின்னர் தோன்றிய சமயங்கள் ஆகும்.

வைதிக சமயமும் ஜைன சமயமும் பௌத்த சமயத்துக்கு முற்பட்ட சமயங்கள் ஆகும்.

ஹிந்து சமயத்தினர் கடவுள் ஒருவர் உண்டு. ஆக்கல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களையும் இடைவிடாது செய்து இறைவன் திருவிளையாடல் புரிகிறார். பிர்

மாவாக இருந்து ஆக்கல் தொழிலையும், திருமாலாக இருந்து காத்தல் தொழிலையும், சிவனாக இருந்து அழித்தல் தொழிலையும் இறைவன் செய்கிறார். ஒரு ஊரை அடைவதற்குப் பல வழிகள் உண்டு. அவற்றில் எந்த ஒரு வழியில் சென்றாலும் அந்த ஊரை அடைய முடியும். அதைப்போல, இறைவனை அடைய, பல வழிகள் உண்டு. ஞான மார்க்கம், பக்தி மார்க்கம், கரும மார்க்கம் என மூன்று வழிகள் உண்டு. அவரவர் பக்குவத்திற்கு ஏற்ப, இவற்றில் ஏதாவது ஒரு மார்க்கத்தைக் கடைப்பிடித்து, மக்கள் இறைவனை வழிபடலாம்.

இவையே ஹிந்து மதத்தை அனுசரிக்கும் முக்கிய பிரிவினர்கள் அனைவரும் ஏக மனதாக ஒப்புக்கொண்டுள்ள ஆதாரக் கோட்பாடுகள் ஆகும். இவற்றை அடித்தளமாகக் கொண்டே ஹிந்து சமய அறநெறிகள், ஒழுக்க நெறிகள் ஆகியன வகுக்கப்பட்டுள்ளன.

உலகில் ஆறு திரவியங்கள் அனாதி காலம்தொட்டே இருந்து வருகின்றன. இந்த ஆறு திரவியங்கள் ஒன்றுடன் ஒன்று கலப்பதனாலும், ஒன்றுக்கு ஒன்று உதவியாக இருப்பதாலும் உலகம் இயங்கி வருகிறது.

இந்த ஆறு திரவியங்களில் ஆன்மா என்பது ஒரு தொகுதி; மற்ற ஐந்து திரவியங்களும் ஒரு தொகுதி. ஆன்மா என்னும் திரவியம் மற்ற ஐந்து திரவியங்களோடு தொடர்பு கொள்வதனால் ஆன்மாவில் மாசுகள் படிந்துவிடுகின்றன. இந்த மாசுகளைப் போக்கி, ஆன்மாவைத் தூய நிலையில் வைத்துக்கொள்வதே முக்தி எனப்படும். கடும் தவம் முதலியவற்றால்தான், ஆன்மா தூய நிலையை அடைய முடியும்.

இவையே ஜைன சமயத்தின் அடிப்படைக் கோட்பாடுகள். இவற்றை அடித்தளமாகக் கொண்டுதான் ஜைன சமய அறநெறிகளும் ஒழுக்க நெறிகளும் வகுக்கப்பட்டுள்ளன

Jainism

ஜைன சமயம், வைதீக சமயம் ஆகியவற்றின் கோட்பாடுகள் இந்திய மண்ணில் வேரூன்றிப் போயிருந்த காலத்தில்தான், புத்தர் பெருமான் அவதரித்து, போதி ஞானம் பெற்று, பௌத்த சமயத்தைப் பரப்பினார். அவர் பரப்பிய கோட்பாடுகளில், இந்த இரு சமயங்களின் சாயல்கள் படிந்து

இருப்பதோடு, மாறுபட்ட கோட்பாடுகளும் அதில் இடம் பெற்றுள்ளன.

இந்த இரு சமயத்தவரோடு, பெருமான் எந்த எந்தக் கோட்பாடுகளில் மாறுபட்டாரோ அந்தக் கோட்பாடுகளே, பௌத்த சமயத்தின் அடித்தளமாக அமைந்திருக்கின்றன. அவற்றைப்பற்றி இனிக் கவனிக்கலாம்.

பௌத்த சமயத்தில் மூன்று கோட்பாடுகள் அடிப்படைக் கோட்பாடுகளாக அங்கீகரிக்கப்பட்டுள்ளன. இவை மூன்றும் பௌத்த சமயத்தின் தனி இயல்புடைய கோட்பாடுகள் எனலாம். அவை வருமாறு :

(1) **அநித்தியம்**

(2) **அநாத்துமம்**

(3) **துக்கம்**

பௌத்த சமயத்துக்குத் தனிச் சிறப்பைத் தரும் இந்த மூன்று அடிப்படைக் கோட்பாடுகளைப்பற்றி, இனிச் சற்று விரிவாகக் கவனிக்கலாம்.

### அநித்தியம்

அநித்தியம் என்னும் சொல், நிலையற்ற தன்மையைக் குறிப்பது. எந்த ஒரு பொருளும் உலகில் அழிவில்லாமல் மாற்றமடையாமல் நிலையாய் இருப்பது இல்லை. ஆற்றின் நீரோட்டம்போல, ஒவ்வொரு பொருளும் கணத்துக்குக் கணம் மாற்றம் அடைகிறது. புல் பூண்டு, கல், மண், மலை முதலாக, மனிதன் தேவர் ஈறாக, மாற்றத்துக்கு உட்பட்டே உலகம் இயங்கி வருகிறது. வளர்ச்சி என்பதும் தேய்வு என்பதும் மாற்றத்தின் விளைவுகளே ஆகும். பிறப்பு என்பதும், இறப்பது என்பதும் மாற்றங்களின் விளைவுகளே ஆகும்.

உதாரணமாக, பச்சிளம் குழந்தை ஒன்றை எடுத்துக் கொள்வோம்.

பிறந்ததுமே குழந்தையிடம் அறிவு முதிர்ச்சி, கல்விப் பயிற்சி, இதர பண்புகள், இனப் பெருக்கத் தகுதி முதலியன இருப்பது இல்லை. குழந்தையின் உடலில் மாற்றம் ஏற்பட ஏற்பட, படிப்படியாக, கல்வி, அறிவு, பலம், இனப்பெருக்கத்

தகுதிகள் ஆகியன அதனிடம் உண்டாகின்றன. இவற்றிலிருந்து நாம் முடிவுக்கு வரவேண்டிய உண்மை யாதெனில், அநித்தியம் - அதாவது கணத்துக்குக் கணம் மாறும் இயல்பு - குழந்தையின் உடலில் ஏற்படுவதனாலேயே, குழந்தை வாலிபனாக, நடுவயதினாக, கிழவனாக மாறுகிறான் என்பதே.

மனிதன் மட்டும் மல்ல, மரம், செடி, கொடி முதலியனவும், விலங்கு, பறவை முதலியனவும் இந்த மாற்றத்துக்கு உட்பட்டே அதாவது அநித்தியத்துக்கு உட்பட்டே இயங்குகின்றன.

இந்தியாவில் இயங்கும் வைதீக மதம், ஜைன மதம் ஆகிய இரண்டும் அநித்தியம் என்பது வாழ்க்கையில் உண்டு என்பதை ஒப்புக்கொண்டபோதிலும் நித்தியமானவை — அதாவது என்றும் அழிவில்லாமல் இருப்பவை சில உண்டு என்று கூறுகின்றன.

பரமாத்மா, ஜீவாத்மா என இரு தன்மைகள் எப்பொழுதுமே உண்டு. ஜீவாத்மா பரமாத்மாவில் ஒடுங்கி, ஒன்றாகி பரமாத்மா ஆகிவிடுகிறது. அந்தப் பரமாத்மாவுக்கு மாற்றம் இல்லை, அழிவில்லை என்று வைதீக ஹிந்து சமயத்தில் ஒரு பிரிவினரான வேதாந்திகள் கூறுகின்றனர்.

இது பௌத்த சமயக் கருத்துக்கு முற்றும் முரண்பட்ட ஒரு கருத்தாகும்.

ஜைனர்களோ உலகில் எப்பொழுதுமே ஆறு திரவியங்கள் இருக்கின்றன என்றும், அவற்றில் மாற்றங்கள் ஏற்படுகின்றனவாயினும், அழிந்து போகாமல் நித்தியமாய் இருக்கும் தன்மை அந்த ஆறு திரவியங்களுக்கும் உண்டு என்றும் கூறுகின்றனர். மாற்றங்கள் அடைந்தபோதிலும் நிலையான ஆத்மாக்கள் உண்டு என்பது ஜைனர்களின் கோட்பாடு. நிலையான ஆத்மாக்கள் உண்டு என்பதைப் பௌத்த சமயம் ஏற்கவில்லை.

**அநாத்துமம்**

கணத்துக்குக் கணம் மனமும் சடப் பொருளும் — அதாவது உயிரும் உடலும் — மாற்றம் அடைந்துகொண்டே

இருப்பதால், உலகில் எந்த ஒரு பொருளும் நிலையானதாக, அழிவில்லாததாக இருக்க முடியாது என்று பௌத்தம் கருதுகிறது. நிலையான ஜீவாத்மாவோ பரமாத்துமாவோ இல்லை என்று பௌத்தம் முடிவு எடுத்து இருக்கிறது.

ஒரு படி பாலைப் புதிதாகப் பசுவிலிருந்து கறந்து வாங்கி, ஒரு பாத்திரத்தில் வைத்து மூடி, இரண்டு தினங்களுக்குப் பின் பார்த்தால், அந்தப் பால் புளித்துக் கெட்டுப் போய் விடுவதுடன் பருக லாயக்கற்றதாகவும் ஆகிவிடுகிறது.

பால் அதே பாலாய் இருப்பினும், இரண்டு தினங்களில் அதில் ஏற்றப்பட்டுள்ள மாற்றங்கள் காரணமாக, அந்தப் பால் வேறு ஒரு பொருளாகிப் பருகத் தகுதியற்றதாகி விடுகிறது.

இது எதைக் காட்டுகிறது? கணத்துக்குக் கணம் சடப் பொருள்களில் மாற்றங்கள் நிகழ்கின்றன. அந்த மாற்றங் களின் விளைவாகப் புதிய பொருள்கள் ஏற்படுகின்றன என் பதைக் காட்டுகிறது.

புதிய பசு வெண்ணெய் ஆழாக்கை அடுப்பில் வைத்துக் காய்ச்சுகிறோம். சில நிமிடங்களில் உருகி, அது புத்துருக்கு நெய்யாக மாறுகிறது. இந்த நெய்யை நாம் வெண்ணெய் என்று சொல்லாமல், நெய் என்று கூறுகிறோம். ஏன்? வெண்ணெயில் ஏற்பட்ட சில மாற்றங்கள் காரணமாக, அது ஒரு புதுப் பொருளாக மாறி, நெய் என்னும் பெயரைப் பெறுகிறது. இது எதைக் காட்டுகிறது? பொருள்களில் ஏற் படுகிற மாற்றங்கள் புதுப் பொருள்களை உண்டாக்கு கின்றன என்னும் உண்மையைக் காட்டுகிறது.

சடப் பொருள்களை இவ்வாறு ஆராய்ந்தது ஒரு புறம் இருக்கட்டும். உயிருள்ள ஜீவன்களை இனி ஆராய்ந்து பார்க்கலாம்.

தாய் தந்தையரின் சேர்க்கையால் கரு ஒன்று உருவாகி, புதிய குழந்தை ஒன்று பிறக்கிறது. இந்தக் குழந்தையின் உயிரைத் தாயினுடைய தனித்த உயிர் என்றும் சொல்ல முடியாது; தந்தையினுடைய தனித்த உயிர் என்றும் சொல்ல முடியாது. இந்த இரு உயிர்களின் அம்சம் சிறிது

சிறிது சேர்ந்து மாற்றங்கள் அடைந்து, புதிய ஒரு உயிர் தோன்றி இருப்பதாகவே, உலகோர் கூறுவர்.

இதிலிருந்து நாம் என்ன தெரிந்துகொள்கிறோம்? மாற்றங்களின் காரணமாகவே புதுப் புதுச் சடப்பொருள்களும் புதுப்புது உயிர்களும் தோன்றுவதை காண்கிறோம்.

மஞ்சளையும் சுண்ணும்பையும் சேர்த்துக் குழைத்தால், குறிப்பிட்ட ஒரு நிலை வந்ததும் இரண்டும் சேர்ந்து, ஒரு சிவப்புப் பொருளாக மாறிவிடுகிறது.

அதே போலத்தான் சடப்பொருள்கள் ஒன்று சேரும் போது, குறிப்பிட்ட ஒரு நிலையை அடைந்ததும், உயிர் தோன்றுகிறது. பிறகு நாளடைவில் அந்தப் பொருள்கள் சிதைந்து அழிந்துவிடுமாயின், அவற்றோடுகூட உயிரும் அதாவது ஆத்மாவும் அழிந்துவிடுகிறது.

எனவே நிலையான ஆத்மா என ஒன்று உண்டு என்பதைப் பௌத்தம் ஏற்கவில்லை.

### துக்கம்

வளர்ச்சியும் மாற்றமும் அழிவும் இடையீடின்றி நாள் தோறும் நிகழ்ந்துகொண்டே இருப்பதனால், இந்த மண்ணுலகில் அமைதியுடன் வாழ மனிதனால் முடிவது இல்லை. அரசனாயினும் சரி, ஆண்டியாயினும் சரி, பண்டிதனாயினும் சரி, பாமரன் ஆயினும் சரி, ஆணாயினும் சரி, பெண்ணாயினும் சரி யாருக்கும் ஏதோ ஒருவித ஏக்கம் அல்லது கவலை இல்லாமல் இருப்பது இல்லை.

ஆகவே இப்படி ஏற்படும் ஏக்கத்தையும் கவலையையும் — அதாவது துக்கத்தை அடித்தளமாகக் கொண்டுதான், — பௌத்த சமயம், தமது அறநெறிகளையும் ஒழுக்க நெறிகளையும் வகுத்துக்கொண்டுள்ளது.

பௌத்தம் கூறும் அறநெறிகளையும் ஒழுக்க நெறிகளையும் கடைப்பிடித்து ஒழுகினால் துன்பம் அகன்று, பேரின்ப நிலையை மனிதன் அடைய முடியும் என்று பௌத்தம் போதனை செய்கிறது.

அவற்றை அடுத்த அத்தியாயத்தில் கவனிக்கலாம்.

# பௌத்த தருமம்

துக்கம்தான் பௌத்த சமயத்தின் அடிப்படையான பிரசினை. எனினும் உலகத்தைத் துக்கமயமானதாகப் பௌத்தம் கருதவில்லை. காரண காரியத்தை ஆராய்ந்து துக்கத்தைக் களைந்துவிட்டால், இந்த மண்ணுலகில் எல்லாரும் இன்பமாக வாழலாம், பேரின்ப நிலையை எய்தலாம் என்று பௌத்தம் போதனை செய்கிறது.

ஆகவே துக்கம் என்பது என்ன? அது எதனுல் ஏற்படுகிறது என்பதை முதலில் தெரிந்துகொள்வது அவசியமாகும்.

பிறப்பது துக்கம்; மூப்படைவது துக்கம் நோய் துக்கம், இறப்பது துக்கம், விருப்பம் இல்லாதவற்றுடன் சேர்ந்திருப்பது துக்கம்; பிரியமானவற்றைவிட்டுப் பிரிந்து இருப்பது துக்கம்; விரும்பியவற்றைப் பெருமல் இருப்பது துக்கம். ஐம்பொறிகளின் வாயிலாக, பற்றுதலுடன் நுகரப்படுவன அனைத்தும் துக்கம் தருவன.

இப்படி ஏற்படும் துக்கங்கள் எதனுல் ஏற்படுகின்றன?

அவாவினுல் ஏற்படுகின்றன என்று பௌத்தம் முடிவு எடுத்து இருக்கிறது.

அவா எதனுல் ஏற்படுகிறது?

அறியாமையால் — அதாவது பேதைமையால் — ஏற்படுகிறது என்று பௌத்தம் கூறுகிறது. அடியில் வரும் மணிமேகலைச் செய்யுளால் இதை நாம் அறியலாம்;

**பேதைமை** சார்வா, **செய்கை** யாகும்
செய்கை சார்வா **உணர்ச்சி** யாகும்
உணர்ச்சி சார்வா **அருவுரு** வாகும்
அருவுருச் சார்வா **வாயி** லாகும்
வாயில் சார்வா **ஊரு** கும்மே
ஊறு சார்ந்து **நுகர்ச்சி** யாகும்
நுகர்ச்சி சார்ந்து **வேட்கை** யாகும்
வேட்கை சார்ந்து **பற்று** கும்மே
பற்றிற் றேன்றும் **கருமத் தொகுதி**
கருமத் தொகுதி காரண மாக

வருமே ஏனை வழிமுறைத் தோற்றம்
தோற்றம் சார்பின் மூப்புப் பிணி சாக்காடு
அவலம், அரற்று கவலே, கை யாறெனத்
தவலில் துன்பம் தலைவரும் என்ப.

—மணிமேகலை 30 104-117

காரண காரியத் தொடர்ச்சியாய் உலகம் இப்படி இயங்கிக்கொண் டிருக்கிறது. உலகில் காரணம் இல்லாமல் காரியம் இருப்பது இல்லை; காரியம் இல்லாமல் காரணம் இருப்பது இல்லை. இதை அன்றாட வாழ்வில் நாம் தெரிந்து கொள்ள வேண்டுமானால், வெய்யல் இல்லாமல் சூரியன் இல்லை; சூரியன் இல்லாமல் வெய்யலும் இல்லை.

இதை இன்னும் சிறிது உற்றுக் கவனித்தால், காரணமும் காரியமும் — அதாவது சூரியனும் வெய்யலும் — ஒன்றுடன் ஒன்று பின்னிப் பிணைந்து பிரிக்க முடியாதபடி செயல்படுவதை நாம் பார்க்கிறோம்.

காரண காரியத் தொடர்புபற்றிய அளவோடு நின்றுகொண்டு, மனித வாழ்வை நெறிப்படுத்தப் பௌத்த முயல்கிறதேயல்லாமல், காரணம் முந்தியதா அல்லது காரியம் முந்தியதா? இவற்றில் எது முந்தியது என்னும் ஆராய்ச்சியில் நுழைந்து, வீணே காலத்தைக் கழிப்பதைப் பௌத்தம் விரும்பவில்லை. வித்து முந்தியதா அல்லது மரம் முந்தியதா என்னும்ஆராய்ச்சியில் ஒருவன் ஈடுபடுவானேயானால், அவன் எந்த ஒரு முடிவுக்கும் வர முடியாமல் திண்டாடுவதை நாம் பார்க்கலாம். இத்தகைய வீண் ஆராய்ச்சியில் இறங்கி, வீண் விவாதம் விதண்டா விவாதம் புரிவதில் பௌத்தம் அதிக அக்கறை கொள்ளவில்லை.

ஆகவே, துக்கத்துக்குக் காரணமாய் இருக்கும் (மேலே மணிமேகலைச் செய்யுளில் கூறப்பட்ட) பன்னிரண்டு நிதானங்களில், பேதைமை அவா ஆகிய இரண்டையும் களைந்து விட்டால் காரண காரியத் தொடர்ச்சியாய் இருந்து வரும் மற்ற நிதானங்கள் விலகிப் போகும்; அதன் பயனாய் ஒருவன் வீடுபேற்றை அடைய முடியும்.

பேதைமையை எவ்வாறு போக்குவது? அவாவை எவ்வாறு அறுப்புவது?

அறிவினுல் — அதாவது ஞானத்தினுல் — பேதைமையைப் போக்கலாம் என்றும், தியானத்தினுல் அவாவைக் கட்டுப்படுத்தி ஒடுக்கலாம் என்றும், பௌத்தம் போதனை செய்கிறது.

பேதைமை அவா ஆகிய இரண்டையும் போக்குவதற்கு, சில நியதிகளை — அதாவது சில சீலங்களை — பௌத்தம் வகுத்துக்கொண்டு இருக்கிறது.

இந்தச் சீலங்களில் எட்டுச் சீலங்கள் இல்லறத்தாருக்கு உரியவை; பத்துச் சீலங்கள் துறவறத்தாருக்கு உரியவை. ஐந்து சீலங்கள் முதற் படியில் இருந்துகொண்டு பௌத்தத்தைக் கடைப்பிடிக்கும் இல்லறத்தாருக்கு உரியவை. முதற் படியில் இருக்கும் இல்லறத்தார் கீழ்வரும் ஐந்து சீலங்களைக் கடைப்பிடித்து ஒழுக வேண்டும்.

(1) எந்த உயிரையும் கொல்ல லாகாது; எந்த உயிருக்கும் தீமை செய்யலாகாது; எல்லா உயிரையும் அன்போடு நேசிக்க வேண்டும்.

(2) பிறர் பொருளை விரும்பலாகாது; திருடவும் கூடாது.

(3) மனைவியைத் தவிர்த்து, வேறு மாதரோடு சிற்றின்பத் தொடர்பு கொள்ளலாகாது.

(4) உண்மையையே பேசவேண்டும்; பொய்யைத் தவிர்த்தல் வேண்டும்.

(5) மதுபானம் செய்யாதிருத்தல்.

இந்த ஐந்து சீலங்களையும் இல்லறத்தார் அவசியம் கடைப்பிடித்து ஒழுக வேண்டும். இல்லறத்தாரைப் பௌத்த சமயத்தில் உபாசகர் என்று கூறுவர். இல்லறத்திலிருந்துகொண்டே மேன்மேலும் உயர் நிலையை அடைய விரும்பும் உபாசகர் கீழ்வரும் மூன்று சீலங்களையும் சேர்த்துக் கொண்டு மொத்தம் எட்டுச் சீலங்களைக் கடைப்பிடித்து ஒழுக வேண்டும்.

(1) இரவில் மிதமான உணவு உட்கொள்ளுதல்.

(2) பூ, சந்தனம், நறுமணத் தைலம் போன்ற வற்றைப் பயன்படுத்தாதிருத்தல்.

(3) பஞ்சணை முதலியவற்றில் படுக்காது, தரை மீது பாய்விரித்துப் படுத்தல்.

மேற்கூறிய எட்டுச் சீலங்களோடு, கீழ்வரும் இரண்டு சீலங்களையும் துறவோர் கடைப்பிடித்து ஒழுக வேண்டும். துறவோர் கடைப்பிடிக்க வேண்டிய ஒழுக்கங்கள் மொத்தம் பத்து ஆகும்.

(1) இசை, நடனம், நாடகம் ஆகியவற்றில் விருப்பம் கொள்ளாமை.

(2) தங்கம், வெள்ளி முதலியவற்றைத் தொடா திருத்தல்.

இந்தத் தச சீலங்களையும் கடைப்பிடித்து, அடக்கத் துடன் வாழும் துறவியே பிக்கு எனப்படுவர்.

பிக்கு தீட்சை பெற்ற ஒருவர் மேற்கொண்டு, இரண்டு சீலங்களைக் கடைப்பிடித்து ஒழுகுவது அவசியம் ஆகும்.

*(1)* **தியானம் :** தியானம் செய்வதனால் புலன் அடக்கப் பயிற்சி உறுதிப்படுவதுடன், தீயவற்றை விலக்கவும் நல்ல வற்றை ஏற்கவும் கூடிய பக்குவ நிலை மனத்துக்கு ஏற்படுகிறது. ஆசை, கோபம், ஐயம், பரபரப்பு, மறதி ஆகியவற்றைக் களைந்து, மனத்தை ஒரு நிதான நிலையில் வைத்துக்கொண்டு, நடப்பதே சமாதி எனப்படும். இந்தச் சமாதி நிலை தியானம் செய்து பழகுவதால்தான் கூடிவரும்.

**பஞ்ஞா:** தியானம் செய்துசெய்து மனத்தைப் பரிபக்குவப் படுத்திக்கொண்டு வந்தால், **பஞ்ஞா** என்னும் உண்மை அறிவு உண்டாகும். இந்த அறிவின் துணைகொண்டு உல கத்தை உள்ளது உள்ளபடி அறிய முடியும். உலகம் அநித்திய மானது என்பதையும் துன்பத்தோடு கூடியது என்பதையும், அநாத்மிகமானது அசுத்தமானது என்பதையும் அறிய முடி யும்; அந்த அறிவின் பயனாய் பற்றுகளை அறுத்து வாழ்வதற் குரிய வழிகள் தெரியும். அவற்றின் துணைகொண்டு, ஒருவன் நிர்வாண நிலையை எய்த முடியும்.

இவைதாம் பௌத்த தருமத்தின் சாராம்சம் ஆகும். இவற்றைப்பற்றி இன்னும் சிறிது விரிவாகத் தெரிந்து கொள்ள வேண்டுமானுல், எந்த நூலில் தெரிந்துகொள்ள லாம்? அந்த நூலின் பெயர் என்ன?

இவைபற்றி, அடுத்துக் கவனிக்கலாம்.

## திரிபிடகம்

ஒவ்வொரு மதத்தினருக்கும் ஒவ்வொரு நூல் அதிமுக்கிய மானது; ஹிந்துக்களுக்கு வேதங்கள் முக்கியமானவை; கிறிஸ்துவர்களுக்குப் பைபிள் முக்கியமானது; முஸ்லிம் களுக்குத் திருக்குர்ஆன் முக்கியமான நூல். அதேபோல, பௌத்தர்களுக்கு, திரிபிடகம் என்னும் நூல் முக்கியமானது.

**திரிபிடகம்** என்ருல், மூன்று கூடைகள் என்று பொருள்.

புத்தர் பெருமான் சுமார் நாற்பத்தைந்து ஆண்டுகள் தம் சீடர் குழாத்துடன் ஊர்தோறும் சென்று, தரும உப தேசம் செய்தார். அவர் அவ்வப்போது செய்த உபதேசங் களைச் சீடர்கள் மனனம் செய்து நினைவில் வைத்திருந் தார்கள்.

புத்தர் பெருமான் மகா பரி நிர்வாணம் அடைந்த பின்பு, சீடர்கள் மனனம் செய்து வைத்திருந்த உபதேசங் களை எல்லாம் ஒருசேரத் தொகுத்து, அந்தத் தொகுப்பை மூன்று பிரிவுகளாகச் செய்தனர்; அவை வருமாறு :

**(1) விநய பிடகம்**
**(2) சூத்திர பிடகம்**
**(3) அபிதம்ம பிடகம்**

இந்த மூன்று பிடகங்களும் ஒன்றுக்கு ஒன்று தொடர் புடையன. ஆயினும் ஒவ்வொரு பிடகமும் முக்கியமாக, ஒரு குறிப்பிட்ட விஷயத்தை எடுத்துக்கொண்டு அதை விவரிக்கிறது.

விநய பிடகம் என்பது பிக்குகளும் பிக்குணிகளும் கடைப் பிடிக்க வேண்டிய ஒழுக்க நெறிகளை விவரித்து விளக்குகிறது.

சூத்திர பிடகம் என்பது, புத்தர் பெருமானின் உபதேசங்களைத் தொகுத்துக் கூறுகிறது.

அபிதம்ம பிடகம் என்பது, பௌத்த சமயக் கோட்பாடுகள், தத்துவங்கள் ஆகியவைபற்றித் தர்க்க முறையில் விளக்கி விவரிக்கிறது.

இந்த ஒவ்வொரு பிடகத்திலும் உப பிரிவுகள் உண்டு.

திரிபிடகம் பாலி மொழியில் எழுதப்பட்டு உள்ளது; மகத நாட்டு மொழி மாகதி எனப்படும். அந்த மொழியின் திரிபு, பாலி மொழி என்று ஆராய்ச்சியாளர் முடிவு செய்து இருக்கின்றனர்.

புத்தர் காலத்தில், வைதிக சமயத்தைச் சார்ந்த பிராமணர்கள், சமய போதனைகளைச் சம்ஸ்கிருத மொழி மூலமே செய்து வந்தனர். சம்ஸ்கிருத மொழி மூலமே போதனை செய்வது சிறப்பு என்று அவர்கள் கூறினர்.

புத்தர் பெருமானே தருமத்துக்குத்தான் முக்கியத்துவம் கொடுத்தாரே யல்லாமல், மொழிக்கு அவர் அவ்வளவு முக்கியத்துவம் கொடுக்கவில்லை என்று தெரிகிறது. அந்தந்தப் பிரதேச மொழியில் உபதேசித்தால்தான் மக்கள் தருமத்தை எளிதில் புரிந்துகொள்ள முடியும் என்று அவர் நினைத்தார். அதனால்தான் பாலி மொழியில் — பொது மக்கள் புரிந்து கொள்ளும் மொழியில் — அவர் உபதேசம் செய்தார்.

பெருமான் மகா பரி நிர்வாணம் எய்திய பின்னர், சுபத்திரர் என்னும் பிக்கு ஒருவர் ''இனி பெருமானின் அதிகாரமும் கட்டுப்பாடும் குறைந்து போகும். ஆகவே, ஒவ்வொரு பிக்குவும் தத்தம் இஷ்டம்போல் வாழ்வதற்குத் தடை எதுவும் இருக்காது'' என்று வெளிப்படையாகவே சொல்லிவிட்டார்.

இது விவரம் தெரியவந்ததும், கசியப மகா தேரர் என்னும் அருகத், எச்சரிக்கையாக ஒரு ஏற்பாட்டைச் செய்தார்.

புத்தர் பெருமானின் போதனைகளைத் தொகுப்பதற்கு என, ஐநூறு அருகத்துக்கள் கொண்ட ஒரு சபையை இராஜகிருக நகரை அடுத்து இருக்கும் ஐந்து குன்றுகளுள், ஒரு குன்றில் ஒரு மகாநாட்டைக் கூட்டினர். இந்த அருகத்து

களுக்குத் தேவையான வசதிகளை எல்லாம், மகத நாட்டு மன்னன் அஜாத சத்துரு செய்து கொடுத்தான்.

புத்தர் பெருமான் மகா பரி நிர்வாணம் அடைந்த பின்னர் நடந்த அருகத் சங்கத்தின் முதல் கூட்டம் இது. இதில் வினயம் பற்றிய போதனைகளையும் தருமம் பற்றிய போதனைகளையும் சீடர்களின் வாய்மொழி மூலம் கேட்டறிந்து, இவைதாம் புத்தர் பெருமானின் போதனைகள் என்று தேரர்கள் வரையறை செய்தார்கள்.

வினயம் பற்றிய போதனைகளை, உபாலி என்னும் அருகத் தொகுத்துக் கூறினார். அவர் கூறின போதனைகளில் முரண்பாடுகள் ஏற்பட்டுவிடாதபடி கவனம் செலுத்தி ஆராய்ந்து, அவற்றை வினய பிடகம் என்னும் பெயரில் தொகுத்து, சங்கத்தார் அங்கீகரித்தனர்.

இதைப் போலவே, தருமம் பற்றிய போதனைகளை, அணுக்கத் தொண்டர் ஆனந்தர் வாய் மொழி மூலம் கேட்டறிந்து, ஒப்பு நோக்கி ஆராய்ந்து ஒரு முடிவு எடுத்து, வரையறை செய்து சங்கத்தார் அங்கீகரித்தனர்.

பிக்குகளின் சங்கக் கூட்டம் கிட்டத்தட்ட ஏழு மாதங்கள் தொடர்ந்து நடந்தது. அப்போதுதான் வினயம் சம்பந்தமான போதனைகளும் தருமம் சம்பந்தமான போதனைகளும் வரையறை செய்யப்பட்டன.

ஆரம்பத்தில் இந்த இரண்டு பிடகங்களுமே, பௌத்த சங்கத்தாருக்கு வழிகாட்டிகளாக இருந்து வந்தன. பின்னர் தான் அபிதம்ம பிடகத்தையும் வரையறை செய்து, மூன்று பிடகங்கள் ஆக்கி, திரிபிடகம் என்று பெயர் சூட்டினர்.

அறம் என்பது உயர்ந்த ஒழுக்கத்தோடு தொடர்பு உடைய ஒரு நெறி.ஒழுக்கத்தைவிட்டு அறத்தையும் அறத்தை விட்டு ஒழுக்கத்தையும் பிரிப்பது சாத்தியம் அன்று. ஒழுக்கத்துக்கு வழிகாட்டி ஊக்கப்படுத்தாத அறக் கோட்பாடு, உண்மையில் அறமாக இருக்க முடியாது. ஆகவே, பௌத்த தருமத்தில் சொல்லுக்கும் செயலுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு.

சுமார் நாற்பத்தைந்து ஆண்டுகள் தொடர்ந்து பெருமான் செய்த உபதேசங்களை, அடிப்படைப் போதனை களுக்கு மாறுபடாமல் தொகுத்து வரையறை செய்து முடிவு எடுப்பது அவ்வளவு எளிய காரியமாய் முதலில் இல்லை. ஆகவே, நான்கு விதிகளைக் கொண்டு, பெருமானின் போதனை களைச் சங்கத்தார் நிர்ணயம் செய்தனர்: அந்த நான்கு விதிகளும் வருமாறு :

(1) போதனையில் அடங்கியுள்ள விஷயம்.

(2) போதனை செய்யப்பட்ட சந்தர்ப்பம்.

(3) போதனை சம்பந்தப்பட்ட நபர்.

(4) அடிப்படைக் கோட்பாடுகளான நான்கு வாய்மைகளுக்கும் இந்தப் போதனைக்கும் இடையில் நிலவும் பொருத்தம்.

இந்த நான்கு விதிகளைக் கொண்டே ஒவ்வொரு போதனையையும் சங்கத்தார் புடம் போட்டு அங்கீகரித்தனர்.

சங்கத்தார் கூடி, புத்தர் பெருமானின் போதனைகளை வரையறை செய்து, நெறிப்படுத்தியபோதிலும், அந்தப் போதனைகள் அனைத்தும் ஒலி வடிவிலேயே பிறகும் இருந்து வந்தன. அதாவது வரையறை செய்யப்பட்ட போதனை களை, மனப்பாடம் செய்து, நினைவில் வைத்துப் பிக்குகள் போற்றி வந்தார்கள்.

சில பிக்குகள், விநய பிடகத்தை மட்டும், மனப்பாடம் செய்து போற்றி வந்தார்கள். அவர்களுக்கு அதன் காரண மாக, விநயதரர் என்னும் ஒரு சிறப்புப் பெயர் ஏற்பட்டது.

அதைப் போலவே சூத்திர பிடகத்தை மனப்பாடம் செய்துள்ள பிக்குகளை, சூத்திராந்திகர் என அழைத்தனர்; அபிதம்ம பிடகத்தை மனப்பாடம் செய்துள்ள பிக்குகளை அபிதம்மிகர் என அழைத்தனர்.

குறிப்பிட்ட ஒரு பிடகத்தின் உட் பிரிவுகளில் ஏதாவது ஒன்றை, ஒரு சில பிக்குகள் மனப்பாடம் செய்து ஓதி வந்தனர். அந்தப் பிக்குகள், அவர்கள் மனப்பாடம் செய் திருக்கும் உட்பிரிவின் பெயரால் அழைக்கப்பட்டனர்,

நிகபாணகர், அங்குத்தர பாணகர், ஜாதக பாணகர், தம்மபத பாணகர் என்று அழைப்பட்டனர்.

இதுவரை ஒலி வடிவில் மட்டும் இருந்து வந்த திரிபிடகத்தை, வரி வடிவில் கொணர்ந்த பெருமை, சிங்களத் தீவினருக்கு உரியது.

மற்ற சமயங்களைப் போலவே, நாளடைவில் கருத்து வேறுபாடுகள் காரணமாக, முக்கியமான இரு பிரிவுகள் பௌத்த சமயத்தில் உண்டாயின; ஒன்றுக்கு ஹினயான பௌத்தம் என்று பெயர்; மற்றொன்றுக்கு மகாயான பௌத்தம் என்று பெயர்.

இலங்கை, பர்மா, மலேயா, தாய்லாந்து, கம்போடியா, வியத்நாம், இந்தோனேஷியா முதலிய நாடுகளில் நிலவும் பௌத்தம் ஹினயானப் பிரிவைச் சேர்ந்தது; இதைத் தேர வாதம் பௌத்தம் — அதாவது பெரியோர் கடைப் பிடிக்கும் பௌத்தம் — என்றும் கூறுவர்.

மத்திய ஆசியா, சீனம், ஜப்பான், கொரியா, மத்திய திபெத், நேபாளம் முதலிய நாடுகளில் நிலவும் பௌத்தத்துக்கு மகாயான பௌத்தம் என்று பெயர்.

கருத்து வேறுபாடுகள் காரணமாக, பற்பல பிரிவுகள் தோன்றத் தொடங்கியதும், தேர வாதப் பிரிவினர், திரிபிடகத்தின் தூய்மையைப் பேணிப் பாதுகாப்பத்தில் கவனம் செலுத்தினர். சுமார் ஐந்நூறு ஆண்டுகளாக ஒலி வடிவில் மட்டும் இருந்து வந்த திரிபிடகத்தை ஓலைச் சுவடி களில் எழுதி - அதாவது வரி வடிவில் கொணர்ந்து - திரிபிட கத்தின் தூய்மையைப் பேணிக் காப்பாற்றினர். சிங்களத் தீவை ஆண்ட வத்தகாமினி அபயன் என்னும் அரசன், போற்றத் தகுந்த இந்தக் காரியத்தைச் செய்தான்.

முதன் முதலாகப் பாலி மொழியில்தான் வரி வடிவில் எழுதப்பட்டது; பின்னர் சம்ஸ்கிருத மொழியிலும், சிங்கள மொழி, பர்மிய மொழி, சயாமிய மொழி ஆகியவற்றி லும் மொழிபெயர்க்கப்பட்டது.

திரிபிடகத்தை ஆழ்ந்து படித்தால், சுமார் இரண்டா யிரத்து ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்னர், இமயத்திலிருந்து

கங்கை நதித் திரம்வரை பரவியிருந்த சமய வாதங்கள், பழக்க வழக்கங்கள், புத்தர் பெருமானின் போதனைகள், ஆகியவற்றை உள்ளங்கை நெல்லிக் கனிபோல, யாரும் தெரிந்துகொள்ளலாம்.

## சிறப்பு அம்சங்கள்

பால் என்னும் சொல், எத்தனையோ வகையான பாலைக் குறிக்கும். அந்தச் சொல் பசும்பாலைக் குறிக்கும்; எருமைப் பாலைக் குறிக்கும்; கழுதைப் பாலைக் குறிக்கும். புலிப் பாலை யும் குறிக்கும். எல்லாப் பாலையும் பொதுவாக நாம் பால் என்று வழங்கியபோதிலும், பசும் பாலுக்கும் எருமைப் பாலுக்கும் இடையே நிச்சயம் வேற்றுமை உண்டு; அதே போல, கழுதைப் பாலுக்கும் கள்ளிப் பாலுக்கும் இடையே வேற்றுமை உண்டு.

இதைப்போலவே, சமயவாதிகள் பொதுவாகச் சில சொற்களைப் பயன்படுத்துகின்றனர். கடவுள், தருமம், மோட்சம், நரகம் ஆகிய சொற்களை எல்லாச் சமயத்தின ரும் பொதுவாக உபயோகப்படுத்தியபோதிலும், ஒவ்வொரு சமயவாதியும் அந்தந்தச் சொற்களை வெவ்வேறு பொருளில் பயன்படுத்துகின்றார். முக்கியமான இந்த உண்மையை நினைவில் பதித்துக்கொள்வது மிக மிக அவசியம் ஆகும்.

மிகவும் மேம்பட்டதாகக் கருதித் தாங்கள் வழிபடும் ஒரு பொருளைக் குறிக்க, சைவர்களும் வைணவர்களும் கடவுள் என்னும் ஒரே சொல்லைப் பயன்படுத்துகிறார்கள். ஆனால், கடவுளின் தன்மையை விவரிக்க முற்படும்பொழுது, இரு சமயத்தவரும் பெரிதும் வேறுபட்டுவிடுகிறார்கள். காத்தல் சக்தி மிகுதியும் உடையவர்தான் கடவுள் என்று வைண வர்கள் கூறுகிறார்கள். சைவர்களோ, அழித்தல் சக்தியை அதிகமாக உடையவர்தான் மேம்பட்ட கடவுள் என்று கூறுகின்றனர். கடவுள் அவதாரம் எடுப்பார் — அதாவது பிறப்பார் — என்று வைணவர்கள் கருதுகின்றனர். சைவர்கள் சிவனைப் பிறவா யாக்கைப் பெரியோன் என்கின்றனர்,

எனவே கடவுள் என்னும் சொல்லை, இந்த இரு சமயத்தின ரும் வெவ்வேறு பொருளில் பயன்படுத்துவதை நாம் அறியலாம்.

இதே போலத்தான், தருமம், மோட்சம், நரகம், கருமம் ஆகிய சொற்களை, ஒவ்வொரு சமயத்தினரும் வெவ்வேறு பொருளில் வழங்குகின்றனர்.

உதாரணமாக, உயிர்க் கொலை செய்து வேள்விகள் புரி வதை, வைதிக சமயத்தினர் அறமாகக் கொண்டுள்ளனர்; ஆனால் ஜைனர்களும், பௌத்தர்களும் வேள்வி செய்வதை ஒரு அறமாகக் கொள்ளவில்லை.

இதைப்போலவே மோட்சம் சம்பந்தமாக ஒவ்வொரு சமயத்தினரும் வெவ்வேறு கருத்தைக் கொண்டிருப்பதை நாம் காணலாம்.

பரமாத்வோடு ஜீவாத்மா இரண்டறக் கலப்பதையே, வேதாந்திகள் மோட்சம் என்கிறார்கள். ஆனால், வைதிக சமயத்தின் கிளைச் சமயவாதிகளான சைவர்களும் வைண வர்களும் இரண்டறக் கலத்தலை, மோட்சமாக ஒப்புக் கொள்வது இல்லை. ஜீவாத்மா பரமாத்வோடு இரண்டறக் கலக்க முடியாது என்றும், பந்த பாசங்களிலிருந்து விடுபட்ட ஜீவாத்மா, இறைவனின் திருவடி நீழலை அடைந்து, பேரா னந்த நிலையில் திளைப்பதே மோட்சம் என்று சைவர்களும், நித்திய சூரிகளாய் இருந்து, திருமாலின் திவ்விய மங்கள ரூபத்தைத் தரிசித்து, பேரானந்த மடைவதே மோட்சம் என்று வைணவர்களும் கூறுகிறார்கள்.

ஜைனர்களோ, பந்த பாசங்களிலிருந்து விடுபட்டு, ஒளி மயமாகப் பிரகாசிக்கும் மேலான ஒரு நிலையை ஆத்மா அடைவதே மோட்சம் என்று கூறுகின்றனர். ஆகவே நிலை யான ஆத்மா என்பது உண்டு என்பதில் ஜைனர்களுக்கு உடன்பாடு உண்டு. ஆனால் ஏகான்ம வாதத்தை ஜைனர்கள் ஒப்புக்கொள்வது இல்லை. பல கோடிக்கணக்கான ஜீவன்கள் நித்தியமாய் இருக்கின்றன என்று அவர்கள் கூறுகிறார்கள்.

பௌத்தர்களோ நிலையான ஆத்மா என ஒன்று கிடை யாது என்றும், கோடிக்கணக்கான ஆத்மாக்களும் கிடை

யாது என்றும் பல பொருள்கள் தன்னிச்சையாக ஒன்று சேரும்போது, உயிர் என்பது உண்டாகிறது என்றும், பிறகு மாற்றங்களின் காரணமாக அந்தப் பொருள்கள் பிரியும் போது பந்த பாசங்களிலிருந்து விடுபட்டு இருக்குமானால், அந்த உயிர் சூனிய நிலையை அடைகிறது என்றும், அதுவே நிர்வாணம் என்று கூறுகின்றனர்; பந்த பாசங்களிலிருந்து விடுபடாத உயிர், தத்தம் கருமத்துக்கு ஏற்றவாறு மறு பிறவி எடுக்கிறது என்றும் கூறுகின்றனர்.

ஆகவே ஆத்மாபற்றியும், அது மோட்ச நிலை அடைவது குறித்தும் பௌத்தர்கள் கொண்டுள்ள கருத்து, மற்ற சமயத்தவர் கொண்டுள்ள கருத்துக்கு முற்றும் மாறுபட்டது என்பதை நாம் அறிகிறோம்.

இங்கு வாசகர்களுக்குச் சிறிது குழப்பம் நேரலாம். பௌத்தக் கண்ணோட்டத்தோடு நோக்கினால்தான் குழப்பம் அகலக் கூடுமே யன்றி, வேறு வகையில் அந்தக் குழப்பத்தைப் போக்கிக்கொள்ள வழியில்லை.

பௌத்தர்கள் மறு பிறப்பை ஒப்புக்கொள்கிறார்கள்; ஊழ்வினைப் பயன் உண்டு என்பதை ஒப்புக்கொள்கிறார்கள்; மோட்சம் உண்டு என்பதை ஒப்புக்கொள்கிறார்கள்.

இந்த மூன்றையும் ஒப்புக்கொள்பவர்கள் நிலையான ஆத்மா ஒன்று உண்டு என்பதை ஒப்புக்கொள்ள வில்லையே. ஏன்?

பௌத்தர்கள் ஆத்மாபற்றிக் கொண்டிருக்கும் கருத்துக்களும், மற்ற மதத்தினர் கொண்டிருக்கும் கருத்துக்களுமே இதற்குக் காரணம் ஆகும்.

ஆற்று நீரின் ஓட்டம் போலவும், ஒளியின் வேகத்தைப் போலவும், கணத்துக்குக் கணம் ஒவ்வொரு பொருளிலும் மாற்றம் ஏற்பட்டுக்கொண்டே இருக்கிறது. மாற்றம் வெகு விரைவாக நடைபெறுவதனால், நிலையானது போன்ற ஒரு பொய்த் தோற்றத்தை அந்த மாற்றம் உண்டுபண்ணுவதால், நிலையானது என்று நாம் மயங்கிவிடுகிறோம். ஒரு கணத்துக்கு முன்னே நாம் பார்த்த ஒளியும், இப்பொழுது

நாம் பார்க்கும் ஒளியும் ஒரே ஒளியன்று; ஒளியின் வேகம், அது நித்தியமானது என நம்மை நம்பச் செய்கிறது.

நிலையான ஆத்மா என்பது ஒன்று இல்லையாயின், மறு பிறப்பு உண்டு என்று பௌத்தர்கள் கூறுவது, ஏற்றுக் கொள்ளத்தக்க ஒரு உண்மையாக எப்படி இருக்க முடியும் என்று மற்ற சமயவாதிகள் கேட்கின்றனர்.

உயிர் என்பது வேறு, மற்றவர்கள் கூறும் நிலையான ஆத்மா என்பது வேறு. இரண்டையும் ஒன்றுபடுத்திக் குழப்பிக்கொள்ளக் கூடாது என்று பௌத்தர்கள் கூறுகின்றார்கள்.

கௌதம புத்தர் காலத்தில் ஆத்மாவைப்பற்றிப் பல விசித்திரமான கருத்துக்கள் நம் நாட்டில் நிலவின. வைதீக சமயத்தினர் போற்றும் உபநிடதங்களிலேயே, ஆத்மா பற்றிய கருத்துக்களில் வேறுபாடுகள் இருப்பதை நாம் காணலாம்.

> ஆன்மா உள்ளத்துள் இருக்கிறது. அது அரிசியை விட, வால்கோதுமையைவிட, கடுகைவிட, சம்பா நெல்லையோ சம்பா அரிசியையோவிடச் சிறிதாக இருக்கிறது.'' சாந்தோக்கிய உபநிடதம். *(3, 14, 3)*
>
> ''புருடனுன ஆன்மா, மனோமயன், ஒளியாகவும் வாய்மையாகவும் இருப்பவன்.'' பிருகதாரணிய உபநிடதம் *(5, 6, 1)*
>
> ''அங்குட்ட அளவுள்ளவன் ஆன்ம புருடன்'' கடோபநிடதம். *(2, 4, 12)*

ஒரு உபநிடதம் ஆன்மா அரிசி அளவு உள்ளது என்று கூறுகிறது. மற்றொன்று அங்குட்ட அளவு — அதாவது பெருவிரல் அளவு — என்று கூறுவதைக் கவனிக்க.

தான் புகலிடம் கொள்ளும் உடலுக்குத் தக்கவாறு, சிறிதாகவோ பெரிதாகவோ ஆன்மா இருக்கும் என்பது ஜைனர்களின் கொள்கை. ஒரு எறும்பின் உடலை ஆன்மா புகலிடமாகக்கொண்டால், அந்த எறும்பின் அளவுக்கு, அதன் ஆன்மா சிறிதாக இருக்கும்; யானையின் உடலில் புகலிடம்

கொண்டால், யானையின் உடல் அளவு அந்த ஆன்மா பெரிதாக இருக்கும்.

இப்படி ஆன்மாவைப்பற்றிப் பல்வேறு கருத்துக்கள் புத்தர் காலத்தில் நிலவின.

இது எதைக் காட்டுகிறது? ஆன்மா என ஒன்று திட்ட வட்டமாக இல்லாதபடியால், தத்தம் மன இயல்புக்கு உகந்தவாறு, ஆன்மாவைப் பற்றிப் பலரும் பலவாறு கூற லாயினர்.

இதனுல் இரு விதமான பயன்கள் ஏற்பட்டன. ஆன்மாவை யாராலும் அழிக்க முடியாது. அது நிலை யானது என்னும் கருத்தைக் கொண்டவர்கள், அசுவமேதம் நரமேதம் போன்ற உயிர்க் கொலை வேள்விகளில் ஈடுபட்டு, கேளிக்கை வாழ்க்கை நடத்தினர். வினைப் பயனுல் ஆன்மா கண்டுண்டு கிடப்பதாகக் கருதிய ஜைனர் போன்ருேர் கடுமையான தவ வாழ்வை மேற்கொண்டனர்.

இந்த இரண்டு போக்குகளுமே தவருனவை என்று புத்தர் கருதினுர். யானையைப் பார்த்திராத குருடர்கள் நால்வர், தான் தொட்டுப் பார்த்த யானையின் உறுப்பையே யானை என்று சாதித்ததைப் போல, ஆன்மவாதிகளும் ஆன்மாவைப்பற்றிக் கூறுகின்றனர் என்று பெருமான் முடிவுக்கு வந்தார். இல்லாத ஒன்றை இருப்பதாக நினைத் துக்கொண்டு, இடர்ப்படுவது கூடாது என்று அவர் கருதி னுர். ஆகவே, பயனற்ற ஆன்மவாதத்தை விட்டு ஒழித்து, மத்திய வழியை அவர் மேற்கொண்டார். அதனுல் பௌத்த சமயத்தில் கேளிக்கை வாழ்வுக்கும் இடம் இல்லை; கடும் தவ வாழ்வுக்கும் இடம் இல்லை.

ஆன்மா என்பது ஒன்று இல்லையாயின், பௌத்த சமய சம்பிரதாயப்படி, மறு மறு பிறவிகள் எடுப்பதற்கு வித்தாக இருப்பது எது? நிர்வாண நிலையை அதாவது மோட்ச நிலையை அடைவது எது? என்ற கேள்விகள் தாமே பிறக் கின்றன. இந்தக் கேள்விகளுக்குப் பௌத்தர்கள் கூறி இருக்கும் விடைகள் வருமாறு:

கரும பந்தமுடைய மனம் மறு பிறவி எடுக்கிறது என்றும், கரும பந்தங்களை விட்டு ஒழித்த மனம் நிர்வாணப் பேற்றை - அதாவது சூனிய நிலையை - அடைகிறது என்றும், அதுவே மோட்சம் என்றும் கூறி இருக்கின்றனர்.

நிர்வாணம் - அதாவது மோட்சம் - என்பது, சுய அனுபவத்தினால் மட்டுமே தெரிந்துகொள்ளக் கூடிய ஒரு நிலை என்றும், பிறர் கூறுவதைக் கேட்டு, அதைத் தெரிந்து கொள்ள முடியாது என்றும் பௌத்த நூல்கள் கூறுகின்றன. இந்த நிலையை அடியில் வரும் பௌத்தக் கதை அழகாக விவரிக்கிறது.

ஒரு பெரிய குளத்தில் ஒரு சமயம் மீன் ஒன்று வசித்து வந்தது. நீர்நிலைகளைத் தவிர்த்து, வேறு இடங்களில் மீன்களால் வசிக்க முடியாது. ஆகவே, அந்த மீன், அல்லும் பகலும் குளத்திலேயே வசித்து, தனது காலத்தையும் பொழுதையும் கழித்து வந்தது.

ஒரு நாள் அந்த மீன் குளத்து நீரில் அங்கும் இங்கும் நீந்திக்கொண்டிருந்தபோது, தன் நண்பன் ஆமையைச் சந்தித்தது. உடனே அது ஆமையிடம், ''நண்பனே! பல நாள்களாக உன்னை நான் சந்திக்க முடியவில்லையே ஏன்? நீ எங்கு போயிருந்தாய்? சௌகரியமாய் இருக்கிறாயா?'' என்று விசாரித்தது.

அதற்கு ஆமை, ''நண்பனே! தண்ணீர் இல்லாத நிலப் பகுதிக்குச் சென்று, உல்லாசமாகச் சுற்றிப் பார்த்துவிட்டு இப்பொழுதான் திரும்பினேன்'' என்று பதில் சொல்லிற்று.

இதைக் கேட்டதும், மீனுக்கு ஆச்சரியம் தாங்க முடியவில்லை. அது ஆமையை நோக்கி, ''என்ன நண்பா! நீ இப்படிச் சொல்லுகிறாய்? என்னிடம் நீ விளையாடுகிறாயா என்ன? நீர் இல்லாத நிலப் பகுதியும் உலகில் உண்டா என்ன? அப்படி ஒரு பகுதி இருப்பது சாத்தியமா? என்றால் உன் கூற்றை நம்ப முடியவில்லை. உலகில் வறண்ட நிலப் பகுதியே இருக்க முடியாது. அதை நான் பார்த்ததும் இல்லை'' என்று கூறிற்று.

மீன் இவ்வாறு மறுத்துக் கூறியதும் ஆமை அதை நோக்கி, ''நீரில்லாத நிலம் இருக்கிறது என்று நான் சொல்லுகிறேன்; நீயோ அதை நம்ப மறுக்கிருய். அப்படி நீ நம்பிக்கை கொள்வதைத் தடுக்க யாருக்கும் உரிமை கிடையாது. அதேபோல, வறண்ட நிலப் பகுதி உலகில் உண்டு என்று நான் கூறுவதையும் யாராலும் மறுக்க முடியாது'' என்று அமைதியாகப் பதில் சொல்லிற்று.

ஆமை இவ்வாறு உறுதியோடு கூறியதும், மீன் அதனிடம், ''ஆமையாரே! அறிவோடு சிறிது விளக்கமாகக் கூறும். வறண்ட நிலம் என்பது எப்படி இருக்கும்? எப்பொழுதும் அது ஈரமாக இருக்குமா?'' என்று வினவிற்று.

''ஈரமாக இருக்காது'' என்று ஆமை பதில் சொல்லிற்று.

''அப்படியானுல் குளிர்ச்சியாய் இருக்குமா?'' என்று வினவிற்று மீன்.

''இருக்காது'' என்று பதில் சொல்லிற்று ஆமை.

''சரி. கடினமாய் இராமல் நான் நீந்துவதற்கு ஏற்றவாறு வறண்ட நிலம் மென்மையாய் இருக்குமா? தடையில்லாமல் தாராளமாக என்னுல் நிலத்தில் நீந்த முடியுமா?'' என்று விசாரித்தது மீன்.

''நிலம் மென்மையாய் இராது; அதில் உன்னுல் நீந்தவும் முடியாது'' என்று பதில் சொல்லிற்று ஆமை.

''அப்படியானுல் நிலத்தால் அங்கும் இங்கும் ஓட முடியுமா? அல்லது நகர முடியுமா?'' என்று வினவிற்று மீன்.

''நிலத்தால் நகரவும் முடியாது; ஓடவும் முடியாது'' என்று கூறிற்று ஆமை.

''ஓடைபோல் ஓடவும் முடியாது; மெல்ல மெல்ல நகரவும் முடியாது என்ருல் நிலத்தின்மீது அலைகள் உண்டா? அலைகள்மீது நுரைகள் பொங்குமா?'' என்று வினவிற்று மீன்.

''நிலத்தின்மீது அலைகளும் எழும்பாது. நுரைகளும் பொங்காது'' என்று பதில் கூறிற்று ஆமை.

ஆமை கூறின பதில்களைக் கேட்டதும் மீனுக்கு வியப்பும் வெறுப்பும் தாங்க முடியவில்லை. அது ஆமையிடம் ''என்ன

ஆமை நண்பரே! எதைக் கேட்டாலும் இல்லை, முடியாது, இருக்காது என்று பதில் சொல்லுகிறீரே! நீர் சொல்லும் நிலத்தில் எதுவுமே இருக்காதா? நிலம் என்பது இருந்தும் இல்லாதுபோல அல்லவா தோன்றுகிறது! அப்படியானல் நிலம் என்பது ஒரு பாழ் இடம் என்று சொல்லும்'' என்று கூறிற்று மீன்.

மீன் இவ்வாறு குத்தலாகச் சொன்னதும் ஆமை அதனிடம் ''நண்பா! நிலம் ஒரு பாழ் இடம் என்ற கருத்து உனக்கு இருக்குமாயின், அதை யாராலும் மாற்ற முடியாது. உன்னைப் போன்ற சிறுமைப் புத்திக்காரனுக்கு, அனுபவ ஞானம் இல்லாதவனுக்கு, நிலத்தைப்பற்றி எவ்வளவுதான் விளக்கிச் சொன்னலும் புரிந்துகொள்ள முடியாது; புரிய வைக்கவும் பிறரால் முடியாது'' என்று பதில் சொல்லிவிட்டு, மீனிடம் விடைபெற்றுக்கொண்டு, ஆமை மீண்டும் நிலத்துக்குத் திரும்பிவிட்டது.

சுய அனுபவத்தால் மட்டுமே, பேருண்மைகளை யாராலும் அறிய முடியுமே யன்றி, அனைத்தையும் அனைவராலும் அனுபவ மில்லாமல் அறிய முடியாது; அவற்றை எவ்வளவு தான் விளக்கிச் சொன்னலும் அவர்களுக்குப் புரியாது.

அதைப் போலவே, நிர்வாணம் என்பது சுய அனுபவத்தால் தெளிந்து தெளிய வேண்டிய ஒரு மனநிலை ஆகும் என்று பௌத்தம் போதனை செய்கிறது.

இந்தப் பேருண்மையை மனத்தில் நன்கு பதிய வைத்துக் கொண்டு நோக்கினல், பௌத்தம் கூறும் அநித்தியம், அநாத்துமம், துக்கம் ஆகிய உண்மைகளை நாம் தெரிந்து கொள்ள முடியும்.

மறு பிறவி எடுப்பது மனம்தான்; வீடு பேற்றை அடைவதும் மனம்தா னெனின், அது உயர்நிலையை எய்துவதற்கும், தாழ்நிலையை எய்துவதற்கும் காரணமாய் இருப்பது எது?

ஒருவனுடைய உயர்வுக்கும் தாழ்வுக்கும் காரணமாய் இருப்பது, அவனவன் செய்யும் நல்வினை தீவினைகளே - அதாவது கருமமே - என்று பௌத்தம் போதனை செய்கிறது.

ஆகவே, கருமத்தைப்பற்றி, இனிக் கவனிக்கலாம்.

# கருமம்

நாம் வாழும் இந்த உலகத்தைச் சுற்றுமுற்றும் கவனித்து ஆராய்ந்து பார்த்தால், பல்வேறு காட்சிகளை நாம் காண்கிறோம்.

இந்த உலகில் ஏழைகள் இருக்கிறார்கள்; பணக்காரர்கள் இருக்கிறார்கள்; அறிவாளிகள் இருக்கிறார்கள்; மடயர்கள் இருக்கிறார்கள்; பலசாலிகள் இருக்கிறார்கள்; நோஞ்சான்கள் இருக்கிறார்கள்; அழகிலும் ஆரோக்கியத்திலும் சிறந்தவர்கள் இருக்கிறார்கள்; அவலட்சணமானவர்களும் ஆரோக்கியத்தில் குறைந்தவர்களும் இருக்கிறார்கள். நல்லவர்கள். இருக்கிறார்கள்; கெட்டவர்கள் இகுக்கிறார்கள் முயற்சியுடையவர்கள் இருக்கிறார்கள்; சோம்பேறிகள் இருக்கிறார்கள்; அதிகார வெறிபிடித்தவர்கள் இருக்கிறார்கள்; அஞ்சிக் கீழ்ப்படியும் அடிமைகளும் இருக்கிறார்கள். கல்லாமலே சிலர் ஞானிகளாய் விளங்குகிறார்கள்; கற்றும் சிலர் மூடர்களாய் இருக்கிறார்கள். சிலர் குழந்தைப் பருவத்திலே இறந்து போகிறார்கள். சிலர் நரை திரை மூப்பு வந்து, தள்ளாடித் திரிந்து, பிறகு சாகிறார்கள்.

இந்த வேறுபாடுகளுக்கு எல்லாம் காரணம் யாது? இதுபற்றி ஆராய்ந்த அறிஞர்கள், தத்தம் கருத்துக்களைத் தெரிவித்து இருக்கிறார்கள்.

''எல்லாம் அவன் செயல்.'' ''அவனன்றி ஓர் அணுவும் அசையாது.'' கருணையும் இரக்கமும் கொண்ட ஆண்டவனுடைய திருவுளப்பாங்கின்படிதான் இந்த உலகம் நடைபெறுகிறது. மேலான நிலையை நாம் அடைய வேண்டுமாயின், ஆண்டவனுடைய அருளைப் பெற நாம் முயல வேண்டும்; அதன் பொருட்டு இறைவனை நாம் வழிபட வேண்டும். தம்மை வழிபடுகிறவர்களுக்கு இறைவன் அருள் சுரப்பான்; வழிபடாதவர்களை இறைவன் தண்டிப்பான். உலகில் காணப்படும் வேற்றுமைகளுக்கு எல்லாம் இறைவனே காரணம் என்று கூறுகிறார்கள்.

கடவுள் ஒருவர் உண்டு என்னும் கொள்கையை, பௌத்தர்கள் ஏற்பது இல்லை. உலகில் காணப்படும் வேறுபாடுகள் யாவும் அவரவர் செய்யும் வினைகளின் பயனாய் ஏற்படுகின்றனவே யன்றி, கடவுள் காரணம் அன்று என்று அவர்கள் கூறுகிறார்கள்.

வாழ்க்கையில் காணப்படும் ஏற்றத் தாழ்வுகளுக்கு எல்லாம் கடவுள்தான் காரணம் எனின், கடவுள் எப்படி அருளாளனாக இருக்க முடியும்? அவனை அன்புடையவன் என்று கூறுவது எவ்வாறு பொருந்தும்? அவன் எல்லாம் வல்ல இறைவன் என்பதையும் எவ்வாறு ஒப்புக்கொள்ள முடியும்? என்பது பௌத்தர்களின் வாதம்.

வாழ்க்கையில் காணப்படும் ஏற்றத் தாழ்வுகளுக்குக் கடவுள் காரணம் அன்று; பாரம்பரியமும் சூழ்நிலைகளுமே காரணம் என்று வேறு சிலர் வாதம் செய்கின்றனர்.

இந்த வாதத்தையும் பௌத்தர்கள் ஏற்கவில்லை. ஏனெனில் ஒரே கருவில் பிறந்த இரட்டைக் குழந்தைகள், ஒரே சுற்றுச்சார்பில் வாழ்ந்தபோதிலும் அந்தக் குழந்தைகள், குணத்திலும் நடத்தையிலும், அறிவிலும் வேறுபட்டு இருப்பதை நாம் காண்கிறோம். இது மட்டுமல்லாமல், கல்வி அறிவு கொஞ்சமும் இல்லாத பெற்றோருக்குப் பிறந்த குழந்தை அறிவிலும் ஆற்றலிலும் சிறந்து விளங்குவதை நாம் பார்க்கிறோம். உலகப் பிரசித்தி பெற்ற நாடக ஆசிரியர் ஷேக்ஸ்பியரின் பெற்றோர், கல்வி வாசனை சிறிதும் இல்லாதவர்கள். ஆனால் அவர்களுக்குப் பிறந்த ஷேக்ஸ்பியரோ உலக மகா கவிகளில் ஒருவராக உயர்ந்த நிலையை எய்தியுள்ளார். ஆகவே உலகில் மாந்தரிடையே காணும் ஏற்றத் தாழ்வுகளுக்கு, பாரம்பரியமும் சூழ்நிலைகளுமே காரணங்கள் ஆகா என்று பௌத்தர்கள் கருதுகிறார்கள்.

மக்களிடையே காணப்படும் ஏற்றத் தாழ்வுகளுக்குப் பாரம்பரியமும் சூழ்நிலைகளும் அடிப்படைக் காரணமாக இருக்க முடியாது. முற்பிறவியில் நாம் செய்த வினைகளும், இந்தப் பிறவியில் நாம் செய்துவரும் செயல்களுமே காரணம் என்று அவர்கள் கூறுகிறார்கள். நாம் செய்யும் செயல்களே

நமது ஏற்றத் தாழ்வுகளுக்குக் காரணங்கள் ஆகுமே யன்றி, வேறு எந்தக் காரணமும் இல்லை என்பது பௌத்தர்களின் கொள்கை.

ஒரு முறை சுபன் என்னும் வாலிபன் ஒருவன் புத்தரை அணுகி, ''பெருமானே! உலகில் மக்களிடையே ஏற்றத் தாழ்வுகள் நிலவுவதற்குக் காரணம் என்ன? ஒருவன் அறிவாளியாயும் மற்றொருவன் மடயனாயும் ஒருவன் நல்லவனாயும் மற்றொருவன் தீயவனாயும், ஒருவன் நோயாளி யாயும் மற்றொருவன் திடகாத்திரனாயும், ஒருவன் ஏழை யாயும் மற்றொருவன் பணக்காரனாயும் இருக்கக் காரணம் என்ன?'' என்று கேட்டான்.

அதற்குப் பெருமான், ''தாம் தாம் செய்யும் கருமங் களின் விளைவாகவே, மாந்தரிடையே வேற்றுமைகள் நிலவு கின்றன'' என்று சுருக்கமாகப் பதில் சொன்னார்.

ஆகவே வாழ்வில் காணப்படும் ஏற்றத் தாழ்வுகளுக்கு, பௌத்தர்களின் கருத்துப்படி கருமம்தான் காரணம் என்றால், கருமம் என்பது என்ன? அது எத்தனை வகைப் படும்? எது நல்ல கருமம்? எது கெட்ட கருமம்? எந்த எந்தக் கருமங்களைச் செய்தால் ஒருவன் நிர்வாணப் பேற்றை அடையலாம்?

கருமம் என்னும் சொல், இங்கு செயலைக் குறிக்கும்; அப்படியானால் செயலுக்குத் தூண்டுகோலாய் இருப்பது எது? மனோ எழுச்சி என்பது பௌத்தர்களின் கொள்கை. இந்தக் கருத்தை ஒப்புக்கொண்டால், மனோ எழுச்சிதான் கருமத்தின் பிறப்பிடம் எனலாம். மனத்தில் உதிக்கின்ற எண்ணம் பிறகு சொல்லாகவும் செயலாகவும் விரிவடை கிறது. ஆகவே எண்ணம், சொல், செயல் ஆகிய மூன்றும் கருமம் என்னும் சொல்லில் அடங்கும். அதாவது மனத் தாலும் வாக்காலும் காயத்தாலும் செய்யப்படும் செயல்கள் அனைத்தையும் கருமம் என்னும் சொல் குறிக்கும்.

மனத்தாலும் வாக்காலும் காயத்தாலும் ஏற்படும் கருமங்களை, நற்கருமங்கள், தீய கருமங்கள் என இரு பெரும் பிரிவுக்குள் அடக்கலாம்.

புத்தர் பெருமான் போதித்தவற்றைக் கடைப்பிடித்து ஒழுகுவது நற்கருமத்தின்பாற்படும். அவர் விலக்கியவற்றைக் கடைப்பிடித்து ஒழுகுவது தீய கருமத்தின்பாற்படும்.

பயின்று பயின்று, தீய கருமங்களை விலக்கவும் நல்ல கருமங்களைக் கடைப்பிடித்து ஒழுகவும் ஒருவன் பழகி வர வேண்டும்.

இந்தப் பழக்கத்தின் பயனாய், நல்லவற்றை மட்டுமே கடைப்பிடித்து ஒழுகக் கூடிய ஒரு மனப் பக்குவம் ஒருவனுக்கு ஏற்படும். பிறகு நல்ல செயல்களையும் விட்டொழித்து, விருப்பு வெறுப்புகளைக் கடக்கும் ஒரு மனநிலை உருவாகும். அந்தப் பரிபக்குவ நிலை மனத்துக்கு உண்டானதும், நிர்வாணப் பேற்றை அடைவதற்கு உரிய தகுதி ஒருவனுக்கு ஏற்பட்டுவிடும்.

நற்செயலையும் தீச் செயலையும் விட்டொழித்த ஒரு சம நிலை மனத்துக்கு ஏற்படும்போதுதான், நிர்வாணப் பேறு கிட்டும் என்று பௌத்தம் கூறுகிறது.

நற்செயல்களையும் தீச் செயல்களையும் விட்டு ஒழிப்பது அவசியம்தான்; எனினும் இரண்டையும் நினைத்த நேரத்தில் விட்டொழித்துவிட யாராலும் முடியாது. பயிற்சியின் மூலம் முதலில் தீமைகளை விட்டுவிட முயல வேண்டும்; அவற்றோடுகூட நற்கருமங்களைச் செய்து செய்து பழகி வர வேண்டும். இவ்வாறு செய்து வந்தால் நற்செயல்களையும் விட்டுவிடக் கூடிய பரிபக்குவம் மனத்துக்கு உண்டாகும்.

இதற்கு முதற் படியாக, பத்துத் தீய ஒழுக்கங்களை விட்டு விடுமாறு பௌத்தம் போதனை செய்கிறது. இவற்றில் மூன்று மனத்தைப் பற்றியன; நான்கு வாக்கைப் பற்றியன; மூன்று காயத்தை — அதாவது உடலைப்—பற்றியன.

அவா, வெறுப்பு, தவறான சிந்தனை இந்த மூன்றும் மனம்பற்றிய தீமைகள் ஆகும்.

பொய் சொல்லுதல், பிறரை இகழ்ந்து பேசுதல், பிறர் பற்றிக் கோள்சொல்லுதல், பயனில்லாத பேச்சுக்களைப் பேசுதல், இந்த நான்கும் வாக்கு சம்பந்தமான தீமைகள் ஆகும்.

கொலை செய்தல், திருடுதல், விபச்சாரம் செய்தல் இந்த மூன்றும் உடலால் ஏற்படும் குற்றங்களாகும்.

இந்தப் பத்துக் குற்றங்களையும் ஒருவன் அகற்றுவதில் வெற்றி பெற்றுவிடுவானாயின், அதன் பின்னர், நன்மைகள் செய்வதைத் தவிர்த்து அவனால் வேறு ஒன்றும் செய்ய முடியாது. அது மட்டும் அல்லாமல், பற்றின்றி நல்ல காரியங்களைச் செய்யக் கூடிய பரிபக்குவம் அவனுக்குப் பழக்கமாகி விடும்.

உலகில் காணப்படும் ஏற்றத் தாழ்வுகளுக்கு, முற்பிறவிகளில் செய்த கருமங்கள் மட்டுமே காரணம் அன்று; இந்தப் பிறவியில் செய்யப்படும் கருமங்களும் காரணம் ஆகும்.

அவனவன் செய்யும் கருமங்களுக்கு ஏற்ப, ஒருவனுக்குப் பாவ புண்ணியங்கள் ஏற்படுகின்றன. பௌத்த சமய சம்பிரதாயப்படி, அறிந்து தெரிந்து செய்யப்படும் கருமங்களுக்குத்தான் பாவ புண்ணியங்களின் தொடர்பு உண்டு; அறியாமல் தெரியாமல் செய்யப்படும் கருமங்கள் அவனுடைய பாவ புண்ணியங்களைப் பாதிப்பது இல்லை.

உதாரணமாக, பூசலின் காரணமாக, மூக்கனுடைய வீட்டை ராக்கன் எரித்துவிடுகிறான் என வைத்துக்கொள்வோம்; இது அறிந்து தெரிந்து செய்த ஒரு தீமை ஆகும். இந்தத் தீய செயலுக்கு உரிய பலனை, இந்தப் பிறவியிலோ அடுத்தடுத்த பிறவியிலோ அனுபவியாமல் ராக்கனால் தப்ப முடியாது.

அப்படியின்றி, ஒருவன் பற்ற வைத்த நெருப்பு, தற்செயலாக — அதாவது காற்றின் காரணமாகவோ, கவனக் குறைவின் காரணமாகவோ அடுத்த வீட்டை எரித்துவிடுவதாக வைத்துக்கொள்ளுவோம். இது அவன் அண்டை வீட்டுக்காரனுக்கு அறியாமல் செய்த தீச் செயல் ஆகும். இத்தகைய நிகழ்ச்சி எதுவும் ஒருவனுடைய வாழ்க்கையில் ஏற்படுமாயின் அதனால் பாவ புண்ணியம் எதுவும் அவனுக்கு ஏற்படுவது இல்லை'' என்று பௌத்தம் கூறுகிறது.

ஆனால், மற்ற சமயத்தினர் இதை ஏற்கவில்லை. அறிந்து தொட்டாலும் சரி, அல்லது அறியாமல் தொட்டாலும் சரி' தொட்டவனை நெருப்பு சுடாமல் விடாது; அதே போல, அறிந்து செய்தாலும் சரி, அல்லது அறியாமல் செய்தாலும் சரி, பாவ புண்ணியங்களின் பலன்கள் ஒருவனைப் பாதியாமல் இருப்பது இல்லை என்று மறுக்கிறார்கள்.

வாழ்க்கையில் காணப்படும் வேறுபாடுகளுக்குக் கருமம் ஒரு மூல காரணம் என்பதை ஒப்புக்கொண்டபோதிலும், அனைத்துக்கும் கருமம் மட்டுமே காரணம் என்பதை, பௌத்த சமயம் ஏற்கவில்லை. முற்பிறவியில் ஒருவன் செய்த கருமந் தான் இப்பிறவியில் அவனை நடத்திச் செல்கிறது என்பதை ஒப்புக்கொண்டுவிட்டால், தீயதை விலக்கக் கூடிய ஆற்றலும் நல்லதைச் செய்யக் கூடிய ஆற்றலும் அவனுக்கு இல்லாது போகும். நல்லதையோ, தீயதையோ, பாவத்தையோ, புண்ணியத்தையோ கருமம் செய்கிறது. கர்த்தா செய்ய வில்லை. — அதாவது மனிதன் செய்யவில்லை — என்ற ஒரு நிலை ஏற்பட்டுவிட்டால், அது மோசமான ஒரு கொள்கை யாகும். இந்த ஒரு கொள்கையை அங்கீகரித்துவிட்டால், கெட்டவன் எப்பொழுதும் கெட்டவனாகவே இருக்க நேரும். நல்லவன் எப்பொழுதும் நல்லவனாகவே இருக்க நேரும். தீய வன் திருந்தி வாழ முடியாத ஒரு அபத்த நிலை இதனால் உரு வாகிவிடும்.

இந்த அபத்த நிலையைப் பௌத்தம் ஆங்கீகரிக்க வில்லை. தீயவன் திருந்தி வாழ முடியும், மேலான ஒரு கதியை அவன் அடையமுடியும் என்றுபௌத்தம் முழுக்க முழுக்க நம்புகிறது.

மனிதனுடைய செயல்களை ஐந்து நியாமங்கள் பாதிக் கின்றன என்றும், அவற்றில் கருமவினை என்பது ஒரு நியாமம் என்றும் பௌத்த நூலோர் வரையறை செய்து இருக்கின்ற னர். ஹேது நியாமம், பீஜ நியாமம், தரும நியாமம், சித்த நியாமம், கரும நியாமம் என ஐந்து வகைப்படும்.

இவற்றில் ஹேது நியாமம் என்பது பருவ காலங் களைப் பற்றியது.

பீஜ நியாமம் என்பது விதைகள், அளவுகள் பற்றியது.

தரும நியாமம் என்பது, ஈர்ப்பு சக்தி பூகம்பம், நிலச் சரிவு இவை பற்றியது.

சித்த நியாமம் என்பது மனம் பற்றியது.

கரும நியாமம் என்பது பழவினை பற்றியது.

இந்த ஐந்து நியாமங்களின் விரிவையும் விளக்கத்தையும் பௌத்த நூல்களில் தெரிந்துகொள்க.

## கந்தங்கள்

தீவிர வாதத்தை எந்தத் துறையிலும் பௌத்த சமயம் ஆதரிக்க வில்லை. நம்மைச் சுற்றிலும் காணப்படும் உலகம் எப்படி இயங்குகிறது? நாம் எப்படி எப்படி நடந்துகொண்டால் நல்லவை தீயவைபற்றிச் சிந்திக்க முடியும். பிறகு அவற்றுக்கு இயைய வழி வகைகளை வகுத்துக்கொண்டு வாழ மட்டும் பௌத்தம் விரும்புகிறதே யல்லாமல், வேறு துறைகளில் தீவிர கவனம்செலுத்தி வாழ பௌத்தம் விரும்பவில்லை.

உலகத்தை உள்ளது உள்ளபடி அறிந்து அதற்கு ஏற்ற ஒழுக்க நெறிகளை வகுத்துக்கொண்டு. வாழ்வதுதான் சிறந்தது என்பது பௌத்தர்களின் கருத்து.

அவ்வாறு வாழ முயல்வதை விடுத்து, ''இந்த உலகம் எப்பொழுது தோன்றியது? இதைப் படைத்தவர் ஒருவர் உண்டா இல்லையா? அவர் எத்தகையவர்? அவர் கருப்பாய் இருப்பாரா? சிவப்பாய் இருப்பாரா? இறைவன் விருப்பு வெறுப்பு உள்ளவரா? இல்லாதவரா?'' என்பது போன்ற துறைகளில் கவனம் செலுத்துவதை, பௌத்தம் வீண் வேலை என்று கருதுகிறது.

தற்செயலாக ஒரு மாங்கனி கிடைத்தது என வைத்துக் கொள்வோம். அந்த மாங்கனியை நாம் சாப்பிடலாமா? கூடாதா? சாப்பிட்டால் நன்மை பயக்குமா? அல்லது தீமையை விளைவிக்குமா என்று சிந்தித்துப் பார்ப்பதுதான் பயனுடையதாய் இருக்குமே யன்றி, ''இந்தக் கனியை

கொடுத்த மாமரம் எப்பொழுது தோன்றியது? மாமரம் முந்தியதா? அல்லது மாங்கொட்டை முந்தியதா? இவற்றுள் எது முந்தியது?'' என்ற ஆராய்ச்சியில் புகுந்து ஒருவன் காலத்தையும் பொழுதையும் கழிப்பானேயானல், அவனல் மாம் பழத்தைச் சாப்பிட முடியாது போவதுடன், உண்மையையும் அறிய முடியாது அவன் திண்டாட நேரும்; அவனல் சமுதாயத்துக்கும் அவனல் நன்மை செய்யமுடியாது போகும்.

கடவுள் இல்லே; ஆத்மா இல்லே. உலகில் காணப்படும் பொருள்கள் அனைத்தும் அநித்தியமானவை என்று பௌத்தம் கூறும் முடிவுகளை நாம் ஏற்றுக்கொள்வோமாயின், அநித்தியமான உலகில் வாழும் நமக்கு, அறநெறியும் ஒழுக்க நெறியும் அவசியம்தானு என்றும் ஒருவித மனப்பாங்கு யார் உள்ளத்திலும் இயல்பாகவே பிறக்கக் கூடும்.

இதற்குப் பௌத்தம் பதில் கூறி இருக்கிறது. அநித்திய மான உலகில் வாழும் நாம் அந்த அநித்தியத்துக்கு இயைந்த முறையில் அறநெறிகளையும் ஒழுக்க நெறிகளையும் வகுத்துக் கொண்டு வாழ்ந்தால்தான், சஞ்சலமில்லாத அமைதியான ஒரு நிலையை அடைய முடியும்.

இதன் பொருட்டு, உலகத்தை நுணுகி ஆராய்ந்து, சில முடிவுகளைப் பௌத்தம் வரையறை செய்து இருக்கிறது. மனிதன் மேன்மை பெற வழிவகைகளை வகுத்துக்கொடுப்பது தான் பௌத்த சமயத்தின் முக்கிய குறிக்கோள். ஆகவே, மனிதன் எத்தகையவன் என்பதைப் பாகுப்படுத்திப் பார்த்து, பௌத்தம் விவரித்து இருக்கிறது.

மனிதன் இரு பகுதிகளால் ஆக்கப்பட்டு இருக்கிறன்; ஒரு பகுதி உடல்; மற்றொரு பகுதி மனம். உடலை ரூபம் என்றும் மனத்தை நாமம் என்றும் பௌத்த நூலோர் பாகு படுத்திக் கூறுவர்.

உடலும் மனமும் சேர்ந்து உயிர்கள் உண்டாகின்றன. உடலைச் சடப்பொருள் என்றும் மனத்தை சக்தி என்றும் — அதாவது *எனர்ஜி — என்றும் கூறலாம்.

* Energy

உடலும் மனமும் ஐந்து கந்தங்களால் ஆக்கப்பட்டு இருப்பதாகப் பௌத்த நூலோர் வரையறை செய்து இருக்கின்றனர். அந்த ஐந்து கந்தங்களின் பாலி மொழிப் பெயரும் தமிழ் மொழிப் பெயரும் வருமாறு:

| | | |
|---|---|---|
| ரூபம் | = | உருவு |
| வேதனை | = | நுகர்ச்சி |
| ஸம்ஸ்ஞை | = | குறிப்பு |
| ஸம்ஸ்காரம் | = | பாவனை |
| விஞ்ஞானம் | = | உள்ள அறிவு. |

இவற்றில் ரூப-கந்தம் என்பது கீழ்வரும் இருபத்தெட்டுப் பிரிவுக்குள் அடங்கும்.

நான்கு பூதங்கள் : மண், நீர், நெருப்பு, காற்று.
ஐந்து புலன்கள் : மெய், வாய், கண், மூக்கு, செவி.
ஐந்து சுவைகள் : சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்.
இரு பால்கள் : ஆண்பால், பெண்பால்.
மூன்று நிலைகள் : எண்ணம், உயிர்ப்பு, இடைவெளி.
இரு தொடர்பு : பேச்சு, சைகை.
ஏழு உயிர்த்தன்மைகள் : மிதத்தல், நெகிழ்ச்சி, சரிப்படுத்திக்கொள்ளும் திறன், ஒன்றுகும் திறன், ஆயுட் காலம், தேய்வு, மாற்றம்.

வேதனைக் கந்தம் என்பது ஆறு வகைப்படும். ஒவ்வொரு வகையிலும், நன்மை பயப்பது, தீமை பயப்பது, நன்மையும் தீமையும் கலந்து பயப்பது என மூன்று பிரிவுகள் உண்டு. இந்த மூன்று பிரிவுகளும் ஐம்பொறி வாயிலாகவும் மனத்தின் வாயிலாகவும் நுகரப்படுவதால், இந்தக் கந்தம் பதினெட்டு வகைப்படும்.

ஸம்ஸ்ஞை கந்தம் என்பது, ஐம்பொறிகளாலும் மனத்தாலும் பெறுகின்ற அறிவைப் பாகுபடுத்தி, இது மரம், இது இனிப்பு, இது கனம், இது நல்லது, இது கெட்டது என்று வேறுபடுத்திப் பிரித்து அறிகின்ற ஞானம். இதுவும் ஆறு வகைப்படும்.

ஸம்ஸ்கார கந்தம் என்பது, மனம், வாக்கு, காயம் ஆகிய மூன்றினால் செய்யப்படும் தொழில்களும் அவற்றின்

பயனாய் ஏற்படும் மாறுதல்களும் ஆகும். இந்தக் கந்தம் ஐம்பத்திரண்டு பிரிவுக்குள் அடங்கும்.

விஞ்ஞானக் கந்தம் என்பது, அறிவுகளுக்கு எல்லாம் ஆதாரமாய் சரீரத்தினுள் இருக்கும் உணர்வு. இந்தக் கந்தம் எண்பத்து ஒன்பது வகைப்படும்.

மேலே விவரித்த ஐந்து கந்தங்களும் அவற்றின் உப பிரிவுகளும் நிலையானவை அன்று; கணத்துக்குக் கணம் மாறும் இயல்புடையவை.

இவை அடிக்கடி கலந்து பிணைந்து செயல்படுவதனால் உடலும் மனமும் உருவாகி, செயல்படுகின்றன. இவ்வாறு செயல்படும் சக்தியையே பௌத்தர்கள் உயிர் என்று கூறுகின்றனர்.

கந்தங்களுக்கு ஆற்றல் குறைந்து, தனித் தனியே பிரியும் போது, அவற்றின் கூட்டுறவாக இதுவரை உயிர்போல் இயங்கி வந்த சக்தி பிறகு சிதறிவிடுகிறது; அப்படிச் சிதறும் போது சாவு உண்டாவதாகப் பௌத்தர்கள் கூறுகிறார்கள்.

கந்தங்கள் ஐந்தில் கடைசியில் வரும் விஞ்ஞான கந்தமே - அதாவது மன உணர்வே - மறுபிறப்பு எடுக்கும் ஆற்றல் பெற்றது என்பது பௌத்தரின் கொள்கை.

இந்த மன உணர்வையும் கடந்து, செயல்படும் ஆத்மா ஒன்று இருப்பதாக வேதாந்திகள், ஜைனர்கள் ஆகியோர் கருதுகின்றனர்.

இந்தக் கொள்கையைப் பௌத்தர்கள் ஏற்கவில்லை.

ஆன்மா என ஒன்று உண்டு. அது இல்லாது போனால் மறுபிறவியும் கரும வினைகளும் இருக்க முடியாது என்னும் கருத்தில் ஊறி ஊறிப் பழகிப் போனவர்களுக்கு, பௌத்தர்கள் கூறும் சூனிய வாதத்தையும் நான் எனும் ஒரு தனி வியக்தி இல்லை என்பதையும் புரிந்துகொள்வது கடினமாய் இருக்கும். நான் எனும் தனி வியக்தி என ஒன்று கிடையாது என்பதை அடியில் வரும் பௌத்தக் கதை மூலம் அறியலாம்.

ஒரு முறை மிலிந்தன் என்னும் அரசன் ஒருவன், நாகசேனர் என்னும் பௌத்த பிக்குவைச் சந்தித்து, தத்துவ விசாரம் செய்தான். அப்போது 'நான்' எனும் தனி

வியக்தி உண்டா இல்லையா எனும் கேள்வி எழுந்தது. இந்தக் கேள்வி எழுந்ததும் பிக்குவிடம், ''பெருமதிப்பு வாய்ந்தவரே! மக்கள் தங்களை எவ்வாறு தெரிந்துகொள்கிறார்கள்? தங்கள் பெயர் என்ன?'' என்று வினவினான்.

''என் பெற்றோரும் புரோகிதர்களும் பிறரும் என்னை நாகசேனன் என்று அழைக்கிறார்கள். ஆயினும் நாகசேனன் என ஒரு தனி வியக்தி இல்லை'' என்று நாகசேனர் பதில் சொன்னார்.

இப்படி நாகசேனர் பதில் சொன்னதும், அரசன் மிலிந்தன் வியப்படைந்தான். ''நாகசேனன் என ஒரு தனி வியக்தி இல்லையாயின், பாவம் என்பதும் புண்ணியம் என்பதும், தண்டனை என்பதும் சன்மானம் என்பதும் இருப்பதற்கு ஏதுவில்லையே?'' என்று கேட்டான்.

அதற்கு நாகசேனர், ''அரசே! நாகசேனன் என ஒரு தனி வியக்தி இல்லை. குறிப்பிட்ட குறிப்பிட்ட ஏதாவது ஒரு நிலையில் ஐந்து கந்தங்கள் சேரும்போது, தனித்த ஒரு வியக்தி உருவாகிறான். அந்த வியக்தியை மக்கள் நாகசேனன் என்று அழைக்கிறார்கள்'' என்று கூறினார்.

இதை அரசன் மிலிந்தனால் புரிந்துகொள்ள முடியவில்லை. ஆகவே அவன், ''உடம்புதான் நாகசேனரா?'' என்று அவன் கேட்டான்.

''இல்லை'' என்று நாகசேனர் பதில் சொன்னார்.

''அப்படியானால் மனம்தான் நாகசேனரா?'' என்று கேட்டான்.

''அதுவும் இல்லை'' என்று நாகசேனர் பதில் சொன்னார்.

''அதுவும் இல்லையாயின், மூச்சுதான் நாகசேனரா?'' என்று வினவினான் அரசன்.

''இல்லை'' என்று பதில் சொன்னார் நாகசேனர்.

''அதுவும் இல்லையாயின் நாகசேனர் என்று நீங்கள் வரையறுத்துக் கூறுவது எது?'' என்று குழப்பத்துடன் கேட்டான் அரசன். மேலும் தொடர்ந்து, ''பெரியவரே! தாங்கள் கூறுவது எனக்கு உண்மை எனத் தோன்றவில்லை. ஒலி வடிவில் மட்டும்தான் நாகசேனர் இருக்கிறாரா? உருவத்

தில் நாகசேனர் இல்லையா? கண்ணுக்கு எதிரே நாகசேன ரைக் காணும்பொழுது, அவரைக் காணவில்லை என்று கூற, என் மனம் ஒப்பவில்லை'' என்று அரசன் கூறினான்.

அரசன் மிலிந்தன் இவ்வாறு கேட்டதும் நாகசேனர் அவனைப் பார்த்து, ''அரசே! நீங்கள் நடந்து வந்தீர்களா? அல்லது தேரில் வந்தீர்களா?'' என்று கேட்டார்.

''தேரில்தான் வந்தேன்'' என்று அரசன் பதில் சொன்னான்.

''அப்படியானால், அரசே! நீங்கள் வந்த தேர் எது? அழகு வேலைகளுடன் துலங்கும் மேல் விதானம் இருக்கிறதே அது தேரா? அல்லது நான்கு சக்கரங்களும் தேரா? அல்லது கடிவாளங்கள் தேரா? அல்லது குதிரைகள் தேரா? இவற் றில் எதைத் தாங்கள் தேர் என்று குறிப்பிடுகிறீர்கள்?'' என்று வினவினார்.

அதற்கு அரசன், ''தனித் தனியாகப் பார்த்தால், இவற் றில் எந்த ஒரு உறுப்பையும் தேர் என்று குறிப்பிட முடி யாது'' என்று பதில் சொன்னான்.

''அப்படியானால் தாங்கள் தேர் என்று குறிப்பிடுவது சொல் அளவில் மட்டும்தான் பொருந்தி வருகிறதே யல்லா மல், பொருள் அளவில் அது பொருந்தி வரவில்லை என்பது மெய்தானே?'' என்று கேட்டார் நாகசேனர்.

''ஆம்'' என்று ஒப்புக்கொண்டான் அரசன்.

''அப்படியானால் தாங்கள் தேரில் வந்ததாகக் கூறியது உண்மை இல்லைதானே'' என்று கேட்டார் நாகசேனர்.

அரசன் ஒப்பவில்லை. ''பெரியோரே! நான் தேரில் தான் வந்தேன். பல உறுப்புகள் ஒன்று சேரும்போதுதான் தேர் என்பது உருவாகிறது. அந்த உறுப்புகளை அலக்கு அலக்காகப் பிரித்துவிட்டால், தேர் என்னும் உருவம் மறைந்துவிடுகிறது'' என்று சொன்னான்.

அரசன் இவ்வாறு கூறியதும் நாகசேனர், ''அரசே! நாம் மனிதன் என்று குறிப்பிடும் ஒவ்வொரு வியக்தியும் இப்படிப் பட்டவன்தான். உறுப்புகள் பல சேர்ந்து தேர் ஒன்று உருவாவதைப் போல, ஐந்து கந்தங்களும் ஒன்று சேர்ந்து

ஒரு வடிவு கொள்ளும்போது, அது உயிர் என்னும் உணர்வைப் பெறுகிறது'' என்று விளக்கிச் சொன்னூர்.

மேலே நாம் கவனித்த விவாதத்திலிருந்து ஐந்து கந்தங்களின் சேர்க்கையால் உயிர் என்பது தோன்றுகிறது என்றும், அவை தனித் தனியே பிரிய வாய்ப்பு நேரும்போது, உயிரும் பிரிந்து கரைந்துவிடுகிறது என்றும் தெரிந்துகொண்டோம்; இவற்ருேடுகூட, நிலையான ஒரு உயிரோ அல்லது ஒரு பொருளோ கிடையாது என்பதையும் தெரிந்து கொண்டோம்.

அப்படியாயின் பௌத்த சமய மரபுப்படி, மறு பிறவி எடுப்பது எது? நிர்வாணப் பேற்றை அடைவது எது? என்ற கேள்விகள் எழுகின்றன.

அவற்றை அடுத்த அத்தியாயத்தில் கவனிக்கலாம்.

---

## மறு பிறப்பும் நிர்வாணமும்

**வை**தீக மதத்தினர், ஜைன மதத்தினர், பௌத்த மதத்தினர் ஆகியோர் மறு பிறப்பு, மோட்சம், நரகம் ஆகிய மூன்றையும் ஒப்புக்கொண்டுள்ளனர்.

ஆனுல் மறு பிறப்பு என்பது எது? மோட்சம் என்பது எது? மறு பிறப்பையோ மோட்சத்தையோ அடைவது எது? என்பதில் ஒவ்வொரு மதத்தினரும் வேறுபட்டு விடுகின்றனர்.

நிலையான ஆத்மா என்பது ஒன்று உண்டு என்றும் தத்தம் கருமத்துக்கு ஏற்ப, மறு பிறப்பையோ, மோட்சத்தையோ அல்லது நரகத்தையோ அது அடைகிறது என்றும் வைதீக சமயத்தவரும் ஜைன சமயத் தவரும் நம்புகின்றனர்.

ஆனுல் பௌத்த சமயத்தவரோ நிலையான ஆத்மா என்பது கிடையாது என்று கூறுகின்றனர்.

அப்படியானுல் பௌத்தர்களின் தத்துவ விசாரப்படி, மறு பிறவி எடுப்பது எது? மோட்சம் அடைவது எது? நரகம் அடைவது எது?

இயல்பாக எழும் இந்தக் கேள்விகளுக்கு, பௌத்தர்கள் கூறி இருக்கும் விடைகள் வருமாறு:

ஒரு மனிதன் இந்த மண்ணுலகில் பிறக்கிறான். படிக்கிறான். திருமணம் செய்துகொள்கிறான்; வீடுகள் கட்டுகிறான்; தனக்குத் தெரிந்த வகையில் எப்படியோ வாழ்க்கை நடத்தி விட்டு மறைந்து போகிறான். அவன் மறைந்து போயினும், அவன் செய்த கருமங்களின் பிரதிபலிப்பு சில காலம்வரை மக்கள், வீடுகள், ஆகியவற்றில் தொடர்ந்து நீடித்து இருக்கிறது.

இது எதைப் புலப்படுத்துகிறது? செய்தவன் இறந்து போயினும் அவன் செய்த வினைகள், அவனுக்குப் பின்னர் சில காலம் நீடித்து இருக்கும் என்னும் ஒரு உண்மையை அவன் கட்டிய வீடும் அவன் பெற்ற பிள்ளைகளும் நமக்குப் புலப்படுத்துகின்றனர்.

இதைப் போலவே, மனிதன் செய்யும் ஒவ்வொரு செயலும் அவனுடைய அக வாழ்விலும் புற வாழ்விலும் சில மாற்றங்களை உண்டாக்காமல், பிரதிபலிப்பைப் பதியச் செய்யாமல் இருப்பது இல்லை. அவனவன் செய்யும் செயல்களுக்கு ஏற்ப, அவனுடைய அக வாழ்விலும் புற வாழ்விலும் நன்மை தீமைகள் ஏற்படுகின்றன.

அகத்தில் விளையும் நன்மை தீமைகள், செய்தவன் இறந்து போன பின்னர், அவனுடைய மறு பிறவிக்கு வித்தாக அமைகின்றன.

நற் காரியங்களை மிகுதியாகச் செய்திருப்பானாயின், அவன் தேவ லோகம் போன்ற இன்ப உலகங்களில் மறு பிறவி எடுக்கிறான்.

தீமைகள் அதிகம் செய்திருப்பானாயின், அவன் நர லோகத்தில் பிறக்கிறான்; அங்கே துக்கத்தை அனுபவித்து உழல்கிறான்; தீவினைப் பயன் கழிந்து போனதும், எஞ்சியிருக்கும் அவனது நல்வினைக்கு ஏற்ற பிறவியைப் பிறகு அவன் எடுக்கிறான்; மனிதனாகவோ, விலங்காகவோ, அரக்கனாவோ, பேயாவோ அவன் பிறக்கிறான்.

எந்த மனிதனும் நன்மைகளை மட்டுமே அல்லது தீமைகளை மட்டுமே புரிவது இல்லை. நன்மைகளையும் தீமைகளையும் கலந்து செய்யும்போது, எது மிகுந்து இருக்கிறதோ அந்த வினைகளுக்கு உரிய ஓர் உலகத்துள் பிறந்து பலன்களை அனுபவித்துவிட்டு, பிறகு மறு பிறவி எடுக்கிறான்.

நன்மைகளையும் தீமைகளையும் விட்டுஒழிக்கும் பரிபக்குவ நிலை ஏற்படும்பொழுதுதான் அவன் நிர்வாணப் பேற்றை அடைகிறான்.

ஆகவே ஒருவனின் மறு பிறவிக்கு வித்தாய் அமைவது, மனம்தான் என்பது பௌத்த சமயக் கொள்கை.

பௌத்த சமயக் கொள்கைப்படி, மனம் என்பது விஞ்ஞான கந்தத்தின் ஒரு பகுதியாகும். மனிதன் ஒருவன் இறக்கும்பொழுது, அவன் உடலில் இதுவரை சேர்ந்து இருந்து வந்த ஐந்து கந்தங்களும் பிரிக்கப்படுகின்றன.

அப்போது, அவன் ஜீவித காலத்தில் செய்து வந்த நல்வினை தீவினைகள், மறு பிறவிக்கு ஒரு வித்துப் போன்று, விஞ்ஞான கந்தத்தில் அமைந்துகொள்கின்றன.

அப்படி அமைந்துகொள்ளும் கரும சக்தி, தம் 'தகுதிக்கு ஏற்றவாறு மற்ற நான்கு கந்தங்களுடன் கலந்து, தேவப் பிறவியையோ, மனிதப் பிறவியையோ, அல்லது அசுரப் பிறவியையோ எடுத்துக்கொள்கிறது.

பௌத்த சமயச் சம்பிரதாயப்படி கரும சக்திதான் மறு பிறவி எடுக்கிறது எனலாம். வேதாந்திகளின் கருத்துப்படியும் ஜைனர்களின் கருத்துப்படியும், மறு பிறவி எடுப்பது கரும பந்தமுடைய ஆன்மாவாகும்.

கரும சக்திதான் மறு பிறவி எடுக்கிறது என்றால், பௌத்தர்கள் கருத்துப்படி நிர்வாணப் பேறை அடைவது எது என்ற கேள்வி எழுவது இயல்பு.

கரும சக்தி முழுதும் அற்றுவிட்ட ஒரு சூனிய நிலையையே பௌத்தர்கள் நிர்வாணம் என்று கூறுகிறார்கள்.

பௌத்த சமயத்தில் தத்துவ விசாரத்துக்குக் கொடுத்திருக்கும் முக்கியத்துவத்தைக் காட்டிலும், ஒழுக்கத்துக்கு அதிக முக்கியத்துவம் கொடுத்திருக்கிறார்கள்.

பௌத்த தருமப்படி, இல்லறத்தான் ஒருவன், இல்லற தருமத்தை வழுவாது கடைப்பிடித்து ஒழுகியபோதிலும், மேலான ஒரு கதியை அடைய முடியுமேயன்றி, நிர்வாணப் பேற்றை அவன் அடைய முடியாது என்று தோன்றுகிறது. ஏனெனில், பௌத்த தருமத்தில், துறவறத்துக்குச் சிறப்பான ஒரு ஸ்தானம் உண்டு. துறவறத்தை மேற்கொண்ட, அருகத் நிலையை அடைந்த பிக்குகளும் பிக்குணிகளும் சேர்ந்த கூட்டத்துக்கே சங்கம் என்று பெயர்.

பௌத்தர்கள் போற்றும் மும்மணிகளில் **சங்கம்** என்பதும் ஒன்று.

ஆகவே சங்கத்தைப்பற்றியும் சங்கத்துக்கு வகுக்கப் பட்ட ஒழுக்கநெறிகள் பற்றியும் அடுத்த அத்தியாயத்தில் தெரிந்துகொள்ள முயல்வோம்.



# பௌத்த சங்கம்

சங்கம் சரணம் கச்சாமி
(சங்கத்தை நான் சரணடைகிறேன்)

# பௌத்த சங்கம்

## சங்கத்தின் தொடக்கம்

உலகில் காணப்படும் துக்கத்தைப் போக்க, பௌத்தம் முதலில் தருமங்களை வரையறை செய்துகொள்ளலாயிற்று; பிறகு வரையறை செய்துள்ள தருமங்களைக் கடைப்பிடித்து, பேணிப் பாதுகாத்துப் பரப்ப, சங்கத்தை நிறுவலாயிற்று.

சங்கம் என்பது, மக்களிடையே பௌத்த தருமத்தைப் பரப்புவதற்கு ஏற்பட்ட ஒரு அமைப்பு எனலாம். போதி ஞானம் அடைந்த பின்னர் தாம் அடைந்த சுய அனுபவ ஞானத்தை, முதலில் பெருமான், காசியில் இருக்கும் ஐந்து பிக்குகளுக்கு உபதேசித்தார்.

அவர்கள் பெருமானைக் குருவாக அங்கீகரித்து, அவரைப் பின்பற்றலானார்கள்.

இந்த ஐந்து பிக்குகளை உறுப்பினர்களாகக்கொண்டே, பௌத்த சங்கம் உருவாயிற்று.

புத்தர் பெருமான் காலத்தில் கங்கை நதித் தீரத்தில் பல் வகையான துறவோர் கூட்டங்கள் இருந்தன. தத்துவ விசாரங்களில் ஈடுபட்டு, வாக்குவாதங்கள் புரிவதிலும், தத் தம் கொள்கைகளைப் பரப்புவதிலும் அவை முனைப்புடன் ஈடுபட்டு வந்தன.

அரசியலில் ஈடுபடாமல், தத்துவ விசாரத்தில் மட்டுமே துறவோர் முழுக் கவனத்தையும் செலுத்தியபடியால், துற வோர் கூட்டங்களுக்கு நாட்டில் மதிப்பும் செல்வாக்கும் மிகுதியாகி வந்தன.

அதனால் அரசர்களும் செல்வச் சீமான்களும் துறவோர் கூட்டத்திற்கு, தக்க ஆதரவு காட்டினார்கள். குறிப்பாக, ஒரு சார்பு பற்றிய துறவோர் கூட்டத்துக்கு மட்டும் அர சர்கள் ஆதரவு காட்டவில்லை. நாட்டில் சஞ்சரித்த துற

வோர் கூட்டங்கள் அனைத்துக்குமே அரசர்கள் ஆதரவு காட்டினார்கள்.

படித்தவனுக்கு நாட்டில் மதிப்பு இருந்தது; ஆயினும் அவனைக் காட்டிலும் துறவிக்கு மதிப்பு மிகுதியாக இருந்தது; படிப்பும் துறவு மனப்பாங்கும் ஒருசேர இருக்கும் ஒருவருக்கு நாட்டில் அலாதியான தனி மதிப்பு இருந்தது.

ஆரம்ப காலத்தில் பிராமணர்கள்தாம் துறவறத்தை மேற்கொண்டு, தத்துவ விசாரத்திலும் வேத விசாரத்திலும் ஈடுபட்டார்கள்.

பிறகு க்ஷத்திரியர்களும் துறவறத்தை மேற்கொண்டு, தத்துவ விசாரத்திலும் தவத்திலும் ஈடுபடத் தொடங்கினார்கள். இவர்களில் விசுவாமித்திரர், மகாவீரர், புத்தர் முதலியோர் குறிப்பிடத்தக்கவர்கள்.

பிராமணத் துறவிகள் விரும்பித் தம்பால் வரும் பிராமண, க்ஷத்திரிய மாணவர்களுக்கு மட்டுமே போதனைகள் செய்தார்கள்; பிராமண மாணவர்களுக்கு வேதங்களையும் தத்துவ நூல்களையும் கற்பித்தார்கள்; க்ஷத்திரிய மாணவர்களுக்கு, தரும சாத்திரங்கள், அர்த்த சாத்திரங்கள் ஆகியவற்றையும் வில் வித்தை, வாள் வித்தை போன்றவற்றையும் கற்பித்தார்கள். வைசியர்களுக்கும் சூத்திரர்களுக்கும் தத்துவ போதனைகளைப் பிராமணர்கள் கற்பித்ததாகத் தெரியவில்லை.

பிராமணர்களும் க்ஷத்திரியர்களும்தான் தத்துவ விசாரம் செய்யத் தகுதியுடையவர்கள் என்னும் குறுகிய கருத்தை முதன் முதலாகத் தகர்த்தவர் புத்தர் பெருமான்தான். இதில் சிறிதும் ஐயம் இல்லை.

அறிவில் தேட்டமும் ஆர்வமும் உள்ளவர்களுக்கு, பௌத்த சங்கத்தின் வாயில் திறந்து இருந்தபடியால், பல்வேறு சாதிப் பிரிவுகளைச் சேர்ந்தவர்களும் ஆர்வத்துடன் பௌத்த சங்கத்தில் விரும்பிச் சேர்ந்தார்கள்.

தருமம் என்பது தமக்கும் தம்மை அண்டினவர்களுக்கும் மட்டுமே உரியது என்ற ஒரு குறுகிய நோக்கம் புத்தர் பெருமானிடம் கிடையாது. 'யாம் பெற்ற இன்பம் பெருக இவ்

வையகம்' என்னும் பெருநோக்கு புத்தர் பெருமானிடம் இருந்தபடியால்தான், போதி ஞானம் அடைந்ததும் தாமே புறப்பட்டுச் சென்று ஐந்து பிக்குகளுக்குப் போதி ஞானத்தை அவர் போதிக்கத் தொடங்கினர்.

மற்ற துறவோர் கூட்டங்களுக்கும், பௌத்த பிக்கு சங்கத்துக்கும் இடையே முக்கியமான ஒரு வேற்றுமை உண்டு. மற்ற துறவோர் கூட்டங்களின் முக்கிய நோக்கம் தவ வாழ்வில் ஈடுபட்டு, மோட்சமடைவதே யாகும். அதனல் அத்தகைய மனப்பாங்கு கொண்ட துறவோர்கள், தமது ஈடேற்றத்தில் மட்டும் நாட்டமும் அக்கறையும் கொண்டு, தவ வாழ்வை மேற்கொண்டார்களே யல்லாமல், தருமப் பிரச்சாரம் செய்து, மக்களிடையே விழிப்பு ஏற்படச் செய்ய வேண்டும் என்னும் உயரிய கருத்து அவர்களிடம் இல்லை.

தாம் மட்டும் ஈடேற்றம் பெற்றுவிட்டால் போதும் என்னும் கருத்து, பெருமானுக்கு இருந்ததில்லை. தாம் பெற்ற அனுபவங்களை மக்களிடையே பிரச்சாரம் செய்து அவர்களும் ஈடேற்றம் பெற வழிகாட்டுவது. தமது முக்கிய கடமை யாக அவர் கருதினர். பிக்கு சங்கத்தின் உறுப்பினர்கள் அறுபது என உயர்ந்ததும், அவர்களைத் தம் அருகே வைத்துக் கொண்டு, பெருமையடைவதைப் பெருமான் விரும்பவில்லை. அவர்களை உலகின் பல்வேறு பகுதிகளுக்கும் அனுப்பி, பௌத்த சமயத்தைப் பரப்ப அவர் ஏற்பாடு செய்தார். ''பிக்குகளே! தருமத்தைப் பரப்ப, உலகின் பல்வேறு பகுதி களுக்குப் புறப்பட்டுச் செல்லுங்கள். ஒரே வழியில் இருவர் சேர்ந்து செல்லாதீர்கள்'' என்று யோசனை சொன்னர்.

இந்த ஒரு உபதேசத்திலிருந்து பௌத்த சங்கத்தின் முக்கிய குறிக்கோள், மக்களிடையே தருமத்தைப் பரப்பி, அவர் களுக்கு வழிகாட்டுவதாகும் என்பது தெரிகிறது.

ஒரு சங்கத்தை அமைத்து, முதன் முதலாகச் சமயப் பிரச்சாரம் செய்யத் தொடங்கியவர்கள் பௌத்தர்கள்தாம் என்பதில் சிறிதும் ஐயம் இல்லை. இன்று உலகில் இயங்கும் சமயப் பிரச்சார நிறுவனங்களில், பௌத்த சங்கமே மிக மிகப் பழமையானது என்பதை யாரும் மறுக்க முடியாது.

இது மட்டு மல்லாமல் இன்னும் ஒரு சிறப்பும் பௌத்த சமயத்துக்கு உண்டு. சாதி வேற்றுமைகளுக்குப் பௌத்த சங்கத்தில் இடம் இல்லை; உயர்ந்த சாதியானும் சங்கத்தில் சேரலாம்; தாழ்ந்த குலத்தில் பிறந்தவனும் சங்கத்தில் சேரலாம். பௌத்த சங்கத்தில் பிராமணர்கள் சேர்ந் தார்கள்; க்ஷத்திரியர்கள் சேர்ந்தார்கள். வைசியர்களும் சூத்திரர்களும் சேர்ந்தார்கள். இழி குலத்தவர்களும் சேர்ந் தார்கள்; சேர்ந்தது மட்டு மல்லாமல், உயர்ந்த அந்தஸ்தை யும் அவர்கள் பெற்றார்கள். உபாலி என்னும் நாவிதனும் சுவபாகன் என்னும் புலையனும் சுநீதன் என்னும் தோட்டியும் பௌத்த சங்கத்தில் சேர்ந்து பெருமை பெற்றவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள்.

''கடலில் கலக்கும் ஆறுகள் தத்தம் பெயரை இழந்து, கடல் என்னும் பெயரைப் பெறுவதைப் போலவே, பிக்கு சங்கத்தில் சேருவோரும் தத்தம் குலப் பெயர், சாதிப் பெயர் ஆகியவற்றை இழந்து, சிரமணர் என்னும் பெருமை மிக்க பெயரைப் பெறுகின்றனர்'' என்று பெருமான் கூறி இருக் கிறார்: (உதானம் 5-5. அங்குத்தர நிகாயம், அட்டக நிபாதம்).

சாதி வேற்றுமைக்கு இடம் இன்மையால், பௌத்த சங்கத்தில் பலரும் ஆர்வத்துடன் சேர்ந்தார்கள்; விருப் புடன் ஆதரித்தார்கள்.

பௌத்த சங்கத்தை ஆதரிக்கவும் ஆர்வத்துடன் அதில் மக்கள் சேர்வதற்கும் முக்கிய காரணம் சாதி வேற்றுமையை அகற்றியது மட்டும் அன்று; புத்தரிடம் காணப்பட்ட வாதத் திறமையும் முக்கிய காரணங்களில் ஒன்றாகும்.

குருட்டுப் பக்தியைப் பெருமான் அறவே வெறுத்தார். யார் சங்கத்தில் சேர வந்தாலும் சரி, முதலில் அவர்களின் மனநிலையை உரையாடுவதன் மூலம் தெரிந்து கொள்வார். பிறகு அவர்களுக்கு இருக்கும் ஆர்வத்தைக் கவனிப்பார். ஆர்வம் இருக்கிறது என்பது தெரிய வந்ததும் பௌத்த சமயக் கோட்பாடுகளை எடுத்துக் கூறி விளக்குவார். ஒருவன் உண்மையை அறிவதற்கும் அதை அவன் ஏற்பதற்கும்

இடையே பெரிய வித்தியாசம் உண்டு. இதைப் பெருமான் திட்டவட்டமாக அறிவித்து இருக்கிறார். ''ஒரு கரண்டியில் தேனை விட்டால், எதுவும் ஆட்சேபியாது தேனை அந்தக் கரண்டி ஏற்றுக்கொள்ளும். ஆனால் தேன் எத்தகையது? அதன் சுவை எப்படி இருக்கும்? என்பது எல்லாம் அந்தக் கரண்டிக்குத் தெரியாது.

''உண்மையை அறிவது என்பது இதனிலும் வேறு பட்டது. தேனை அனுபவித்து நாவினால் சுவைத்தவன் அது இனிப்பானது என்பதை அறிவான். அனுபவித்ததும் தேன் இத்தகையது என்பதை அறிந்துகொள்வான். கரண்டிக்கு அது சாத்தியம் இல்லை'' என்று பெருமான் கூறி இருக்கிறார்.

இத்தகைய விவாதங்களால், ஆடவர்களின் உள்ளத்தைப் பெருமான் பெரிதும் கவர்ந்தார். ஆடவரில், இளையோரும் முதியோரும் நடுத்தர வயதினரும் ஆர்வத்துடன் பௌத்த சங்கத்தில் சேர்ந்து பிக்குகள் ஆயினர்.

இதனால் நாட்டில் மக்களிடையே அதிகப் பரபரப்பு உண்டாயிற்று. ''ஆடவர்களைப் பிக்கு சங்கத்தில் சேர்த்துக் கொள்வதனால், புத்தர் குடும்பங்களைக் குலைக்கிறார்; தாய்க்கு மகன் இல்லாமலும், மனைவிக்குக் கணவன் இல்லாமலும், சகோதரிக்குச் சகோதரன் இல்லாமலும், பாட்டிக்குப் பேரன் இல்லாமலும் செய்கிறார்'' என்று நாட்டு மக்கள் பழித்துப் பேசத் தொடங்கினார்கள்; பிச்சையின் பொருட்டு வீடு வீடாகச் செல்லும் பிக்குகளை அவர்கள் ஏசவும் தொடங்கினார்கள்.

ஆனால் நாளடைவில் இந்த ஏச்சும் பேச்சும் முணுமுணுப்பும் மெல்ல மெல்லக் குறைந்து போயின. சங்கத்தின் சிறப்பையும் உபயோகத்தையும் உணர்ந்து மக்கள் சங்கத்தை ஆதரிக்கலாயினர்.

## சங்கத்தின் நோக்கம்

ஒரு மனிதன் சமூகத்தை விட்டு விலகித் தனித்து இருந்து வாழ்க்கை நடத்தி வந்தால் அவனுக்குச் சட்டதிட்டம்

எதுவும் தேவையில்லை. அவன் தன் மனம் போல வாழ்ந்தாலும் சரி, புலன்களைக் கட்டுப்படுத்திக்கொண்டு வாழ்ந்தாலும் சரி, அவனுடைய நடத்தையால், சமூகத்துக்கு நன்மையோ தீமையோ உண்டாவது இல்லை.

பௌத்த சமயத்தில் துறவறத்துக்கு மிகுந்த மதிப்பு உண்டு; ஆயினும் மக்கள் சமுதாயத்தைவிட்டு விலகி இருந்து கொண்டு, துறவறத்தைக் கடைப்பிடிப்பதை, பௌத்தம் அங்கீகரிக்கவில்லை என்று தெரிகிறது.

ஏனெனில் ஜாதகமாலா என்னும் பௌத்த நூல், ''ஒருவரை உண்மையாக நாம் கௌரவிக்க வேண்டுமானால், அவர் செய்த உபதேசங்களைக் கடைப்பிடித்து ஒழுக நாம் தவறக் கூடாது. மாலைகள் அணிவிப்பதும் மலர்கள் தூவுவதும், தூப தீபங்கள் காட்டுவதும் அவரைப் பெருமைப் படுத்துவது ஆகா'' என்று கூறுகிறது.

இதைப் போலவே பக்தி சதகம் என்னும் நூலும் ''புத்தர் பெருமானே! உம்மை வழிபடுவது, உலகுக்கு நன்மை செய்வதில் அடங்கி இருக்கிறது'' என்று கூறுகிறது.

பிக்கு சங்க அமைப்பின் முக்கிய நோக்கம் மூன்று. உலகில் காணப்படும் தீமைகள் தம்மைத் தாக்காதவாறு, தனித்து இருந்து பயிற்சி மூலம் தம்மைப் பாதுகாத்துக் கொள்வது;

தீமைகளை விலக்குவதோடு, பிறருக்கு நன்மை செய்வதில் நாட்டம் செலுத்துவது; பிறகு பற்று இன்றி, நல்லவற்றைப் பிறருக்குச் செய்து பழகுவது.

இந்தப் பயிற்சியின் மூலமாய் மனத்தில் பற்றுதல்களுக்கே இடமில்லாமல் செய்துகொள்வது,

இவ்வாறு ஒரு பிக்கு பயிற்சி பெறுவதனால்தான், பௌத்த மடங்களைப் பள்ளிகள் - அதாவது பயிற்சி பெறும் இடம் - என்று அழைக்கின்றனர்.

நாளுக்கு நாள் பௌத்தப் பள்ளிகளுக்கு நாட்டில் மதிப்பு மிகுதியாகி வந்ததால், பிக்கு ஆவோரின் எண்ணிக்கை அதிகரிக்கலாயிற்று. பல்வேறு துறைகளில் இருக்கும் ஆடவர்கள் துறவறத்தை மேற்கொண்டு பிக்குகள் ஆயினர்.

அப்படிப் பிக்கு ஆனவர்களில் நல்லவர்களும் இருந்தார்கள். தீயவர்களும் இருந்தார்கள். சந்தர்ப்பவாதிகளும் சங்கத்தில் சேர்ந்து பிக்கு ஆனார்கள்.

இப்படி சங்கத்தில் சேர்ந்தவர்கள் மிகப் பெரும்பாலோர் புத்தர் பெருமான் உயிருடன் இருக்கும்வரை தத்தம் கைவரிசையைக் காட்டாது வாளா இருந்தனர். அவர் மகா பரி நிர்வாணம் அடைந்ததும், கட்டுப்பாடு இன்றி, தத்தம் மனம் போனவாறு நடக்கலாம் என்னும் ஒரு கருத்து இடம் பெறலாயிற்று.

இதற்கு முதிய பிக்குகள் இடம் கொடுக்கவில்லை. பௌத்த சங்கத்தின் முதல் கூட்டத்தை இராஜகிருகத்தில் கூட்டி, சங்கத்தின் சட்ட திட்டங்கள் விதிகள் நடைமுறைகள் ஆகியவற்றை அவர்கள் வரையறை செய்தார்கள்.

கடன்காரன், அரண்மனைச் சிப்பந்தி, போர்வீரன், தொத்து வியாதியுள்ளவன், பெற்றோரின் அனுமதி பெறாதவன் ஆகியோரைச் சங்கத்தில் சேர்த்துக்கொள்வது இல்லை என்று விதிகள் வகுத்தார்கள்.

இதனால் சந்தர்ப்பவாதிகளுக்கும் அரசியல்வாதிகளுக்கும் சோம்பேறிகளுக்கும் தொத்து வியாதியுள்ளோருக்கும் சங்கத்தில் சேர்ந்து, பிக்கு ஆகும் வாய்ப்பு கிட்டவில்லை.

விரும்பத் தகாதவர்களை விலக்கிவிடுவதால் மட்டும் சங்கம் ஓங்கி வளர முடியாது; உடை, உண்டி, உறையுள், மருந்து, எடுபிடி சாமான்கள் ஆகியவைபற்றி, சில வரையறை இருந்தால்தான், சங்கம் வளர்ந்து ஓங்கி, தனது கடமைகளைச் சரிவர நிறைவேற்ற முடியும்.

ஆகவே பிக்குகளும், பிக்குணிகளும், தம்மைப் பொறுத்தவரை எப்படி எப்படி நடந்துகொள்ள வேண்டும், சங்கத்தைப் பொறுத்தவரை எப்படி எப்படி நடந்துகொள்ள வேண்டும், பிறரோடு எப்படி நடந்துகொள்ள வேண்டும், பிற சமயத்தவரோடு எப்படி நடந்துகொள்ள வேண்டும் ஆகியவை பற்றி, சில வரையறைகளைப் பெருமான் செய்தார். இவற்றையே பௌத்த சமயத்தில் விநயம் என்று குறிப்பிடுவர்,

வஜ்ஜியர்களின் ஆட்சி மன்றக் குழுவினர் கடைப்பிடித்த சட்ட திட்டங்களையே, தமது சங்கத்துக்கும் புத்தர் பெருமான் வகுத்துக்கொண்டார் என்று பல ஆசிரியர்கள் குறிப்பிட்டுள்ளனர். அவற்றில் ஏழு முக்கிய நியமங்கள் வருமாறு:

(1) பிக்குகள் பல தடவைகள் கூடி, கலந்து முடிவு எடுக்க வேண்டும்.

(2) எடுத்த முடிவுகளை ஒரே மனத்துடன் ஒற்றுமையாக நிறைவேற்ற முயல வேண்டும்.

(3) சங்கம் முடிவு எடுத்த நியமங்களை 'இவை சங்கம் ஏற்றுக்கொண்ட நியமங்கள் அன்று' என மறுத்துப் பேசலாகாது; சங்கம் ஏற்படுத்திய கட்டளைகளை மீறலாகாது; சங்கத்தின் உட்கருத்தை அறிந்து அதன்படி நடக்க வேண்டும்.

(4) முதியோர்களையும் ஒழுக்கசீலர்களையும் தலைவர்களாகப் போற்றி, மதித்து நடக்க வேண்டும்.

(5) அடிக்கடி தோன்றும் அவாவுக்கு வசமாகி விடாதபடி வாழப் பழகிக்கொள்ள வேண்டும்.

(6) தனிமை வாழ்வை விரும்ப வேண்டும்.

(7) உடன்படித்த அறிவாளிகள் வந்தால் அவர்களை மகிழ்ச்சியுடன் வரவேற்க வேண்டும்; வந்திருக்கும் உடன்படித்த அறிவாளிகளைத் தக்கபடி உபசரிக்க வேண்டும்.

இந்த ஏழு நியமங்களையும் பிக்குகள் தவறாது கடைப்பிடித்து ஒழுகினால், முன்னேற்றம் ஏற்படும் என்று பெருமான் உபதேசித்தார்.

இந்த ஏழு நியமங்களிலிருந்து, பெருமான் கட்டுப்பாடான எளிய வாழ்வை அங்கீகரிக்கிறார் என்பதையும் கடுமையான தவ வாழ்வை அவர் அங்கீகரிக்கவில்லை என்பதையும் நாம் தெரிந்துகொள்ளலாம்.

எளிமையான வாழ்க்கை நடத்த இன்றியமையாது தேவைப்படும் எட்டுப் பொருள்களைப் பிக்கு வைத்துக்

கொள்ளலாம் என்பதைப் பெருமான் அங்கீகரித்துள்ளார். அவையாவன:

| | |
|---|---|
| துவராடைகள் | 3 |
| பிச்சைப் பாத்திரம் | 1 |
| இடையில் கட்டும் கச்சை | 1 |
| ஊசி | 1 |
| சவரக் கத்தி | 1 |
| நீர் வடிகட்டும் துணி | 1 |

இந்த எட்டுப் பொருள்களையும்* பிக்குகள் வைத்துக்கொள்ள லாம்.

பிக்கு சங்கத்தில் சேர்ந்து பிக்கு ஆக வேண்டுமானல், அதற்குப் பிரமாதமான சடங்கு எதுவும் கிடையாது.

சங்கத்தில் சேர்ந்து பிக்குவாக விரும்புவோர் தங்கள் விருப்பத்தைத் தெரிவித்த பின், அவர்களைப் பெருமான் சங்கத்தில் சேர்த்துக்கொண்டார்.

வர வர நாளடைவில் சங்கத்தில் சேர்வோரின் எண் ணிக்கை அதிகரிக்கலாயிற்று. ஆகவே தக்கவர்களே, பிக்கு வாகச் சேர்த்துக்கொள்ளும் உரிமையை, மற்ற பிக்குகளுக்கு வழங்கினர்.

உயிருடன் இருக்கும்வரை, புத்தர் பெருமானே சங்கத் தின் தலைவராய்த் திகழ்ந்தார் அவர் மகா பரி நிர்வாணத்தை அடைந்த பின்னர், சங்கம் முழுமைக்குமே தலைமைப் பதவி கிட்டிற்றே தவிர, தனித்த ஒரு எந்தப் பிக்குவுக்கும் தலைமைப் பதவி அளிக்கப்படவில்லை. ஏனெனில், புத்தர் என்னும் அருகதை ஒருவருக்குப் பதவியினல் உண்டாவது அன்று. எவருக்கு முதிர்ந்த அனுபவ ஞானமும் மன்பதைக்கு வழி காட்டும் பரிபக்குவமும் ஞானத் தெளிவும் உண்டோ, அவரே

---

*முத்துவ ராடையும் பிச்சைப் பாண்டமும்
சிறிய மழுவும் தைக்கும் ஊசியும்
இடையிற் கச்சையும் நீர்வடித் துண்டும்
என்னும் எட்டுப் பொருளே போதும்
யோகம் பயிலும் பிக்குவி னுக்கே

புத்தர் ஆகும் அருகதை உடையவர். அந்த அருகதையும் ஒரே பிறவியில் மட்டும் கிட்டுவது அன்று. அதனால் தமக்குப் பின்னர், சங்கத்தின் தலைமைப் பதவிக்கு யாரையும் புத்தர் நியமிக்கவில்லை.

தாம் பரிநிர்வாணம் அடைவதற்கு முன்பு ஆனந்தனிடம் ''ஆனந்தா! எனக்குப் பின்னர் சிறு சிறு மாற்றங்களை, இடத்துக்கும் காலத்துக்கும் ஏற்றவாறு சங்கத்தில் செய்து கொள்ளலாம்'' என்று அனுமதித்தார்.

பெருமான் நிர்வாணம் அடைந்த பின்பு, பிக்குகள், அவர் போதித்த விநயங்களைக் கடைப்பிடித்து ஒழுகினார்கள். பிறகு ஐநூறு பிக்குகள் இராஜகிருக நகரில் கூடி, பெருமான் போதித்த அறநெறிகளையும் ஒழுக்க நெறிகளையும் (தருமம் - விநயம்) தொகுத்து சூத்திர பிடகம் என்றும் விநயபிடகம் என்றும் வரையறை செய்தார்கள்.

இந்த இரண்டு பிடகங்களுமே பிக்குகளுக்கு வழிகாட்டும் சாத்திரங்களாக அமைந்தன.

அவற்றில் யார் யாரைச் சங்கத்தில் சேர்க்கலாம்? சேர்ந்தவர்கள் தவறு செய்தால் அவர்களுக்கு விதிக்கப்படும் தண்டனைகள் யாவை? பிக்குவைச் சங்கத்தில் சேர்க்க யாருக்கு அதிகாரம் உண்டு? எந்த வயதில் ஒருவர் சங்கத்தில் பிக்குவாகச் சேரலாம்? இவை பற்றிய விவரங்கள் விநய பிடகத்தில் நிர்ணயிக்கப்பட்டுள்ளன

எந்த வயதிலும் ஒருவன் துறவறத்தை மேற்கொண்டு பிக்கு ஆகலாம். ஆயினும் பதினைந்து வயது நிரம்பிய பின்னரே, சிரமணராக சேர்த்துக்கொள்ளப்படுவர்; தலையை மழித்துக்கொண்டும், பூணூல் முதலியவற்றை அகற்றி விட்டும், மூன்று சீவர ஆடையுடன் பிக்கு சங்கத்தில் சேரலாம். சங்கத்தில் சேர்வதற்குச் சடங்கு எதுவும் கிடையாது. வயதான மூன்று பிக்குகள் முன்னிலையில்,

புத்தம் சரணம் கச்சாமி
தருமம் சரணம் கச்சாமி
சங்கம் சரணம் கச்சாமி

என்று மூன்று முறை சொல்லிய பின் சங்கத்தில் ஒரு உறுப்பினனாக அவன் சேர்த்துக்கொள்ளப்படுவான்.

பத்து சீலங்களைக் கடைப்பிடிப்பதாக உறுதிமொழி எடுத்துக்கொண்டு, மாணவப் பிக்கு, திரிபிடகம் முதலிய பௌத்த நூல்களைப் பயின்று வருவான். இருபது வயதைக் கடந்ததும், பழைய பெயரை அகற்றிவிட்டு, புதுப் பெயரும், பிக்கு என்ற அந்தஸ்தும் அவனுக்கு வழங்கப்படும்; சிரமணனிலிருந்து பிக்கு நிலை; பிக்கு நிலையிலிருந்து தேரர் நிலை; தேரர் நிலையிலிருந்து மகா தேரர் என்ற வரிசைக் கிரமம் உண்டு: மகா தேரர் நிலையை அடைவதற்கு வயது, பயிற்சி, மனப் பரிபக்குவம் ஆகியவை கணக்கில் எடுத்துக் கொள்ளப்படும்.

முதிய பிக்கு, நோயாளிப் பிக்கு இவர்களைத் தவிர்த்து, மற்ற பிக்குகள் ஒரு நாளைக்கு ஒரு முறை பிச்சைப் பாத்திரத்தை எடுத்துக்கொண்டு பிச்சை ஏற்கப் புறப்பட வேண்டும்.

இல்லறப் பெண்டிர் ஆகாரத்தைத் தயாராக வைத்துக் கொண்டு வாயிலில் காத்து நிற்பர்; பிக்கு வந்து மௌனமாக நின்றதும் பிச்சையையிட்டுவிட்டு வணங்குவர்.

பிச்சையைப் பெற்றுக்கொண்டு, பிக்குகள் திரும்புவர்; பிச்சையிட்ட இல்லத்தாருக்கு நன்றி கூறுதல் பிக்குகளின் வழக்கம் இல்லை.

போதிய அளவு பிச்சை கிடைத்ததும் மடத்துக்குத் திரும்பி, பிக்குகள் உணவு உட்கொள்வர். பிறகு சாத்திரங்களைப் படிப்பதிலும், கற்பிப்பதிலும், தியானத்திலும் எஞ்சியிருக்கும் பகல் பொழுதைக் கழிப்பர்.

பிக்குகள் தனித்து வாழ்வது கூடாது; ஒரு மடத்தில் மூன்று பிக்குகளுக்குக் குறையாமல் தங்க வேண்டும். அதிகப் படியாகவும் தங்கலாம்.

மழைக் காலம் நான்கு மாதங்கள் மட்டும் பிக்குகள் ஒரே இடத்தில் தங்கி, பௌத்த தருமங்களைப் படிப்பதிலும் ஆராய்ச்சி செய்வதிலும் தியானம் செய்வதிலும், பிறருக்குப் போதனை செய்வதிலும் செலவிட வேண்டும்.

கடவுளுக்கும் மனிதர்களுக்கும் இடையிலும் தேவர்களுக்கும் மனிதர்களுக்கும் இடையிலும் தரகர்களாக இருந்து சடங்குகள் நடத்துவதற்கு, பௌத்த தருமத்தில் இடம் இல்லை; பிறருக்காக வேள்விகள் புரிவதோ, பிறருடைய நலத்துக்காக, கடவுளிடம் பிரார்த்திப்பதோ பௌத்த பிக்குகளின் வேலையில்லை. அதனால் தருமத்தை ஆராய்வதற்கும், அதைப் பிறருக்குப் போதிப்பதற்கும், பௌத்த பிக்குகளுக்குப் போதிய அவகாசம் உண்டு; ஆகவே இந்த இரு துறைகளிலுமே பிக்குகள் அதிக கவனம் செலுத்துவர்.

சங்கம் என்னும் சொல், பௌத்த சமய சம்பிரதாயத்தில், ஒரு தலைமைப் பீடத்தையோ, அல்லது தலைமைப் பதவியையோ குறிப்பது அன்று; பிக்குகளின் கூட்டத்தை குறிக்க, பொதுவாகச் சங்கம் என்னும் சொல்லைப் பயன்படுத்துகிறார்கள்.

ஹிந்து சந்நியாசிகள் காவி உடை உடுத்துகிறார்கள்; ஜெயின சந்நியாசிகளில் சுவேதாம்பரப் பிரிவினர் வெள்ளை ஆடை அணிகிறார்கள்; பௌத்த பிக்குகள் மஞ்சள் நிற ஆடை அணிகிறார்கள்; இதைத் துவராடை என்று கூறுவர்.

மேலே போர்த்துக்கொள்ளும் துவராடை மூன்று துண்டுகளை ஒட்டுப் போட்டுத் தைத்தாக இருக்கும்; மஞ்சள் நிற ஆடைக்கு அந்தக் காலத்தில் மதிப்பு மிகுதியாக இல்லாதபடியால் அந்த நிறத்தை, பிக்குகள் தேர்ந்து எடுத்தார்கள். பின்னர் அந்த நிறமே பெரு மதிப்புக்கு உரிய ஒரு நிறமாகிவிட்டது.

உடுத்தி இருக்கும் உடைகளைத் தவிர்த்து, அதேபோல மற்றொரு செட் உடையை வைத்துக்கொள்ள மட்டும்தான் பிக்குகளுக்கு உரிமை உண்டு. அதற்கு அதிகமாகப் பிக்குகள் வைத்துக்கொள்ளக் கூடாது; எந்த நேரத்திலும் உடம்பில் ஆடை இல்லாது பிக்குகள் இருத்தல் கூடாது.

''உலகத்தில் காணப்படும் மற்ற மதத் துறவோர் கூட்டத்தைக் காட்டிலும், பௌத்த சமய பிக்கு சங்கம் மிகவும் பெருமைப்படத்தக்க வகையில் செயல்பட்டு

வருகிறது; படிப்பிலும், சீலத்திலும், சிந்தனையிலும், செயலிலும் மேன்மையுடன் திகழ்கிறது. புத்தர் பெருமானின் போதனைகளைக் கடைப்பிடிப்பதிலும், பரப்புவதிலும் நிகரற்று விளங்குகிறது'' என்று ஆங்கிலேயர் ஒருவர் பாராட்டி எழுதி இருக்கிறார்.

---

## நான்கு நெறிகள்

உலக மக்களில் ஐந்தில் ஒரு பகுதியினர் - சுமார் ஐம்பது கோடி மக்கள் — பௌத்த சமயத்தைக் கடைப்பிடிக்கின்றனர். அவர்களில் பல்வேறு நாட்டினர், பல்வேறு இனத்தினர், பல்வேறு மொழியினர் இருக்கிறார்கள்; பல்வேறு நாகரிக நிலையிலுள்ளவர்களும் இருக்கிறார்கள்.

புராதன நாகரிகம் வாய்ந்த பாரத நாட்டில் தோன்றிய பௌத்த சமயம், புராதன நாகரிகம் வாய்ந்த சீன நாடு முதல் நாகரிகத்தின் அடித்தளத்தில் இருந்த புரியாத் மக்களிடையிலும் பரவி அவர்களை மேன்மைப்படுத்தி இருக்கிறது; அக வாழ்விலும் புற வாழ்விலும் மலர்ச்சி ஏற்படச் செய்திருக்கிறது.

புத்தர் காலத்தில் கங்கை நதித் தீரத்தில் மட்டுமே பௌத்தம் பரவி இருந்தது. அதன் சுற்று வட்டாரங்களில் பிரயாணம் செய்து பிக்குகள் பௌத்த அறநெறிகளைப் பரப்பி வந்தார்கள்.

அசோகச் சக்கரவர்த்தி காலத்திலிருந்துதான் பௌத்த சமயம் அயல்நாடுகளுக்குப் பரவத் தொடங்கிற்று. தாம் பௌத்த சமயத்தைத் தழுவியதுடன் நிற்காது, அயல்நாடுகளில் பௌத்தத்தைப் பரப்புவதற்கான ஏற்பாடுகளையும் அசோகச் சக்கரவர்த்தி செய்தார்.

பௌத்த பிக்குகளும் ஆர்வத்துடன் பௌத்த சமயத்தைப் பரப்புவதில் அக்கறை காட்டினர். சிங்கள நாடு, பர்மிய நாடு, சீனம், ஜாவா, சயாம் முதலிய நாடுகளில் பௌத்தத்தைப் பிக்குகள் பரப்பினர்.

அந்தக் காலத்தில் போக்குவரத்து வசதிகள் மிக மிகக் குறைவு. அப்படி இருக்கும்போது, யாரும் துணிந்து அயல் நாடுகளுக்குப் போக மாட்டார்கள்; இருந்தும் பிக்குகள் சென்றிருப்பதைக் கவனித்தால் அவர்களுக்குப் பௌத்த சமயத்தில் இருந்த ஆர்வம் தெரியவரும்.

புத்தர் பரி நிர்வாணம் அடைந்து இரு நூறு ஆண்டுகளுக்குப் பின்னர்தான், அயல் நாடுகளில் பௌத்தத்தைப் பரப்பும் முயற்சி மேற்கொள்ளப்பட்டதாகத் தெரியவருகிறது. அயல் நாடுகளில் பௌத்தத்தைப் பரப்பும் பணியை அசோக மன்னன்தான் மேற்கொண்டான் என்று சரித்திர ஆசிரியர்கள் கூறுகிறார்கள்.

தம் தந்தை பிந்துசார மன்னன் மரணப் படுக்கையில் இருந்த சமயம், அசோக மன்னன் உஜ்ஜயனி பிரதேசத்தை நிர்வகிக்கும் ஆளுநராக நியமிக்கப்பட்டு இருந்தான். அங்கே இருக்கும்போது பெரிய வியாபாரி ஒருவனின் புதல்வியை அசோக மன்னன் திருமணம் செய்துகொண்டு இருந்தான். அவனுக்கு அவள் மூலம் மகேந்திரன் என்னும் ஆண் குழந்தையும், சங்கமித்திரை என்னும் பெண் குழந்தையும் பிறந்தார்கள்.

தன் தந்தை மரணப் படுக்கையில் கிடப்பது தெரிய வந்ததும். அசோக மன்னன் பாடலிபுத்திரத்துக்கு விரைந்தான்.

தன் தந்தை காலமான பின்னர், அசோக மன்னன், நூற்றுக்கு அதிகமான இளவரசர்களைக் கொலைசெய்துவிட்டு, மகத நாட்டின் ஆட்சியைக் கைப்பற்றிக்கொண்டான். பதவி ஆசை காரணமாக, செய்யத்தகாத கொடுஞ் செயல்களை எல்லாம் அசோக மன்னன் ஆரம்பத்தில் செய்தான்.

பின்னர் கலிங்க நாட்டின் மீது படை எடுத்ததன் விளைவாக ஏற்பட்ட படுகொலைகள் அசோக மன்னனின் உள்ளத்தில் அதிக அதிர்ச்சியை உண்டுபண்ணிற்று. பலாத்காரத்தின் மூலம் மக்களைத் திருத்துவதைக் காட்டிலும் போதனைகள் மூலம் மக்களைத் திருத்துவதே நீடித்த நன்மை பயக்கும் என்று அசோக மன்னன் தீர்மானித்தான்.

அது சமயம் பௌத்த சங்கம் மகத நாட்டிலும் கோசல நாட்டிலும் தருமத்தைப் பரப்பும் பணியில் ஈடுபட்டு இருந்தது.

அந்தச் சங்கத்தை ஊக்குவித்து அசோக மன்னன் உதவி புரிந்ததால், பிக்குகள் தூரம் தொலைவிலுள்ள அயல்நாடுகளுக்குச் சென்று பௌத்த தருமத்தைப் பரப்பினார்கள்.

அசோக மன்னன் காலத்தில் பௌத்த பிக்குகள் யவனம், காந்தாரம், காஷ்மீரம், சிங்களத் தீவு, மலேயா, சுமத்திரா முதலிய நாடுகளுக்குச் சென்று பௌத்த தருமத்தைப் பரப்பினார்கள். அசோக மன்னனின் புதல்வன் மகேந்திரனும் புதல்வி சுங்கமித்திரையும் பௌத்த தருமத்தைப் பரப்பும் பொருட்டுச் சிங்களத் தீவுக்குச் சென்றார்கள்.

அரசர்களின் உதவியாலும் தங்கள் முயற்சியாலும் பௌத்த பிக்குகள், உலகின் பல்வேறு பகுதிகளுக்குச் சென்று பௌத்த தருமத்தைப் பரப்பினர்.

இந்திய நாட்டிலும் பதினோராம் நூற்றாண்டுவரை, பௌத்த சமயம் சீருடனும் சிறப்புடனும் தன் கடமையைச் செய்து வந்தது.

அதன் பின்னர் சமயப் பூசல்களின் காரணமாக, பௌத்த சமயம் ஓங்கி வளர முடியாத சூழ்நிலை உருவாகி, இந்தியாவில் பௌத்த சமயம் நலிந்து போயிற்று.

இதன் காரண காரியங்களை விளக்க முயன்றால், அது ஒரு பெரிய நூலாகிவிடும்.

தமக்கு முன்பு நிலவிய சமயங்களான வைதீக சமயம், ஜைன சமயம், ஆசீவக சமயம் ஆகியவற்றின் தாக்குதல்களையும் தமக்குப் பின்னர் தோன்றிய சமயங்களான கிறிஸ்தவ சமயம் இஸ்லாமிய சமயம் ஆகிய இரு சமயங்களின் தாக்குதல்களையும் சமாளித்துத் தன்னைப் பாதுகாத்துக் கொள்வதுடன் நின்றுவிடாமல் சுமார் ஐம்பது கோடி மக்களுக்குப் பௌத்தம் மன அமைதியையும் தெம்பையும் உற்சாகத்தையும் ஊக்கத்தையும் அளித்து இன்றும் நிலை பெற்று இருக்கிறது என்றால் அதை ஒரு மகத்தான சாதனையாகவே கொளல் வேண்டும்.

அறநெறி, அறிவு நெறி, ஒழுக்க நெறி, ஞான நெறி ஆகியவற்றில் மனித குலத்தை மேன்மைப்படுத்தியதில் பௌத்த சமயத்துக்குக் கணிசமான பங்கு உண்டு.

இந்த நான்கு நெறிகளும் மனிதகுலத்திடையே, மென் மேலும் ஓங்கி வளர நாம் அனைவரும் உண்மையோடும் ஆர்வத்தோடும் முயல்வோமாக.

கி. உலகநாத அடிகள்.

முற்றும்